உ

குருபாதம்

தருமபுர ஆதீனம்

# ஆவணிமூலத் திருநாள்

## நினைவு மலர்

ஜய–ஆவணி–உஉ (7–9–1954)

வெளியீடு எண் 325

உ

குருபாதம்

# தருமபுர ஆதீன குருபூஜை விழாவில்

## கோடை வகுப்பில் ஆற்றிய

உ

பாதம்

## சாற்பொழிவுகள்

கைகளை வெளியிடுவது

வர்கள்

கிரௌன் 1 x 4, பக்கங்கள் 266,

| | | |
|---|---|---|
| விலை | ரூ | 1—0—0 |
| புத்தக அஞ்சல் | | 0—7—0 |
| ரிஜிஸ்டர் தபாற்செலவு | | 0—6—0 |

கிடைக்குமிடம் :—

தருமபுர ஆதீன மடாலய தேவாலய
சமயப்பிரசார நிலையம்,
41, ஊஸ்மான் ரோடு,
தியாகராயநகர், சென்னை—17.

1954

பதிப்பாசிரியர்

**வித்துவான், ஸ்ரீமத். சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகள் அவர்கள்**

*தருமபுர ஆதீனப் பிரசார நிலயம், சென்னை.*

தொகுப்பாசிரியர்

*தருமபுர ஆதீனப் புலவர், சித்தாந்த ரத்நாகரம்.*

**வித்துவான், திரு. முத்து. சு. மாணிக்கவாசக முதலியார் அவர்கள்**

*பல்கலைக் கல்லூரித் துணைத்தலைவர்*


பதிப்பகம்

**ஞானசம்பந்தம் அச்சகம், தருமபுரம்.**

# பொருளடக்கம்

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# நூன்முகம்

''கல்லிடைப் பிறந்து போந்து கடலிடைக் கலந்த நீத்தம்
எல்லையில் மறைக ளாலும் இயம்பரும் பொருளீ தென்னத்
தொல்லையில் ஒன்றே ஆகித் துறைதொறும் பரந்த சூழ்ச்சிப்
பல்பெருஞ் சமயம் சொல்லும் பொருளும்போல் பரந்த தன்றே.''
—கம்பர். ஆற்றுப். 19.

உயிர்கள் சிறையில் கிடக்கின்றன. அச்சிறை உடம்பே, 'உடற்சிறை' 'காயச்சிறை' என்றனர் பெரியோர். உடம்பெடுத்தல் பிறவியாகும், பிறவியே பெருஞ்சிறை. அச்சிறையைக் கடந்து செல்வதால் வரும் இன்பத்தினும் பெரியது வேறு இல்லை. அப்பேரின்பம் வேண்டின் துறவுவேண்டும். அது செய்ய உள்ளத் தெளிவுவேண்டும். அவ்வுண்மையை,

''அருஞ்சிறப் பமைவருந் **துறவும்** அவ்வழி
தெரிஞ்சுற வெனமிகுந் **தெளிவும்** ஆய்வரும்
பெருஞ்சிற குளஎனில் பிறவி என்னும்இவ்
வருஞ்சிறை கடத்தலின் இனியது யாவதே?''

என்று கவிச்சக்கிரவர்த்தியாகிய கம்பர் பாடிய அருமைச் செய்யுளால் உணரலாம். உயிர் என்னும் ஒரு பறவைக்குப் பிறவி ஒரு பெருங்காவற்சிறை, சிறைப்பட்ட அப்பறவை, அச்சிறையைக் கடந்து செல்லப் பறத்தல் வேண்டும். அவ் விருசிறகே துறவும் தெளிவும் ஆகும். துறவு, இல்லறத்தைத் துறத்தல், உள்ளத்தில் எல்லாப் பற்றும் துறந்திருத்தல், ஞானத்தால் பொய்யின்றித் துறத்தல் என்று பலவகைப் படும். அத்துறத்தலுக்கு அறிவிலே தெளிவு பிறக்க வேண்டும். அத்தெளிவு பிறக்க, மதக்கொள்கைகளைக் கற்கவும், கேட்கவும், நினைக்கவும் வேண்டும்.

உடம்பும் உயிரும் வேறு. உயிருக்கு நிலைத்த இன்பம் உண்டாதற் பொருட்டே இவ்வுடம்பு அதனதன் வினைக்குத்தக ஏற்பட்டது. உடம்புள்ளபோதே உய்தியைத் தேடிக்கொள்ளவேண்டும். அவ்வுய்தியை உணர்த்துவன சமயசாத்திரங்கள். பல சமயங்களிலும் இருக்கும் சாத்திரங்கள் உயிர்க்குரிய உய்தியைத் தான் ஒவ்வோரளவு கூறுகின்றன. அவற்றைக் கற்பது சமயக் கொள்கைகளின் ஒற்றுமை வேற்றுமைகளை உணர்தற்குத் துணையாகும். ஆதலால், இத்தருமபுர

ஆதீனத்தின் இருபத்தைந்தாவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அவர்கள், சென்ற ஆண்டுகளில் நிகழ்ந்தவற்றின் மேலாக இவ்வாண்டில் (1954) பல மதக் கொள்கைகளையும் அறியச்செய்யும் வகையில், கோடை வகுப்பை நடத்துவித்தருளினார்கள். அப்பேருபகாரம், சைவ சமயம், ஏனைய மதசித்தாந்தங்களிலுள்ள கொள்கைகள் அனைத்தையுங் கொண்டது என்னும் உண்மையைப் பலரும் உணர்தற்கு ஏதுவாயிற்று

மதங்கள் பற்பலவாய் இருக்கின்றன. எல்லாமதங்களையும் பற்றி ஆராய்ந்து தம் வினைக்கேற்பத் தமக்கு உண்மை என்று தோன்றும் மதத்தை அறிந்து, அது கூறும் நெறியில் ஒழுகி, அதன் முடிவை அடைவதே மாந்தர் கடனாகும். அக் கடமையை நிறைவேற்றப் பல மதங்களின் கொள்கைகளை ஒருசேரக் கற்கும் வாய்ப்பு, இந்நூலால் பலர்க்கு எய்துகின்றது.

இத்தகைய பொதுநூல், சைவத்தையே வளர்க்கும் கடமையைக்கொண்ட திருக்கயிலாய பரம்பரைத் தருமபுர ஆதீனத்தால் வெளியிடப்பெறுதற்கு மிக்க பொருத்தம் உளது. இவ்வாதீனத்தின் சிறந்த அடியார்களுள் ஒருவரும் திருவருட் புலவருமாகிய குமரகுருபரமுனிவர் பாடியருளிய—தருமைக் குருமாசிலாமணியின் திருவடிக்கண் சார்த்திய பண்டார மும்மணிக்கோவையாம் பாமாலையுள், ''முற்படு மாயை முதற்கரை நாட்டில்'' எனத்தொடங்கும் அருட்பாட்டில், எல்லாச் சமயங் களையும் குறித்து, அவற்றின் முடிபுகளையும் தக்கதோர் உவமை காட்டித் தெளி வித்தார். உளங்கொண்டு தெள்ளுதலும் தெளித்தலும் எல்லாப் புலவர்க்கும் வேண்டும். குமரகுருபரர் முதலிய சிலரிடத்தில்தான், ''உளங்கொண்டு தெள்ளித் தெளிக்கும் பனுவற் புலமை''யைக் காணலாம். அப்புலமையொடு திருவருளும் கலந்தால் அதன் பெருமைக்கு அளவுண்டோ? அத்தகைய சீர்த்தியுடைய குமர குருபரர், எல்லா மதங்களின் நிலையையும் பின் வருமாறு கொள்ள விளக்கியுள்ளார்.

ஓங்காரம் என்னும் வயலின் நடுவில், ஞானவிதையிட்டு, கருணைநீர் பாய்ச்சி வளர்த்த வேதவிருட்சத்தின் இலைகளாயும், தளிர்களாயும், அரும்புகளாயும், மலர் களாயும், கருங்காய்களாயும் பல மதங்கள் விளங்குகின்றன. இலை முதலிய ஆறு உறுப்புக்களுள் ஒவ்வொன்றைப் போல ஏனைய மதங்கள் இருக்க, வேதாந்தம் (உப நிடதம்) அகனுச்சியில் பழுக்த தெவிட்டாத இன்பத்தீங்கனியாகித் திகழ் கின்றது. வேதவிருட்சத்தின் ஏழாவது உறுப்பாகிய பழத்தைப் பிழிந்துகொண்ட சாரமாகிய தேனே சைவசித்தாந்தமாகும். அத்தேனமுதைச் சிலரே அருந்தினர். அச்சிலரும், அதைத் தம்மைப்போல் பலரும் அருந்தும் நன்னிலையைப்பெற விரும்பி, அவ்வேத விருட்சத்தை அழியாமல் காக்கும் பொறுப்பை மேற்கொண்டனர். அம் மேற்கோள் சமயப்பொதுமையை நன்கு காட்டுகின்றது. 'அன்பேசிவம்' என முழங்கும் சைவம், மற்றெல்லாச் சமயங்களையும் தன்னகத்தே கொண்டது. அதனால் தான் அதை நடுநாயகமாகவைத்து, மற்றைச் சமயங்களை அகம், அகப்புறம், புறம், புறப்புறம் என்று நால்வகைப்படுத்தினர். இக்காரணங்களால், எல்லாச் சமயத் தவரும் ஒன்றுசேர்ந்து, தம் அந்தரங்கபேதம் பாராட்டாமல், ஆஸ்திகத்தைவளர்க்கும்

ஒன்றையே குறிக்கோளாகக் கொண்டு. தொண்டு செய்தல்வேண்டும் என்னும் இக் காலத்தில், இவ்வாதீனத்து வழிபடு கடவுளாகிய ஸ்ரீ சொக்கலிங்கப் பெருமானுக்கு உரிய ஆவணிமூலத் திருநாளின் நினைவு மலராக இத்தகைய சமயப் பொது நூல் ஒன்று வெளிவருதல் எல்லாராலும் ஏற்கத்தக்கதாகும்.

இந்நூலுள், 1—5—54 முதல் 22—5—54 முடிய உள்ள நாட்களில் தருமை ஆதீனத்தில், குருபூஜைத் திருவிழாச் சார்பில் ஏற்படுத்திய சமயபோதப் பயிற்சி வகுப்பில், பலர் செய்த பல சொற்பொழிவுகள் இடம்பெற்றுள்ளன. சைவ சித்தாந்தம் (சிவஞானசித்தியார்) ஆண்டுதோறும் வகுப்பில் கற்பித்துவரப்பெற்று, அதன் பயன் உணர்ந்து இப்பொழுது வினவிடையாக எழுதி முடித்து இதில் சேர்க்கப்பட்டது.

கோடை வகுப்பில் சொற்பொழிவாற்றியவருள் தம் சொற்பொழிவை எழுதிக்கொடுத்த அறிஞர் எழுவர். அவருள், சைவசித்தாந்தசரபம் காசிவாசி. சிவத்திரு. ஈசானசிவாசாரியார் அவர்கள் எழுதிக்கொடுத்த அறுவகைச்சமயம் என்பது தனிநூலாக இவ்வாதீனத்தில் வெளியிடப்பெற்றுள்ளது. மற்றவை தக்க அறிஞர்களைக்கொண்டு எழுதுவித்து,இதில்சேர்க்கப்பட்டுள்ளன. இதில் பிற்சேர்க்கை யாக உள்ளவை (பதினெண் புராணம், கிறிஸ்தவம், கல்வெட்டுக்கள் முதலியன) 224 பக்கங்கள் அச்சிடப்பெற்றபின்னர்க் கிடைத்தன. அதனால் அவை உரிய இடத்தில் அமைக்கப்பட்டில. இந் நூற்கட்டுரைகளில் அடங்கிய பொருள்களைப்பற்றிய ஐயந்திரிபுகளைத் தவிர்த்துக்கொள்ள விரும்புவோர், அதனதன் ஆசிரியர்க்கு எழுதிக்கொள்க.

இப்புதியநூல், பழைய சிறப்பைத் தமிழ்நாட்டிற்கு மீண்டும் தோற்றும். இஃது எங்கள் நம்பிக்கை. உலகோர் அவரவர் வினைவழி நின்று இதனைப் பயன் படுத்திக்கொள்க.

இந்நூல் அச்சாகுங்கால், ஒப்புநோக்கிப் பிழைதிருத்துதல் முதலியவற்றைச் செய்த பல்கலைக் கல்லூரி ஆசிரியர் பலர்க்கும், இராப்பகலுழைத்து, உரிய காலத்தில் வெளிவரச்செய்த ஞானசம்பந்தம் அச்சகத்தார் அனைவருக்கும் ஸ்ரீ சொக்கலிங்கப் பெருமான் திருவருளும் குருவருளும், நலமெலாம் நல்குக.

"விலகிவீழ் அருவித் தாரை வேறுவே றுக ஓடிக்
குலநதிப் பாலே வைப்பின் ஏகமாய்க் கூடுந தோற்றம்
அலகில்பல் வழியும் மூதூர் அணிமையின் ஒன்று மாறும்
பலபல மதமும் ஈற்றின் ஒருவழிப் படலும் போலும்"

(மாதவச் சிவஞான யோகிகள்.)

தருமபுர ஆதீனம்,
7—9—1954.

அடியார்க்கு அடியன்,
**முத்து. சு. மாணிக்கவாசகன்.**



தருமபுர ஆதீனம் 25-ஆவது மகாசந்நிதானம்

ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்

உ

குருபாதம்

*தருமபுர ஆதீன ஸ்தாபகர்*

# ஸ்ரீ குருஞானசம்பந்த சுவாமிகள் குருபூஜைவிழா

# சமயபோதச் சொற்பொழிவுகள்

## நோக்கம்:

மதவளர்ச்சி கருதி, சமயப்பயிற்சி வகுப்புக்கள் (**Refresher courses** திட்டத்தில்) நடைபெறச்செய்தல் நல்ல பயன் அளிக்கும். அதிலும் முக்கிய மாகப் பள்ளிக்கூட ஆசிரியர்களும் ஆலய நிர்வாகிகளும், ஆலயப்பணியாளர் களும், அர்ச்சகர்கள் முதலியோரும் நமது சமயத்தின் பொதுக் கொள்கைகள், அடிப்படைத் தத்துவங்கள், ஆலய வழிபாட்டுமுறை, அதன் அவசியம் முதலியன பற்றி அறிந்துகொள்ளுதல் நல்ல பயன் தரும். இது நம் நம்பிக்கை.

இதற்காகச் சென்ற சில ஆண்டிற்கு முன்பே தொடங்கி இவ் வாதீனத்தில் இம்மாதிரி கோடைக்கால சமயப்பயிற்சி வகுப்புக்கள் நடத்தப் பட்டு வருகின்றன. அதனால் பலரும் பயன்பெற்று வருகிறார்கள். ஆதீனப் பணிகள் பலவற்றில் இதுவும் பயன்தரக் கூடியதாக இருக்கிறதென்று அனுபவ பூர்வமாகவும் தெரியவந்திருக்கிறது.

இந்த நன்னோக்கத்தைத் திருவுளங்கொண்டு **ஸ்ரீ-ல்-ஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கள்** இவ்வாண்டும் கோடை விடுமுறைக் காலத்தில் வகுப்பு ஒன்று நடத்தி வைக்கத் திருவுளங் கொண்டருளினார்கள். அதன்படி தருமபுர ஆதீன மடால யத்தில் 1—5—54 முதல் 22—5—54 வரை இவ்வகுப்பு நடந்தது.

**பாடத்திட்டம்** :- வேதம், உபநிஷதம், ஆகமம், சைவசித்தாந்தம், அத்வைத சித்தாந்தம், வைணவ சித்தாந்தம், மாத்வ சித்தாந்தம், இதிகாசம் பதினெண்புராணம், கல்வெட்டுக்கள், இதரமததத்வங்கள், ஆதீன தேவஸ் தானங்கள், அறுவகைச் சமயம், பன்னிருதிருமுறை.

---

# தொடக்கவிழா நிகழ்ச்சி

**(1—5—54)**

**வழிபாடு:-** வகுப்பில் கலந்துகொள்ள வந்திருந்தோர் அனைவரும் அவரவர்களின் சமயப் பொலிவுடன் வழிபாட்டிற்கு வந்திருந்தார்கள். அன்றைய விழாவிற்கு **ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கள்** எழுந்தருளியிருந்தார்கள். **விழாத்தலைவர் பிரும்மஸ்ரீ R. இலட்சுமண ஐயர் அவர்களும்** வந்திருந்தார்கள். ஆலயவழிபாடுகள் நடைபெற்றன. வழிபாடு முடிந்தவுடன் ஸ்ரீமகாலக்ஷ்மி துர்க்கையம்மன் சந்நிதியில் வகுப்புத் தொடங்கியது.

## வரவேற்புரை :

சென்னையிலுள்ள தருமபுர ஆதீன மடாலய தேவாலய சமயப் பிரசார நிலயத் தலைவர் **வித்துவான்** ஸ்ரீமத் சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகள் அவர்கள் வரவேற்புரை வழங்கினார்கள்.

அவ்வுரையின் சாரமாவது: இன்றைய உலகம் எதற்கெடுத்தாலும் பகுத்தறிவு பகுத்தறிவு என்று கூறிக்கொண்டு பயனற்றவழியில் காலத்தைச் செலுத்துகிறது. என்புருக்கி என்பது ஒரு பொல்லாநோய். இந்நோயை எந்த விஞ்ஞானியாலும் பகுத்தறிவு வாதியாலும் நீக்கமுடியாது. ஆனால் எலும்பைப் பெண்ணாக்கிப் பெருமைகண்ட நாடு நம்நாடு. மயிலாப்பூரிலே அன்று திருஞான சம்பந்தர் எலும்புகளையெல்லாம் ஒன்றுசேர்த்துப் பூம்பாவை ஆக்கினார். அரசியலுக்கும் மதத்திற்கும் தொடர்பில்லை என ஒதுக்கிவிட்ட இக்காலத்தில் இம் மடாலயத்தில் எழுந்தருளியிருக்கும் **ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கள்** இக்கால நிலைக்கேற்ப, சிவாகமங்களையும், சித்தாந்தங்களையும், வேதம், புராணம், இதிகாசம், கல்வெட்டு என்பன போன்றவைகளையும் உங்களிடையே கூடியிருக்கும் ஆசிரியர்கள்மூலம் கற்பிக்கத் திருவுளம்பற்றினார்கள். அம்முறையில் இங்குக் குழுமியுள்ள தலைவர் அவர்கள், ஆசிரியப் பெருமக்கள், மாணவர் குழுவினர் எல்லோரையும் வரவேற்கின்றேன் என்பது.

## ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கள்

# ஆசியுரை:

அன்பர்களே! எதிர்கால உலகைச் சமயஉலகாக்க ஆசிரியர்களும் அன்பர்களும் இங்குக் கூடியிருக்கிறார்கள். இளையஉள்ளம் வழிகாட்டியை விரும்புகிறது. வழி நல்வழியாக வேண்டும். நல்வழி தெய்வவழி. அங்கே அழைத்துச் செல்வது ஆசிரியர் கடமை. இங்குச் சிவவேதியர்களும் சேர்ந்திருக்கிறார்கள். தாங்கள் செய்யும் பூசை, வழிபாடுகளால் சிவத்துவவிளக்கம் என்றும் நின்று நிலவச்செய்வது இவர்கள் கடமை. இவர்கள் பூசைகளைச் சிவாகமவிதிப்படி செய்வதாலேயே நாடுவளம்பெறும். 'முன்னவனார் கோயில் பூசைகள் முட்டிடின்-மன்னர்க்குத் தீங்குள வாரி வளங்குன்றும்' என்பது திருமூலர் திருவாக்கு. ஆதலால் ஆசிரியர்கள் உள்ளமும் சிவாசாரியார்கள் செயல்முறையும் திருத்தம் பெறப் பயிற்சிவகுப்புக்கள் அவசியம். நமது ஞானக்கருவூலங்கள் வேதம், ஆகமம், சைவசித்தாந்தம், புராணம், இதிகாசம், ஆகிய இவைகள். இவைகளைக் கற்றறிந்து ஆன்றவிந்தடங்கிய அறிவே சமயவாழ்க்கைக்குச் சிறந்த வழிகாட்டி. இவைகளைப் படிப்பதாலேயே மனிதன் மனிதனாகிறான். நமக்கென்றுகிடைத்த ஞானக் கருவூலங்களை உள்ளபடி உணர்ந்து பயன்படுத்திக்கொள்ளவேண்டுவது நமது கடமை. அதற்காகவே செந்தமிழ்ச் சொக்கர் திருவருளாலும் குருஞானசம்பந்தப் பெருமான் திருவருளாலும் இவ்வகுப்பு நடைபெறச்செய்ய எண்ணியது.

**திறப்பாளர்:** எதிலும் தொடக்கம் நன்றாக இருக்கவேண்டும். வல்லவர்கையால் விளையும் நல்லதொடக்கம் நற்பயனைத்தரும். இவ்வகுப்பு எழுபத்தைந்து மாணவர்களுடன் சிறந்தபல ஆசிரியர்களின் போதனையில் நடைபெற இருக்கிறது. இதைத் திறந்து வைப்பவர்கள் நமது அன்பர் திரு. இலட்சுமண ஐயர் அவர்கள். இலட்சுமணன் என்ற பெயரைக் கேட்டவுடனேயே கம்பர் கவிதையால் ஆண்ட தமிழ்நாட்டிற்கு நல்ல தம்பியின் நினைவு வரும். நல்ல தொண்டரின் நினைவுவரும். தந்தையாயினும் தாயாயினும் நீதியிற் கோணினால் அதனை மாற்றி நேர்மையை நிலைபெறுத்தும் இளையபெருமானின் வீரப்பேச்சுகள் நினைவுக்கு வரும். அப்படியே, நேர்மையில் திறம்பாத நீதிபதியாகிய நமது ஐயர் அவர்கள், தொண்டையும் தூய்மையையும் விளக்குவதாகிய இவ்வகுப்பைத் தொடங்கி வைக்கிறார்கள். புகழ்மிக்க மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்களது மாணாக்கராகிய வேதநாயகம்பிள்ளை அவர்கள் நீதிபதியாக இருந்தார். தமிழ்ப்பணியும் சமயப்பணியும் புரிந்தார். அதுபோலவே நமது ஐயரவர்களும் இரண்டு பணிகளையும் இனிமையாகப் புரிந்து வருகிறார்கள். இவ்வகுப்பு செந்தமிழ்ச் சொக்கர் திருவருளால் இனிது நடைபெறுக. நற்பயன் விளைக.

## திறப்புரை :

### திரு R. இலட்சுமண ஐயர் அவர்கள் M. A., B. L.,

சப்ஜட்ஜ் & அஸிஸ்டெண்ட் செஷன்ஸ் ஜட்ஜ், குடந்தை.

மாணவர்களே! நீங்கள் தியாகிகள். ஆசிரியர்களாக உள்ள நீங்கள் இங்கு மாணவர்களாகிறீர்கள். அறிஞர்களாயுள்ள நீங்கள் பயிற்சிக்கு முயற்சி எடுக்கிறீர்கள். இதைநோக்கும்போது லௌகிகத்தில் எத்துணைச் சிறந்தவர்களும் சமயவாழ்வில் மாணவர்களாக இருப்பதுதான் வழக்கம் என்று தோன்றுகிறது. ஆதலால் இவ்வழக்கத்தை மேற்கொண்ட நீங்கள் அனைவரும் தியாகிகளே.

காளிதாசன் பிரணவப்பொருளை நன்கு விளக்கியிருக்கிறார். பிரணவம் என்பது ஒரு கூடு, அதில்வாழுகின்ற கிளிகள் இவ் உலகம். ஓம் என்பது ஓரெழுத் தல்ல. ஆனால் சமஷ்டியில் ஒன்றுபோலத் தோன்றுகிறது. வியஷ்டியில் அகார, உகார, மகாரங்களாகக் காட்சியளிக்கின்றன. அ என்றால் அருள், அறிவு என்று பொருள். உ என்றால் இன்பம் என்று பொருள். ம் என்றால் உண்மை என்று பொருள் கொள்ளவேண்டும். இந்த மூன்றெழுத்தின் கூட்டாகிய பிரண வத்துள் உலகம் வாழ்கிறது என்றால் மனிதன் அருள் அறிவு இன்பம் உண்மை ஆகிய இவைகளைக் கைக்கொண்டு வாழவேண்டும் என்பதுதான் முடிவு. இந்த நான்கிலும் நிலைத்திருப்பவனுக்குத்தான் ஆண்டவன் அருள் வழங்குவதாகக் காளிதாசர் கவிதை சொல்லுகிறது. ஆண்டவனை அன்பெனும் பிடியுள் அகப் படும் மலையாகவும் பூவாமல் காயாமல் கனியாமல் முதிர்ந்து இனிக்கும் தெய்வ மாகவும் அநுபவிக்கிறார் இராமலிங்க அடிகள். பின்வரும் உண்மையைப் பாருங்கள்:-

வைரம் வைடூரியங்கள் கல்லில் பிறக்கின்றன. உயர்ந்த மதம் ஒருவ னுக்குக் காதலியின் சொல்லால் உண்டாகிறதாம். இப்படி ஒவ்வொன்றுக்கும் பிறப்பிடம் சொல்லிக்கொண்டு வந்தவர்கள், நல்லாள் பிறக்குமிடத்தைச் சொல்ல முடியாதென்று விட்டுவிட்டார்கள். வள்ளுவரும் 'எல்லா உயிர்களும் பிறப்பால் ஒருதன்மையன.' என்று கூறுகிறார். அப்படிக்கூறிய வள்ளுவரின் பிறப் பிடத்தைப் பேசவந்த வரலாற்றாசிரியர்கள் அகர முதல என்ற குறளில் உள்ள 'ஆதிபகவனை' வைத்துக்கொண்டு ஒரு முடிவுசெய்யத் தொடங்கிவிட்டார்கள். தாமரை எங்கு முளைத்தால் என்ன? நமக்கு வேண்டியது அதன் மலர்தானே! ஆதலால் உயர்ந்த இலட்சியத்தைக்கொண்டு வாழ்வை வகுப்பதே நமது அடிப்படை

நமக்கு ஒருவரிடம் மரியாதையும் பக்தியும் மிதமிஞ்சிப்போனுல் அவர்கள் படத்தைவைத்து மாலைபோட்டு வணங்குகிறோம். உதாரணமாக பண்டிட் நேரு படத்திற்கு எல்லா மரியாதைகளும் செய்கிறோம். அப்போது படம் என்ற உணர்ச்சியை மறந்து நேருவுக்கே செய்வதாக நம்முடைய நினைப்பு. அதுபோலத்தான் உருவம் இல்லாத ஆண்டவனுக்கு உருவம் அமைத்துப் பாலையும் தேனையும்கொண்டு அபிஷேகம் செய்வது. அபிஷேகம் செய்யும்போது அபிஷேகம் செய்கிறவர்க்காவது செய்விக்கிறவர்க்காவது தரிசிப்பவர்க்காவது கல் என்ற கருத்து இருக்கிறதா? கடவுள் என்ற உணர்ச்சிதான் அவர் உள்ளத்தைக் கவர்ந்திருக்கிறது. ஆதலால் அவர் உள்ளமுவந்து இறைவனுக்கு இடும் ஒவ்வொரு சொட்டுப் பாலும் தேனும் அபிஷேகிப்பவர்க்கு ஆனந்தத்தை விளைவிக்கின்றன. நம்பியவர்க்குத்தான் நடராஜா.

**அடையாளம்:-** கடவுள்பக்திகொண்ட நமக்குச் சில அடையாளங்கள் வேண்டுமென்று ஆண்டவனைப் பாடிய அன்பர்கள் அறிவித்திருக்கிறார்கள். அடையாளங்கள். வெண்ணீறும் கண்டிகையுமாகும். எனக்கு எந்தப் பொருளிடத்திலும் அச்சமில்லை என்று சொல்லிய அன்பர் 'வெண்ணீறு அணியாதவர்களைக் கண்டால் அச்சமாக இருக்கிறது' என்கிறார். விபூதியைக் காட்டிலும் சிறந்த சாதனம் இல்லை. சிவத்துக்குமேல் சிறந்த தெய்வம் இல்லை.

**நீலகண்டன்:-** பரமசிவனுடைய கழுத்துக் கறுத்திருக்கிறது. காரணம் ஆலகால விஷத்தை அருந்தியதால். ஆகாத விஷத்தைத் தான் உண்டு அமுதத்தைத் தேவர்களுக்குக் கொடுத்து அவர்களை அமரர்களாக்கினார். சாகடிக்கும் விஷம் என்றும் சாகாத நித்தியனுகிய பரமசிவனுக்குச் சாக்காட்டை உண்டு பண்ண முடியவில்லை. ஒடுங்கிக் கண்டத்தில் அடங்கிக்கிடக்கிறது. சாகாமையைத்தரும் அமுதம் சாகும் அமரர்களுக்கு ஏதோ ஓரளவு ஆயுள் மருந்தாக அமைந்ததேயல்லாமல் என்றும் சாகாமையைக் கொடுக்கவில்லை. இதனுலேயே சிவபரத்துவம் நன்ருக விளங்குகிறது பாருங்கள். மற்ருெரு செய்தி, குயில் கறுப்பு. அழகில்லாதது. குரலோ மிக மிக இனிமையானது. மயில் பார்வைக்கு வெகு அழகு, குரல்கிடையாது. சங்கீதம் பாடுகிற பெண்மணிகள் சரீரம் நன்ருக இருந்தால் சாரீரம் அமையாது. சாரீரம் நன்ருக இருந்தால் சரீரம் அமையாது. இரண்டும் ஒருசேர இருப்பது அருமை. அதுபோல ஆண்டவன் கெட்ட விஷத்தை உண்டு மக்களுக்கு இனிமையைத் தருகிருன்.

**உமையொருபாகன்:-** சிவபெருமான் தேவியை இடப்பாகத்தில் வைத்திருக்கிறார். ஏன்? அர்த்தநாரீசுவரராகவே விளங்குகிறார். அதன் அற்புதமான விளைவைக் கவனியுங்கள். மார்க்கண்டேயர் காலகால மூர்த்தியை அமுதகடேசப் பெருமானை வழிபட்டார். மார்க்கண்டேயர்க்காக அவரும் காலனை உதைத்தார்.

எந்தக்காலால் தெரியுமா? இடதுகாலால். வலதுகால் ஆண்பகுதி. அதனுல் உதைத்தால் எமன் தாங்கமாட்டான். இறந்தேபோவான். அவன் செய்த தப்பிதத்துக்குத் தண்டிக்கவேண்டுமே அல்லாமல் அவனை அழிப்பது இறைவன் திருவுள்ளக் குறிப்பு அன்று. மறுபடியும் எமனுக்கு அருள் செய்யவேண்டும். அதனுலேயே அருள்வடிவாகிய அம்மையின் பகுதியாகிய இடது திருக் காலால் உதைத்தார்.

**நாக்குக்கு நகை :-** உலகத்தில் பெண்களும் ஆண்களும் காதுக்கு, மூக்கிற்கு, கழுத்துக்கு, காலிற்குப் பலபல ஆபரணங்களை அணிந்து கொள்கிறார்கள். கண்ணுக்குக்கூடக் கண்ணடி போட்டுக்கொள்கிறார்கள். முன்காலத்தில் ஒரு கவி சொல்லியிருக்கிறார் கண்ணுக்கு ஆபரணம் கனிந்தபார்வை என்று. அது அந்தக்காலத்தில். இப்படிக்குக் கண்ணுக்கு அணிந்துகொள்ளும் மக்கள் நாக்குக்கு நகைபோட்டுக்கொள்கிறார்களா? ஆனுல் நாவுக்கரசர் 'நாவினுக்கு அருங்கலம் நமச்சிவாயவே' என்கிறார். இடைவிடாமல் பஞ்சாட்சர ஜபம் செய்வதனுல் நாக்குக்கு ஆபரணம். இந்தப் பஞ்சாட்சரத்தையும் அடியார் பெருமக்கள் அருளிச் செய்த அருட்பாக்களையும் துணையாகக் கொண்டுதான் நாம் அம்பலவாணனை அடையவேண்டும். மாயூரத்திலிருந்து வைத்தீசுவரன்கோவில் போகிறோம். வழியில் தருமபுரம் ரோடு என்று ஒருகைகாட்டி இருக்கிறது. அதைப்பார்த்து இது தருமபுரம் போகுமா என்று கேட்டுவிட்டு, சீகாழி ரோட்டிற் சென்றால் தருமபுரத்தை அடையமுடியுமா? அது போலத்தான் தேவாரதிருவாசகங்களாகிய அருட்பாக்கள் நமக்கு வழிகாட்டும் கைகாட்டிகள். மனிதன் அந்த வழியிலே செல்வதுதான் நல்லது. அதைவிட்டு மாற்றுவழியில் சென்றால் போய்க் கொண்டே இருக்கவேண்டியதுதான்.

**சமயநெறிநில்:-** கல்லில் கட்டிக் கடலில் தள்ளினுலும் நற்றுணையாவது நமச்சிவாயவே என்று உறுதியுடன் நின்றார் அப்பரடிகள். நீற்றறையிலிட்டாலும் அதனைத் தண்ணீர்த் தடாகமாக அநுபவித்தார் அப்பரடிகள். அதனுல் சலியாத உறுதி, நலிவு இல்லாத பேரின்பத்தை நல்கியது. நாமார்க்கும் குடியல்லோம், நமனை அஞ்சோம் என்று சொன்னார். அவர்நிலை நமக்கு வரவேண்டும். அதற்காக உறுதியோடு வேதாகம நூற்படிப் பணிசெய்ய வேண்டும். அதற்காகவே இந்தவகுப்பு ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானமவர்களால் ஏற்பாடு செய்யப் பெற்றது. இவர்கள் செய்யும் காரியங்களெல்லாம் தமிழகத்துக்கே-ஏன் உலகத்துக்கே ஒரு பெரிய வழிகாட்டி. எல்லாம் வல்ல சர்வேஸ்வரனுடைய கிருபையால் இந்த வகுப்பு நன்றாக நடைபெறுக என்று பிரார்த்திக்கிறேன். ஆகமங்கள் இருபத்தெட்டு. அவை அனைத்தும் வேதசாரம், சதாசிவமூர்த்தியினுடைய ஐந்து திருமுகங்களில் நான்கு திருமுகங்களிலிருந்து நான்கு வேதங்கள் உண்டாயின. உச்சி முகமான ஈசானமுகத்திலிருந்து ஆகமங்கள் உண்டாயின. ஆகமங்களில் கோயிலை

அமைக்கும் முறைகளும், வழிபடும் முறையும் கூறப்பட்டுள்ளன. ஞான பாதத்தில் சமய தத்துவங்களும் பதிபசுபாசமாகிய மூன்று பொருள்களுடைய இயல்புகளும், நன்முக விவரித்துக் கூறப்பெறுகின்றன. இவற்றை எல்லாம் நீங்கள் சுருக்கமாகவும் விளக்கமாகவும் படிக்க இருக்கிறீர்கள்.

**திரு. இலட்சுமண ஐயரவர்களின்** திறப்புப் பேருரைக்குப்பின், சொற் பொழிவுகள் நிகழ்ந்தன. கோடை வகுப்பில் பாடம் நடத்த இருந்த ஆசிரியர்கள் தொடக்கநாள் பாடத்தைத் தனிச் சொற்பொழிவாகவே நடத்தியது குறிக்கத் தக்கது.

***சொற்பொழிவுகள் :-*** பிறகு ஆகமங்கள் 28 என்றும் அனைத்தும் வேதசாரமென்றும், இறைவனின் நான்கு முகங்களினின்றும் நான்கு வேதங்களும் ஐந்தாவதான ஈசான முகத்தினின்று ஆகமங்களும் தோன்றியன என்றும் ஆகமங் களில் கோயில் அமைப்பு முறைகளும் தத்துவங்களும் அடங்கியுள்ளன என்றும் வழிபாட்டு முறைபற்றிய விளக்கங்களும் கூறப்பட்டுள்ளன என்றும் ஆகம வகுப்பைத் தொடங்கிய **திரு S. சுவாமிநாதசிவாசாரியார்** அவர்கள் கூறினார்கள். அடுத்து, சைவசித்தாந்த வகுப்பினைத் தொடங்கிய **திரு. முத்து. சு. மாணிக்க வாசக முதலியார்** அவர்கள் பதி, பசு, பாசம் என்ற முப்பொருள்களும் என்றும் உள்ள உண்மைப் பொருள்கள். அப்பொருள்களின் இயல்புகளை உள்ளவாறு உணர்த்துவதே சைவசித்தாந்தம். அம்முப்பொருளையும் சிவபோகசாரம் என்ற நூலில் 'என்னை அறிவென்றான்' என்ற பாடலால் உணர்த்துகின்ற நுட்பத்தை மிக்க தெளிவுபட விளக்கி எல்லோரும் வியக்கச் சொற்பொழிவாற்றினார்கள்.

இறுதியில் **ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கள்** பயிற்சியாளர்கட்கு சிவபோகசாரமும், சொக்கநாத வெண்பாவும் வழங்கினார்கள். **ஸ்ரீமத் மாணிக்க வாசகத் தம்பிரான் சுவாமிகள்** அவர்கள் ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கள் அருளிய ஆசியுரையைப் படித்து அன்பர்களுக்கு வழங்க இறைவாழ்த்துடன் விழா இனிது முடிந்தது.

---

# வேதம்


**திரு. சு. சிவபாதசுந்தரம் பிள்ளை அவர்கள், B. A.,**

யாழ்ப்பாணம்.


### வேதமுதல்வர்

வேதம் சிவபிரானால் அருளப்பட்டதென்பது சைவக்கொள்கை. இதற்கு அகச்சான்று முற்றறிவு இல்லாதார்க்கு எட்டாத வாய்மைகள் வேதத்தில் உளவாதலாகும். இவற்றுட் சிலவற்றை இக்கட்டுரையின் மூன்றாங் கூறாகிய வேதப்பொருள் என்னுந் தலைப்பின் கீழ்க்காண்க. இதற்குப் புறச்சான்று களாவன:—

"மந்திர வேதங்கள் ஓதுநாவர்" என்னும் சம்பந்தர் திருவாக்கும், "ஓதினார் வேதம் வாயால்" என்னும் அப்பர் திருவாக்கும், "மறைநான்கும் விரித்துகந்தீர்" என்னும் சுந்தரர் திருவாக்கும், "மிக்கவேத மெய்ந்நூல் சொன்ன வனே" என்னும் மாணிக்கவாசகர் திருவாக்கும், "வேதமொடாகமம் மெய்யா மிறைவனூல்" என்னும் திருமூலர் திருவாக்கும், "வேதநூல் சைவநூல் என் றிரண்டே நூல்கள்.........ஆதியமலன் தருநூலிரண்டும்" என்னும் அருணந்தி சிவத்தின் திருவாக்கும் பிறவுமாம்.

### வேதத்திற் கூறப்படும் கடவுள்

வேதம் பரமபதி ஒருவரையே கூறுகின்றது. ஆயினும் அவருடைய இயல்பு (சொரூபம்) தொடர்பு (தடஸ்தம்) என்னும் இரண்டாலும் அவருக்குப் பல பெயர்கள் உள. அவைகள் அக்நி, ஆதித்யன், இந்திரன், வருணன், வாயு முதலியன. இவைகளும் பிறவுமாக நூறு பெயர்கள் பரமபதியைக் குறிக்கும் இயல்புடைமை சத்தியார்த்தப் பிரகாசம் என்னும் நூலில் இனிது விளக்கப்பட் டுள்ளது. அது இச் சொற்களின் பகுதிகளாற் பெறப்படுகிறது. அவற்றுட் சிலவற்றைக் கீழேகாண்க.

| பெயர் | பகுதி முதலியன | பொருள் |
|---|---|---|
| அக்நி | அஞ்சு = அறிதல் | முற்றறிவுடையவர் |
| ஆதித்யன் | அ = இல்லை, து = அழிதல் | அழிவில்லாதவர் |
| இந்திரன் | இதி = சக்தி | அநந்த சக்தி யுடையவர் |

---


'ஞானசம்பந்தம்' முதல் (சித்திரபானு ஆண்டு.) மலர், பக்கம் 385.



**வேத சிவாகம விருக்ஷம்**

(படத்தின் விபரம் பின்புரம் பாக்கவும்)

| | | | |
|---|---|---|---|
| வேதம் நான்கு | — | ருக்வேதம்<br>யசுர்வேதம்<br>சாமவேதம்<br>அதர்வணவேதம் | பெருங்கிளைகள். |
| உபவேதம் நான்கு | — | ஆயுர்வேதம்<br>தனுர்வேதம்<br>காந்தர்வவேதம்<br>அர்த்தசாஸ்திரம் | சிறுகிளைகள் |
| அங்கள்கள் ஆறு | — | சிக்ஷை<br>வியாகரணம்<br>சந்தஸ்<br>நிருத்தம்<br>ஜோதிஷம்<br>கல்ப்பம் | இலைகள் |
| உபாங்கங்கள் நான்கு | — | புராணம்<br>தருமசாஸ்திரம்<br>மீமாம்சை<br>நியாயம் | புஷ்பம் |
| உபநிடதம் பல | — | ஈசாவாஸ்யம் முதலியன | மகரந்தம் |
| | | மோக்ஷம் — | பழம் |
| சிவாகமம் இருபத்தி எட்டு | | காமிகாகமம் முதலியன | அடிக்கிளை |
| பாதம் நான்கு | — | ஞானம்<br>கிரியை<br>யோகம்<br>சரியை | பெருங்கிளை |
| உப ஆகமங்கள் | — | மிருகேந்திரம் முதலியன | சிறு கிளைகள் |
| பத்ததி பதினெட்டு | — | துர்வாச பத்ததி முதலியன | இலைகள் |

தியானம் — புஷ்பம் முக்த்தி — பழம்.

| பெயர் | பகுதி முதலியன | பொருள் |
|---|---|---|
| குபேரன் | குவி = பரந்திருத்தல் | எங்குமுள்ளவர் |
| மித்திரன் | உமிதா = நேசித்தல் | உயிர்களில் இரக்கமுள்ளவர் |
| வருணன் | வ்ரின் = நல்ல | உத்தமர் |
| வாயு | வா = அசைதல் அழித்தல் | பிரபஞ்சத்தைப் படைத்துக் காத்து அழிப்பவர் |

இப் பெயர்கள் பிற்காலத்திலே சிறு தெய்வங்களுக்கும், இவற்றுட் சில உயிரில்லாத பொருள்களுக்கும் பெயர்களாயின. அக்நி என்பது அக்கினி தேவனையும் நெருப்பையும், ஆதித்யன் சூரிய தேவனையும் சூரிய லோகத்தையும், இந்திரன் தேவேந்திரனையும் அரசனையும் குறிக்கின்றன. மற்றவைகளும் இவ்வாறே.

பரமபதி ஒருவரே என்று கூறும் வேத மந்திரங்கள் மிகப்பல. மேலே குறிக்கப்பட்ட பெயர்களும் அவைபோன்றவைகளும் பரமபதியையே குறிக்கின்றன என்பது இருக்குவேத முதல்மண்டலத்திற்றுனே சொல்லப்பட்டிருக்கிறது. அம்மந்திரம் பின்வருமாறு:—

> "கடவுள் ஒருவரே; ஆயினும் அறிவாளிகள் இந்திரன், மித்திரன், வருணன், அக்நி, திவ்யன், சுபர்ணன், கருத்மாந், மாதரிஷ்வாந் என்னும் பல பெயர்களால் அவரைச் சொல்லுகிறுர்கள்." (இப்பொருள் - "ஒருவர்தாம் பலபேருளர் காண்மினே" என்னும் அப்பர் தேவாரத்திலும் உள்ளது.)

> "இந்தப் பிரபஞ்சம் முழுவதும் பரமபதி ஒருவராலே வியாபிக்கப்பட்டிருக்கிறது."

என்று யசுர் வேதமும்,

> "இந்திரன் என்பதும் [illegible]

என்று சாமவேதமும்,

> "பிரபஞ்சம் முழுவதற்கும் பிராணனு யிருப்பவரே உமக்கு வணக்கம்"

என்று அதர்வவேதமும் கூறுதலாலும், வேதங்கள் பரமபதி ஒருவரையே கூறுகின்றன என்பது பெறப்படுகின்றது. அன்றியும்,

> "மறையாயின பலசொல்லியொண் மலர்சாந்தவை கொண்டு
> முறையான்மிகு முனிவர்தொழு முதுகுன்றடை வோமே"

என்று சம்பந்தரும்,

2

"வேதத்தின் பொருளானாய்"

என்று அப்பரும்,

"மறையின் பொருளானவனே"

என்று சுந்தரரும்,

"வேதங்கள் தொழுதேத்தும் விளங்குதில்லை கண்டேனே"

என்று மணிவாசகரும் சொல்லி யருளியவற்றாலும் வேதங்கள் பரமபதியையே பொருளாகக் கொள்ளுதல் உணரப்படும்.

இவற்றை நோக்காத மேல்நாட்டார் வேதம் காற்றையும், நெருப்பையும் நீரையும் துதிக்கின்றதென்றும். எம்மனோருட் சிலர் அது இந்திரன், அக்நி, வருணன் முதலிய சிறு தெய்வங்களையே துதிக்கின்ற தென்றும் மயங்குகின்றனர்.

## வேதப்பொருள்

வேதமானது, அறிவு (ஞானகாண்டம்) தொழில் (கர்மகாண்டம்) வாழ்த்து (உபாசனகாண்டம்) என முக்கூறுகளை உடையது. இவைகளை இருக்கு, யசுர், சாமம் ஆகிய மூன்றும் முறையே விதந்து கூறும். அதர்வம் மூன்றையும் கூறும். அறிவுக்கூறு சத்திநிபாதர்க்கு வேண்டிய மெய்ப் பொருளையும், உலகர்க்கு வேண்டிய அறங்களையும், பிரபஞ்ச வாய்மைகளையும் உடையது. மெய்ப்பொருளாவது சிவஞானமாகிய மெய்யறிவால் மாத்திரம் அறியப்படுவது. இது முப்பொருட்டன்மை, தளை நீக்கம், வீட்டுப்பேறு முதலிய வற்றைப் பற்றியதாம். மெய்ப்பொருள்களுட் சிறந்தவை பிரணவமும் திருவைந்தெழுத்துமாம். (திருவைந்தெழுத்து யசுர்வேதத்திலுள்ளது.)

"இறைசத்தி பாசம் எழில்மாயை யாவி
உறநிற்கும் ஓங்காரத்துள்"

என்றதிற் பிரணவத்தின் பெருமையும்,

"அருணூலும் ஆரணமும் அல்லாதும் ஐந்தின்
பொருணூல் தெரியப் புகின்"

என்றதிலும்,

"வேத நான்கினும் மெய்ப்பொரு ளாவது
நாத னாம நமச்சி வாயவே"

என்றதிலும் திருவைந்தெழுத்தின் பெருமையும் ஒருவாறு சொல்லப்பட்டன.

முப்பொருள்களுள் கடவுளின் இயல்பு வேதத்திற் பல இடங்களிலும் உள்ளது. அவற்றுள் ஒன்று (யசுர்-9-8) பின்வருமாறு:—

*"அந்தப் பரமபதியானவர் எங்கும் வியாபித்திருக்கிறார்; அவர் உயிரா யுள்ளவர்; சத்தியே வடிவாயுடையவர்; எல்லாம் வல்லவர், நிர்மலர், பரிபூரணர், எல்லாம் அறிபவர், எல்லாவற்றையும் உள்ளும் புறம்பும் ஆளுபவர், நித்தியர், சுவதந்திரர், அவர் தொடக்க மில்லாதனவாகிய ஆன்மாக்களுக்குப் பொருள்களின் உண்மையான தன்மையை என்றும் உணர்த்தியருளுகின்றார்"*

இறைவனுக்கும் உயிர்களுக்குமுள்ள ஒற்றுமை வேற்றுமைகள் இருக்கு வேதத்தில் (1-165-20) பின் வருமாறு கூறப்பட்டுள்ளது:—

*"இறைவனும் உயிரும் நித்தியமானவை. அறிவுப்பொருளாந்தன்மை யிலும் ஒத்திருக்கின்றன. அவைகள் பிரிவற நிற்கின்றன. இறைவன் உயிரில் வியாபித்திருக்கிறான். பலவகைப்பட்ட பிரபஞ்சங்களாகிய கிளைகளையுடையதும் ஒடுங்குங்காலத்தில் தன்னியல்பில் நிற்பதுமாகிய பிரகிருதியும், என்றுமுள்ளது. இந்த மூன்றன் தன்மைகளும் என்றும் உள்ளவை. இறை, உயிர் ஆகிய இரண்டனுள் பிந்தியது பிரபஞ்ச மாகிய மரத்தின் கனிகளை எண்ணுகிறது. முந்தியது உண்பதில்லை. அதுவே உள்ளும் புறமும் எங்கும் விளங்குகின்ற எல்லாப் பெருமை களும் வாய்ந்த பொருள்"*

அறங்களுக்குள்ளே "மனத்தின் கண்ணே மாசிலனாதல்" மிகவும் வற்புறுத்தப்படுகிறது. இது யசுர் வேதத்திலே தொடர்பாக ஆறு மந்திரங் களிலே (34-1-6) வேண்டப்படுகிறது. அவற்றின் சாரம் பின்வருமாறு:—

*"என்னுடைய மனம் பிறருக்கும் எனக்கும் நன்மையான எண்ணங் களைக் கொள்ளவும், எந்த உயிருக்கும் துன்பம் செய்யாதிருக்கவும், நல்லிச்சைகளை மாத்திரம் உடையதாகவும் அருளுக. தீமையையும் இழிவான கருத்துக்களையும் அது கைவிடுதற்கு அருளுக. அது எப் போதும் நன்மையையே நாடுக. யோகிகள் முக்காலத்தையும் அறிதற்குக் கருவியாயும், அழிவற்றதாகிய ஆன்மாவை மெய்ஞ் ஞானத்தோடு சேர்த்தற்கு வழியாயும், ஐம்பொறிகளோடு தொடர்*

புடையதாய் ஆன்மா அறிதற்குக் கருவியாயும், யோகமெனப்படும் வேள்வியை வளர்ப்பதாயுமுள்ள என்மனம் யோகத்தையும் மெய் யறிவையும் பெற்று எல்லாவிதமான துன்பத்தினின்றும் அறியாமையி னின்றும் நீங்க அருளுக. குதிரையைத் தான் விரும்புமிடங்களுக் கெல்லாம் செலுத்தும் குதிரைச் சேவகனைப்போல மனிதரை அங்கு மிங்கும் செலுத்தி எல்லையில்லாத ஆற்றலோடிருக்கின்ற எனது மனமானது பொறிகளைத் தீயவழியிற் செல்லாது தடுக்கவும் என்றும் நல்வழியிலே செலுத்தவும் அருளுக."

பிரபஞ்சதத்தைப்பற்றிய வாய்மைகள் பிற வாய்மைகளோடு இடைக் கிடை கலந்து வருகின்றன. உதாரணமாக இருக்கு வேதத்திலே முதல் மண்ட லத்திலே ஐம்பதாம் சூக்தத்தில் எட்டாம் ஒன்பதாம் மந்திரங்களிலே 'சூரிய னுடைய ஒளியிலே பொருள்களைச் சுத்தி செய்வனவாகிய எழுவகைக் கதிர்கள் உண்டென்பதும், அது தன்னைச் சுற்றும் கோள்களைத் தாங்குகின்றதென்பதும்' சொல்லப்பட்டுள்ளன.

வேதத்திலே சொல்லப்பட்ட செயல்கள் பலவகைப்பட்ட வழிபாடுகளாம். இவ்வழிபாடுகளுள் கடவுளை நெருப்பிலே வழிபடுதல் சிறந்தது. (இது சிவாகம முறையிலும் உள்ளது. இங்கே "சான்று' என்றது வேத மந்திரங்களுக்குப் பொருள்கொள்ளும் முறைமையாம். கோல்ப்ரூக் (Colebrooke) என்பவர் தமது கட்டுரைகளின் முதற்பாகத்திற் கூறுவதாவது. "இந்த (யசுர்) வேதத்திலே கிரியையில் விதிக்கப்பட்ட அசுவமேதமும் புருஷமேதமும் கொலை வேள்விக் கல்ல. முதற் 609 வகையான பிராணிகள் கட்டப்படுகின்றன. இவற்றில் பழகிய பிராணிகள் இருபத்தொரு தூண்களிலும், மற்றவைகள் இத்தூண்களுக்கிடை யிலும் கட்டப்படும். சிவமந்திரங்கள் சொல்லிய பின்பு இவைகளுக்கு ஒரு விதமான ஊறும் செய்யாமல் இவைகளை அவிழ்த்து விடுவார்கள்.") இது யாக மெனவும் ஓமமெனவும்படும். இதனோடு உயிருள்ள பொருள்களிலே கடவுளை நினைத்து வழிபடுதலுமுண்டு. இந்த உயிர்ப் பொருள்களுக்கு யாகபசு என்றும் இந்த யாகங்களுக்கு 'பசுவேட் டெரியோம்பல்' என்றும் பெயர். இவற்றுள் ஒன்றாகிய அசுவமேதமெனப்படும் குதிரை வேள்வியிலே குதிரையும், 608 வகையான வேறு பிராணிகளும் யாகசாலையிலே கொண்டுவந்து, மந்திரங்கள் சொல்லிப் பூசித்தபின் வெளியே செலுத்தப்படுகின்றன. இந்த யாகத்திலே ஒரு பிராணியும் கொல்லப்படுவதில்லை யென்பதற்கு மேல்நாட்டாரும் சான்று கூறுகின்றனர். வேதத்துக்கு உரைசெய்தோர் சிலர் சிற்சில இடங்களிலே குதிரை கொல்லப்பட்டதென்று பிழையாக உரைசெய்தமையால், வேதத்துக்குச் சார்பு நூலாகச் சூத்திரங்களைச் செய்தவர்கள் சில யாகங்களிலே கொலையை விதித் தனர். இவைகள் மனிதராற் செய்யப்பட்டவைகளாயினும், முகமனாற் சுருதி யெனப்படுகின்றன. (கந்தபுராணம்—காமதகனப் படலம் ,72.) இவை சுருதி

யெனப்படலால், அறியாதார் இவற்றை வேதமென நினைத்து, வேதத்திலே கொலை விதிக்கப்பட்டதென மயங்குவர். பிற உயிருக்குத் துன்பம் செய்யாமை (இருக்கு (7, 1, 1) "உயிர்களொன்றையும் கொல்லாத இல்வாழ்வானுக்கு மேம்பாட்டைக்கொடு"; மேலே காட்டிய யசுர் மந்திரங்களையும் பார்க்க.) வேதத்தில் விதிக்கப்பட்டிருத்தலால் வேதம் கொலைவேள்விகளை விதியாதென்பது தெள்ளிதிற் புலப்படும்.

வேதத்தில் கூறப்படும் அறிவும் செயலும், உபநிடதங்களிலும் பிரமாணங்களிலும் விரித்துக் கூறப்படுகின்றன.

## வேதப்பொருட்டுணிபு

சொற்கள் காலத்துக்குக்காலம் பொருள் வேறுபடுதல் உண்டு. அந்தணன் என்னும் சொல் இரக்கமுடையவன் என்னும் பொருளை இயல்பாயுடையதாய் இக்காலத்திலே பார்ப்பானைக் குறிக்கின்றது. தாசி என்னும் சொல் அடியவள் என்னும் பொருளை உடையதாய் இப்போது நாடகப்பெண்ணைக் குறிப்பதோடு நில்லாது கற்பில்லாதவள் என்றும் பொருள்படும். வேதம் மிகப் பழையதாதலால் அதிலுள்ள சில சொற்களின் வேதப்பொருளும் பிற்காலத்ததாகிய காவிய காலத்துப் பொருளும் வேறுயின. ஆதலால் காவிய காலத்தவரால் வேதத்துக்குச் செய்யப்பட்ட உரை சில இடங்களிலே தவறியது. அன்றியும் சிற்சில சொற்கள் தத்தம் கருத்தையுடைய பலவேறு பொருள்களைத் தொடக்கத்திலே குறித்தன. பின்பு அவைகள் காரண இடுகுறியாகி அவற்றுள் ஒன்றையே குறிக்க நேர்ந்தது. வேதச்சொற்களிற் சில இவ்வாறே ஒவ்வொன்றும் வேதத்தில் வெவ்வேறிடங்களில் வெவ்வேறு பொருளைக் குறிக்கின்றன. இவற்றுக்குக் காவியகாலத்துரைகாரர் அவ்வப்பொருளைச் சொல்லாமல் தமது காலத்துப் பொருளைக்கொண்டு பிழையான உரை செய்தனர். அசுவ என்னும் சொல் 'விரைவாகக் கொண்டு செல்வது' என்னும் கருத்தை யுடைமையால் பெருங்காற்றையேனும், குதிரையையேனும், எவற்றினும் விரைவானதாகிய ஒளிக்கதிரையேனும், மின்சாரத்தையேனும் குறிக்கலாம். வேத உரைகாரர் வாமமார்க்கத்தவராயின், அல்லது கொலை வேள்விகளை அறிந்தவராயின் அசுவ என்ற சொல்லைக் கண்டவுடனே அதற்குக் குதிரை என்று பொருள்செய்து அது கொலை செய்யப்பட்டது என்று பொருள் செய்தற்கும் வழிதேடுவார்கள். வைதீக சமயத்தை அநுசரியாதவர்களாகிய மேல்நாட்டாரது உரைகள் பிழைகள் நிறைந்தவைகளாகவே யிருக்கும். அவர்கள் வாயு என்பதைக் காற்றென்றும், இரணிய கர்ப்பன் என்பதைப் பொன்முட்டையென்றும், பிரணவமாகிய ஓம் என்பதைப் பொருளற்ற பதர் மொழியென்றும் கொண்டது நூதனமன்று.

இங்ஙனம் வேறுபடும் உரைகள் சில கூறுகளிலே சிறிதும் ஒற்றுமை யில்லாதனவாயும், வேறு சில கூறுகளிலே சில பகுதிகள் மாத்திரம் ஒற்றுமை யுள்ளனவாயுமிருக்கும். வேறு சில கூறுகள் முழுவதும் ஒற்றுமையுடையன வாயுமிருக்கும். அவ்விருவகைக்கும் உதாரணம் கீழேகாண்க.

## சற்றேனும் ஒற்றுமையில்லாத உரைகள்

**ஒருவருடைய உரை.**

அறநெறியாய்ச் சம்பாதித்த பொருளையே பெற்றுப் பயன்படுத்த வேண்டுமென்று போதிப்போரும், நியாயநூல் முறைப்படி அழகாக வினுவிக் கருதுவித்து அறிவிலிகளைத் திருத்துவோருமே அரசாட்சி செய்தற்கு வேண்டிய ஆற்றலையும் அதிகாரத்தையும் பெறத் தக்கவர்கள்.

**வேறொருவருடைய உரை.**

அவர்கள் சுத்தப் பொன்னாலாக்கப்பட்ட அணிகளால் அலங்கரிக்கப்பட்ட குதிரைக்கு முன்னே யாகப்பசு இறுகப் பிடிக்கப்பட்டதாய்ச் செல்ல, அந்தப் புள்ளியாடு முன்பாக நடக்கும்போது சத்தமிடுகின்றது. அது இந்திரனாலும் புசனாலும் விரும்பப்படும் வழியே செல்கின்றது.

## சில கூறுகள் ஒற்றுமையான உரைகள்

**ஒருவருடைய உரை.**

மாமிசத்தை விலக்கித் தானியங்களைச் சோதித்துச் சமைத்து உண்போருக்கு நல்ல சித்திகள் உண்டாகுக.

**வேறொருவருடைய உரை.**

குதிரையைச் சுட்டுச் சோதித்து "இது நன்மணமுடையது, இதைக் கொண்டுபோ" என்று சொல்லி மாமிசத்தை உண்ணக் கொடுப்போருடைய செயலும் எம்மோடு இருக்க.

இம்மந்திரங்கள் இருக்கு வேதத்தில் முதல் மண்டலத்தில் 162-ம் சூக்தத்தில் இரண்டாம் மந்திரமும் பன்னிரண்டாம் மந்திரமுமாம். பன்னிரண்டாம் மந்திரத்திலுள்ள பிரதானமான வேறுபாடுகளாவன :— (க) ஒரு சொல்லுக்கு ஒருவர் தானியம் என்று பொருள் செய்ததும், மற்றவர் குதிரை என்று பொருள் செய்ததும்; (உ) ஒரு வாக்கியத்துக்கு ஒருவர் மாமிசத்தை விலக்கி உண்ண என்றும், மற்றவர் மாமிசத்தை உண்ண என்றும் பொருள் செய்ததுமாம்.

வேத மந்திரங்களுக்குச் செய்த உரைகள் ஒன்றையொன்று முரணுதல் இந்த யுகத்தில் மாத்திரம் உள்ளதன்று; முந்திய யுகங்களிலும் இப்படியான உரைகள்தோன்றி நடுநிலை யுடையாரை மயங்கவைத்துத் துன்பம் செய்தன என்பது பின்வரும் கந்தபுராணத் திருவிருத்தங்களிற் காண்க.

முன்தொரு காலத்தின் மூவுல கந்தன்னில்
வந்திடு முயிர்செய்த வல்வினை யதனாலே
அந்தமின் மறையெல்லாம் அடுதலை தடுமாறிச்
சிந்திட முனிவோருந் தேவரு மருளுற்றார்.

ஆனதோர் பொழுதின்க ணமரரு முனிவோரும்
மாநில மிசைவைகு மாக்களு மிறையுள்ள
ஞானம திலராகி நவின்மறை நெறிமாற்றித்
தீநெறி பலவாற்றிப் பனுவல்கள் சிலசெய்தார்.

உரைகள் முரணும்போது சில இடங்களிலே சரியானது எது என்பதைத் தீர்த்தல் எளிதாகும். வேதத்தின் அடிப்படையான கொள்கைகளுக்கு மாறான கருத்துடையவைகளை விலக்குதலும், அவற்றுக்கு உடன்பாடான கருத்துக்களைக் கொள்ளுதலும் தக்கவைகளாம். கடவுள் ஒருவரே என்பதை வேதம் தெளிவாகக் கூறியிருத்தலால், அக்கினி, வருணன், வாயு ஆகிய இவைகள் தெய்வங்களல்ல என்பது பெறப்படும். ஆதலால் இவற்றை வெவ்வேறு தெய்வங்களாகக் கூறும் உரைகள் பிழையானவைகளாம். உயிர்களுக்கிரங்குதல் வேதத்தில் விதிக்கப்படுதலால், உயிர்களைக்கொன்று உண்ணுதல் தக்கதென்று கூறும் உரை விலக்கப்பட வேண்டியதாம். இனி, ஆகமங்களும் சைவர்களாகிய எமக்குப் பிரமாணமாதலால், ஆகமத்தைத் தழுவும் உரைகளைக் கொள்ளுதலும், ஆகமத்துக்கு முரணானவற்றை விலக்குதலும் முறையானவைகளாம்.

# தசோபநிஷத்ஸாரம்

**திரு. சு. ஸ்ரீராம சாஸ்திரிகள் அவர்கள்,**
போலகம்.

1 ஈசாவாஸ்யோபநிஷத், 2 கேநோபநிஷத், 3 காடகோபநிஷத், 4 பிரச்னோபநிஷத், 5 முண்டகோபநிஷத், 6 மாண்டூக்யோபநிஷத், 7 தைத்ரியோபநிஷத், 8 ஐதரேயோபநிஷத், 9 சாந்தோக்யோபநிஷத், 10 பிருஹதாரண்யகோபநிஷத், என்று பிரசித்திபெற்ற பத்துஉபநிஷத்துக்கள் உள. இவ்வுபநிஷத்துக்களையே வேதாந்தம் என்று பெரியோர்கூறுவர். வேதங்களின் முடிவே வேதாந்தம். வேதங்கள். ருக்வேதம், யஜுர்வேதம், ஸாமவேதம், அதர்வணவேதம் என்று நான்குவகைப்படும். இந்நான்கு வேதங்களுக்கும் முறையே இருபத்தொன்று. நூற்றொன்று. ஆயிரம், ஒன்பது, சாகைகள் (கிளைகள்) உள. ஒவ்வொரு சாகைகளின் முடிவிலும், ஒவ்வொரு உபநிஷத் கூறப்பட்டுள்ளது. ஆக மொத்தம் ஆயிரத்து நூற்று முப்பத்திஒன்று உபநிஷத்துக்கள். இவைகளுள் நூற்றெட்டு உபநிஷத்துக்களே அச்சிடப்பட்டு பிரசித்தமாக உள்ளன. அவற்றுள் பத்து உபநிஷத்துக்களுக்கு ஸ்ரீ சங்கராசாரியார், ஸ்ரீமத்வாசாரியார் முதலியோர் பாஷ்யம் இயற்றியுள்ளனர், சுவேதாஸ்வதரம். ந்ருஸிம்ஹதாபனீயம் இவ்விரண்டிற்கும் ஸ்ரீசங்கராசாரியார் பாஷ்யம் இயற்றியுள்ளார். வித்தியாரண்யரும் சங்கரானந்தரும் பத்து உபநிஷத்துக்களைத்தவிர மற்ற சிலஉபநிஷத்துக்களுக்கும் விளக்க உரை செய்திருக்கின்றனர். வேதங்கள் சிவபெருமானது மூச்சுக்காற்றுகள் ஆகையால் மகரிஷிகளால் இயற்றப்பட்டவைகளல்ல. அனாதிகளே ஆகையால் வேதங்களின் கடைசி பாகமாகிய உபநிஷத்துக்களும் மஹர்ஷிகளால் இயற்றப்பட்டவைகளல்ல. மற்றவர்களாலும் இயற்றப்படவில்லை. சிவபெருமானின் மூச்சுக்களானதால் அனாதிகளாயுள்ளவை என்பது வேதியர்களின் ஸித்தாந்தம். வேதமும் அவ்விதமேகூறுகிறது. உபநிஷத்து என்பது பிரம்ம வித்யை; பிரம்மமாகிய சிவபெருமானை ஜீவர்களாகிய நமக்கு அருகில் நம்முடன் ஒன்றாய் உறுதியாக அறிவித்து ஸம்ஸாரத்திற்குக் காரணமான அவித்யை முதலான நமது சகல கஷ்டங்களையும் விலக்கி பிரம்மத்துடன் நம்மைஒன்றாய்ப் பிணைப்பித்தலால் பிரம்மவித்யை உபநிஷத் எனப்படுகிறது. பிரம்மவித்யையைத் தெளிவுபடுத்தலால் கிரந்தத்திற்கும் உபநிஷத் என்றபெயர் ஏற்பட்டது.

அந்த பத்து உபநிஷத்துக்களுள் ஈசாவாஸ்யோபநிஷத் முதலாவதாக உள்ளது. இது யஜுர் வேதத்தின் உட்பிரிவாகிய சுக்லம் கிருஷ்ணம் என இரண்டில் சுக்ல யஜுர் வேதத்தின் உட்பிரிவான காண்வசாகையைச் சேர்ந்தது.

ஈசாவாஸ்யம் என்று அந்த உபநிஷத்துத் தொடங்குவதால் அதற்கு அந்தப் பெயர் வரலாயிற்று. ஈசாவாஸ்யோபநிஷத்தில் 18 மந்திரங்கள் உள்ளன. அம் மந்திரங்களில் கூறும் விஷயச்சுருக்கம் வருமாறு.

ஈசனாகிய சிவபெருமானைக்கொண்டு உலகத்தை மறைக்கவேண்டும். அதாவது உலகத்தை சிவபெருமானை விட்டு வேருகப் பார்க்காமல் உலகம் சிவமயம், சிவனைத்தவிர வேறன்று என்று காணவேண்டும், உலகத்தைக் காண்போருக்குச் சிவமில்லை. சிவபெருமானைக் காண்போருக்கு உலகமில்லை. சிவமே உலகமாகத் தோன்றும் நிலை சம்சாரநிலை. உலகமே சிவமாய்த் தோன்றும் நிலை முக்திநிலை. இக்கருத்தே "கல்லைக் கண்டால், நாயைக் காணேம். நாயைக் கண்டால், கல்லைக் காணேம் என்று சிறுபிள்ளைகள் வரை பரவி யுள்ளது. கல்லால் நாயுருவம் செய்யப்பட்டதில், கல்லைப்பார்ப்போர்க்கு நாய் தெரியாது; நாயைப் பார்ப்பவர்க்கு கல் தெரியாது, அதுபோல் இங்கும் உலகத்தை சிவமாய்ப் பார்ப்போருக்கு உலகமில்லை. சிவத்தை உலகமாய்ப் பார்ப்போருக்கு சிவமில்லை, என்று கருத்து. பொய்யான உலகினை வெறுத்துத் துறவறம் பூண்டு மெய்யான சிவானந்தத்தை அநுபவித்து ஆத்மாவைக் காப்பாற்றவேண்டும், ஒருவருடைய பணத்திலும் பற்று வைக்காதே, சிவானந்தானுபவமாகிய மோக்ஷத்தை அடைவது சிவஞானத்தால். அவ்வித ஞானத்தைப்பெற அதிகாரமற்றவர்கள் அவ்வதிகாரம் ஏற்படுவதற்கு வேதத் தால் அறிவுறுத்தப்பட்ட அவரவர்க்கேற்ற கருமங்களைச் செய்யவேண்டும். அன்றேல் மோக்ஷத்தை உய்வதற்கு வேறு வழியில்லை. சிவனேடு ஒன்ருக ஆத்மாவை அறியாதவர்கள் ஸம்ஸாரபந்தத்திலேயே உழல்வர், ஜீவர்களுக்கு ஆத்மாவாகிய சிவஸ்வரூபம் விகாரமற்றது, மனம் வாக்கு முதலான இந்திரியங் களுக்குப் புலப்படாதது. எங்கும் எப்பொழுதும் எல்லா உலகுமாகவுள்ளது, அது அறிந்துள்ள அறிஞர்கட்கு ஆத்மஸ்வரூபமானதால் நெருங்கியுள்ளது. ஆனல் அறியாதவர்களுக்கு எட்டியுள்ளது. சிவஸ்வரூபத்திலே உலகம் மாயை யினல் தோன்றுகின்றது. சிவஸ்வரூபம் எங்கும் நிறைந்துள்ளது, அதுவே நமது ஸ்வரூபம் என்று, சிவப்பொருளின் ஒன்ருய் இருக்கும் தன்மையை அறிந்தவர்க்கு சோகம் மோஹம் இவைகள் விலகிப்போம். சிவஸ்வரூபத்திற்கு ஸ்தூலம் சூக்ஷ்மம் காரணம் என்ற மூவகை சரீரமும் கிடையாது. அது சுத்தமும் பாபஸம்பந்த மற்றதுமாக உள்ளது. அதுவே இவ்வுலகிற்குக் காரணம். பிராணிகளுக்குக் கர்மபலனை அளிப்பதும் அதுவே.

கர்மங்களையும் கடவுளின் உபாஸனைகளையும் சேர்த்துச் செய்பவர் களுக்கு ஸ்வபாவமாக உள்ள அஞ்ஞானத்தினல் ஏற்பட்ட காமம், ஞானம், வியாகிருதமாகிய உலகம் அவ்யாகிருதமாகிய மாயை இவைகளைச் சேர்த்து உபாஸிப்பவர்களுக்கு அதர்மம், காமம் இவைகள் விலகி மோக்ஷத்திற்கு

அருகிலுள்ள பிரம்மலோகம் கிடைக்கும். அர்ச்சிராதி மார்க்கம் எனக்கூறப்படும் வழியில் அப்பிரம்மலோகம் கிடைக்கும் என்பது.

கேநோபநிஷத்து — இரண்டாவது கேநேஷிதம் என்று தொடங்குவதால் அந்தப் பெயர் காரணப்பெயராக விளங்கிற்று. ஸாமவேதத்தின் உட்பிரிவான தலவகாரசாகையைச் சேர்ந்ததாதலால் தலவகாரோபநிஷத் என்றும் கூறுவர்.

இதில் நான்கு கண்டங்கள். இதில் கூறும் விஷயச்சுருக்கம் வருமாறு:— இந்திரியங்களின் வியாபாரத்திற்கு ஸாக்ஷி மாத்திரமாக நின்று, பிரேரகமாய் மற்றொன்றால் பிரகாசிக்காமல் ஸ்வயம் பிரகாசமாக உள்ள ஆத்மாவே பிரம்மம். அது அறியப்பட்டதும் அறியப்படாததுமான உலகிற்கு வேறாக அதற்கு சாக்ஷியாக உள்ளது.

ஆத்மா, வாக்கு மனது கண் செவி நாசி முதலிய இந்திரியங்களின் வியாபாரங்கட்கு எட்டாதது, ஆனால் இந்திரியங்களைச் சகல விஷயங்களிலும் பிரவிருத்திக்கச் செய்வது, அதை அறிந்தால் மோக்ஷம் கிடைக்கிறது. அதை அறியாமல்போனால் பெருநஷ்டமே. ஸகுணமாகவும் ஜகத்காரணமாகவும் தேவர்களுக்கு ஜயத்தைக் கொடுப்பதும், அஸுரர்களுக்குத் தோல்வியை அளிப்பதும், அந்தந்த கர்மங்களுக்குத் தக்கவாறு பலத்தைக் கொடுப்பதும் அந்த பரப்ரம்மமே. அப்பரம்பொருளை பிரம்ம வித்யா ஸ்வரூபிணியான உமாதேவியின் அநுக்ரஹத்தால் அக்னி, வாயு, இந்திரன் முதலான தேவர்கள் அறிந்துகொண்டனர். அதனால் அவர்கள் மேன்மையை யடைந்தனர். அந்த பிரம்மத்தை உபாஸித்து எல்லோரும் ஆத்மஞானம் பெற்று மோக்ஷத்தை எய்துவர், ஸத்யமே ஞானம் பெற முக்கிய ஸாதனமாக உள்ளது, என்பது.

காடகோபநிஷத்து — மூன்றாவது—யஜுர்வேதத்தின் உட்பிரிவான கடசாகையைச் சேர்ந்தது. அதனால் அதற்கு காடகோபநிஷத் எனப்பெயர் வரலாயிற்று. அதில் ஆறுவல்லிகள் உள்ளன, அது நசிகேதஸ், யமன் இவ்விருவரின் ஸம்வாதமாக அமைந்தது. ஒருவருக்கும் உபயோகமற்ற பொருளைப் பிறருக்குத் தானம்செய்வது கூடாது இவ்விதமிருக்க யாகத்தில் பிரயோஜனமில்லாத கிழப் பசுக்களைத் தானம் செய்த தகப்பனுக்கு நல்ல லோகம் கிடைக்காது என்று பயந்து, பிரயோஜனப்படக்கூடிய என்னை யாருக்குக் கொடுக்கப்போகிறீர்கள் எனக்கேட்ட நசிகேதஸின் கருத்தை அறியாமல் தகப்பன் கோபத்தால் உன்னை யமனுக்குக் கொடுத்தேன் எனக்கூற ஸத்தியத்தைக் காப்பாற்ற யமலோகமடைந்து நசிகேதஸ் யமனிடம் மூன்று வரம் பெற்றகதை. இதில் கூறும் விஷயச் சுருக்கம் வருமாறு:— ஆஸ்திக்யம் ஸத்யம் நல்லொழுக்கம் அதிதிபூஜை

பித்ருபக்தி முதலியவைகள் மிகவும் முக்கியமானவை. உபாஸனம் கர்ம இவைகளைச் சேர்த்து அனுஷ்டானம் செய்தால் பிரம்மலோகத்தை அடையலாம். மோக்ஷமும் அதன் ஸாதனமும் சிரேயஸ், காமமும் அதன் சாதனமும், பிரேயஸ் சிரேயஸ் பிரேயஸ் இவ்விரண்டிலும் சிரேயஸே உயர்ந்தது, அவித்யையைச்சேர்ந்தது பிரேயஸ் வித்யைச்சேர்ந்தது சிரேயஸ், அவித்யையை விலக்கி வித்யையை அடைவதே மேலானது, பரலோகமே கிடையாது என்றுகூறும் நாஸ்திகன் யமலோகத்தை அடிக்கடி அடைந்து பிறப்பு இறப்பு என்னும் பெரும் துக்கத்தை அடைந்து கஷ்டப்படுவான், மிகவும் அநுபவம் வாய்ந்த குருவே உபதேசிக்கத் தக்கவர். தர்க்கம் முதலான யுக்திகளால் ஆத்ம ஞானத்தை அடையவும் முடியாது. விலக்கவும் முடியாது. ஆத்மஸ்வரூபம் புண்யபாப சப்பந்தமற்றது. ஜனன மரண சம்மந்தமுமற்றது. காலங்களையும் கடந்தது. ஸகலவேதங்களும் ஆத்ம ஸ்வரூபத்தையே அறிவுறுத்துகின்றன, பிரம்மசர்யம் கர்மங்கள் தபஸ் முதலிய சாதனங்கள் ஆத்மஸ்வரூபத்தை அறிவதன் பொருட்டே உள்ளன, பிரணவத்தின் உபாஸனத்தால் ஆத்மஞானத்தை அடையலாம். உலகத்தையும், அதை ஸம்ஹாரம் செய்யும் காலனையும் ஸம்கரிக்கும் ஈசானன் என்று பெயருள்ள சிவனுடைய உபாஸனம் சிவானுக்ரஹம் இவற்றால்தான் சிவஸ்வரூபமான ஆத்மக்ஞானத்தை அடையலாம். ஈஸ்வரன் ஜீவனுக்கு நண்பனாக அவன் செய்யும் கர்மம், அநுபவம் இவைகளுக்கு ஸாக்ஷியாய் ஹிருதயத்தில் வீற்றிருக்கிறான். சரீரமாகிய ரதத்தில் ஏறிய ஜீவனாகிய தலைவன், மனதாகிய கடிவாளத்தால் இந்திரியங்களாகிய குதிரைகளை அடக்கி நல்வழியில் ஓட்டும் புத்தியாகிய தேரோட்டியால் ரதத்தை நல்லமார்க்கத்தில் செலுத்தி ஸம்ஸாரமாகிய இருளுக்கு அப்பாலுள்ள சிவஸாயுஜ்யமாகிய பரமபதத்தை அடைய வேண்டும். விபரீதமாகச் செலுத்தி ஸம்ஸார பந்தத்தில் போகக்கூடாது.

பிண்டமாகிய சரீரத்திலுள்ள ஆத்மாவே அண்டத்தில் உள்ளது. அண்டத்திலுள்ளதே பிண்டத்திலுள்ளது. எங்கும் ஒரே ஆத்மா வசிக்கிறார். எங்கும் நிரம்பியுள்ளார். பேதத்தைப்பார்ப்பவன் மிருத்யுவை அடைகிறான். சரீரமாகிய புரத்தில் வசிக்கும் பிரம்மத்தை யோகபலத்தால் அறியவேணும். சரீரத்தில் மூன்று அவஸ்தைகளுக்கும் ஸாக்ஷியாய் விளங்கும் ஆத்மஸ்வரூபமே பிரம்மமாம். அதை அறிந்தால் மோக்ஷம். அதை அறியாமலிருந்தால் கர்மங்களுக்கு தக்கவாறு நரகம் ஸ்வர்க்கம் முதலியபந்தங்களை அடைவர். சம்சாரமாகிய விருக்ஷத்திற்கு மூலமான பிரம்மத்தை அறிந்து விருக்ஷத்தை பிளக்கவேண்டும். வஜ்ஜிரம் போன்று எவரைக்கண்டுபயந்து ஜகத் அசைகிறதோ, சூரியன் அக்கினி முதலியோர் தத்தம் காரியங்களைச் செய்கின்றனரோ அந்தசிவபெருமானே பிரும்மம். அவரை யோகபலத்தால் இந்த ஊரிலேயே அறிந்து முக்திபெற வேண்டும். அல்லது அவரை உபாசித்து அர்ச்சிராதி மார்க்கத்தால் பிரம்மலோகம் சென்று அங்கும் முக்திபெறலாம்.

பிரச்னோபநிஷத்து — நான்காவது—இது அதர்வவேதத்தைச் சேர்ந்தது. ஆறு ரிஷிகள் பிப்பலாத மகரிஷியினிடம் கர்மம், உபாசனம், ஞானம், இவைகளைப்பற்றி ஆறு பிரச்னங்களைக்கூறி அவ்வுண்மையை அறிந்ததால் பிரச்னோபநிஷத்து எனப்பெயர் வரலாயிற்று. இதில் கூறியவிஷயச்சுருக்கம் வருமாறு:— பஞ்சபூதங்கள் பிரம்மாண்டம் இவைகள்தோன்றி பிறகு சூரியன் சந்திரன்தோன்றி ஸம்வத்ஸரம் முதலிய காலங்கள் உண்டாகி பிறகு தானியங்கள் தோன்றின. அதன்பிறகு மனுஷ்யர்கள் உண்டாகின்றனர். சரீரம், இந்திரியம், இவைகளை சலிக்கச்செய்வதால் பிராணன் உயர்ந்தது. அதன் உபாசனத்தால் மனுஷ்யர்கள் மனதின் சுத்தி, ஏகாக்ரநிலை, பிரும்மலோகம் முதலிய பலனை அடைகின்றனர். அதற்கு ஸாக்ஷியாக உள்ள ஆத்ம ஸ்வரூபத்தையும் அறிந்து முக்திபெறுகின்றனர். ஓங்காரோபாசனையினால் பிரும்மலோகம் கிடைக்கும். அங்கு முக்தி பெறலாம். பிராணன் முதலான பதினாறு கலைகளின் காரணமான பரமாத்மா சரீரத்தில் ஜீவ ரூபமாக பிரகாசிக்கிறார். அவரை இங்கேயே அறிந்து முக்தி பெறலாம். பிராணன் முதலிய பந்தங்கள் தொலைந்துபோம்.

முண்டகோபநிஷத்து—ஐந்தாவது— இதுவும் அதர்வண வேதத்தின் உட்பிரிவே. முண்டமென்று கூறப்படும் சிரசில் அக்கினி பாத்திரத்தை ஏந்துதலாகிய சிரோவ்ருதத்துடன் அத்யனம் செய்யவேண்டியதால் இதற்கு முண்டகோபநிஷத் என்றபெயர். இதில் ஆறுகண்டங்கள் உள. அங்கிரஸ்என்ற பெயருள்ள மகர்ஷி சௌனகருக்கு உபதேசித்தது. இதன்விஷயச் சுருக்கம் வருமாறு:- பரவித்யை - அபரவித்யை என வித்யைகள் இரண்டு அறிய வேண்டியவை. நிர்விசேஷமான அக்ஷர ஸ்வரூபத்தை அறியும் வித்யை பரவித்யை அக்ஷரப் பிரம்மமே உலகிற்குத் தத்வமானதால் (உண்மையானதால்) அதை அறிந்தால் எல்லாவற்றையும் அறிந்ததாக ஆகிவிடும். சகல உலகும் மாயையினால் அக்ஷரப் பிரம்மத்தில் தோற்றுவதால் அதுவே விவர்த்தகாரணமாகும். பிரம்மமே தானே தன்னை உலகமாக்கிக் கொள்வதால், அது உபாதான காரணமாகவும் நிமித் காரணமாகவும் கூறப்படுகிறது. பிரம்மம் நாமரூபவடிவினதான உலகிற்கு காரணமாக உளது. அதுவே எல்லாவற்றையும் அறிந்தது. அதை குருபதேசத்தால் அறியவேண்டும். குருவும் தகுதிவாய்ந்த சிஷ்யனுக்கு உபதேசித்தல் வேண்டும். அந்த பிரம்மம், நமது ஹிருதயகுகையில் ஜீவரூபமாக இருக்கிறது. அதை ஓங்காரோபாஸனத்தால் அறியலாம். ஆத்மாவை அறிந்தால் கர்மங்கள் தொலையும். அஞ்ஞானம் நீங்கும். ஆத்மஸ்வரூபம் எங்குமுள்ளது. அது ஸ்வயம் பிரகாசமாக உள்ளது. சூரியன் சந்திரன் முதலிய எல்லா ஒளிகளுக்கும் ஒளியாக உள்ளது. சரீரமாகிய விருக்ஷத்தில் ஜீவன் பிரம்மம் என்ற இரு பறவைகள் இருக்கின்றன. ஜீவன் கர்மபலத்தை அநுபவிக்கிறான். பிரம்மம் சாக்ஷியாக விளங்குகிறது. ஜீவ ஸ்வரூபத்தை உபாதியைவிட்டு விலக்கி ஈஸ்வர ஸ்வரூபத்துடன் ஒன்றாக அறிந்தால் பந்தம் தொலையும், ஆத்மாவை அறிந்த ஜீவன்முக்தன் சகல

காரியங்களையும் விட்டு விலகி ஆத்மாவில் இன்பம்கண்டு விளங்குகிறான். இவ்விதம் ஆத்மாவை சத்தியத்தால் அறியலாம். **சத்தியந்தான் ஜெயம் பெறும். பொய் ஜெயிக்காது**. "ஸத்ய மேவ ஜயதே நாந்ருதம்" என்ற நமது ஸ்வராஜ்ய முத்திரை இங்குதான் உள்ளது. இவ்விதம் ஆத்மாநுபவமுள்ள ஞானிகளை ஆதரிப்பவர்களுக்கு சகல சிரேயஸ்ஸும் உண்டாகும். இவ்வித ஆத்மாநுபவம் சிவாநுக்ரஹத்தால் தான் உண்டாகும், ஞானம் வந்தால் நாமரூபம் தொலைந்துபோம். அவன் பிரம்மமாகிறான். கர்மஸன்யாசத்தால் ஞானிகள் வேதாந்தங்களிலிருந்து ஆத்மாவை அறிகிறார்கள். இந்த ஆத்மஞானமே பரவித்யை - கர்மம், உபாஸனம் இவைகள் அபரவித்யை. கர்மங்களை அனுஷ்டானம்செய்து ஸ்வர்க்கம் முதலிய அழிந்துபோகக்கூடிய நிலையற்ற பலனை அடைகிறான். அதில் வைராக்யம் ஏற்படவேண்டும். உபாஸனங்களால் பிரம்ம லோகத்தை அடைந்து பிறகு பிரம்மாவினிடம் ஆத்மாநுபவமடைந்து அதன் பிறகு முக்தி அடையலாம். ஆனால் பிரம்மலோகம் செல்வதே முக்தியல்ல; வைகுண்டம் கைலாஸம் முதலியன பிரும்மலோகத்தின் பிரிவுகளே. அங்கேயே இருப்பதும் முக்தியாகாது. அங்கிருந்து ஈசுவரனுடைய அனுக்ரஹத்தால் ஞானம் உண்டாகி முத்தியடையலாம் என்பது.

மாண்டூக்யோபநிஷத்து — ஆறாவது - இதுவும் அதர்வண வேதத்தைச் சேர்ந்ததே. மாண்டூக்ய என்று கூறப்படும் மகர்ஷியால் சொல்லப்பட்டதால் மாண்டூக்யோபநிஷத் எனப் பெயர். இதில் கூறிய விஷயங்களின் சுருக்கம் வருமாறு.

ஓங்காரமானது பிரம்மத்தைக் குறிப்பிடுவதாலும், பிரம்மத்யானத்திற்கு இடமாக இருப்பதாலும் ஓங்காரமே பிரம்மஸ்வரூபம். அதில் அகாரம் உகாரம் மகாரம் என்று மூன்று மாத்திரை எழுத்துக்கள், விசுவன், தைஜஸன், பிராக்ஞன் என்று முறையே விழிப்பு, ஸ்வப்னம், தூக்கம் என்ற மூன்று அவஸ்தைகளின் சம்பந்தத்தால் ஆத்மாவும், முறையே மூன்று விதம். அம் மூன்றும் பிரணவத்தின் மூன்று மாத்திரைகளின் பொருள். உலகில் சப்தங்களின் பொருளெல்லாம் சப்தஸ்வரூபமே. எல்லா சப்தங்களும் ஓங்காரஸ்வரூபம் ஆகையால் ஓங்காரம் ஸர்வாத்மகம், எல்லாமாயுள்ளது. பிரமமும் எல்லா உலகிற்கும் காரணமானதால் ஸர்வாத்மகமானது, அந்த பிரம்மம் ஓங்காரத்தின் பொருளானபடியால் ஓங்காரஸ்வரூபம். வியஷ்டியாய்த் தனித்தனியான பிண்டங்களின் (சரீரங்களின்) அபிமானியான விசுவனும் ஸகல சரீரஸமஷ்டியாகிய அண்டத்தின் அபிமானியான விராட் புருஷனும் ஒன்று. அது அகாரப் பொருளானபடியால் அகாரஸ்வரூபம். ஸ்வப்னாபிமானியான வியஷ்டி தைஜஸனும் ஸமஷ்டியான ஹிரண்யகர்பனும் உகாரப் பொருளானபடியால் உகாரஸ்வரூபம். ஸ்தூலப்பிரபஞ்சம் ஸூக்ஷ்ம பிரபஞ்சத்தில் அடங்கியது,

அதுவும் காரணமான மாயையில் அடங்கியதே. காரண சரீராபிமானியான வியஷ்டி பிராக்ஞனும், ஸமஷ்டி மாயாபிமானியான அவ்யாகிருதனென்கிற ஈசுவரனும் ஒன்று. அது மகாரப் பொருளானபடியால் மகாரஸ்வரூபம், பிரணவத்தின் மாத்திரை மூன்றும், அதன் பொருளான விசுவ, தைஜஸ, பிராக்ஞர்களான வியஷ்டி, விராட் ஹிரண்யகர்ப அவ்யாகிருதாளென்னும் ஸமஷ்டி, இவர்கள் நான்காவதாய் உபாதியற்ற சுத்தமான ஆத்மஸ்வரூபத்தில் கல்பிக்கப்பட்டவர்களான படியால், நான்காவதாக விளங்கும் அந்த சுத்த ஆத்மஸ்வரூபம், ஞானத்தால் மூன்று அவஸ்தைகளும், உபாதியால் ஏற்பட்ட அதன் அபிமானிகளான வ்யஷ்டி சமஷ்டி புருஷர்களும், ஸ்தூல சூக்ஷ்மகாரண பிரபஞ்சங்களும், இவ்வாருகிய அக்ஞானத்தில் கல்பிக்கப்பட்ட இரண்டாவதான வஸ்துக்களெல்லாம் பாதிக்கப்பட்டுவிட்டபடியால் சாந்தமான சிவமென்றுரைக்கப்படும் மங்களமான இரண்டாவதுபொருளற்ற ஓரே பொருளான பரம்ஸ்வரூபமே எஞ்சிய முக்திஸ்வரூபம். இவ்விதம் ஓங்காரத்தியானத்தின் மகிமையால் சுத்தமான ஆத்மஸ்வரூபத்தை அறிந்து கைவல்யத்தைப் பெறலாம்.

தைத்திரீயோபநிஷத்து — ஏழாவது - இது தித்திரி மகர்ஷியினுல் கண்டு பிடிக்கப்பட்ட சாகையில் உள்ளதால் இப்பெயர் வரலாயிற்று. இது கிருஷ்ண யஜுர்வேதத்திலுள்ளது. இந்த உபநிடதத்தில் ஸாம்ஹிதீ, வாருணீ, யாக்ஞிகீ என்று மூன்று பிரிவுகள் உள்ளன. ஸாம்ஹிதீ உபநிஷத்து சிக்ஷாவல்லியென்றும், வாருணீ உபநிஷத் ஆனந்தவல்லீ எனப்படும் பிரம்மவல்லி என்றும், ப்ருகுவல்லியென்றும் யாக்ஞிகீ உபநிஷத் நாராயணோப நிஷத் என்றும் கூறப்படுகிறது. இதில் கூறிய விஷயச்சுருக்கம் வருமாறு. சிக்ஷாவல்லியில் சித்தத்தின் ஏகாக்ரநிலை பலவிதமான நாம் விரும்பிய பலன்கள் ஸ்வராஜ்யம் இவைகளின் பொருட்டு ஸம்ஹிதோபாஸனே, வியாஹிருதி என்கிற அக்ஷரங்கள் பிருதிவி முதலிய வஸ்துக்கள் இவற்றின் சம்பந்தமுள்ள பிரம்மோபாசனம், ஓங்காரோபாஸனம், மேதை ஐஸ்வர்யம் இவைகளைக்கொடுக்கும் ஜபஹோமங்கள், ஸத்யம், தபஸ், தமம், சமம், அக்னி உபாஸனே, அதிதிபூஜை, பிரஜா சம்பத்து வேதாத்யயனம் வேதார்த்தப் பிரவசனம், இவைகளின் அவசியத்தன்மை, க்ஞானத்தை கொடுக்கும் ஜபங்கள், தர்மம், தேவபிதுரு காரியங்கள் மாதா பிதா ஆசார்யாள் இவர்களிடத்தில் பக்தி சிஷ்டாசார பரிபாலனம் சிரத்தை, பரலோகபயம் லஜ்ஜை இவற்ருேடு தானம், பதிதர்கள் விஷயத்தில் நடந்துகொள்ள வேண்டிய விதம் இது முதலிய உயர்ந்த உபதேசங்கள் குருகுலத்தில் படித்து முடித்த சிஷ்யனுக்குக் கூறப்படுகிறது. ஆனந்தவல்லி பிருகுவல்லி இவ்விரண்டிலும் ஸச்சிதானந்த ரூபமும் (எப்பவும் உள்ளது அறிவு உருவம் ஆனந்த உருவமாயுள்ளதும்) எங்கும் எப்பொழுதும் எல்லா வஸ்து ஸ்வரூபமாகவும் உள்ள பிரம்மம் ஹிருதயகுகையில் ஜீவரூபமாய் பிரகாசிக்கின்றது. பிரம்ஹமே பஞ்சபூதங்களைச் சிருஷ்டித்து அதனுட் புகுந்துள்ளது. சரீரத்தில் அன்னமயம், பிராணமயம், மனேமயம், விஞ்ஞானமயம்,

ஆனந்தமயம் என்று ஐந்து கோசங்கள் (சட்டைகள்) உள்ளன. அன்னமய மென்பது ஸ்தூலசரீரம், சூக்ஷ்மசரீரம் ஞானேந்திரியம் ஐந்து, கர்மேந்திரியம் ஐந்து, பிராணாதி வாயுக்கள் ஐந்து மனது, புத்தி இரண்டு, ஆக பதினேழுமாகும். இதுவே பிராணமயம், மனோமயம், விக்ஞானமயம், என்ற மூன்று கோசங்களாக அமைந்திருக்கின்றது, ஆனந்த மயகோசமென்பது எல்லாவற்றிற்கும் காரணமான அக்ஞானம். இந்த ஐந்து கோசங்களையும் பிரித்து அறிந்து அதற்கு வேறான பிரம்மம் ஐந்து கோசங்களுக்கும் ஆந்தரமாகத்தானே பிரகாசிக்க வல்ல சாக்ஷியாய் விளங்குவதையறிதல் வேண்டும், அந்த பிரம்மமே உலகினை சிருட்டித்து அதனுட் புகுந்தது. அதுவே ஸத்தியம். அதுவே ஆனந்தம், அதுவே ரசம், மனிதனின் ஆனந்த முதல் மேன்மேல் நூறுபங்கு மேலான ஹிரண்யகர்பர் என்றும் பிரம்ம தேவனுடைய ஆனந்தம் வரையில் உள்ள எல்லா ஆனந்தங்களும் பிரம்மானந்த ஸமுத்ரத்தின் திவிலைகளே. பிரம்மத்தை அறிந்தவனுக்கு எல்லா ஆனந்தங்களும் கிடைக்கும். சரீரத்திலும் சூரிய மண்டலத்திலுமிருக்கும் ஆத்ம வஸ்து ஒன்றே. பிரம்மத்தை அறிந்தவனுக்குச் செய்யவேண்டிய காரியம் ஒன்றுமில்லை. அவன் செய்ய வல்லதை செய்தவனாய் அடைதலை அடைந்தவனானபடியால், பச்சாத் தாபப்பட வேண்டியதில்லை. ஞானியானவன் உலகில் எங்கும் சென்று ஆனந்த ரூபமான பிரம்மத்தை கானம் செய்துகொண்டு உலகிற்கு அநுக்ரஹம் புரிகிறான். இவ்விதமாகக்கூறி சிற்சில உபாஸனைகளும் அறிவுறுத்தப்படுகின்றன. நாராய ணோபநிஷத்தில் கர்மகாண்டம் உபாஸனா கண்டம் ஞான காண்டம் என்ற மூன்றுவித காண்டங்களுக்கும் உபயோகப்பட்ட பலவிஷயங்களைக் கூறுகிறது. நாராயணனின் ஹிருதய கமலத்தில் வஸிக்கிற சிவபெருமானின் உபாஸனையும் விசேஷமாகக் கூறப்படுகிறது "நாராயணோபநிஷதா யதுபாஸனோக்தா" என்று ஹரதத்த சிவாசாரியார் சுருதி சூக்திமாலையில் இதையே அறிவிக்கிறார்.

இன்னும் பரப்பிரம்மத்தின் தத்துவமும் ஸகுண பிரம்மத்தியானம் ஜபம் ஸ்நானம் சந்தியாவந்தனம், வைசுவதேவம், வீரஜாஹோமம் போஜனம், முதலியவைகளுக்கு அங்கமான சிவமந்திரங்கள் பிரம்மா, விஷ்ணு, ருத்திரன், விநாயகர், சுப்பிரமணியர், நந்தி, துர்க்கை, நரஸிம்ஹர், சூரியன் முதலிய தேவதைகளின் பிரார்த்தனா மந்திரங்கள், பாபநாசத்தின் பொருட்டு சில ஹோமங்கள் அதன்மந்திரங்கள் ஸத்யோஜாதம், வாமதேவம், அகோரம், தத்புருஷன், ஈசானன், என்ற ஐந்து முகங்களைப் பற்றிய பஞ்சப் பிரம்ம மந்திரங்கள், ஸத்தியம், தபஸ், தமம், சமம், தானம், தருமம், புத்திரன், அக்னியின் ஆதானம், அக்னி ஹோத்திரம், யக்ஞ உபாஸனை, ஸந்நியாசம் என்ற பனிரண்டு சாதனங்கள். அவற்றுள் ஸந்யாஸமே உயர்ந்ததாகும். இது முதலிய பல விஷயங்களைக் கூறுகின்றது.

ஐதரேயோபநிஷத்து—எட்டாவது. இது ருக்வேதத்தைச் சேர்ந்தது ஐதரேய மகரிஷியால் கண்டுபிடிக்கப்பட்டதால் அந்தப்பெயர் வரலாயிற்று

இதில் ஆறு கண்டங்கள் இது ஆத்மஷட்கம், என்றும் கூறப்படுகிறது. இதில் கூறப்படும் விஷயச் சுருக்கம் வருமாறு:— ஆதியில் ஆத்மா ஒருவனே உளன்; அவன் ஆலோசித்து உலகமெலாம் சிருஷ்டித்தான்; லோகபாலர்களையும் உண்டுபண்ணினன்; ஞானத்திற்கு தகுதிவாய்ந்த உயர்ந்த மனுஷ்ய சரீரத்தையும் சிருட்டித்தான்; மனித தேகத்தை உண்டுபண்ணி அதில் அந்த பரமாத்மாவே, பிரம்மரந்திரத்தின் வாயிலாகப் பிரவேசித்தான். ஜீவரூபனுகப் பிரவேசித்த ஆத்மா வெகுகாலம் வரை சம்சாரபந்தத்தினை அநுபவித்து ஏற்ற சமயம் வாய்த்ததும் அதிருஷ்ட வசத்தால் ஆசார்யனை அண்டி தனது ஸ்வரூபக் ஞானத்தால் முத்தி பெறுகிறன். உலகில், பிறப்பு, இறப்பு என்று சொல்லும் இவ்விரு பெரும் கஷ்டத்தை மனத்தினுல் நினைத்து அதனுல் வைராக்யம் பெற்று உபாதிகளை விலக்கி ஆத்மஸ்வரூபத்தையே பிரம்மமென அறிந்து முத்திப்பெற வேண்டும் என்பதாகக் கூறுகிறது.

சாந்தோக்யோபநிஷத்து — ஒன்பதாம். இது ஸாம வேதத்தைச் சேர்ந்தது, சந்தோகாள் என்பது ஸாமவேதம் கற்றவர்கள். அவர்களுடைய உபநிஷத்தானபடியால் சாந்தோக்யோபநிஷத் என்ற பெயர். இதில் எட்டு அத்தியாயங்கள், முதல் ஐந்து அதியாயங்களில் உபாஸனங்கள் விரிவாய்க் கூறப்படுகின்றன. உபாஸனங்களில் சில கர்மாவின் அங்கங்களைப்பற்றியது. ஆகையால் கர்மம் செய்யும் காலத்திலேயே செய்யத்தக்கது. சில ஸ்வதந்திரோபாஸனைகள், அதில் சில ப்ரதீகோபாஸனைகள். பிரதிமைகளை இதுவே ஈசுவரன் என்றுத்யானம் செய்வது. சில அஹங்கிரகோபாஸனங்கள். நானே ஈசுவரன் என்றுத்யானம் செய்வது. இதில், முக்கியமாக ஓங்காரோபாஸனம் சூரியன் பிராணன், வியாணன் என்றுள்ள வாயுக்கள் ஸ்தோபம் என்ற அக்ஷரங்கள் இவைகளின் உபாஸனம் ஆதித்ய மண்டலத்திலும் அக்ஷிமண்டலத்திலும் முக்கண்ணனை பரமசிவனுடைய உபாஸனம் ஆகாசவித்யை, பிராணவித்யை மதுவித்யை காயித்ரீவித்யை, ஜ்யோதிரவித்யை, சாண்டில்யவித்யை கோசவித்யை புருஷ யக்ஞஉபாஸனம், ஸர்வர்க வித்யை, ஷோடசகலவித்யை, உபகோசல வித்யை. பஞ்சாக்கினிவித்யை, வைசுவாநரவித்யை, முதலிய பல உபாஸனங்கள் கூறப்படுகின்றன. உபாஸனங்களால் ஆயுள் விருத்தியும் பல புத்திரர்களை அடையும் லாபமும் அப்புத்திரர்களின் தீர்க்காயுளும், மழை பெய்தல் அதனுல் அன்னம் முதலிய பல பொருள்களின் மிகைமை, இதுபோன்ற நாம் விரும்பிய பல பொருள்களான பலன்கள் உண்டாவதாகக் கூறப்படுகின்றது.

பஞ்சாக்னி வித்யையைக் கூறும்போது ஜீவர்கள் மரணமடைந்த பின்பு புண்ணிய கர்மவசத்தால் தூமாதிமார்க்கம் என்று கூறும் வழியாக அதற்குடைய அபிமானி தேவர்களால் அழைத்துச் செல்லப்பட்டு ஸ்வர்க்க லோகத்தில் போகானுபவம் செய்த பிறகு திரும்பிவந்து ஆகாயம், வாயு, மேகம், வர்ஷம்.

தானியங்கள் இவைகளின் சம்பந்தப்பட்டு புருஷனால் உட்கொள்ளப்பட்டு அவ்வன்ன வழியாய்ப் புருடனின் வீர்யத்தில் சம்பந்தப்பட்டு ஸ்திரீயின் கெர்பாசயத்தில் சேர்ந்து பத்துமாதம் கர்ப்பவாச சிரமத்தை அநுபவித்துப் பிறகு, பிறப்பையடைந்து, மறுபடியும் ஸ்வர்க்கம் அல்லது பாப கர்மவசத்தால் பல ஜந்துக்கள், மரம், செடி கொடிகளாய் ஜனித்து இவ்விதம் கஷ்டப்படும் ஸம்ஸார வாழ்க்கை வைராக்கியத்தின் பொருட்டு விரிவாகக் கூறப்படுகிறது. உபாஸனைகளைச்செய்தால் அர்ச்சிராதி மார்க்கம் என்னும் வழியாய் தேவதைகளால் அழைத்துச் செல்லப்பட்டு பிரம்மலோகம் சென்று அங்கு திவ்ய சுகங்களை அநுபவித்து அடுத்த கல்பத்தில் திரும்புதல், அன்றேல் அங்கேயே பிரம்ம தேவனின் உபதேசத்தால் ஞானம்பெற்று முக்திபெறுதல் என்னும் விஷயமும் கூறப்படுகிறது. ஆறுமுதல் மூன்று அத்யாயங்களில் ஸத்வித்யை பூமவித்யை பிரஜாபதிவித்யை என்ற மூன்று வித்யைகளும் நிர்குண பரப்ரம்மத்தைக் கூறுகின்றது. தகரோபாஸனம் என்கிற ஹிருதய கமலத்திலும் அதிபூதத்தில் சிதம்பரத்திலும் பிரகாசிக்கின்ற ஸகுணமான சிவபெருமானின் உபாஸனமும் கூறப்படுகிறது. ஸத்வித்யையில் பிரம்மமே ஜகத்காரணம் அதை அறிந்தால் எல்லாம் அறிந்ததாகும். அதுவே ஸத்தியம்; மற்றவை பொய்யே, ஆகையால் அத்விதீயம் ஒரே வஸ்துவாயுள்ளது. அதுவே நன்கு ஆலோசித்து உலகினை சிருஷ்டித்து ஜீவரூபமாக அதில் பிரவேசித்தது. மனது, அன்னமயம், பிராணன், ஜலமயம், ஜலத்தால் ஜீவிப்பது வாக்கு, நெய் முதலியதை ஜலபதார்த்தத்தால் நன்றாய்ப் பிரகாசிக்கிறது. நித்திரையில் ஜீவன் தனது ஸ்வரூபமாகிய பிரம்மத்தினிடம் உபாதிநீங்கி ஒன்றுசேருகிறான். அதனால் சுகமாகயிருக்கிறான். ஜீவன் அஞ்ஞானத்துடன் பிரம்மத்தில் ஒன்றாகச் சேருவதால் இப்பொழுது பிரம்மத்தில் இருக்கின்றோமென்றும் எழுந்திருக்கும்பொழுது அங்கிருந்து வருகிறோமென்றும் அறிவதில்லை. ஜீவனுக்கு அழிவில்லை. சரீரமே அழிகின்றது. சூக்ஷ்மமான பிரம்மத்திலிருந்து ஸ்தூலமான ஜகத்து உண்டாகிறது. உலகின் காரணமான பிரம்மம் பிரத்யக்ஷம் முதலிய பிரமாணங்களால் அறியப்படாமல்போனாலும் குரூப தேசிக்கும் மஹா வாக்கியங்களால் அறியப்படும் அந்த பிரம்மமே ஜீவனது ஸ்வரூபம். உண்மையான அதை அறிந்தால் இப்பெரும் ஸம்ஸாரத் தொல்லைகள் நீங்கி ஜீவன் முக்திபெறலாம். இப்பொய்யான உலகில் ஈடுபடுபவன், இப்பெரும் கஷ்டத்தையே அடைகிறான் என்று கூறப்படுகிறது. பூமவித்யையில் பெயர், வாய், மனது முதலிய வஸ்துக்களை மென்மேலும் உயர்ந்ததாகக்கூறி எல்லாவற்றிற்கும் மேலாயுள்ள பிராணனைக் காட்டிலும் மேலான ஆத்ம வஸ்துவைக்கூறி அதுவே உண்மை, அதுவே பெரியது; ஆனந்தரூபமாக உள்ளதும் அதுவே, மிகவும் சிறியதான மற்றவையெல்லாம் துக்கரூபம், பிரும்மமே எங்கும் நிரம்பியுள்ளது; அதுவே நாம், அதை, கேட்டல் திருப்பித்திருப்பி மனனம்செய்தல் தியானம் இவைகளால் அறிந்து முக்திபெறலாம் என்று கூறப்படுகிறது.

பிரஜா பதி வித்யையில் பாபங்களின் சேர்க்கை யற்றதும் முதுமை இறப்பு இவையற்றதும் உண்மைவிருப்பம், உண்மை சங்கல்பம், முதலிய எட்டு குணங்கள் உள்ளதுமான பரமாத்ம வஸ்துவே ஜீவரூபமாக, விழிப்பு, ஸ்வப்னம், தூக்கம், என்று கூறும் மூன்று நிலைமைகளையும் உபாதி சம்பந்தத்தால் அடைகிறது. அதுவே க்ஞான பலத்தினுல் உபாதி நீங்கி சுத்தமான ஸ்வரூபம் பெற்று முக்தி பெறுகிறது என்று கூறப்படுகிறது.

பிரஹதாரண்யகோபநிஷத்து — பத்தாவது இது சுக்லயஜுர் வேதத்தைச்சேர்ந்தது. இது மற்ற உபநிடத்துக்களைக்காட்டிலும் பெரியதாகவும் தனிமையான காட்டில் ஏகாந்தமான இடத்தில் அத்யயனம் செய்யவேண்டியதாலும், பிரஹதாரண்யகமெனப்படும். இதில் ஆறு அத்தியாயங்கள் உள. முதல் அத்தியாயத்தில் அசுவமேத யாகம்செய்யும் அதிகாரமற்ற அசுவமேத பலனை விரும்பும் மற்றவர்களும் உபாஸிக்கும்படியான அசுவம், அக்னி இவைகளின் உபாஸனம், பிராணோபாஸனம் இவைகளைக்கூறி உபாஸனம் கர்மம் இவைகளைச் சேர்த்து அனுஷ்டானம் செய்தவர்களுக்கு பிரம்மபட்டம் வரையுள்ள பலன்களைக்கூறி இவ்வளவும் அக்ஞானத்தினுல் ஏற்பட்ட ஸம்ஸார சம்பந்தமாக உள்ளது. இந்த அவித்யையை விலக்குவது ஆத்மவித்தியை என்று கூறி வித்யா சூத்திரம், வித்தியா சூத்திரம் என்று வித்யை அவித்யை என இவைகளைப்பற்றிய சுருக்கமான வசனங்கள், பிறகு அவைகளின் விரிவான விளக்கங்கள் கூறி பரமாத்மாவே ஜகத்தை சிருஷ்டித்து அதில் ஜீவரூபமாகப் பிரவேசித்தார் என்றும் விளக்குகிறது. ஆத்மாவே ஆனந்த ரூபமென்றும், தானே பிரம்மரூபமென்றும் அறிந்தால் ஸர்வாத்ம பாவம் வருமென்றும் அதை தேவர்களோ மஹர்ஷிகளோ, மனுஷ்யர்களோ எல்லோரும் அறியலாம் எல்லோருக்கும் அதிகாரம் உண்டு என்றும் பிரம்மமே பிராம்மணர் முதலான எல்லா ஜாதிகளையும் சிருஷ்டித்து அவர்களின் தர்மங்களையும் (கடமைகளையும்) சிருஷ்டித்தது, தர்மமே ஜகத்தை காக்கவல்லது என்றும் எல்லா ஆசிரமங்களைக் காட்டிலும் கிருஹஸ்தாச்ரமம் எல்லோருக்கும் முக்கியமாக உபகாரம் செய்கிறதென்றும் கூறுகிறது இன்னும் ஜீவர்களின் கருமத்தினுல் உலகம் சிருஷ்டிக்கப்படுகிறது. ஆகையால் ஜீவன்கள் ஒவ்வொருவரும் உலக சிருஷ்டிக்குக் காரணமானவர்கள் என்றும் கர்மாவினுல் ஸ்வர்க லோகத்தை அடைதலும் உபாஸனத்தால் பிரம்மலோக ஜயமும் ஏற்படுகிறதென்றும், நற்புத்திரனை அடைந்து அவனை நல்வழியில் பயிற்சிசெய்து தமக்கு வேண்டிய பரலோக சாதனங்களை அவனைக்கொண்டு செய்வித்து அதனுல் மனுஷ்யலோக ஜயமும் ஏற்படுமென்றும், உலகம், பெயர், உருவம், கருமம், என்று மூன்று விதமாய் அவித்தியையின் கார்யம் என்பதாகவும் விரிவாகக் கூறப்பட்டிருக்கிறது.

இரண்டாவது அத்தியாயத்தில் ஆத்மஸ்வரூபமானது பிராணன் முதலியவற்றைக் காட்டிலும் வேருனது. தூக்கத்தசையில் ஜீவாத்மஸ்வரூபம்

பரமாத்மாவாகிய தனது ஸ்வரூபத்தில் ஐக்யத்தை அடைகிறது. ஜாக்கிரத் தசையில் அங்கிருந்து உபாதியால் வேறுபட்டுவருகிறது. நித்திரைதசையில் ஜீவன் மஹாராஜனைப் போலவும் மஹாகுமாரனைப் போலவும் க்ஞானியான மஹாபிராமணனைப் போலவும் ஆனந்தத்தை அடைகிறான் என்பதாகவும் பிராணன் முதலிய உலகம் வியவகாரம் செய்யும் தருணத்தில் மாத்திரம் உண்மை வாய்ந்தது அதனால் வ்யாவஹாரிக ஸத்யம் ஆனால் ஆத்மாவோ சத்தியத்திற்கும் சத்தியமாக பாரமார்த்திக ஸத்யம் அதாவது அதுதான் உண்மை ஸத்தியம் எனவும் மூர்த்தம் அமூர்த்தம் எனக்கூறப்படும் பஞ்சபூதங்களைக் காட்டிலும் ஆத்மா வேறுபட்டவன் என்பதாகவும் கூறுகிறது. ஆத்மாவை அப்பொருளில்லை இப்பொருளில்லையென இதரப் பொருள்களை நீக்கித் தெரிந்துகொள்ளல் வேண்டும். ஆத்மா இவ்வுருவம் வாய்ந்தது என்பதாக அறியமுடியாது என்றும் ஆத்மாவே எல்லாவற்றைக்காட்டிலும் பிரியமான வஸ்து; அதன்பொருட்டே மற்றவை பிரியமாகஆகிறது என்பதாகவும் விளக்குகிறது. ஞானத்தினாலேயும் ஸந்யாஸத்தினாலேயுமே ஆத்மா அறியப் படுகிறது. கர்மாவினால் ஆத்மாவை அடையமுடியாது ஆத்ம ஞானத்தைப்பெற சிரவணம், மனனம், தியானம், இவைகளே சாதனம் என்பதாகவும் அறிவுறுத்துகிறது. பேதபுத்தியுள்ளவன் மோக்ஷத்தை அடையமுடியாது என்றும் மோக்ஷகாலத்திலே வேறுபட்டது என்பது ஒன்றுமே தோன்றுவதில்லை யென்றும், இன்னும் பல அரியவிஷயங்களும் அறிவுறுத்தப்படுகின்றன. மூன்றாவது அத்தியாயத்தில் உபாஸனத்தால் அடையப்படும் பிரம்மலோகத்தில் உள்ள பல விசேஷங்களுக்கும் பந்தத்தின் ஸ்வரூபமும் பந்தத்தினின்றும் விடுபடும் பொருட்டு அறியவேண்டிய ஆத்மஸ்வரூபமும் ஆத்மாவை அறிவதற்கு ஸாதனமான ஸன்யாஸத்தின் ஸ்வரூபமும் உலகினை பலவிதக் காரியங்களுக் குட்படச்செய்யும் அதனுள் இருக்கும் அந்தர்யாமியான பரமாத்மாவின் ஸவிசேஷ, நிர்விசேஷ ஸ்வரூபங்களும் பரமாத்மாவின் ஆணைக்குட்பட்டே உலகம் இருக்கிறது. அவனின்றேல் அணுவும் அசையாது என்றும் மனிதப் பிறவியை யடைந்தும் பரமாத்மாவைத் தெரிந்துகொள்ளாமல் இறப்பவன் மிகவும் துக்கிக்கத் தகுந்தவனென்றும் உபாசிக்கப்படும் அபர பிரம்மத்தைவிட அறியவேண்டிய பரப்பிரம்மம் மேலானது உபாஸனத்தால் மாத்திரம் மோக்ஷ மடைதல் முடியாது. ஞானத்தால்தான் மோக்ஷம்பெறலாம் என்றும், கூறப்படு கிறது. நான்காவது அத்தியாயத்தில் பல உபாஸனைகளை அறிந்தும் அபயமான முக்திநிலையை யடையாமல் பந்த நிலையிலிருக்கும் ஜனக மகாராஜனுக்கு யாக்ஞ வல்கியர் உபாஸனங்களுக்கும் மேலான ஞானமார்க்கத்தை அறிவிக்கிறார். அதில் ஆத்ம ஒளியால் எல்லா விவகாரங்களும் நடைபெறுகிறது. அது ஸ்வயம் பிரகாசம், சூரியன், சந்திரன், அக்கினி, வாக், கண், காது முதலிய எல்லா ஒளிவாய்ந்தவைகளும் அஸ்தமித்தும்கூட ஸ்வப்னாவஸ்தையில் விழிக்கும் அவஸ் தையைப்போல் எல்லா விவஹாரங்களும் நடைபெறுகிறது. அதற்கு ஆத்ம

ஒளிதான் காரணம். அந்த ஆத்மா புத்தி முதலியவற்றைக்காட்டிலும் வேறானது. புத்தி முதலிய உபாதியின் சம்பந்தத்தால் ஜாக்கிரத், ஸ்வப்னம் என்ற அவஸ்தை களை அடைவதும் புத்தி முதலிய உபாதிகள் நாசம்பெற்று அக்ஞானம் மாத்திரம் இருக்கும்பொழுது நித்திரா (ஸுஷுப்தி) அவஸ்தையை அடைந்து பரமாத்மா விடம் சேர்ந்து கொஞ்ச நாழிகை சுகம் பெறுவதுமாக மூன்று அவஸ்தைகளிலும் சுற்றிக்கொண்டு இதுபோன்று இவ்வுலகம், மேலுலகம் இவைகளில் புத்தி முதலிய உபாதி சம்பந்தத்தால் க்ஞானம் கருமம், முன்ஜன்மத்தின் பாவனை இவைகளுடன்சென்று பூத ஸூக்ஷ்மங்களைக்கொண்டு புதிது புதிதாகப் பல உருவங் களை எடுத்துக்கொண்டு, அவித்யை, காமம், கருமம் இவைகளால் பலவித பந்தத்தை அனுபவித்து பிறகு குரு மொழிகளால் ஆத்ம ஞானம் பெற்று உலகைத் துறந்து அவித்யை காமம் கருமம் இவைகள் நீங்கி ஸ்வரூபத்தை அடைந்து பேரானந்தம் பெறுகிறதென்கிற விஷயங்கள் மிகவும் விரிவாகக் கூறப் படுகின்றன. ஐந்து ஆறு அத்தியாயங்களில் பலஉபாஸனைகளும், தமம், தானம், தயை இவைகள் அவசியமெனவும் கூறப்படுகிறது. இவ்விதம் பத்து உபநிஷத்துக் களிலும் பிரும்மமே ஸத்தியம். உலகம் பொய். ஜீவன் பிரம்மத்தைக்காட்டிலும் வேறானவனல்ல என்ற விஷயமும் கர்மங்கள் செய்து அதனால் பாபங்கள் விலகி சித்தம் சுத்தம்பெற்று, உபாஸனங்களால் ஏகாக்ரநிலைபெற்று ஆத்மா, ஆத்மா வைத் தவிர மற்றவைகள் இவைகளை நன்றாக விளக்கி ஆத்ம ஞானத்தால் அனாத்மாவை விலக்கி ஜீவன் பிரம்மம் இவைகளின் ஐக்கியம் பெற்று, முக்தி யடையும் வழிகளும் நன்கு புலப்படுத்தப்படுகின்றன. இந்த ஆன்ம ஞானம் உமா தேவியுடன் கூடிய சிவோபாஸனத்தால் சிவானுக்ரஹம் பெற்றால்தான் கிடைக்கும். இதுவே தசஉபநிஷத்துக்களின் ஸாரமான பொருள். இதுவே சிவாகமங்களுக்கும் பொருளாகும். ஆனால் சிவாகமங்கள் உபாஸன பாகத்தை விரிவாய்க்கூறும். இக்கருத்தை ஹரதத்த சிவாசார்யர் தாத்பர்ய ஸங்கிரஹ மென்கிற சுருதி ஸூக்தி மாலையில் கூறுகிறார்.

---



நகர அமைப்பு

# ஆகமம்

ஆகமவித்வான்.

**சிவஸ்ரீ. S. சுவாமிநாத சிவாசாரியார் அவர்கள்,**

*தலைமை ஆசிரியர்,*

*வேதசிவாகம பாடசாலை, தருமபுரம்.*

*கல்யாணம் கரோது ந: கஶ்சித் கருணாவருணாலய: ।*
*யோ மாயூரமாஶ்ரித்ய நர்த்தவிநாயக: ॥*

**(இ-ள்)** *கருணைக்கடலான மாயூரத்தில் வசிக்கும் நர்த்தன கணபதி எனக்கு மங்களத்தைக் கொடுக்கட்டும்.* **(காரணாகமம்)**

**ஆ - கமம்** *என்பது ஆன்மாக்கள் மோக்ஷமடைய மலநாசஞ் செய்விப்பது எனப்பொருள்.*

*ஐச்வர்யம், வீர்யம், கீர்த்தி, காந்தி, ஞானம், வைராக்யம் என்ற இந்த ஆறுக்கும் பக, என்று பெயர். இவ்வாறு குணங்களால் நிறைந்தவரானதால் பகவான் என்று அழைக்கப்படுகிறவராயும், ஸர்வக்ஞத்வம், நித்ய திருப்த்தத்வம், அனாதிபோதத்வம் ஸ்வதந்திரத்வம், அலுப்த்தசக்திமத்வம் அனந்தசக்தி மத்வம், என்ற அறுகுணங்களையுடையவராதலால், ஷாட்குண்ய பரிபூரணர் என்றும், அழைக்கப்படுகிறவரான சிவபெருமானிடத்தில் நின்றும் தோன்றிய ஞானத்திற்கு சிவஞானம் எனப்பெயர்.*

*சிருஷ்டி காலத்தில் இறைவன் ஆன்மாக்களுக்கு புருஷார்த்தம் சித்திக்க வேண்டியதன் பொருட்டு ஐந்து பிரவாகரூபமாகக் காணப்படும் ஞானத்தைச் செய்தார். (வெளிப்படுத்தினார்)*

*புருஷர்களால் விரும்பப்படுவதால் புருஷார்த்தம் எனப்படும். இது தர்மம், அர்த்தம், காம்யம், மோக்ஷம் என்பனவாம்.*

*ஸத்யோஜாதம் முதலிய ஐந்து திருமுகங்களின்றும் இருபத்தெட்டு, ஆகமங்கள் தோன்றின, என்று காரணாகமம்கூறுகிறது. அதாவது, ஸத்யோஜாதம் என்ற முகத்தினின்றும், காமிகம், யோகஜம், சிந்தியம், காரணம், அஜிதம் என்ற ஐந்து ஆகமங்களும், வாமதேவத்தினின்றும் தீப்த்தம், சூக்ஷ்மம், ஸஹஸ்ரம், அம்சுமான், சுப்ரபேதம், என்ற ஐந்து ஆகமங்களும், அகோர முகத்தினின்றும்*

விஜயம், நிச்வாசம், சுவாயம்புவம், அநிலம், வீரம் என்ற ஐந்து ஆகமங்களும், தத்புருஷ முகத்தினின்றும், ரௌரவம், மகுடம், விமலம், சந்திர ஞானம், பிம்பம், என்ற ஐந்து ஆகமங்களும், ஈசான முகத்தினின்றும் ப்ரோத்கீதம், லளிதம், சித்தம், சந்தானம், சர்வோக்தம், பாரமேச்வரம், கிரணம், வாதுளம் என்ற எட்டு ஆகமங்களும் தோன்றின.

இதனுள் முதற் பத்து ஆகமங்கள் சிவபேதம். பின் பதினெட்டு ருத்ரபேதம் எனப்படும்.

இவ்வாகமங்களில் சிவபேதத்தைக் கேட்டவர்கள் ஒவ்வொன்றிற்கும் மும்மூன்று பேர்களாகவும், ருத்ரபேதத்தை ஒவ்வொன்றிற்கும் இரண்டிரண்டு பேர்களாகவும் கேட்டார்கள்.

| | | | |
|---|---|---|---|
| 1. காமிகத்திற்கு | ப்ரணவர் | த்ரிகலர் | ஹரர் |
| 2. யோகஜத்திற்கு | சாதாக்யர் | பஸ்மர் | விபு |
| 3. சிந்தியத்திற்கு | அதீப்த்தர் | கோபதி | அம்பிகா |
| 4. காரணத்திற்கு | காரணர் | சர்வருத்ரர் | ப்ரஜாபதி |
| 5. அஜிதத்திற்கு | சுசிவன் | சிவன் | அச்யுதன் |
| 6. தீப்த்தத்திற்கு | ஈசன் | திரிமூர்த்தி | உதாசனன் |
| 7. சூக்ஷ்மத்திற்கு | சூக்ஷமர் | வைச்ரவணர் | ப்ரபஞ்சனர் |
| 8. சஹஸ்ரத்திற்கு | காலன் | பீமன் | தருமன் |
| 9. அம்சுமானுக்கு | அம்பு | உக்கிரர் | ரவி |
| 10. சுப்பிரபேதத்திற்கு | தேஜேசர் | விக்னேசர் | சசி |

சிவபேதங்களுக்குச் சம்பந்தம் ஆறுவிதமாம். அவையாவன சதாசிவருக்கும் பிரணவருக்கு முள்ள சம்பந்தம் பரமெனவும், பிரணவருக்கும் திருகலருக்குமுள்ள சம்பந்தம் மாகானெனவும், திருகலருக்கும் ஹரருக்குமுள்ள சம்பந்தம் அந்தராளமெனவும், ஹரருக்கும், தேவருக்கும் உள்ள சம்பந்தம் திவ்வியமென்றும், தேவர்களுக்கும் இருடிகளுக்கும் உள்ள சம்பந்தம் திவ்வியா திவ்யம் எனவும், இருடிகளுக்கும் மனிதர்களுக்குமுள்ள சம்பந்தம் அதிவ்யம் எனவும் சொல்லப்படும். இவ்வாறு சிவபேதம் பத்திற்கும் அறியவும்.

ஈச்வரதத்துவத்திலுள்ள அநாதிருத்ரர் முதலிய பதினெண்மர்களையும் அறிஞர்களாக்கி சதாசிவமூர்த்தியால் அவர்களுக்கு உபதேசிக்கப்பட்ட, விஜயம் முதலிய பதினெட்டாகமங்களும் உருத்திரபேதமெனப்படும்.

உருத்ரபேதம் பதினெட்டையும் கேட்டவர், ஒருவரிடத்தொருவராக ஒவ்வொரு ஆகமத்திற்கு இரண்டிரண்டு பேராய் அநாதிருத்ரர் முதல் முப்பத்தறுவராவர்.

| | | | |
|---|---|---|---|
| 1. | விஜயத்திற்கு | அநாதிருத்ரர் | பரமேச்வரர் |
| 2. | நிச்வாசத்திற்கு | தசார்ணர் | பார்வதி |
| 3. | சுவாயம்புவத்திற்கு | நிதனேசர் | பத்மபூ |
| 4. | ஆக்னேயத்திற்கு | வியோமர் | உதாசனர் |
| 5. | வீரத்திற்கு | தேசர் | பிரஜாபதி |
| 6. | ரௌரவத்திற்கு | பிரமேசர் | நந்திகேசர் |
| 7. | மகுடத்திற்கு | சிவர் | மகாதேவர் |
| 8. | விமலத்திற்கு | சர்வாத்மா | வீரபத்ரர் |
| 9. | சந்திரஞானத்திற்கு | அனந்தர் | பிரஹஸ்பதி |
| 10. | முகபிம்பத்திற்கு | பிரசாந்தர் | ததீசி |
| 11. | புரோத்கீதத்திற்கு | சூலி | கவசர் |
| 12. | லளிதத்திற்கு | ஆலயேசர் | இலளிதர் |
| 13. | சித்தத்திற்கு | விந்து | சண்டேசர் |
| 14. | சந்தானத்திற்கு | சிவநிஷ்டர் | சுசம்பாதர் |
| 15 | சர்வோக்தத்திற்கு | சோமதேவர் | நிருசிம்ஹர் |
| 16. | பாரமேச்வரத்திற்கு | சிதேவி | உசனர் |
| 17. | கிரணத்திற்கு | தேவவிபு | சம்வர்த்தகர் |
| 18. | வாதுளத்திற்கு | சிவர் | மஹாகாளர் |

உருத்ர பேதங்களுக்குச் சம்பந்தமும் ஐந்துவிதமாகும். அவை சதாசிவருக்கும் அநாதிருத்ரருக்குமுள்ள சம்பந்தம் பரம் எனவும், அநாதிருத்ரருக்கும் பரமேச்வரருக்குமுள்ள சம்பந்தம் மகான் எனவும், பரமேச்வரருக்கும் தேவருக்கும் உள்ள சம்பந்தம் திவ்யம் எனவும், தேவர்களுக்கும் இருஷிகளுக்கும் உள்ள சம்பந்தம் திவ்வியா திவ்யம் எனவும், இருடிகளுக்கும் மனிதர்களுக்கும் உள்ள சம்பந்தம் அதிவ்யம் எனவும், சொல்லப்படும்.

இருபது மெட்டுமே மூலரூப பேதம்
இருநூறு மேழுமென வெண்
அறுபத்தறுவர் பிரணவராதி
அறிவுறக் கேட்டா ராகமம்

—சைவசமயநெறி.

## உப ஆகமங்கள்

1. **காமிகம்:-** 1 வக்த்தாரம் 2 பைரவோத்தரம் 3 நாரசிம்மம் ஆக 3.

2. **யோகஜம்:-** 1 வீணசிகோத்தரம் 2 தாரம் 3 சந்தம் 4 சந்ததி 5 ஆத்மயோகம் ஆக. 5.

**3. சிந்தியம்:-**

1 சுசிந்தியம் 2 சுபகம்
3 வாமம் 4 பாவநாசம்
5 பரோத்பூதம் 6 அம்ருதம்
ஆக 6.

**4. காரணம்:-**

1 காரணம் 2 பாவனம்
3 தௌர்க்கம் 4 மஹேந்திரம்
5 பீமம் 6 மாரணம்
7 த்வேஷ்டம்
ஆக 7.

**5. அஜிதம்:-**

1 ப்ரபூதம் 2 பரோத்பூதம்
3 பார்வதீசம்ஹிதை 4 பத்மசம்ஹிதை
ஆக 4.

**6. தீப்தம்:-**

1 அமேயம் 2 சப்த்தம்
3 ஆச்சாத்யம் 4 அசங்கியம்
5 அமிதௌஜஸம் 6 ஆநந்தம்
7 மாதவோத்பூதம் 8 அத்புதம்
9 அக்ஷதம்
ஆக 9.

**7. ஸூக்ஷ்மம்:-**

உபாகமம் இல்லை.

**8. ஸஹஸ்ரம்:-**

1 அதீதம் 2 மங்களம்
3 சுத்தம் 4 அப்ரமேயம்
5 ஜாதிபாக் 6 ப்ரபுத்தம்
7 விகதம் 8 ஹஸ்தம்
9 அலங்காரம் 10 சுபோதம் ஆக 10.

**9. அம்சுமான்:-**

1 வித்யாபுராணதந்திரம் 2 வாசவம்
3 நீலலோஹிதம் 4 ப்ரகாரணம்
5 பூததந்திரம் 6 ஆத்மாலங்காரம்
7 காச்யபம் 8 கௌதமம்
9 ஐந்தரம் 10 ப்ராம்ஹியம்
11 வாசிஷ்டம் 12 ஈசானம் ஆக 12.

**10. ஸுப்ரபேதம்:-**

உபபேதமில்லை

## இனி ருத்ரபேதம்

**11. விஜயம்:-**
1 விஜயம் 2 உத்பவம்
3 சௌம்யம் 4 அகோரம்
5 மிருத்யுநாசனம் 6 குபேரம்
7 மஹாகோரம் 8 விமலம்
ஆக 8

**12. நிச்வாசம்:-**
1 நிச்வாசம் 2 உத்ரநிச்வாசம்
3 நிச்வாசமுகோதயம் 4 நிச்வாசநயனம்
5 நிச்வாசகாரிகை 6 கோரசம்க்ஞம்
7 யமாக்யம் 8 குஹ்யம்
ஆக 8

**13. ஸ்வாயம்புவம்:-**
1 ப்ரஜாபதிமதம் 2 பத்மம்
3 சுவாயம்புவம் ஆக 3

**14. அனலம்:-** உபபேதமில்லை

**15. வீரம்:-**
1 ப்ரஸ்தாரம் 2 புல்லமல்லம்
3 ப்ரபோதம் 4 போதம்
5 போதகம் 6 அமோஹம்
7 மோஹசமயம் 8 ஹாகடம்
9 சகடாதிகம் 10 ஹலம்
11 விலேகனம் 12 பத்ரம்
13 வீரம் ஆக 13

**16. ரௌரவம்:-**
1 காலக்னம் 2 கலாதீதம்
3 ரௌரவம் 4 ரௌரவோத்தரம்
5 மஹாகாளமதம் 6 ஐந்திரம்
ஆக 6

**17. மகுடம்:-**
1 மகுடம் 2 மகுடோத்தரம்
ஆக 2

**18. விமலம்:-**
1 அனந்தம் 2 போதம்
3 ஆக்ராந்தம் 4 விருஷபிங்கம்
5 வ்ருஷோத்தரம் 6 வருஷாத்புதம்

7 சுதந்தம் 8 ரௌத்ரம்
9 பத்ரவிதம் 10 சுரேவதம்
11 அதிக்ராந்தம் 12 அட்டஹாசம்
13 அலங்கிரதம் 14 அர்ச்சிதம்
15 தாரணம் 16 தந்திரம்
ஆக 16

**19. சந்திரஞானம்:-** 1 ஸ்திரம் 2 ஸ்தானம்
3 மஹாந்தம் 4 வாருணம்
5 நந்திகேசம் 6 ஏகபாதம்
7 சங்கரம் 8 நீலருத்ரகம்
9 சிவபத்ரம் 10 கல்ப்பபேதம்
11 ஸ்ரீமுகம் 12 சிவசாஸனம்
13 சிவசேகரம் 14 தேவிமதம்
ஆக 14

**20. முகபிம்பம்:-** 1 சதுர்முகம் 2 மலயம்
3 அபோகம் 4 ஸம்ஸ்தோகம்
5 பிரதிபிம்பகம் 6 ஆத்மாலங்காரம்
7 வாயவ்யம் 8 தௌடிகம்
9 துடிநீரகம் 10 கலாத்யேயம்
11 துவாபோகம் 12 குட்டிமம்
13 பட்டசேகரம் 14 மஹாவித்தை
15 மஹாசௌரம் ஆக 15

**21. ப்ரோத்கீதம்:-** 1 கவசம் 2 வராஹம்
3 பிங்களம் 4 பாசபத்தம்
5 தண்டதரம் 6 அங்குசம்
7 தனுர்த்தரம் 8 சிவஞானம்
9 விக்ஞானம் 10 ஸ்ரீகலாஞானம்
11 ஆயுர்வேதம் 12 தனுர்வேதம்
13 சர்ப்பதம்ஷ்ட்ரீ விபேதனம் 14 கீதம்
15 பரதம் 16 ஆதோத்யம்
ஆக 16

**22. லளிதம்:-** 1 லளிதம் 2 லளிதோத்தரம்
3 கௌமாரம் ஆக 3.

| | | | | |
|---|---|---|---|---|
| **23. சித்தம்:-** | 1 | சாரோத்தரம் | 2 | ஔசனோத்தரம் |
| | 3 | சாலாபேதம் | 4 | சசிகண்டம் |
| | | | | ஆக் 4 |
| **24. சந்தானம்:-** | 1 | இலிங்காத்யக்ஷம் | 2 | சுராத்யக்ஷம் |
| | 3 | சங்கரம் | 4 | அமலேச்வரம் |
| | 5 | அசங்கியம் | 6 | அனிலம் |
| | 7 | த்வந்தவம் | | ஆக 7 |
| **25, சர்வோக்த்தம்:-** | 1 | சிவதர்மோத்தரம் | 2 | வாயுப்ரோக்த்தம் |
| | 3 | திவ்யப்ரோக்த்தம் | 4 | ஈசானம் |
| | 5 | சர்வோக்தீசம் | | ஆக 5 |
| **26. பாரமேச்வரம்:-** | 1 | மதங்கம் | 2 | யக்ஷிணீபத்மம் |
| | 3 | பாரமேச்வரம் | 4 | புஷ்க்கரம் |
| | 5 | சுப்ரயோகாம் | 6 | ஹம்ஸம் |
| | 7 | சாமான்யம் | | ஆக 7 |
| **27. கிரணம்:-** | 1 | காருடம் | 2 | நைருதம் |
| | 3 | நீலம் | 4 | ருக்ஷம் |
| | 5 | பானுகம் | 6 | தேனுகம் |
| | 7 | ப்ரபுத்தம் | 8 | புத்தம் |
| | 9 | காலம் | | ஆக 9 |
| **28. வாதுளம்:-** | 1 | வாதுளம் | 2 | உத்தாரவாதுளம் |
| | 3 | காலஞானம் | 4 | ப்ரரோஹிதம் |
| | 5 | சர்வம் | 6 | தர்மாத்மகம் |
| | 7 | ச்ரேஷ்டம் | 8 | நித்யம் |
| | 9 | சுத்தம் | 10 | மஹாநனம் |
| | 11 | விச்வம் | 12 | விச்வாத்மகம் |
| | | | | ஆக 12 |

சிவசிருஷ்டியின் ஆரம்பகாலத்தில் சிவசக்தியின் சேர்க்கையின்நின்றும் இச்சாசக்தியினுல் புவனைத் பத்தியின்பொருட்டு யோகமாயையினுல் ஸ்ருஷ்டி பீஜம் கலக்கப்பட்டது. அதில் நின்றும் நாதம் தோன்றிற்று. அதன்கீழ் சரத் காலத்து சந்திரன்போன்ற விந்து தோன்றிற்று. அதன்கீழ் அம்பிகை என்ற சக்தி தோன்றிற்று. அதன்கீழ் வாமை, ஜ்யேஷ்டை, ரௌத்ரி என்ற மூன்று சக்திகளும், அந்த வாமா சக்தியின் அபரரூபமாக ஜயா, விஜயா, அஜிதா,

அபராஜிதா, நிவிருத்தி, பிரதிஷ்டா, வித்யா, சாந்தி, இஜந்திகா, தீபிகா, ரோசிகா, மோசிகா, வியோமரூபா, அநந்தா, அனாதா, அனாச்ருதா, என்ற சக்திகள்தோன்றி இவர்களாலே உலகம் யாவும் வியாபிக்கப்பட்டதாக விளங்கிற்று. இவர்களிட மிருந்து, ஐம்பது எழுத்துக்களும் உண்டாயிற்று என்று பௌஷ்கராகமம் கூறுகிறது.

ஐம்பதெழுத் தேயனைத்து வேதங்களும்
ஐம்பதெழுத்தே அனைத்தா கமங்களும்
ஐம்பத்தையு மாவத றிந்த பின்
ஐம்பதெழுத்தும் போயஞ் செழுத்தாமே. —திருமந்திரம்.

ஸ்வரங்களுடைய சேர்க்கையினால், வர்ணங்கள் பதங்களாகவும் வாக்கியங்க ளாகவும் அர்த்தப்ரதீதி உடையவைகளாகவும், வியவஹார சாமர்த்தியமுடைய வைகளாகவும் ஆயின.

ஸ்வராக்ஷரத்தில் சிவனும் வ்யஞ்சனாக்ஷரத்தில் சக்தியும் இருக்கிறார்கள். என்று பௌஷ்கராகமம் கூறுகிறது,

மூன்று பதார்த்தங்களுடன் நான்கு பாதங்களுடன் கூடிய மஹா தந்திரத்தை ஜகத்பதியான பரமேச்வரன் செய்தார்.

பத்தன் கிரியை சரியை பயில்வுற்றுச்
சுத்தவரு ளாற்று ரிசற்ற யோகத்தி
லுய்த்த நெறியுற் றுணர்கின்ற ஞானத்தாற்
சித்தங் குரு வருளாற் சிவமாகுமே. —திருமந்திரம்.

ஞானம், கிரியை, யோகம், சரியை என நான்கு பாதங்களை உடையது. ச்ரௌதம், அச்ரௌதம் என்ற இரண்டு பிரிவினையை உடையது,

𑌮𑌕𑍁𑌟𑌾𑌗𑌮𑍇

𑌸𑌿𑌦𑍍𑌧𑌾𑌨𑍍𑌤𑍋 𑌵𑍇𑌦𑌸𑌾𑌰𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 𑌅𑌨𑍍𑌯𑍋 𑌵𑍇𑌦𑌬𑌹𑌿𑌷𑍍𑌕𑍃𑌤𑌃
𑌸𑌿𑌦𑍍𑌧𑌾𑌨𑍍𑌤𑌵𑌿𑌹𑌿𑌤𑌾𑌚𑌾𑌰𑌃 𑌵𑍈𑌦𑌿𑌕𑌾𑌚𑌾𑌰 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇 ।

வேதசாரமாக உடையது சித்தாந்தம் எனப்படும். மற்றொன்று அச்ரௌதம் எனப்படும். சித்தாந்தத்தால் கூறப்படும் ஆசாரம், வைதிகாசாரம் எனப்படும் என்று மகுடாகமம் கூறுகிறது.

ஞானபாதத்தினுல், பதி பசு பாச லக்ஷணம் அறியப்படுகிறது. கிரியா பாதத்தினுல் கர்ஷணம் முதல் பிரதிஷ்டை வரையிலுள்ள கிரியைகளும், உத்ஸவ பிராயச்சித்த, நித்திய நைமித்திக காம்ய பூஜைகளும், சமய விசேஷ நிர்வாண தீக்ஷைகளும், வர்ணுச்ரம தர்மங்களும் கூறப்படுகின்றன. யோகபாதத்தினுல், ப்ராணுயாமம் முதலிய லக்ஷணங்களும், ஆத்மசுத்தி அந்தர்யாகம் முதலியவைகளும் அறியப்படுகின்றன. சர்யாபாதத்தினுல் பூஜைக்குரிய உபகரணங்களும் முறைகளும் கூறப்படுகின்றன.

எண்ணிலாகம மியம்பிய விறைவனுர் தாம் விரும்பும்
உண்மை யாவது பூசனே யென வுரைத்தருள
அண்ணலார்தமை யருச்சனே புரிய வாதரித்தாள்
பெண்ணி னல்ல வளாயின பெருந்தவக் கொழுந்து.

—திருக்குறிப்புத்தொண்ட நாயனுர் புராணம்.

பூஜிக்கிறவனுன ஆன்மா தனது நிலையையறிந்தும் பூஜிக்கப்படுகிறவனுன இறைவனுடைய தன்மையையுணர்ந்தும் பூஜ்ய பூஜகர்களுடைய இடையில் நிற்கும் மலங்களுடைய குணம் பலம் இவைகளையும் தத்துவங்களுடைய குணங்களையும் அறிந்தால்தான் இறைவனைச் சரியானபடி பூஜிக்க முடியும் ஆதலால், முதலாவதாக ஞானபாதத்தின் சுருக்கமான விளக்கம் கூறப்படுகிறது.

பதி, பசு, பாசம் என பதார்த்தங்களும், அதன் லக்ஷணங்களும் முப்பத்தாறு தத்துவங்களுடைய லக்ஷணங்களும், தத்துவரூபம், தத்வதரிசனம், தத்துவசுத்தி, ஆத்மரூபம், ஆத்மதரிசனம், ஆத்மசுத்தி, சிவரூபம், சிவதரிசனம், சிவயோகம், சிவபோகம் என்ற தச கார்யங்களுடைய லக்ஷணங்களும் கூறப்படுகின்றன,

## கிரியாபாதம்

மந்திரம் கிரியை பாவனே என மூன்று வகைப்படும்.

## மந்திரம்

பஞ்சாக்ஷரம், ஷடக்ஷரம், சம்ஹிதாமந்திரம், அஸ்திரமந்திரம் முதலிய மந்திரங்கள் குருமுகமாக உணரத்தக்கன. தேவதாஸ்தாபனம், யஜநம், ஸ்னுனம், ஹோமம், தர்ப்பணம், ப்ராயச்சித்தம், தீக்ஷை முதலிய எல்லா கிரியைகளும் மந்திரத்தினுலேயே செய்யவேண்டும். மந்திரமன்னியில் தனி கிரியை கிடையாது

மந்த்ரம் விநா க்ரியா நாஸ்தி க்ஷணார்த்தமபி நாரதா ।

என்று காரணுகமம் கூறுகிறது.

கர்ஷணம் முதலிய எல்லாக் கிரியைகளும் மந்திரத்திலேயே செய்யவேண்டும்.

கர்ஷணம் (உழுதல்) அதாவது ஆலயத்தை அமைப்பதற்குமுன் காலத்தையும் பூமியையும் பரீக்ஷிக்கவேண்டும். உழுது சல்லியோத்தாரணம் செய்யவேண்டும்.

எலும்பு கரி முதலிவைகளால் தோஷமுள்ளதான பூமியை வெட்டுதல், உழுதல் முதலியவைகளால் சுத்தம்செய்து சமமாகச் செய்யவேண்டும்; மணல் உள்ள வரையிலோ ஜலம் உள்ளவரையிலோ வெட்டிப்பார்த்து சல்யோத்தாரணம் செய்யவேண்டும்.

கிழ்த்திசையில் சூரியன் கோயிலையும், தென்கிழக்கில் ருத்ரமூர்த்தியின் கோயிலையும், தெற்கில் ஷண்முகன் கோயிலையும், தென்மேற்கில் ஐயனர் கோயிலையும், மேற்கில் விஷ்ணு கோயிலையும், வடமேற்கில் துர்க்கையின் ஆலயத்தையும் வடக்கில் சப்தமாத்ரு கோயிலையும், வடகிழக்கில் சிவாலயத்தையும் நிர்மாணம் செய்யவேண்டும் என்று காரணகமம் கூறுகிறது.

## அளவு

மானங்குலம், மத்ராங்குலம், தேஹலப்தாங்குலம் என்று அளவு மூவகைப்படும்.

கூரையில் உள்ள துளையின் வழிவருகின்ற சூரிய வெளிச்சத்தில் காணப்படும் த்ருச்யாதிருச்யமான தூளியானது, பரமாணு எனப்படும். அது வளர்ந்து ரேணு, ரோம, கலீக்ஷ ்கா, யூகம், யவம் என்று வளர்ந்தது. அந்த யவம் என்ற தான்யத்தின் வயற்றின் குருக்களவு எட்டுகொண்டது ஒரு அங்குலம், அந்த அங்குலத்தின் பன்னிரண்டுகொண்டது தாலம் என்ற அளவு. அந்தத் தாலத்தின் இரண்டுகொண்டது (அதாவது இருபத்திநான்கு அங்குலம்) கிஷ்கு ஹஸ்தம் என்று பெயர். அந்த அங்குலத்தின் இருபத்தைந்து கொண்டது, ப்ராஜா பத்யம் என்று பெயர். அந்த அங்குலத்தின் 26 கொண்டது. தனுர்முஷ்டிகரம் என்று பெயர். அவ்வங்குலத்தின் 27 கொண்டது தனுர்கிரஹம் என்று பெயர். இவ்வாறு, சிற்பத்திற்குரிய முழம் கிஷ்கு, ப்ராஜாபத்யம், தனுர்முஷ்டி, தனுர் கிரஹம் என்று நான்கு வகையாகக் காணப்படுகிறது.

சயனம், ஆசனம் முதலியவைகள் கிஷ்கு என்ற அளவினாலும், ப்ராசாதம் சபை, மண்டபம், வீடு இவைகளை ப்ராஜாபத்தியத்தினாலும், ராஜதானி, ராஜகிருஹம், குளம், துர்க்காலயம், இவைகளை தனுர்முஷ்டிஎன்ற அளவினாலும்,

ஆறு வெட்டுவது சாலேபோடுவது தனுர்முஷ்டி என்ற அளவினுலும் செய்ய வேண்டும் என்று காரணுகமத்தாலறியப்படுகிறது. இதுவரையில் மானுங்குலம் கூறப்பட்டது

மாத்ராங்குலம் என்பது, வலது கை நடுவிரலுடைய, நடுரேகையின் அளவு ஒரு அங்குலம். இந்த அளவைக்கொண்டுதான் யாகசாலேக்குரிய உபகரணங்கள் செய்யவேண்டும். இது மாத்ராங்குலம்.

தேஹலப்தாங்குலமோவெனில்: ஒரு பிம்பத்தின் உயரத்தை அந்தந்த விக்ரஹத்திற்குரிய தாலக்கணக்கில் பிரிப்பது தேஹலப்தாங்குலம் எனப்படும்.

மற்றும் மானம், ப்ரமாணம், உன்மானம், நாஹமானம், உபமானம், லம்பமானம் என்று அளவு ஆறுவகைப்படும். விக்ரஹத்தின் உயர அளவுக்கு மானம் என்றும், சுற்றளவுக்கு ப்ரமாணம் என்றும், கன அளவுக்கு நாஹமானம் என்றும், நெற்றி, நாசாக்ரம் முதல் பாதம் வரை தொங்கவிட்டுப் பார்க்கும் அளவிற்கு லம்பமானம் என்றும், பிரதிஷ்டை செய்யப்படும் பீடம் பிம்பங்களேக் க்ணக்கிடும் அளவிற்கு உன்மானம் என்றும், அவயவங்களின் தனி அளவிற்கு உபமானம் என்றும், பெயர். அளவு குறைந்தால் வியாதியும், அதிகமானுல் சத்ரு விருத்தியும், தரித்ரமும் உண்டாகும். ஆதலால் எல்லாம் அளவோடு செய்ய வேண்டும்.

தேஹலப்தமான அளவு மூன்று வகைப்படும் பெருவிரலேயும் ஆள் காட்டி விரலேயும் நீட்டிவைத்த அளவிறகு ப்ராதேசம் என்றும், பெருவிரலேயும், மோதிரவிரலேயும் நீட்டிவைத்த அளவு விதஸ்தி என்றும், பெருவிரலேயும், சுண்டி விரலேயும், நீட்டிவைத்த அளவு கோகர்ணம் என்றும், பெயர் பெறுகின்றன. இவைகள் யாகத்தில் உபயோகப்படுகின்றன.

ப்ராசாதம் என்பது, நாகரம், திராவிடம், வேசரம் என்று மூவகைப் படும். கண்டம் முதல் விருத்தமாக உள்ள விமானம், வேசரம் என்றும், கழுத்து முதல் எண்கோணமான விமானம், திராவிடம் என்றும், பீடம் முதல் யாவும் ச்துரமாக உள்ள விமானம், நாகரம் என்றும் பெயர், நாகரவிமானத்திற்குப் புருஷவிமானம் என்றும், திராவிடவிமானத்திற்கு ஸ்த்ரீவிமானம் என்றும், வேசரவிமானத்திற்கு நபும்சக விமானம் என்றும் பெயர்.

விமானங்களின் கிழ்புறத்தில் குமாரனேயும், தென்புறத்தில் தக்ஷிணு மூர்த்தியையும், மேற்கில் விஷ்ணுவையும், வடக்கில் பிரம்மாவையும், சுதையால் செய்யவேண்டும். மேல்தளத்தின் மூலேகளில் விருஷபமாவது, பூதமாவது செய்யப்படவேண்டும்.

விமானம் ஸ்தூலலிங்கம் என்றும், சிவன் சூக்ஷமலிங்கம் என்றும், பலிபீடம் பத்ரலிங்கம் என்றும் கூறப்படுகிறது. ஆலயம் தேஹமென்றும் லிங்கம் தேஹி என்றும் கூறப்படுகிறது.

ஆலயம், மண்டபம், கோபுரம், ப்ராகாரம் முதலிய யாவும் லிங்கத்தின் அளவு கொண்டு செய்யப்படவேண்டும்.

விமானத்தின்மேல் வைக்கப்படும் ஸ்தூபியானது, முறையே தங்கம், சுவர்ணம், வெள்ளி, தாமரம் என்று இயல்புக்குத்தக்கவாறு அமைக்கவேண்டும்.

ஸ்வாயம்புவம் முதலான மூர்த்திகளுக்கு தங்கத்தினுல் செய்யப்பட்ட ஸ்தூபி சிறந்தது, அல்லது சுவர்ணத்தினுலாவது செய்யலாம், மற்றவை களுக்கு விருப்பம்போல்.

## கர்ப்பநியாசம்

உத்தராயண காலத்தில் மாசி மாதம் தவிர மற்ற மாதங்களில் சுக்ல பக்ஷத்தில் சுபவார சுபயோகத்தில் சுவர்ணம் முதலிய லோஹத்தினுல் 25 அறை உள்ள பெட்டி செய்து அதனுள் ரத்னங்கள், தான்யங்கள் முதலியவைகளை முறைப்படி நிறைத்து பூஜை செய்து வாசற்படியின் தென்புறத்தில், விமானத்தின் வடக்கில், கர்பகிரஹத்தின் கீழ்பாகத்தில் எங்கேயாவது ஒரு இடத்தில் ஸ்தாபனம் செய்யவேண்டும். இது ஆலயத்திற்கு ஜீவஸ்தானம் போன்றது.

## சிலாசங்கிரஹணம்

இது லிங்கம், பிம்பம் செய்வதற்கு வேண்டிய சிலையை எடுக்கும் முறை.

மணி ஓசைபோன்ற நாதமுடைய கல் ஆண், தாளத்தின் ஒலிபோன்ற கல், பெண், நாதமற்றது அலி என்று அறிந்து ஆண் சிலையால் புருஷ பிம்பத் தையும் பெண்சிலையால் ஸ்த்ரீபிம்பத்தையும், நபும்ஸகசிலையால் பீடங்களையும். அமைக்கவேண்டும் என்று காரணுகமம் கூறுகிறது. ரேகை, பிந்து, களங்கம் என்ற தோஷமுள்ள சிலைகள் உதவாது.

சிற்பியானவன் உளியால் அடிக்கும்போது, வட்டமான மறை காணப் பட்டால் அதனுள் கர்ப்பம் இருப்பதாக அறிந்து அதை விலக்கவேண்டும். மஞ்சளாக மறைஇருந்தால் உள்ளில் தேரை இருப்பதாகவும் பச்சையாகவும்இருந் தால் நண்டு இருப்பதாகவும் பொன்வர்ணமாக இருந்தால் மூஷிகம்இருப்பதாகவும் உணரவேண்டும். பலவர்ணமுள்ளதாகக் காணப்பட்டால் தேள் இருப்பதாக




ஆலய அமைப்பு

உணர். இவ்வாறு வெளித்தோற்றத்தினுல் அறியமுடியாவிடில், கோரைக் கிழங்கு, அரளி, கோஷ்டம், சடாமாஞ்சீ, த்ருபலே என்ற இந்த மருந்துகளை அரைத்துப் பிள்ளைப்பாலில் கரைத்துச் சிலேயில்பூசிவைத்து மறுதினம் பார்த்தால் அந்தச்சிலே சிலுசிலுத்ததாகக் காணப்பட்டால் அந்தக்கல்லில் விஷமிருப்பதாகப் பார்த்து அதைக் கையினுலும் தொடாதே. இதுபோன்ற அநேக முறைகள் ஆகமங்களில் காணப்படுவதையறிந்து சோதித்து, சுத்தமாயும் தோஷமற்றதாயு முள்ள சிலேயைக் கிரஹித்து லிங்கம், பிம்பம் முதலியவைகள் செய்யவேண்டும்.

ஸமகண்டம் வர்த்தமானம், சைவாதிக்யம், த்ரிராசிகம், என்று இலிங்கம் நான்குவகைப்படும்.

ஒவ்வொரு இலிங்கமும் அடிப்பாகம் சதுரமாயும், நடுப்பாகம் எட்டு பட்டையாயும், மேல்பாகம் விருத்தமாயும் காணப்படும். அதனுள் நான்கு, ஐந்து, ஆறு என்றபாகமுடையது வர்த்தமானலிங்கம், நான்கு. நான்கு, ஐந்து, என்ற அளவுள்ளது. சைவாதிக்யம், மூன்றும் சமமாகவுள்ளது சமகண்டம். உயரத்தை இருபத்தொரு பங்கு செய்து விருத்தம் ஆறுபங்கும் அஷ்டாச்ரம் ஏழுபங்கும் சதுரம் எட்டுபங்குமுள்ளது த்ரைராசிகம் எனப்படும்.

சம்ஹார காலத்தில் எல்லாப் பிராணிகளும் அதனுள் லயத்தை அடைவதால், லிங்கம் எனப் பெயர்பெற்றது. அவ்விலிங்கம் சைலஜம், ரத்னஜம், லோஹஜம் தாருஜம், ம்ருண்மயம், க்ஷணிகம் என ஆறுவகைப்படும்.

சைலஜலிங்கமும், ஸ்வாயம்புவம், தேவிகம், தைவிகம், ஆர்ஷம், மானுஷம், ராக்ஷஸம், பாணம், என்று ஏழுவகைப்படும்.

### ஸ்வாயம்புவம்

சொரசொரப்புள்ளதாயும், மெலிந்ததாயும், அநேகம் நுனிஉள்ளதாயும், பசுவின் காதுபோன்றதாயும், மாதுளம்பூ போன்றதாயும், அளவு இல்லாததாயும் ரேகையற்றதாயும். இவ்வாறு பலவகையாகக் காணப்படும். தேவி, தேவர், இருடி மனிதர் அரக்கன் இவர்களால் பூஜிக்கப்பட்டது தேவிகம் முதலிய இலிங்கங்கள், பாணம் என்ற தீர்த்தத்தினின்று உண்டானது பாணலிங்கம்.

### ரத்னஜம்

மாணிக்கம் முதலிய ரத்னங்களால் செய்யப்படும் இலிங்கம் ரத்னலிங்கம் எனப்படும்.

மரகதலிங்கம் புஷ்டியைத்தரும், பத்மராகலிங்கம், தனத்தைத்தரும் வைடூர்யலிங்கம் ஆயுளைக்கொடுக்கும், ஸ்படிகலிங்கம் சந்தானத்தைத்தரும். புஷ்யராகலிங்கம் ஸ்தம்பனம் என்ற தொழிலைச் செய்யும், பவழலிங்கம் ஸகல வச்யம் செய்யும், வஜ்ரலிங்கம், ஆகர்ஷணம் என்ற தொழிலைச்செய்யும். மாணிக்க லிங்கம் சர்வசித்தியை யளிக்கும், இந்திர நீலலிங்கம் மோக்ஷத்தைத்தரும்.

## லோஹஜலிங்கம்

சுவர்ணம், தாமரம், வெள்ளி, ஈயம், பித்தளை, இரும்பு, மூன்று லோஹம், நாகம், காரீயம், என்ற இவைகளால் செய்யப்பட்ட இலிங்கத்தைப் பூஜிப்பதால், முறையே போகமோக்ஷம், சந்தானம், சோபை, சுகம், ரோகநாசம் சத்ருநாசம், மரணம், நாசம், தீமை என்ற பலன் கிடைக்கும். தாருலிங்கத்தால் இஷ்டசித்தியும், மிருத்திகாலிங்கத்தால் புத்ரப்ராப்தியும் கிடைக்கும்.

## க்ஷணிகலிங்கம்

மணல், அரிசி, அன்னம், ஆற்றுமண், கோமயம், வெண்ணெ, ருத்ராக்ஷம், விபூதி, சந்தனம், கூர்ச்சம், புஷ்பமாலை, வெல்லம், மாவு, என்ற இவைகளால் லிங்கம் செய்து பூஜையின் முடிவில் உத்வாஸனம் செய்யவேண்டும்.

சைகதலிங்கம் மோக்ஷத்தையும், தண்டுலலிங்கம் வாழ்கையையும் அன்னலிங்கம் அன்னத்தையும், ஆற்றுமண்லிங்கம் பூமியையும், கோமயலிங்கம் ரோகநாசத்தையும், வெண்ணெய்லிங்கம் மனஉத்ஸாஹத்தையும், ருத்ராக்ஷலிங்கம் ஞானத்தையும், விபூதிலிங்கம் மோக்ஷத்தையும், சந்தனலிங்கம் சௌபாக்யத் தையும், கூர்ச்சம் முக்தியையும், புஷ்பமாலை ஆயுளையும், வெல்லலிங்கம் இஷ்ட சித்தியையும், மாவுலிங்கம் புஷ்டியையும் தரும், இந்தலிங்கங்களுக்கு அளவு கிடையாது.

**லிங்கம்:-** நிஷ்களம், ஸகளநிஷ்களம், ஸகளம், என்று மூவகைப்படும், நிஷ்களம் என்பது லிங்கம். ஸகளநிஷ்களமென்பது முகலிங்கம். ஸகளம், என்பது நடராஜர் சோமாஸ்கந்தர் முதலிய மூர்த்தங்கள்.

லிங்கத்தினின்றும் தோன்றிய வடிவங்கள் அறுபத்திநான்கு, இவை அஷ்டாஷ்ட விக்ரஹங்கள் என்று ஆகமத்தால் கூறப்படுகின்றன. இவ்வடி வங்களை சுருக்கி இருபத்தைந்து மூர்த்தமாகக் காரணம் என்ற ஆகமம் கூறிற்று. அதாவது:-

சந்திரசேகரர், உமாஸஹாயர், விருஷாரூடர், நடராஜர், கல்யாணசுந்தரர், பிக்ஷாடனர், காமாரி, காலாரி, த்ருபுராரி, ஜலந்தரர், கஜாரி, வீரபத்ரர், ஹர்யர்த்த மூர்த்தி, அர்த்தநாரி, கிராதமூர்த்தி, கங்காளர், சண்டேசானுக்ரஹர், விஷாபஹரணர், சக்ரதாதா, விக்னப்ரசாதர், சோமாஸ்கந்தர், ஏகபாதமூர்த்தி, சுகாசனர் தக்ஷிணாமூர்த்தி, லிங்கோத்பவர் என்ற மூர்த்திகள்.

பூஜைக்கு முக்கியமானது மூர்த்திகளின் வடிவத் தியானம், அதாவது, தக்ஷிணாமூர்த்தி என்றால் அவர் நான்குகையுடன், சின்முத்திரை, உடுக்கை, அக்னி, புஸ்தகம் என்ற இந்த நான்கையும் கையில் வைத்துக்கொண்டு வலது காலை பூதத்தின்மீது வைத்துக்கொண்டு மற்றொருகாலை வலது கால் துடைமீது போட்டுக்கொண்டு உட்கார்ந்திருக்கும் தோற்றம், பின்புறம் ஆலமரமும், பக்கத்தில் 4 ருஷிகளும் இருக்கும் காக்ஷி, இவ்வாறு தியானம்செய்து பூஜிக்க வேண்டும். இவ்வாறு பூஜிக்கப்படும் ஒவ்வொரு மூர்த்தியின் வடிவத்தையும் தியானம் செய்யவேண்டும்.

இந்த மூர்த்திகளை அமைப்பதற்குத் தாலம் என்ற அளவு கூறப்பட்டிருக்கிறது. அது பத்து முதல் ஒரு தாலம் வரையில் செய்யப்படவேண்டிய விக்ரஹங்கள் உண்டு. அதாவது முறையே சிவபேரம் தேவி அசுரர்கள் மானிட விக்ரஹங்கள், கூனர்கள், விநாயகர், பூதகணங்கள், கின்னரர்கள், கூஷ்மாண்டன், கூர்மஹரி என்று பத்துமுதல் ஒரு தாலம் வரையில் இவர்கள் செய்யப்பட வேண்டும்.

கர்ப்பக்கிரஹத்தில் பிம்பங்களை பிரதிஷ்டை செய்யவேண்டிய ஸ்தானங்களும், ஆகமத்தில் கூறப்படுகின்றன. அதாவது கர்ப்பகிரஹத்தின் பாதியை, 10 பங்கு செய்து பத்தாவதுபங்கான மத்தியில் சிவனையும், ஒன்பதில் பிரமனையும், எட்டில் விஷ்ணுவையும், ஏழில் முருகனையும், ஆறில் சரஸ்வதியையும், ஐந்தில் பக்தர்களையும், நான்கில் விநாயகரையும், மூன்றில் பைரவரையும், இரண்டில் சக்தியையும், ஒன்றில் பூதத்தையும் வைத்துப் பிரதிஷ்டை செய்யவேண்டும்.

ஆலயம் ஒரு புருஷனைப்போன்றது, கர்ப்பக்கிரஹம் - தலை, அர்த்த மண்டபம் - முகம், ஸ்னபனமண்டபம் - மார்பு, மஹாமண்டபம் - தொப்புள், நிருத்தமண்டபம் - துடை, ஆஸ்தானமண்டபம் - கணுக்கால், கோபுரம் - பாதம் என்பதாம்.

## பிரதிஷ்டை

பிரதிஷ்டை என்பது ஆவர்த்தம், அநாவர்த்தம், புனராவர்த்தம், அந்தரிதம் என நான்கு வகைப்படும். ஆலயமே புதியதாகக்கட்டி, முதன்முதல்

செய்யப்படும். பிரதிஷ்டை ஆவர்த்தம், ஆறு சமுத்ரம் முதலியவைகளால் சலனமடைந்து மறுமுறை புதுக்கப்பட்டு செய்யப்படும் பிரதிஷ்டை அநாவர்த்தனம், ஜீர்ணோத்தாரணம்செய்து செய்யப்படும் பிரதிஷ்டை புனராவர்த்தனம், திருடர்களால் தூஷிக்கப்பட்டதற்குச் செய்யப்படும் சாந்தி சம்புரோக்ஷணத்திற்கு அந்தரிதம் எனப்படும்.

பிரதிஷ்டைக்குரிய கிரியைகள் 64 என்று சில ஆகமங்கள், 55 என சில ஆகமங்கள் ஒன்பது கிரியையும் சேர்த்து சுருக்கியும் கூறுகின்றன. அவைகளின் சிலவற்றின் விவரணம் இங்கு தரப்படுகிறது.

**அனுக்ஞை:-** செய்யப்படும் கும்பாபிஷேகத்தை ஆசாரியராக, எஜமானனாக இருந்து நடத்தத் தகுதிஉள்ளவன் என்று சபையோர்களிடம் அனுமதிபெற்று பின் இறைவனிடமும் இறைவியிடமும் அனுமதிபெறல்.

**விக்னேச்வரபூஜை:-** செய்யப்படும் காரியத்தை இடையூறன்னியில் முடிக்கவேண்டியதன் பொருட்டு விக்னகர்த்தாவான விநாயகரை வணங்கிப் பிரார்த்தித்து அனுமதிபெறல்.

**வாஸ்துசாந்தி:-** இறவாதவரம் வாங்கியவரான வாஸ்துபுருஷன் என்ற அசுரனின் உபாதி இல்லாமலிருக்க, பிரமன் முதலியவர்களான அவ்வசுரனைக் காவல்புரியும் ஐம்பத்துமூன்று தேவர்களையும் பூஜை, பலி முதலியவைகளால் திருப்திசெய்து இடையூற்றை நீக்குதல்.

**மிருத்ஸங்கிரஹணம்:-** அங்குரார்ப்பணம் என்றும் கிரியை செய்வதற்கு வேண்டியதான மண்ணை, மண்ணிற்கு அதிபதியான பூமியையும், காவலர்களான இந்திரன் முதலிய திக்பாலர்களையும், தலைவரான பிரமனையும், பிரார்த்தித்துக்கொண்டு அவர்களின் அனுமதிபெற்று வெட்டி எடுத்து. வெட்டிய வெட்டு நீங்க ஏழுகடலை வரவழைத்து பூமிக்கு அபிடேகம்செய்து வேண்டல்.

## அங்குரார்ப்பணம்

செய்யப்படும் கிரியையின் சுபாசுபங்களை அறிவதற்குரிய கிரியை. மந்திரபூர்வகமாக பாலிகைகளில் தெளிக்கப்பட்ட வித்துக்கள் சரியாகவும், பசுமையாகவும் முளைத்தால் கிரியை சரியானமுறையில் அமைந்தது என்று உணர்ந்துகொள்ளவேண்டும். அது மாறுதலாக இருந்தால் குறைபாடு இருப்பதாக உணர்ந்து அதற்குத்தக்க பிராயச்சித்தம் செய்யவேண்டும். அங்குரம் இல்லாத கிரியை பயனற்றது.

## பஞ்சகுண்டபக்ஷயாகசாலை:



| | | |
|---|---|---|
| **கிழக்கு** | ஆஹவனீயாக்னி | சதுரகுண்டம் |
| **தெற்கு** | தக்ஷிணாக்னி | அர்த்தசந்திரகுண்டம் |
| **மேற்கு** | கார்ஹபத்யாக்னி | விருத்தகுண்டம் |
| **வடக்கு** | கேவலாக்னி | பத்மகுண்டம் |
| **வடகிழக்கு** | சிவாக்னி | விருத்தம் அல்லது சதுரம் |

## நவகுண்டபக்ஷயாகசாலை



| | | |
|---|---|---|
| கிழக்கு | ஆஹவனீயாக்னி | சதுரகுண்டம் |
| தென் கிழக்கு | விருத்தாக்னி | யோனிகுண்டம் |
| தெற்கு | தக்ஷிணாக்னி | அர்த்தசந்திரகுண்டம் |
| தென் மேற்கு | யௌவனாக்னி | த்ருகோணகுண்டம் |
| மேற்கு | கார்ஹபத்யாக்னி | விருத்தகுண்டம் |
| வடமேற்கு | பாலாக்னி | அறுகோணகுண்டம் |
| வடக்கு | கேவலாக்னி | பத்மகுண்டம் |
| வடகிழக்கு | சாமான்யாக்னி | எண்கோணகுண்டம் |
| கீழ்திசைக்கும் வடகிழக்குதிசைக்கும் நடுவில் | சிவாக்னி | விருத்தகுண்டம் |



ஸ்ருக்கு



ஸ்ருவம்





அபிஷேககலசம் மணி



அர்க்கியபாத்திரங்கள்

| ஊர்வசி | மேனகா | ரம்பா | திலோத்தமா |
|---|---|---|---|
| கண்ணாடி | பூர்ணகும்பம் | விருஷபம் | யக்மசாமரம் |
| சுமுகி | சுந்தரி | காமுகி | காமவர்த்தனி |
| ஸ்ரீவத்சன் | சொஸ்திகம் | சங்கம் | தீபம் |

அஷ்டமங்களம்

| வஜ்ராயுதம் | சக்தியாயுதம் | தண்டாயுதம் | கட்காயுதம் | பாசாயுதம் |
|---|---|---|---|---|
| த்வஜாயுதம் | கதாயுதம் | திரிசூலாயுதம் | பதமாயுதம் | சக்ராயுதம் |

தசாயுதம்

**ரக்ஷாபந்தனம்:-** இது ஆசாரியருக்குச் செய்யப்படும் ரக்ஷை. இதனால் கிரியை பூர்த்தியாவதற்குள் தெய்வீகமாய் ஆசௌசாதிகள் நேர்ந்தால் அதனால் அக்கிரியைக்கு பாதகமேற்படாதவகையில் ஆசாரியனைக்காக்கும். அதாவது ரக்ஷாபந்தன விஸர்ஜனம் செய்யும்வரையில் ஆசாரியருக்கு ஆசௌசம் முதலிய தோஷம் அணுகாது.

**கும்பஸ்தாபனம்:-** இறைவனை ஆவாஹனம் செய்யும் பொருட்டு குடத்தை மந்திரபூர்வமாக அலங்கரித்து வித்யாதேஹமாக பாவித்தல். குடத்திற்குச் சாத்தப்பட்ட வஸ்திரம் தோலாகவும், மேல்பூசப்பட்ட மண் ரக்தமாகவும், செய்பொருள் மாம்சமாயும், ஜலம் மேதோதாதுவாயும், கூர்ச்சம் எலும்பாயும், சுற்றப்பட்ட நூல் நரம்பாகவும், குடத்தில் போடப்பட்ட ரத்னம், சுவர்ணம், சுக்லதாதுவாகவும், நியாசம் செய்யப்பட்ட மந்திரம் ஜீவனாகவும், போடப்பட்ட தானியம் ஆசனமாகவும் ஆகிறது.

**கலாகர்ஷணம்:-** மூலஸ்தானத்தினின்றும் சுவாமியை, அலங்காரம் செய்யப்பட்டு வித்யாதேஹமாக பாவிக்கப்பட்ட குடத்தில் குருபதேசமுறைப்படி ஆகர்ஷணம் செய்து குறிப்பிட்டகாலம் வரையில் கடத்தில் இருக்கச்செய்தல்.

**யாகசாலை:-** சுவாமியை, குடத்தில் முறைப்படி ஆகர்ஷணம் செய்து அந்தக்குடத்தை சகலவித உபசாரத்துடன் ப்ரகாரத்தை வலமாக எடுத்துவந்து முன்பே அமைக்கப்பட்ட யாகசாலையில் பிரதிஷ்டைசெய்து, இரண்டுகாலம் முதல் சக்திக்குத் தக்கவாறு, பூஜை ஹோமம், முதலியவைகளைச் செய்துவரும் இடம்.

**யாகசாலையின் முறை:-** ஆலயத்தினுடைய வடமேற்கு மூலை தவிர மற்றதிக்குகளில் ஏதாவதொரு இடத்தில் அமைக்கவேண்டும். யாகசாலை மூன்று பக்ஷமாக இருக்கிறது. அதாவது ஒன்பது குண்டவிதானம், ஐந்து குண்டவிதானம், ஏக (ஒரு) குண்டவிதானம் என்று தேச காலகிரியை முதலியவைகளை அனுசரித்து 3, 4, 5, 6, 7, 8, 9, 10, 11, 12, 13, 20, 32, என்ற முழங்களால் யாகசாலை அமைக்கலாம்.

யாகசாலையின் உட்கூட்டை 81 பதமாகச் செய்தால் மத்தியில் உள்ள ஒன்பது பதம் பிரும்மம் என்றும் சுற்றிலுமுள்ள பதினாறுபதம் தைவிகபதம் என்றும் இருபத்திநான்கு பதம் மானுஷ பதம் என்றும் 32 பதம் பைசாசபதம் என்றும் பெயர், பிர்ம்மபதத்தில் சிவகும்பத்துடன் வித்யேச்வரர்களையும், வைக்க வேண்டும். தைவிகபதத்தில் அஷ்ட மங்கலங்களையும், மானுஷபதத்தில் குண்டத்தையும். பைசாசபதத்தில் தோரணத்தையும் வைக்கவேண்டும். இது தசசூத்ர யாகசாலையின் விதி. இதுபோல் மற்ற மனு சூத்ரயாகசாலை, கலாசூத்ரயாகசாலை முதலிய யாகசாலைகளில் கொஞ்சம் மாறுதல் உண்டு.

யாகசாலைக்கு நான்குபுறமும் நான்கு வாசற்படிவைத்து மேலே மூன்று த்ரிசூலம் வைக்கவேண்டும். அஷ்டமங்கலம், தசாயுதம், கொடி, பதாகம், தர்ப்பமாலை, முதலியவைகளால் அலங்கரிக்கவேண்டும் கிழக்குமுதல் முறையே நாற்கோணகுண்டம், யோனிகுண்டம். அர்த்தசந்திரம், முக்கோணம், விருத்தம் அறுகோணம், பத்மம், எண்கோணம், என்ற குண்டங்களை அமைக்கவேண்டும் எண்கோண குண்டத்திற்கும் நாற்கோணகுண்டத்திற்கும் நடுவில் பிரதான குண்டம் போடவேண்டும். இது விருத்தமாகவாவது சதுரமாகவாவது இருக்கலாம். இக்குண்டங்களுக்குப் பெயர், ஆஹவனீயம், விருத்தாக்னி, தக்ஷிணாக்னி, யௌவனாக்னி, கார்ஹபத்யாக்னி, பாலாக்னி, கேவலாக்னி, சாமான்யாக்னி, சிவாக்னி, என்பனவாம்.

இந்த குண்டங்களுக்கு சரீரமாக இறைவனின் எட்டு சரீரம் விளங்கு கிறது. அதாவது கிழக்குமுதல் வடகிழக்கு வரையில் வரிசையாக பிருதிவி, அக்னி, யஜமான், சூர்யன், ஜலம், வாயு, சந்திரன், ஆகாயம் என்ற எட்டும் விளங்குகிறது.

சர்வன், பசுபதி, உக்ரன், ருத்ரன், பவன், மஹேச்வரன், மஹாதேவன் பீமன், என்ற எண்மரும் அந்த சரீரங்களுக்கு அதிபதியாக விளங்குகிறார்கள். எட்டு குண்டங்களில் எட்டு சரீரங்களைத் தனித்தனி தியானித்துப் பூஜை ஹோமங்களால் பிரசன்னமுள்ளதாகச்செய்து கடத்திலிருக்கும் இறைவனோடு சேர்த்துப் பின் கடத்திலிருக்கும் இறைவனை மூலபிம்பத்தில் சேர்த்தால் இறைவனைக் குறித்து பிரதான குண்டத்தில் செய்யப்பட்ட பூஜை ஹோமங்களும் சேர்ந்து இறைவனைமிகவும் பிரசன்னமுள்ளவராகச் செய்கிறது.

**அஷ்டபந்தனம்:-** இது பீடத்தையும் பிம்பத்தையும் சேர்க்கும் ஒரு தெய்விக மருந்து. சுக்கான், குங்கிலியம், கொம்பரக்கு, காவி, செம்பஞ்சு, லிங்கம், வெள்ளைமெழுகு, வெண்ணை இந்த 8 மருந்துக்களை அததற்குரிய அளவுகொண்டு சேர்த்து இடித்துச் சாத்தவேண்டும். பீடம் என்பது ஒரு சக்தி. இம்மருந்து பீட சக்தியையும் இறைவனின் திருவருள் சக்தியையும் தொடர்புடையதாய் ஒன்று படுத்தி தரிசிப்பவர்களுக்கு அனுக்ரஹ சக்தியை அளிக்க வல்லதாக இருக்கிறது.

**பிம்பசுத்தி:-** கலாகர்ஷணம் செய்தபின் பிம்பத்திற்கு ஏற்பட்ட சிற்பி தோஷ நிவர்த்தியின்பொருட்டு செய்யப்படும் சம்ஸ்காரம் ஐந்துவிதமானபட்டை, தளிர், எட்டுவிதமான மண், இவைகளைக்கொண்டு ஸ்நபனம்வைத்து ஜபம்செய்து அபிஷேகம் செய்வது.

**ஸ்பர்சாஹுதி:-** யாகசாலையில் செய்யப்பட்ட ஹோமங்களையும், தத்வங் களையும், தத்துவத்தின் அதிபர்களையும் நாடீசந்தானம் (தங்கக்கம்பி, வெள்ளிக் கம்பி அல்லது தர்ப்பைக்கயிறு) என்றமுறைமையால் இறைவனிடத்தில் சேர்த்தல்.

**கும்பாபிஷேகம்:-** யாகசாலையில் பூஜிக்கப்பட்ட கடத்தை எழுந்தருளச்செய்து மூலாலயத்தில் பிம்பத்தின் முன்வைத்து குருபதேச முறைமையால் திரும்ப கும்பத்தினின்றும் பிம்பத்தில் சேர்த்து பிரதிஷ்டித்து அக்குட நீரை அபிஷேகம் செய்தல். இதனால் எல்லா வகையாலும் நாடு செழிக்கும். கும்பாபிஷேகத்தைச் செய்பவர்களும் தரிசிப்பவர்களும் புருஷார்த்தங்களை அடைவார்கள்.

**மஹாபிஷேகம்:-** இதற்கு மஹாஹவிர் நிவேதனம் என்றும் சொல்லுவதுண்டு. கும்பாபிஷேகம் செய்தவுடன் இறைவனுக்கு பூர்ணமான அபிஷேக திரவியங்கொண்டு அபிஷேகம் செய்வித்து அதேபோல் பூர்ணமாக நிவேதனம் செய்யவேண்டும். இவ்வாறு செய்வதால், இதுகாறும் கும்பாபிஷேகத்தின் வேலையில் களைப்படைந்த பிரமன் முதலிய சகல பசு வர்க்கங்களும் திருப்தியடைகின்றன.

**மண்டலாபிஷேகம்:-** இதற்கு த்ரைபக்ஷிகம் என்றுபெயர், மூன்று பக்ஷம் இறைவனை விசேஷமாகப் பூஜித்து முடிவில் ரக்ஷாவிசர்ஜனத்துடன் பூர்த்தி செய்யவேண்டும்.

## பூஜை

பூஜையானது ஆத்மார்த்தபூஜை, பரார்த்தபூஜை என இருவகைப்படும். ஸமய விசேஷ நிர்வாண தீக்ஷைபெற்று குருவினால் கொடுக்கப்பட்ட லிங்கத்தைப் பூஜிப்பது ஆத்மார்த்தபூஜை. கிராமத்திலோ நகரத்திலோ உள்ள ஆலயத்தில் இருக்கும் இலிங்கத்தை ஆதிசைவர்களைக்கொண்டு பூஜிப்பது பரார்த்த பூஜை.

ஆத்மார்த்த பூஜையின் விளக்கமும் முறையும் இவ்வாதீனத்தில் வெளியிடப்பட்டிருக்கும் நித்யபூஜாலக்ஷண ஸங்கிரஹம் என்ற நூலில் காணலாம்.

பரார்த்தபூஜையானது, நித்யம், நைமித்திகம், காம்யம், என்று மூன்று வகைப்படும். நித்ய பூஜையானது எட்டுவகைப்படும். அதாவது உத்தமத்தில் மூன்று. மத்தியமத்தில் மூன்று. அதமத்தில் இரண்டு என்று அஜிதாகமம் கூறுகிறது.

பகலில் நான்குகால பூஜை, இரவில் நான்குகால பூஜை, உத்தமத்தில் உத்தமம். இவ்வாறு பகலில் நான்கு காலம் இரவில் மூன்று காலம் செய்யும் பூஜை உத்தமத்தில் மத்தியமம். பகலில் நான்கு காலத்துடன் இரவு இரண்டு காலம் ஆக ஆறுகாலபூஜை உத்தமத்தில் அதமம். இவ்வாறு ஒவ்வொரு காலம் குறைவாகி முடிவில் அதமத்தில் மத்தியமாக ஆவது ஒருகால பூஜையாகும்.

அபிஷேகம் - சிருஷ்டி கிருத்யம், நைவேத்தியம் - ஸ்திதி கிருத்யம், பலி - சம்ஹார கிருத்யம், தீபம் - திரோபாவ கிருத்யம், விபூதி - அனுக்ரஹ கிருத்யம் என்று கூறப்படுகிறது.

எண்ணெய், மாப்பொடி, நெல்லிமுள்ளி, மஞ்சற்பொடி, பஞ்சகவ்யம், பஞ்சாமிருதம், பால், தயிர், நெய், தேன், கரும்பு, வாழைப்பழம், எலுமிச்சம்பழம் முதலிய பழவகை. இளநீர், அன்னம், விபூதி, சந்தனம், பத்ரோதகம், கும்போதகம் என்ற இவைகளை வரிசையாக அபிஷேகம் செய்யவேண்டும்.

அபிஷேகத்திற்கு முன்னும், பின்னும், நைவேத்தியத்திற்கு முன்பும், பின்பும் தூபத்தின் முதலிலும், பாத்யம் ஆசமனம் கொடுக்கவேண்டும். பூஜையின் ஆரப்பம், அபிஷேகத்தின் முடிவு, பூஜையின்முடிவு, இந்த மூன்று காலங்களில் அர்க்யம் கொடுக்கவேண்டும்.

பாத்யத்தை - காலிலும், ஆசமனத்தை - முகத்திற்கு நேரிலும், அர்க்கியத்தை - சிரசிலும் கொடுக்கவேண்டும்.

விளாமிச்சை, சந்தனம், அருகு, வெண்கடுகு என்ற இந்த நான்கு திரவியங்களைப்போட்டு ஷடங்க மந்திரத்தை பூஜித்து அந்த ஜலத்தை பாத்யமாகக் கொடுக்கவேண்டும்.

ஏலக்காய், கிரும்பு, பச்சைக்கற்பூரம், நாவற்பழம், ஜாதிக்காய், குங்குமப்பூ இந்த ஆறுதிரவியங்களைப்போட்டு சம்ஹிதாமந்திரத்தால் பூஜிக்கப்பட்ட ஜலத்தை ஆசமனஸ்தானத்தில் கொடுக்கவேண்டும்.

எள்ளு, யவநெல்லு, தர்ப்பைநுனி, பால், ஜலம், அரிசி, புஷ்பம், வெண்கடுகு என்ற இந்த எட்டு திரவியங்களையும்போட்ட ஜலத்தில் மூலமந்திரத்துடன் கூடிய சம்ஹிதா மந்திரத்தை ஜபம் செய்து பூஜித்து அர்க்யஸ்தானத்தில் உபயோகப்படுத்தவேண்டும்.

தூப தீபம், அலங்கார தீபம், நாக தீபம், விருஷப தீபம், புருஷாமிருகதீபம், கடதீபம். பஞ்சதட்டு (ஐந்து) நக்ஷத்ர தீபம், மேரு தீபம், கற்பூர தீபம், மஹாநீராஜநம் (பஞ்சஹாரத்தி) என்று ஷோடச உபசாரங்களாலும், இறைவனைப் பூஜிக்கவேண்டும்.

விபூதிரக்ஷை, கண்ணாடி குடை. சாமரம், சுருட்டி, விசிறி என்ற இவைகளும் அந்த உபசாரங்களாகும்.

பூஜையால் - விஸ்தாரமான ஞானத்தையும், அக்னிகாரியத்தால் - சம்பத்தையும், ஜபத்தினுல் - பாப சுத்தியையும், தியானத்தினுல் - மோக்ஷத்தையும் அடைகிறுன் என்பது ஆகம சித்தாந்தம்.

---



மூலாதாரம்

आधारस्तु चतुर्दलोऽरुणरुचिर्वासांतवर्णात्मकः ।

வம். சம். ஷம். ஸம். என்ற நான்கு எழுத்துடன் கூடிய, நான்கு தளமுடைய கமலம், வீணாதண்டத்தின் அடிப்பாகத்திலுள்ளது. சித்தலக்ஷ்மி வல்லபை என்ற இரண்டு சக்திகளுடன் கணபதி வீற்றிருக்கிறார்.




ஸ்வாதிஷ்டானம்

स्वाधिष्ठानमनेकवैद्युतनिभं बालान्तषड्चक्रकम् ।

3

பம். முதல் லம். வரையிலுள்ள ஆறு எழுத்துடன் கூடிய ஆறு தளமுடைய கமலம். கசேருதண்டத்தின் அடிப்பாகத்திலிருந்து கொஞ்சம் மேல்பாகத்திலுள்ளது. சாவித்ரி காயத்ரி என்ற இரு சக்திகளுடன் பிரமன் வீற்றிருக்கிறார்.



**மணிபூரகம்**

**रक्ताभं मणिपूरकं दशदलं डाद्यैः फकारान्तकम् ।**

டம்[3] முதல் பம்[2] வரையிலுள்ள பத்து எழுத்துக்களுடன் கூடிய பத்து தளமுடைய கமலம். தொப்புள் பிரதேசத்திலுள்ளது பூமி லக்ஷ்மி என்ற இரு சக்திகளுடன் விஷ்ணு வீற்றிருக்கிறார்.



### அனாஹதம்

पत्रैर्द्वादशभिस्त्वनाहतपुरे हैमं कठार्णान्तकम् ।

கம் முதல் ட[2]ம் வரையிலுள்ள பன்னிரண்டு எழுத்துக்களுடன் கூடிய பன்னிரண்டு தளமுடைய கமலம், ஹ்ருதயத்திலுள்ளது. கௌரீ அம்பிகை என்ற இரு சக்திகளுடன் ருத்ரன் வீற்றிருக்கிறார்.



**விசுத்தி**

**माताभिर्दलषोडशस्वरयुतं ज्योतिर्विशुद्धांबुजम् ।**

அம் முதல் அ: (விஸர்க்கம்) வரையிலுள்ள பதினாறு எழுத்துக்களுடன் கூடிய பதினாறு தளமுடைய கமலம். தாலுவின் அடிப் பாகத்திலுள்ளது. இதில் உன்மனீ, வாக்வாதினீ, என்ற இரு சக்திகளுடன் மஹேச்வரன் வீற்றிருக்கிறார்.



## ஆக்ஞை

हक्षेत्यक्षरयुग्मपत्रकमले मुक्ताभमाज्ञांबुजम् ।

ஹம் க்ஷம் என்ற இரு அக்ஷரங்களுடன் இரண்டு தளங்களையுடைய கமலம். புருவமத்தியில் உள்ளது. இதில் மனோன்மனீ, தர்மசக்தி என்ற இரு சக்திகளுடன் சதாசிவன் குருவடிவமாக வீற்றிருக்கிறார்.



பிரும்மரந்திரம்

तस्मादूर्ध्वमधोमुखं विकसितं पद्मं सहस्रच्छदम् ।

அதன்மேல் ஆயிரம் தளமுடைய கமலம், பிரமரந்திர ஸ்தானத்தி லுள்ளது. அதில் பராசக்தியுடன் பரசிவன் வீற்றிருக்கிறார்.

# பன்னிருதிருமுறை

திரு. R. வேலாயுத ஓதுவாமூர்த்தி அவர்கள்,

*ஆதீன தேவார பாடசாலை, தலைமை ஆசிரியர்.*

**வேதநெறி.**

*வேதநெறி தழைத்தோங்க மிகுசைவத் துறைவிளங்க*
*பூதபரம்பரை பொலியப் புனிதவாய் மலர்ந்தழுத*
*சீதவள வயற்புகலித் திருஞான சம்பந்தர்*
*பாதமலர் தலைக்கொண்டு திருத்தொண்டு பரவுவாம்.*

**—சேக்கிழார்.**

*ஆசையறாய் பாசம்விடாய் ஆனசிவ பூசைபண்ணாய்*
*நேசமுடன் ஐந்தெழுத்தை நீநினையாய் — சீசீ*
*சினமே தவிராய் திருமுறைகளோதாய்*
*மனமே யுனக்கென்ன வாய்.*

என்பது எங்கள் குருஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகளின் சிவாநுபவத் திருவாக்கு. அவர்களின் வழிவழித் தோன்றலாக வந்து இங்கு அரசு வீற்றிருந்து ஞான நல்லருளைப் புரிந்தருளுகின்றவர்கள் ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கள். அவர்களின் பொன்னார் திருவடிகளைத் துணைக்கொண்டு அவ்வடியிணைகள் உணர்த்தியருள்கிற அம்முறையில், அவ்வளவிலே, ஏதோ ஒரு சில சிந்தனை புரிந்திடுதல் நினைவு. பன்னிரு திருமுறைகள் என்ற பொருள்பற்றிய சிந்தனைக்கு, உரியர்களாக நாம் இங்குக் குழுமியிருக்கிறோம்.

திருமுறைகளைச், சிந்தித்து, ஓதிப் பயனுறுத வழி, மனம் முதலாய கருவிகளைப்பெற்றிருந்தும், அதனை ஓதாவிடத்து, ஓதுகின்ற அச்செயலுக்கு ஆதாரமாகத்திகழ்கின்ற ஆசையறல், பாசம்விடல், அதன்வழி அமைதியின் உற்ற பூசையுறல் அச்செயல்வழி உறுகின்ற நேசமுறல், அவன் எழுத்தைந்தும் நினைதல், சினம் தவிர்தல், ஆய செயல்களைப் பெறுதவிடத்து, பயனில்லை என்பது காட்டி உணர்த்தி அருளினார்கள். நமது குருஞானசம்பந்தப் பெருந்தகையார். உயிர்களின் உய்திகருதி முதல்வன் வேதாகமங்களை அருளினான். வீடுபேறுக்கம் கருதி அம்முதல்வன் அருள்வழி அவ்வுண்மைகளை மூவர் முதலியர் அருளினார்கள். அவைகளே திருமுறைகள்,

## திருமுறைகள் 12

அவை திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் திருநாவுக்கரசு நாயனார் சுந்தரமூர்த்தி நாயனார் அருளிய (முறையே 3, 3, 1,) ஆக 7. திருமுறைகள் தேவாரம். மணிவாசகர் அருளிய திருவாசகம், திருக்கோவையார், 8, திருமாளிகைத் தேவர் முதலிய ஒன்பதின்மர் அருளிய திருவிசைப்பா திருப்பல்லாண்டு 9. திருமூலதேவர் அருளிய திருமந்திரம் 10. திருவாலவாயுடையார் முதலிய பன்னிருவர் அருளியவை, 11. சேக்கிழார் அருளிய திருத்தொண்டர் புராணம் 12. ஆகியவைகள் பன்னுதற்குரிய பன்னிரு திருமுறைகள்.

### திருமுறை எனும் சொற்குப் பொருள் என்னை ?

**திரு** இது சிவமே பெறும் **திரு** எய்திற்றிலேன். திருவே யென் செல்வமே, முதலாய திருமுறைச் சொற்றொடர் கொண்டும் ஏனையசான்றுகளானும், சிவத்தைக் குறிக்கும் ஒரு ஒப்பற்ற சொல் எனக் கண்டனர் ஆன்றோர்.

**முறை:** கந்தபுராணம் அவையடக்கச் செய்யுட்கருத்தானும், முறை கொண்டு நின்றடியார் முட்டாமே பணிசெய்ய என்ற திருமுறை வாக்கானும் நூல்முறை, ஒழுங்கு, மறைமுறை என்றெல்லாம் பலபடச் காணுதற்குரிதாயுள்ளது. ஆகவே சிவமேயாயமுறை, அடைந்தாரை, உணர்ந்தாரை, சிவமே, ஆக்குகின்றமுறை, சிவன் மகிழ்ந்தருள்முறை, அடைதற்குரிய காணுதற்குரிய, உணர்ந்து நலம் பயன் இன்பம் எவற்றையும் பெறுதற்குரிய சாதனமாகித் திகழ்கின்ற மேலாயமுறை என்றெல்லாம் பொருள் காண்கின்ற முறையில் அமைந்து திகழ்கின்ற அறிவுடையார்களது சிந்தனைக்குரியதொரு சொற்றொடர்.

இனி அதனை அருளியவர் எவரெவர் என்று காண்போம்.

### வரலாற்றுச்சுருக்கம்.

அருளிய ஆசிரியர்கள் இருபத்தெழுவர்.

1. **திருஞானசம்பந்தர்** முதல் மூன்று திருமுறைகளின் ஆசிரியர். சீகாழிச் சிவபாத இருதயர் பகவதி அம்மையாரின் புதல்வர். கௌணியர் கோத்திரத்துவந்த அந்தணர் மரபினர். மூன்றும் ஆண்டில் பர-அபர-ஞானங்களை திருமுலைப்பாலோடு சேர்த்து அம்மையோடு அப்பன் அருளிட அதனை வாயால் உண்டு நாவால் தேக்கி நம் செவிவழியாக உட்சென்றுற அருளியவர், இன்னிசை

யால் தமிழ்பரப்பிய இவர்: சிவபிரான்அருளிய முத்துக்குடை, பந்தல் சின்னம், சிவிகை, பொற்றுளம், பொற்கிழி, யாவும் பெற்ற மூத்தமிழ் வித்தகர். பரசமயம் நீக்கியவர். பாண்டியனைச் சைவனுக்கியவர். சமணர்களோடு வாதிட்டு வெற்றி கண்டவர். எலும்பு பெண்ணுதல் இறந்தவர் பிழைத்தல் முதலாய அற்புதங்களைச் செய்தவர். தமது திருமணக்காலத்தே சிவமணங்கமழ யாவருக்கும் இன்பமருளி இன்புற்றனர்,

**2. திருநாவுக்கரசர்:-** இவர் அடுத்துத்திகழ் 3 திருமுறைகளின் ஆசிரியர். விழுப்புரத்துக்குத் தென்மேற்கில் திகழும் திருவாமூரில் தோன்றியவர். சைவவேளாளர் மரபினர். புகழனுர், மாதினியார் ஈன்ற, மருள்நீக்கியார். இவர் சகோதரியார் திலகவதியார். அவருக்கு அருள்செய்த திருவதிகை வீரட்டத்தீசன் அருள், புறச்சமயம் சார்ந்து தருமசேனர் எனும் பெயரொடும் பாடலிபுத்திரத் தரசன் மனமகிழ இருந்த இவரை சூலையாகிப்பற்றி வருத்தியது. சூலையால் வருத்த முற்ற இவர் அதிகைசார்ந்து திலகவதியாரின் அருள்பெற்று வீரட்டத்தீசனைப் பாடிச் சூலைநீக்கம்பெற்றவர். திருநாவுக்கரசர் என இறைவரால் பெயர்தரப்பெற்ற சொல்வேந்தர் ஞானசம்பந்தரால் அப்பரே என அழைக்கப்பெற்றவர். இவர் செய்த அற்புதங்கள் பல. விரிக்கிற் பெருகும்.

**3. சுந்தரர் :-** 7-ந்திருமுறை ஆசிரியர். திருநாவலூர் ஆதிசைவர். சடையனுர் இசைஞானியாரின் புதல்வர். கிழவேதியராகிவந்த இறைவரால் திரு வெண்ணெய்நல்லூரில், தடுத்தாட்கொள்ளப் பெற்றவர். இறைவனுக்குத்தோழரா யிருந்தவர். பரவை சங்கிலியாரை மணந்தவர். அவ்வழி பல உண்மைகளை உலகிற் கருளியவர். செங்கல் பொன்னுதல். முதலையுண்ட பிள்ளையை அழைத்தல், ஆற்றில் இட்டுக் குளத்தில் தேடுதல் ஆய செயல்கள் திருவருள் பெற்றூர்க்கு ஆம் என்று காட்டியவர். சேரமான் தோழர். இறைவரால் அனுப்பிய வெள்ளை யானைமீது கயிலை சார்ந்தவர்.

**4. ஸ்ரீமாணிக்கவாசகர்:-** எட்டாந்திருமுறையாகிய, திருவாசகம் திருக் கோவையார் அருளியவர், இவர் திருவாதவூரர். மாமாத்திர குலத்து வந்த அந்தணர். அரிமர்த்தனபாண்டியனின் முதலமைச்சர். அரசராணைவழி குதிரை வாங்கச் சென் றனர். பெருந்துறையிற்புக்குக் குருந்தடியிற் குருநாதனைக்கண்டனர். அருள்பெற்ற னர். பின் அருள்வழி அங்கு ஆலயம் ஆக்கியவர். இவருக்காக இறைவன் நரிகளைக் குதிரையாக்கிச் செலுத்தும் சேவகனுகியும் வந்திக்காக மண்சுமந்திடும் கூலியாளா கவும் வந்தனர் எனின் இவர் பெருமை யாமா சொல்வோம்? பெருமான் உளம் மகிழ, கரம் மகிழ வாசகம் அருளிய வாசகர், இறையருள்வழி ஊமையைப் பேச வைத்தவர். தில்லையுட்கூத்தன் ஒளியினிற்கலந்து இன்புற்றவர்.

திருவிசைப்பா திருப்பல்லாண்டு 9-ந்திருமுறை. இதனை அருளியவர்கள் ஒன்பதின்மர் ஆசிரியர். இவர்கள் வரலாறுகள் விளக்கமாகத் தெரிய இல்லை. ஆயினும் ஒரு சில குறிப்புக்களைமட்டும் இங்குக் காண்போம்.

5. **திருமாளிகைத்தேவர் :-** இவர் போக சித்தர் மாணவர் ஒன்பதின் மருள் ஒருவர். நாரசிங்கன் எனும் மன்னன் விடுத்த படைகளை ஆவடுதுறை ஆலயத்தின் மதில்கள் மிசை நகராமலிருந்த நந்திகளை நகரவிடுத்து வெற்றி கண்டவர். வீழிமிழலையில் நுந்தா விளக்கு அமைத்த சிவஞானி. ஜயந்தன் என்ற மற்றொரு பெயரும் இவருக்குண்டு, இவர் ஆலயம் திருஆவடுதுறை ஆதீனத்து மடாலயத்தினுள் உளது.

6. **சேந்தனார் :-** சீர்காழியை அடுத்த நாங்கூர் எனும் சிற்றூரினர். இவர் பட்டினத்தடிகளாரிடத்து காரியஸ்தராக இருந்தவர், திருப்பல்லாண்டு அருளித் தில்லைக்கூத்தன்றன் தேரினை ஓட்டியருளி ஆடல்கண்டு அருளெய்தியவர்.

7. **கருவூர்த்தேவர் :-** இவரைக் குழித்தலையை அடுத்த கருவூரினர் என்பர். இவர் பெயர் கருவூரில் தோன்றிய காரணம்பற்றித் திகழ்கின்ற பெயராகவே காணப்பெறுகிறது. தஞ்சை பிரகதீஸ்வரருக்கு, அஷ்டபந்தனம் சாத்தும்பொழுது இளகிய அதனைக்கண்டு வருந்திய மன்னன் இராஜராஜன் மந்திரியாரின் மூலம் இவரது பெருமையறிந்து அழைத்தமைக்கிணங்கிக் கருவூரிலிருந்து தஞ்சை சார்ந்தனர். வாயின் எச்சிலை உமிழ்ந்து அஷ்டபந்தனம் கெட்டியுறச் செய்த அற்புதர். தஞ்சை ராஜராஜமன்னரால் போற்றப்பெற்றவர். இவர் ஆலயம் தஞ்சை ஆலயத்தும் கருவூர் ஆலயத்தும் பிரசித்தமாகத் திகழ்கின்றது.

8. **பூந்துருத்திகாடநம்பி :-** இவர், (முதல் இராஜராஜன் காலத்துக் கல்வெட்டுப்படி) ஆத்ரேய கோத்திர அரசர் காலத்தவர். பல்லவமன்னவர் வகையருள் ஒருவர். அரசர் எனத்தெரிகிறது.

9. **கண்டராதித்தர் :-** இவர் சோழமன்னருள் ஒருவர். பொன்வேய்ந்த பராந்தகன் புதல்வர். செம்பியன்மாதேவியார் மணாளர். இவ்வரலாற்றினை இவர் அருளிய இசைப்பா (202) செய்யுள், குறிப்பாக உணர்த்துகின்றது.

10. **வேணாட்டடிகள் :-** இவர் தென் திருவாங்கூர் வேணாட்டினை ஆண்ட மன்னர்,

11. **திருவாலிஅமுதனார் :-** இவர், திருவாலி எனும் சிற்றூரினர். அந்தணர். அரசர். மயிலையர் மன்னர், எனும் மற்றொரு பெயரும் இவருக்கு உண்டு.

**12. புருடோத்தம நம்பி :-** இவர் மறையவர்.

**13. சேதிராயர் :-** இவர், சேதி நாட்டரசர், மெய்பொருள் நாயனர், வம்சத்தவர்.

**14. திருமூலர் :-** பத்தாம் திருமுறையாகிய திருமந்திரம், அருளியவர். இவர் கயிலையினின்றும் ககன வழியாகப் பொதியமலை நோக்கிச் சென்றனர். அண்மையில் திகழ்கின்ற ஆவடுதுறையைச் சந்தித்தபொழுது ஆங்கு பசு இனங்கள் துன்புறுதல்கண்டு கீழிறங்கினர். பசு மேய்ப்பான் மூலன் சாத்தூர் ஆயன் இறந்தமையும் அவனது உடலைச் சூழ்ந்துகொண்டு ஆவினங்கள் துன்புறுவதையும் கண்டனர். பசுக்களின் துயர்நீங்கிட எண்ணித் தனது உடலை ஓரிடத்தில் மறைத்து அவனுடலில் தனது ஆவியை பிரவேசிக்கச்செய்து (பரகாயப்பிரவேசம், அட்டமா சித்திகளுள் ஒன்று) எழுந்து நின்றனர் பசுக்கள் துயர் நீங்கி வழக்கம்போல் வீடுகள் சேர்ந்தன. திருவருள் வழியே மறைத்துவைத்த தன்னுடல் மறைந்தமையால், அங்கு அரசடியிலிருந்து ஆண்டுக்கொரு மந்திரமாக மூவாயிரம் அருளினர். சிவமாந்தன்மையுற்றனர். இவர் ஆலயம், ஆவடுதுறை ஆலயத்தின் வடமேற்கு உட்பிரகாரத்துள்ளது.

பதினோராந் திருமுறை அருளிய ஆசிரியர்கள் பன்னிருவர். அதனுள் திகழ்கின்றநூல்கள் 40. 15. திருவாலவாயுடையார், 16. காரைக்கால் அம்மையார், 17. ஐயடிகள் காடவர்கோன் நாயனர், 18. சேரமான்பெருமாள் நாயனர், (இவர்கள் திருத்தொண்டத்தொகைத் திருப்பதிகத்து சுந்தர மூர்த்திகளால் போற்றப் பெற்றவர்கள்) 19. நக்கீரதேவர், 20. கல்லாடதேவர், 21. கபிலதேவர், 22. பரணதேவர், 23. இளம்பெருமானடிகள், 24. அதிரா அடிகள், 25. பட்டினத்தடிகள், 26. நம்பியாண்டரர் நம்பி, இவர் துணைக்கொண்டுதான் திருமுறைகளை நமக்குக் கிடைக்கும்படி அபயகுல சோழமன்னர் அருளினர்.

**27. சேக்கிழார்:** இவர் குன்றத்தூரில் வந்த தொண்டமண்டல வேளாளர் மரபினர், அனபாயமன்னர்பால் அமைச்சர், அவர் விரும்பிய வண்ணம் தில்லைசார்ந்து ஆனந்தக்கூத்தன் அருள், உலகெலாம்என முன்னின்றருள, பெரிய புராணமாகிய பன்னிரண்டாந் திருமுறையை அருளினர்கள். அன்று அவ்வரசன் கண்டு மகிழ்ந்து விழாவெடுத்தான். இன்று நாம் மகிழ்கின்றோம். இதுவரை திருமுறைகள் 12-ம் அருளிய ஆசிரியர்களைப்பற்றி சுருக்கமாக ஓரளவு சிந்தனை புரிந்தோம், அவ்வகையில் ஆசிரியர்கள் இருபத்தெழுபதின்மர் என்று கண்டோம்.

இவர்களுள் ஒருவர் சிவபெருமான், திருவாலவாயுடையார். பதினோராந் திருமுறை ஆயாசிரியராக இருந்து காட்சியளிக்கின்றார். இங்கும் மடாலயத்துள் அவர் தானே இருந்து நமது ஆசாரிய மூர்த்திகளைக்கொண்டு திருமுறைகளைச்

சிந்தனை புரிந்திட அருளுகின்றார். அதுமட்டுமா? திருமுறைகள் என்று எண்ணும் பொழுதே அவர் தோடுடைய செவியனாகி முன்னையும், அடியவர் பெருமை யுணர்த்துவாராய் தில்லை வாழந்தணர் தம் அடியார்க்கும் அடியேன் என்று தியாகேசனாய் இடையிலும், அடியவர்க்கு நல்குவாராய் பதினொராந், திருமுறை ஆசிரியராகப் பின்னையும் இருந்தருளுகின்ற முறையினையும், மற்றும் இறையார் பாடல் வலங்கொள் பாடல் என்றருள்கின்ற முறையானே, இத்திருமுறைகளுள் திகழ்கின்ற பாடல்களினுள்ளும் அதனை உன்னுகின்ற அடியர் உள்ளங்களிடை யேயும், பாலில் நெய், மணியில் ஒளிபோல அகத்தும் புறத்தும் மன்னிநின்று மகிழ்கின்றான் இறைவன் என்பது வெள்ளிடை.

## திருமுறைகளை வகுத்தோர்

நம்பியாண்டார் நம்பிகள். இவர் திருநாரையூரில் வதிந்த ஆதிசைவர். ஏழுவயதுச் சிறுவர். பொல்லாப்பிள்ளையார் அருள்தர ஓதாதுணர்ந்தவர். இவர் துணையை நாடினன் திருமுறைச்சுவைநாடிய மன்னன், அபயகுலசேகரன். இவர் துணைக்கொண்டு, விநாயகர் அருள்வழி, திருமுறைகளின் இருப்பிடமாக இருந்த, தில்லை ஆலயத்தினை நண்ணினான். அருள்வழி திருமுறைகளைக்கண்டான். ஏட்டுச் சுவடிகள் செல்லேறுண்டு இருந்ததை ஓரளவு பெற்றனன். ஆனந்தக் கூத்தன் அருள்வழி எருக்கத்தம்புலியூரை நண்ணினான். யாழ்ப்பாணர் வழிவந்த வல்லியொருத்தி, சுருதி வழிப் பண்தழுவும் இன்னிசை காட்டத் திருமுறைகளை வகுத்தமைத்தான்.

## திருமுறைகளின் வரிசைகட்கு ஆதாரமாயுள்ளவை பண்கள்

பண்கள் திருமுறைகளின் வரிசை எண்களை நிர்மாணம் செய்வதா யிருக்கின்றன. பண்களே தான் அதனை அழகுபெறுவிக்கின்றன. அமுதின் இனிய பண்ணாகி நிற்போன், பழுத்த பண்களாகி நிற்போன், பண்ணின் இன்மொழி கேட்போன், பரமன். அப்பண்ணின் இசை வேதத்தின் ஓங்கிசை அவ்விசை பாரம்பர்யமாக உபதேசக் கிரமத்தில் வழங்கி வருகின்ற பண்ணிசை, என்றெல்லாம் திருமுறைகள் பேசுகின்றன. அப்பண்கள், இல்வழி முதலேழு திருமுறைகளின் வரிசையில்லை. ஓதுவார்கட்கும் உணர்வார்கட்கும் பயனு மில்லை. என்பது திருப்பதிகத் திருக்கடைக்காப்பு அருள்வன. தேவாரம் தேவ னிடத்து அன்பை விளைப்பது. தேவன் மாலையாகத்திகழ்வது, தேவனைப் போற்று கின்ற கூடை, திரள், முடுகு முதலிய பண்டைப் பண்ணிசை முறை மையின் வாரம் எனும் இசையமைப்பின் வழி நடத்தர நடையமைய இறைமகிழ அமைந்தவை. அத்தகைய அருட்பாடல்களுக்காக ஆண்டவன் எத்தனையோ அற்புதச் செயல்களை . அருளியிருக்கின்றான் என்பதை நன்கு உணர்வோம். ஆதலின் அதனை எண்ணி ஓதி சிந்தித்துப் பயனுற எண்ணிடுவோர்

கட்கு, பண்ணிசை இன்றியமையாதவை. பண்ணிசை முறைமைகொண்டு ஓதிடாது மனம்போனபடியெலாம் சிந்தனைபுரிதல் பெரும் பாவம். அதனை "உருசியோடு அடிசிலுண்ணென் றுரைத்திடுபேதாய் இன்று, வருமரி விரதம் பேணு வரைதவ றிடுவோமாகில், அருமறை நால்வர் வாக்கை, ஆழ்வர் பன்னிருவர் வாக்கை, (மாறுபட்ட) திருகு பல்லிசையிற் பாடும் தீயர்கள் நரகிற்சேர்வாம்" என்னும், பாகவதம் அருளுவதுகொண்டும் உணரலாம். பண்கள் இல்வழி தேவாரத் திருமுறைகளை உணர்தல் ஓதுதல் என்பது யாதொரு பயனையும்தாராது. பண்ணிசையிலாதவழி, ஓதுதல் என்ற சிறப்பு அதனுக்கேது? ஆதலின் திருமுறைகளைப் பண்ணோடு ஓதுதல்வேண்டும். இறைவன் திருமுன் ஓதி அதனால் வரும் பயன், கொளவேண்டும் என்ற நினைவுடையார்கட்குப் பண்களின் முறைமைப்பயிற்சி இன்றியமையாதது என்று ஆன்றோர்கள் கண்டனர்.

## திருமுறைகளில் பண்கள்

| திருமுறை எண் | பண்கள் | | | மொத்த எண் |
|---|---|---|---|---|
| ஒன்று:- | நட்டபாடை | தக்கராகம் | பழந்தக்கராகம் | |
| | தக்கேசி | குறிஞ்சி | வியாழக்குறிஞ்சி | |
| | மேகராகக்குறிஞ்சி | | | ஆக 7 |
| இரண்டு:- | இந்தளம் | சீகாமரம் | காந்தாரம் | |
| | பியந்தைக்காந்தாரம் | நட்டராகம் | செவ்வழி | ஆக 6 |
| மூன்று:- | காந்தாரபஞ்சமம் | கொல்லி | கொல்லிக்கௌவாணம் | |
| | கௌசிகம் | பஞ்சமம் | சாதாரி | |
| | பழம்பஞ்சுரம் | புறநீர்மை | அந்தாளிக்குறிஞ்சி | ஆக 9 |
| நான்கு:- | கொல்லி | காந்தாரம் | பியந்தைக்காந்தாரம் | |
| | சாதாரி | பழந்தக்கராகம் | பழம்பஞ்சுரம் | |
| | இந்தளம் | சீகாமரம் | குறிஞ்சி | ஆக 9 |
| ஐந்து:- | குறுந்தொகை (இந்தளத்தின் அம்சமாகத் திகழ்வதொன்று) | | | |
| ஆறு:- | திருத்தாண்டகம் | | | |

| | | | |
|---|---|---|---|
| ஏழு:- | இந்தளம் | தக்கராகம் | நட்டராகம் |
| | கொல்லி | கொல்லிக்கௌவாணம் | பழம்பஞ்சுரம் |
| | தக்கேசி | காந்தாரம் | பியந்தைக்காந்தாரம் |
| | காந்தாரபஞ்சமம் | நட்டபாடை | புறநீர்மை |
| | சீகாமரம் | குறிஞ்சி | கௌசிகம் |
| | செந்துருத்தி | பஞ்சமம் | ஆக 17 |

## பண்களின் வகை.

| | | | |
|---|---|---|---|
| **பகல் பண்:** | புறநீர்மை | காந்தாரம் | |
| | பியந்தைக்காந்தாரம் | கௌசிகம் | |
| | இந்தளம் | தக்கேசி | |
| | சாதாரி | நட்டபாடை | |
| | நட்டராகம் | பழம்பஞ்சுரம் | |
| | காந்தாரபஞ்சமம் | பஞ்சமம் | ஆக 12 |
| **இரவுப் பண்:** | தக்கராகம் | பழந்தக்கராகம் | |
| | சீகாமரம் | கொல்லி | |
| | கொல்லிக்கௌவாணம் | வியாழக்குறிஞ்சி | |
| | மேகராகக்குறிஞ்சி | அந்தாளிக்குறிஞ்சி | |
| | குறிஞ்சி | | ஆக 9 |
| **பொதுப் பண்:** | செவ்வழி | செந்துருத்தி | |
| | திருத்தாண்டகம் | | ஆக 3 |

இம்முறையில் பகல் இரவு, பொது, ஆகிய அந்தந்த நேரங்கட்குரிய பண்களைக் கொண்டுதான் இறைவழிபாட்டுக் காலங்களிலும் எந்தக் காலங்களிலும் ஓதிவழிபடல் பழக்கத்தில் இருந்து வருகிறது. எங்கள் தருமபுர மடாலயத்திலும் இவ்வண்ணமே தொன்றுதொட்டு வழக்கம் இருந்துவருகிறது.

ஓதும்முறை; வழிவழி வந்துறுகின்ற வகையின் உள்ளது. எழுதா மறையாகிய வேதங்களும், இதுவும், முறைமை உபதேச வழியாகத்தான் வந்து கொண்டிருக்கிறது. அதனை அவ்வழிமுறையில் அவகாசம் கிடைக்கும்போது உணர்வோம். நேரம்கருதி இரண்டொரு பண்களை மட்டும் ஓதி உணர்வோம். [நட்டபாடை காந்தாரபஞ்சமம் புறநீர்மை ஆயபண்களில் தோடுடைய. ஆடிணுய் மங்கையர்க்கரசி பதிகங்கள் ஓதிக்காட்டப்பெற்றன.

## திருமுறைப்பாடல்களின் கூடுதல் எண்

சற்றேறக்குறைய 18351 என்று ஆன்றோர் கண்டிருக்கிறார்கள். அவை திருஞானசம்பந்தர் 4147, திருநாவுக்கரசர் 3066, சுந்தரர் 1033, திருவாசகம் 656, கோவையார் 400, திருவிசைப்பா திருப்பல்லாண்டு 301, திருமந்திரம் 3081, பதினொராந் திருமுறை 1388, தொண்டர் புராணம் 4286 ஆகும்.

**திருமுறைப்பாடல்கள் செய்த அற்புதங்கள்:-** வீழியில் பஞ்சம்போக்கிக் காத்தது. திருமருகல், திங்களூர், அவிநாசி மயிலாப்பூர் ஆய தலங்களில் இறந்தார்களைத் தோற்றுவித்தது. மதுரை தெளிச்சேரிகளில் அமணர்களை அழித்தது. யாகாதிகள் நீற்றுநெறி முதலியவைகளை வளர்ச்சிபெற ஆக்கியது. மங்கையர்க்கரசியார், குலச்சிறையார், திருநீலகண்ட யாழ்ப்பாணர் முதலர்க்கு அருள் புரிந்தது. ஏனைய தீயநெறிகளை மறைந்திட ஆக்கி. ஆகியபது ஐந்தொழில்களைப் புரிந்திடுவன. கல்லைத் தெப்பமாக்கியது, விடத்தை அமுதாக்கியது, எலும்பைப் பெண்ணாக்கியது, முதலை உண்ட பிள்ளையைப் பல ஆண்டுகள் கழிந்த பின்னும் கொண்டு தந்தது, ஓடம் செலுத்தியது, நீரினை எதிர்த்தது, அனலில் வெந்து படாதது, கதவம் திறந்தது, செங்கல் பொன்னாயது, ஆறு வழிவிட்டது, ஆற்றிலிட்ட பொற்குவியல்களைக் குளத்தில் தந்தது, ஆய பல செயற்கருஞ் செயல்களைச் செய்த பெருமையது. அரன் அருளை எளிதின் ஆக்கி அளித்தருள்வது. உயிர்க் குறுதி பயப்பது.

## சிந்தனைச்சுருக்கம்

ஆகவே இதுகாறும் சிந்தித்த வகையினாலே திருமுறைகள், உயிர்களின் வீடுபேறுக்கம் கருதி இறை அருள் வழிவந்துற்ற அவனேதானேயாய சிவமாந் தன்மையுற்ற ஆசிரியர் பலர் அருளியவைகள். அவை பன்னிரண்டு, தேவாரம், திருவாசகம், கோவை, திருவிசைப்பா, திருப்பல்லாண்டு, திருமந்திரம், திருவாலவாயுடையார் முதலியோரருளிய திருமுகப்பாசுரம் முதலாய நாற்பது நூல்களைக் கொண்ட பிரபந்தம், தொண்டர் புராணம் ஆயவைகள் என்றும், அருளியவர்கள் 27 ஆசிரியர்கள் என்றும், கண்டோம். பின் இவர்களது வரலாற்றுச் சுருக்கம் கண்டோம். திருமுறைகளை வகுத்தாரை உணர்ந்தோம், எந்த அடிப்படையின்கண் வரையறுத்தார்கள் என்ற முறையானே பண்களைக்கண்டோம். அப்பண்களின் வகைகண்டோம். அவை 24 என்றும், திருமுறைப் பாடல் எண்கள் 18351 என்றும் கண்டோம், பெருமையுணர்ந்தோம். அவை, ஐந்தொழில்களையும் செய்திடும் ஆற்றல் படைத்தன என்று கண்டோம். அவைகளே நமக்குரிய எல்லா நலங்களையும்பெற அருளுவனவாகி, ஆண்டவனது அருளினை எளிதில் ஆக்கியருளுகின்ற முறைமைகளைத் தன்னகத்தேகொண்டு மிளிர்வது என்றும், வேதாகமங்களின் சாரங்களே திருமுறைகள் என்றும் உணர்ந்தோம். இதனில், ஒருசில திருமுறைப் பாடல்களின் கருத்துக்களைமட்டும் எடுத்துக்கூறி அவைகளைச் சிந்திப்போமாக.

தோடுடையசெவியன் விடையேறியோர் தூவெண்மதி சூடிக்
காடுடைய சுடலைப்பொடி பூசியென்னுள்ளங் கவர்கள்வன்
ஏடுடையமல ரான்முனை நாட்பணிந் தேத்தவருள்செய்த
பீடுடைய பிரமாபுரமேவிய பெம்மா னிவனன்றே.

இது முதல் திருமுறையில் முதற்றிருப்பாடல் பிரமாபுரமேவிய பெம்மான் இவனன்றே, தோடணிந்தோன், தூயமதி, பொடி, அணிந்தபுண்ணியன் முன்னுள் மலர்கொண்டு பணிந்தேத்திய பிரமனுக்கும் அருளினேன். இந்நாள் விடையேறி வந்து, என் உள்ளத்தைக் கவர்ந்தகள்வன் என்று சுட்டிற்று. இது கொண்டு நம்மையும் ஆண்டருள்பவன் அவனே என்பதனையும் உணர்த்து கின்றது. அந்நாள் ஞானத்தை நல்கவந்த ஆசிரியப்பெருமக்கள் அனைவரும் இருந்து காட்டிச் சொல்லாமற் சொல்லியே, அதனை அருளினார்கள். பீடுடைத் தேசிகன் பேரருள் வடிவமாய இப்பாடலோ அப்பரம்பொருளை நேரில் நின்று சுட்டிக்காட்டி, நமக்கு உணர்த்தியருளுகிறது.

எனின், திருமுறைப்பாடல்களின்கருத்துக்களை, பெருமைகளை எடுத்தி யம்புவது, எம்தரத்ததோ? விரிக்கிற்பெருகும். தவிரத், தோடுடையசெவியன்விடை யேறியோர் தூவெண்மதிசூடி, (இவை முதற்றிருமுறை முதல்பாடல் முதல் வரி.) நின்றதெங்கும் நிலவி உலகெலாம், இவை ஈற்றுத்திருமுறை ஈற்றுச்செய்யுள் ஈற்றடி. இந்த இருவரிகளின் கருத்தை எண்ணிப்பாருங்கள். உலகெல்லாமாகி நிற்கின்ற ஆண்டவன் உமையொருபாகன் சிவபெருமானே என்று அருளுகின்றது என்று சொல்லுதலும் வேண்டுமோ. ஏன் இவ்வடிகளின் முதலெழுத்தையும் ஈற்றெழுத்தையும், மட்டும்தான் எடுத்துக்கொள்ளுங்கள். தகரமெய்யோடு புணர்ந்த ஓகாரம், ம், என்ற மகரமெய்யோடுபொருந்தி, ஓம் எனும் பிரணவத்தை யுணர்த்துகின்றது. ஆகவே உலகெலாம் செம்மைபெறவும், துயர் நீங்கவும், உய்தி பெற்றிடவும், ஞானமுணர்ந்திடவும், தலைவன் சிவன் ஒருவனே யென்பதுணர்ந்தி டவும், அவனை உணர்ந்தபொழுது இசைப்பாக்களால் தோத்திரித்து மந்திரங்கள் கொண்டு வழிபட்டிடின் ஆலவாயீசன் திருமுகம்கண்டு அருளுறலாம் என்பதும், அவ்வகையில்கொண்டு எவற்றையும், உறுதற்கு, அடியர் வழிபாடு இன்றியமை யாதது என்பதும், அவற்றிற்கு அவர்கள் பெருமையுணர்தல் அவசியம் என்றும், பொதுவாக ஓரளவு அதன் கருத்துக்களை உணர்கின்றோம். ஆதலின் அத்தகைய திருமுறைகளை உணர்தலே, எல்லாப் பயன்களையும் உறுதற்குரிய வழியாகும். அதுவே முறையாகும். அம்முறைகள்தாம் திருமுறைகள் என்று கூறி, இது காறும்சிந்தனைகட்குத்துணைபுரிந்தருளிய எங்கள் குருமகாசந்நிதானம் அவர்களது பொன்னார் திருவடியிணைகளை வழுத்தி முற்றுவிப்போமாக.

வாழ்க அந்தணர் வானவரானினம்.
வீழ்க தண்புனல். வேந்தனும் ஓங்குக.
ஆழ்க தீயது எல்லாம் அரன்நாமமே
சூழ்க வையகமும் துயர்தீர்கவே.

# இதிகாசம்

இதிகாசம் என்பன இராமாயணமும் பாரதமுந்தான். இதிகாசம் என்பதற்கு 'இவ்வாறு இருந்தது' என்பது பொருள். வேத ஆசாரத்தைப் பின்பற்றிவரும் ஜன சமுதாய வளர்ச்சியும் தலைவர்களின் வாழ்வும் இவ்விவ்வாறு இருந்தன என்பதை வரலாற்றுமுறைமையாக எடுத்து வகுப்பதே இதிகாசமாகும்.

**இதிகாசம் தோன்றியதேன்?** வேதம் - மறை. பொருளை அறிவது கஷ்டம். அதன் சாரத்தை எல்லாரும் உணர்ந்தாலல்லது வேத ஆசாரம் நாட்டில் நடவாது. எல்லாரும் இரும்புக் கடலையைக் கடித்து இன்பத்தைச் சுவைக்க முடியாது. அதன் சாரத்தையெல்லாம் திரட்டிக் கதை வடிவத்தில் கருத்தில் இருத்தவேண்டும். அதற்காகத் தோன்றியனவே இதிகாசங்கள்.

**காலம் :** வேதகாலத்தை கி. மு. 6000 முதல் 3000 வரை என்று ஆராய்ச்சியாளர்கள் அறிவிக்கிறார்கள். அதற்குப் பின்பு எழுந்தனவே இதிகாசங்கள். அவைகளின் காலம் கி. மு. 3000 முதல் கி. பி. 15000 வரை எனலாம். ஆரியர்கள் ஆரியாவர்த்தம் முழுதும் குடியேறி அங்கங்கே அரசுகளை ஏற்படுத்திக் கொண்டு நாகரீகமாக வாழத்தொடங்கிய காலம் இதுதான். மற்ற நாட்டவர்களுக்கு நாகரிகம் என்பதும் வரலாறு என்பதும் தெரியாதகாலம். அந்தக் காலத்திய ஆரியர்களுடைய நாகரிக வாழ்வின் சிறப்பை இந்த இதிகாசங்களால் அறிந்துகொள்ளலாம். புராணங்களும் வரலாற்று நூல்களே. ஆதலால் அவைகளுக்கும் இதிகாசங்களுக்கும் வேறுபாடு என்ன என்று கேட்கலாம்.

புராணங்களில் பக்தியை விளைவிக்கக்கூடிய நம்பிக்கைக்கு வித்தாகிய வரலாறுகள் பல உண்டு. இதிகாசங்களில் ஒருவர் வாழ்க்கை வரலாறு தொடங்கி சண்டை சமாதானங்களோடு பட்டாபிஷேகத்தில் சாந்தியில் முடிவுறுகின்றன. இதிகாச வரலாறுகள் இந்தியாவில் மட்டுமல்லாமல் சுமத்ரா, ஜாவா, போர்னியா முதலிய இடங்களில் சித்திரங்களாகவும், சிற்பங்களாகவும், விழாக்களாகவும் பண்டிகைகளாகவும் விளங்குகின்றன. அதுமட்டுமா? மக்களின் பெயர்களும் இதிகாச கதாபாத்திரங்களின் பெயர்களாக அமைந்திருப்பதும் நமது இதிகாச நாகரிகம் அங்கெல்லாம் பரவி இருந்ததென்பதற்கு எடுத்துக்காட்டு.

இராமாயணத்தில் நட்சத்திரங்களைப் பற்றியும் கிரகங்களைப் பற்றியும் கூறப்பட்டுள்ளன. இராமன் அவதரித்த ஜாதகமே கொடுக்கப்பட்டிருக்கிறது. இவற்றையெல்லாம் வைத்துக்கொண்டு மேல்நாட்டு ஆராய்ச்சிக்காரர்கள் இராமாயண காலத்தைக் கணக்கிட ஆரம்பித்திருக்கிறார்கள். இராமாயணத்தைச் செய்தவர் வால்மீகி. அவருடைய தவம் இந்த ஆதிகாவியமாக மலர்ந்தது.

**மஹாபாரதம்:** ஐந்தாம் வேதமென்று அறிவிக்கப்படுகிறது. வேதங்களை வகுத்துத் தந்தவர் வேதவியாசர். அதுபோலவே பாரத வரலாற்றையும் சுலோக ரூபமாக வகுத்துத் தந்தவர் வியாசர்.

**பாரதம் ஐந்தாவது வேதமாவது எப்படி?** வேதங்கள் பெரும்பாலும் யாகங்களைப்பற்றிச் சொல்கின்றன. பாரதத்திலும் ரசஜசூயம், களவேள்வி போன்ற யாகங்களைப்பற்றிச் சொல்லப்பட்டிருக்கின்றன. வேதங்களில் பிரம்மா விஷ்ணு, ருத்ரன் எனுமவர்களில் எவரையும் தலைவராக வெளிப்படையாகச் சொல்லப்படவில்லை. பாரதத்திலும் அங்கங்கே அந்தந்த தெய்வங்களுக்குச் சிறப்புக் கொடுத்துப் பேசப்படுகிறது.

**இதிகாசகாலத்தில் ஆலயவழிபாடு:** இராமபிரானது தாயாகிய கோசலாதேவி, நாராயணனை வழிபட்டதாகவும், இராமனுக்குப் பட்டாபிஷேகம் ஆகவேண்டுமென்று குடிமக்கள் எல்லோரும் கோயிலிற்சென்று வேண்டிக் கொண்டதாகவும் சொல்லப்படுகின்றன. இராமாயணத்தில் குபேரன், கார்த்திகேயனாகிய முருகன், கணேசன், இவர்களைப்பற்றிய குறிப்புக்கள் இல்லை.

**நோக்கம்:** இதிகாசங்கள் நமக்கு உற்ற சிநேகிதன்போல்வன. சிநேகிதன் நம்முடைய நன்மையிலும் தீமையிலும் ஊடாடிப் பழகி நாம் தவறு செய்கின்ற காலத்து இதைச்செய்தால் இன்னகஷ்டம் வரும் என்றெடுத்துக் காட்டி அதிலும் திருந்தி நடக்காவிட்டால் இன்னாரின்னார் இந்தமாதிரி தீமைகளைச் செய்து இன்ன இன்னவிதமாகக் கஷ்டப்பட்டார்களென்று உபகதைகளையும் (உபாக்யானம்) உரைத்துத் திருத்துவது போல்வது. இதனை சுஹ்ருத் சம்ஹிதை என்று சொல்லுவார்கள் அலங்கார நூலார்.

**இதிகாச காலத்தில்:** இராமாயணத்தில் புத்திர காமேஷ்டி யாகம், அசுவமேத யாகம் முதலியன பேசப்பட்டுள்ளன. பாரதத்தில் இராஜசூய யாகத்தைப்பற்றிய விவரம் காணப்படுகிறது. நச்சுப்பொய்கைச் சரித்திரத்தில் பாண்டவர்களைக் கொல்ல யாகம் நடத்தியதாகக் கூறப்பட்டுள்ளது. பிராமணனுக்கு சாமகானம் செய்தலும், வேதம் ஓதலும் பெருவழக்கம். சூரிய உபாஸனை மிகுந்திருந்தது. யமன், அக்கினி இவர்கள் பரமேசுவரனது அம்சமாகவே நினைத்து வழிபடப் பெற்றனர்கள். பிர்மா, விஷ்ணு, ருத்ரன் இந்த மூன்று உருவமும் சேர்ந்துதான் தட்சிணாமூர்த்தி. இராமாயணத்தில் சுப்ரமண்யரைப் பூஜைசெய்வது பேசப்பட்டுள்ளது. சிரார்த்தம் செய்தல், தானம் செய்தல், உபவாசமிருத்தல்' பிரதோஷ பூஜைமுதலியன கூறப்பெற்றுள்ளன. வர்ணாசிரம தர்மங்கள் வலுத்தன. நட்சத்திரம் 27. சௌரமான வருஷம் 1-க்கு 365 நாள் என்றும் சாந்திரமான வருஷம் 1-க்கு 254 நாள் என்றும், நாள் 1-க்கு 30, முகூர்த்தமாமென்றும், பாகுபாடுகள் அங்கங்கு குறிக்கப்படுகின்றன. கலை காஷ்டை முதலிய காலக்குறிப்புக்கள் குறிப்பிடப்படுகின்றன. நிமித்தங்களையும் சகுனங்களையும் பற்றிய கருத்துக்கள் வலுப்பெற்றுள்ளன. இன்றைக்கு ஆண்டுத் தொடக்கம் சித்திரையில் இருப்பதுபோல அன்று மார்கழியில் ஆரம்பமாயிற்று. கலியுகம் ஆயிரம் ஆண்டு. துவாபரயுகம் 2000. திரேதாயுகம் 3000. கிருத யுகம் 4000 வருஷங்கள் கொண்டன, நவக்ரகங்களை வழிபடுதலும் உயிர்ப்பலி

இடுதலும், நரபலி இடுதலும் பேசப்படுகின்றன. எல்லாரும் மாமிசம் உண்டார்கள். காளைகள் ஐந்து நகமுள்ள மிருகங்கள் உணவுக்குத் தக்கனவாகப் பொறுக்கப்பட்டன. பீஷ்மர் ஊண் உண்டல் கூடாதென்று உபதேசித்து வந்தார். பூஜைக்கு உகந்த பொருளாக இருந்தது. தக்கவர்கள் சோமபானம் செய்துவந்தார்கள். இதிகாச காலத்து மக்கள் உணவு கோதுமையும் யவை என்ற தானியமும். உண்ணும்போது பேசுகின்ற வழக்கமில்லை. கிழக்குப்பார்த்து உட்கார்ந்து உண்பதுதான் வழக்கம்.

**உடை:** இதிகாசகாலத்தில் மக்கள் தைத்த உடைகளை அணிவதில்லை. எல்லோருக்கும் மேலாடை அவசியம். சாதாரணமாக மக்கள் மேலாடையணிவதும் தக்கவர்கள் முன்னிலையில் அதனை எடுத்துவிடுவதும் மரியாதையாகக் கருதப் பட்டது. மகளிர் மிக நீளமான உடையை வளைய மிட்டுக் கட்டுவதுதான் அந்தக் கால வழக்கம். தலையை மூடிக்கொள்வதும் ரவிக்கை அணிவதும் வழக்கமில்லை. ரவிக்கைக்குப் பதிலாக கச்சு or வார் அணிந்து வந்தார்கள். அதனை முதுகுபுறத் தில் முடிந்துகொள்வது வழக்கம். கணவனை இழந்த பெண்கள் வெள்ளை ஆடை உடுத்திவந்தார்கள். சுமங்கிலிகள் தலையில் வகிடு எடுத்துக்கொள்வார்கள். அதற்கு சீமந்தரேகை என்று பெயர். சீமந்தரேகையின் இறுதியில் நெற்றி உச்சி யில் குங்குமம் இட்டுக்கொள்ளுதல் வழக்கம். வாசனைத் தைலங்களைப் பூசிக் கொள்ளுதலும், மயிரை முடிந்து கொள்ளுதலும் அவர்கள் செய்யவேண்டிய அவசியமானவேலை. பட்டு, பஞ்சு, கம்பள ஆடைகள் அவர்களால் கையாளப் பட்டன. இரத்தினங்கள், வளை, சிலம்பு, சதங்கை, மேகலை இவைகள் இதி காசங்களில் கையாளப்படுகின்ற ஆபரணங்கள்.

**அரசு:** அரசன் நீதி நிர்வாகத்தில் இருக்கும்போது சிம்மாசனத்தில் இருப்பது வழக்கம். மற்றவர்கள் பீடங்களில் இருப்பார்கள். கடன் வாங்குவதும் அதற்கு வட்டிகொடுப்பதும் வழக்கந்தான். கடன் வாங்கினவர்கள் அது தீருமட் டும் எந்தக்காரியமும் செய்யக்கூடாதென்ற நியதி இருந்தது. மக்கள் அனைவரும் பாவ புண்ணியம், சொர்க்க நரகம் என்ற பயத்தோடு வாழ்ந்தனர். இராவண னுடைய சபையில் 18 விதமான வாத்யங்கள் முழங்கின என்று பேசப்படுகிறது. அரசியலார்பலரறிய எங்கும் பழகக்கூடாது. ஆனால் யாகசாலைக்கு மட்டும் வரலாம். இராமாயணம் பாரதமாகிய இரண்டும் அரசியல் வாழ்வை அறிவிக்க எழுந்தனவே. அரண்மனையைச் சுற்றிலும் ஏழு மதில்கள் இருந்தன. அவற்றுள் வெளி நான்கு மதில்கள் வரையில் எல்லோரும் வரலாம். அதற்குமேல் மந்திரி, பிரதானி முதலிய வர்களுங்கூட அனுமதி பெற்றே செல்லவேண்டும். அரசர்களுக்கு எல்லா உரிமை யும் இருப்பினும் அரசியற் காரியங்களில் மந்திரிகளையும் காரியஸ்தர்களையும் கலந்து ஆலோசனைக் கூட்டம் போட்டே எதனையும் செய்யவேண்டும். படை களில் காட்டுப்படை, நாட்டுப்படை, துணைப்படை, வலிகுன்றிய மாற்றான் படை விலைப்படை, மூலப்படை முதலிய வகைகள் இருந்தன. மற்றபடைகள் அழிந்து வலி ஒடுங்கிய பிறகே மூலப்படை பயன்படுத்தப்பெறும். இராவணன் எல்லாப் படைகளையும் இழந்து கைகளையும் இழந்து தனித்திருந்த காலத்துத்தான் வெற்றி வீரனாகிய இராமன் 'இன்றுபோய் நாளை மூலப்படையுடன் வருக' என்று மொழிகின்றான்.

---

# புராணம்

ஸ்ரீவத்ச சோமதேவசர்மா அவர்கள்
சென்னை.

பிரம புராணம், பதும புராணம், வைணவ புராணம், சைவ புராணம், பாகவத புராணம், பவிடிய புராணம், நாரதீய புராணம், மார்க்கண்டேய புராணம், ஆக்கினேய புராணம், பிரமகைவர்த்த புராணம், இலிங்க புராணம், வராக புராணம், கந்த புராணம், வாமன புராணம், மச்ச புராணம், கூர்ம புராணம், பிரமாண்ட புராணம் என்பனவாம். இப்பதினெட்டும் நாலுலக்ஷத்தெண்ணாயிரங் கிரந்தமுடையன.

அவற்றுள், சைவ புராணம், பவிடிய புராணம், மார்க்கண்டேய புராணம், இலிங்க புராணம், கந்த புராணம், வராக புராணம், வாமன புராணம், மச்ச புராணம், கூர்ம புராணம், பிரமாண்ட புராணம், என்னும் பத்துஞ்சிவ புராணங்கள். இவற்றுள் சைவ புராணம் இருபத்து நாலாயிரங்கிரந்தமும், பவிடிய புராணம் முப்பத்தோராயிரங் கிரந்தமும், மார்க்கண்டேய புராணம் முப்பத்தாறாயிரங்கிரந்தமும், இலிங்க புராணம் பதினோராயிரங் கிரந்தமும், கந்த புராணம் இலக்ஷங் கிரந்தமும், வராகபுராணம் இருபத்து நாலாயிரங்கிரந்தமும், வாமன புராணம் பதினாலாயிரங் கிரந்தமும், கூர்ம புராணம் ஆறாயிரங்கிரந்தமும், பிரமாண்ட புராணம் பன்னீராயிரங் கிரந்தமுமுடையன. ஆகச் சிவபுராணம் பத்திற்கும் கிரந்தம் இரண்டுலக்ஷத்துப் பதினெண்ணாயிரம்.

கருட புராணம், நாரதீய புராணம், வைணவ புராணம், பாகவதபுராணம், என்னும் நான்கும் விட்டுணு புராணங்கள். இவற்றுள், கருட புராணம் ஆறாயிரங்கிரந்தமும், நாரதீய புராணம் இருபத்தையாயிரங்கிரந்தமும், வைணவ புராணம் ஆறாயிரங் கிரந்தமும், பாகவத புராணம் பதினெண்ணாயிரங் கிரந்தமும் உடையன. ஆக விட்டுணு புராணம் நான்கிற்கும் கிரந்தம் அறுபத்தையாயிரம்;

ஆக்கினேயம்:- அக்கினி புராணம், இது எண்ணாயிரங் கிரந்தங்களுடையது.

பிரம கைவர்த்தம்:- சூரிய புராணம், இது பன்னீராயிரங் கிரந்தங்களுடையது.

சிவ புராணங்கள் பத்தும் சாத்துவிகங்களாம், சத்துவகுணம் வெண்ணிற முடையதும் சுகத்திற்கும் ஞானத்திற்கும் இடமுமாம். யோகிகளுக்கு ஞானம் உபதேசிக்கும் சிவபெருமான் தெளிபளிங்கு வடிவினராய் எங்குமுறங் காது பிராணதிபதியாயிருப்பர்.

விட்டுணு புராணம் நான்கும் தாமசங்களாம், தமோகுணம் கருநிற முடையதும் உதாசீன ரூபமும் கூட கிருத்திய சமர்த்தமுமாம். நித்திரை, சோம்பு, பிரமாதம், வஞ்சம், முதலியவைகள் தாமசங்கள். விட்டுணு கரியரும், சேஷ சயனஞ்செய்வோரும் பத்தரை மோகிப்பவருமாயிருப்பர்.

பிரம புராணம் இரண்டும் இராசதங்களாம். இரசோகுணம் சிவந்த நிற முடையதும் துக்கத்திற்கிடமும் சஞ்சல ரூபமுமாம். பிரமா செந்நிறமுடைய சஞ்சல ரூபியாயிருப்பார்,

அக்னி புராணமும் சூரிய புராணமும் திரிகுணயுத்தமாம், அக்னியும் சூரியனும் முக்குண வடிவினராயிருப்பர்.

ஆதலால், இப்பதினெட்டினுள்ளும் சிவ புராணங்கள் பத்துமே உயர்ந் தனவாம், ஆகையால், சிவனடியார்கள் சிவ புராணங்களையே விதிப்படி மெய் யன்போடு கேட்கக்கடவர்கள்.

இவற்றைச் செய்தவர் வேதவியாசர். இவற்றின் விவரங்களை உலகிற்கு உதவியவர் சூதபுராணிகர். புராணங்கள் யாவும் ஒரே தலைவன் தலைவியைக் கொண்டு எழுதப்பட்ட இதிகாசங்கள்போலாது பல நாயக நாயகியர்களைப் பற்றிய தாகப் பத்தி மார்க்கத்தை வளர்ப்பதாக இருப்பன. ஏதோ சில கதைகள் புராணத்துள் தொடர்ச்சியாகவும் இருக்கலாம். நூல்களைத் தொடங்குமுன் மங்களமாகத் தொடங்கி மங்களமாக முடிக்க வேண்டுமென்பது புராணமரபு.

எண்ணத்தால் விளைவது ஆசை. "சங்கல்பாத் தியாயதே காம:" என்பது கீதை, ஆசையால் விளைவது ஆர்வம். ஆர்வம் என்பது தண்ணீர் உண்டாலன்றித் தணியாத தாகம்போல விரும்பிய பொருள்கள் இருந்தாலன்றி வாழமுடியாத இன்றியமையாப் பேராசை. இதனால் விளைவது கோபம். கோபத்தால் விளைவது சாபம். சூடாறிய பிற்பாடு தோன்றும் குளிர்மைபோலக் கோபம் தணிந்தபின் விளைவது அனுக்ரகம். மிகுதியான மகிழ்ச்சியாலும் அனுக்ரகம் விளையலாம். இப்படிப்பட்ட வரலாறுகளைப் புராணங்கள் எங்கும் காணலாம்.

அவனன்றி ஓரணுவும் அசையாது. துரும்பை நகர்த்துவதற்கும் துணை வேண்டும். அத்துணை வெளிப்படையான மனிதத் துணையாகவும் இருக்கலாம். தோன்றாத்துணையான கடவுள் துணையாகவும் இருக்கலாம். பிறவிக்கடலில் ஓயாது உழன்று வருந்துகின்ற ஆன்மாக்களுக்கு இறைவன் உச்சுவாச நிச்சுவாசத் திலும்கூட தோன்றாத் துணையாயிருந்து காத்தருளுகின்றான், புக்குவமுன்ன

ஆன்மாக்கள் குரங்குக் குட்டி கட்டித் தழுவிக் கொள்ளுதல்போல ஆண்டவனை விடாது பற்றிநின்று உய்யும் நெறிதேடுவார்கள். சில ஆன்மாக்களை பூர்வ புண்ணிய விசேடத்தால் குட்டியை வாயினாற் பற்றிச்செல்லும் பூனையைப்போல ஆண்டவனே இவர்கள்மீது வைத்த கருணையால் வலியப்பற்றித் தடுத்தாட் கொள்வர். இவற்றை முறையே மற்கடகிசோர நியாயமென்றும், மார்ஜாரகி சோரநியாயம் என்றும் சொல்லுவர்.

சிவபுராணங்களில் 25 மாகேசுர மூர்த்தங்களைப்பற்றிய விளங்கங்கள் கூறப் பெற்றுள்ளன; சரபமூர்த்தியும் சிவமூர்த்தி பேதங்களுள் ஒன்று. இது திருபுவனத்தில் இருப்பதை நீங்கள் பார்த்திருக்கலாம். தஞ்சை மன்னனாக சரபோஜி என்ற ஒருவன் இருந்தானென்பது உங்களுக்குத் தெரியுமே. அவன் சரபமூர்த்தியை உபாசித்த ஒருமகானுடைய விபூதி பிரசாதத்தால் பிறந்தவன். உபமன்யு கிருஷ்ணபகவானுக்கு சிவதீட்சை, பஞ்சாட்சர உபதேசம் செய்த வரலாறும் புராணங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. பஞ்சாட்சரம் ஜெபியாத ஜென்மா பாழ். ஒருவரலாறுபாருங்கள். வேடராஜன் ஒருவன் எப்போதும் ஆகர பிரகர சம்ஹர விகர என்று சொல்லிக்கொண்டே இருப்பானாம். இதற்குப் பொருள் பிடி, அடி, கொல்லு, அழி என்பதாயிருந்தாலும் ஹர என்ற ஒலி ஒற்றுமையால் சிவன் எனும் நாமத்தை நினைவூட்டுவதாலே அவன் முத்தி பெற்றான் என்ற வரலாறு கூறப்பெற்றுள்ளது.

**புராணபலன்:-** புராணங்களால் மூன்றுகால நிகழ்ச்சிகளையும் அறிந்து கொள்ளலாம். மொழி சம்பந்தமான ஆராய்ச்சி, சிலபதப்ரயோகங்கள் சுவர்க்க நரகபுண்ய பாவங்களைப் பற்றிய விசேடமான குறிப்புக்கள், மனிதன் இறந்தபின் அடையும் மாறுதல், ஆன்மாவுக்குத் தனு, கரண, புவன போகங்கள் எப்படிக் கிடைக்குமென்பது, காலத்தின் சிற்றளவு, பேரளவு, மரணகால அறிகுறிகள் இவைகள் எல்லாம் புராணங்களில் மிக விளக்கமாக அங்கங்கே கூறப் பெற்றுள்ளன.

## புராணங்களும் மேல்நாட்டாரும்

மாக்ஸ்முல்லர் இந்த 18 புராணங்களையும் சுருக்கி எழுதியிருக்கிறார். வில்சன் என்பவர் விஷ்ணுபுராணத்தின் முற்பகுதியை மொழிபெயர்த்திருக்கிறார். மேடம் H. P. பிளாவஸ்டி எல்லாப்புராணங்களையும் நன்றாக ஆராய்ந்து 18 புராணப் பெட்டிகளையும் திறக்க ஏழுசாவிகளைத் தயாரித்துக் கொடுத்திருக்கிறார். டாக்டர் 'கிராம்எனச்' என்பவர் விஷ்ணுபுராணத்தின் பிற்பகுதியை மொழி பெயர்த்திருக்கிறார். இன்னும் பல மேல்நாட்டுக் கீழ்நாட்டு அறிஞர்கள் புராணங்களை நன்றாக ஆராய்ந்து எழுதியிருக்கிறார்கள்.

**சிவபுராணத்தில்:-** ரசமான கதைகளும், நீதிகளும், நிரம்பியிருக்கின்றன. ஸ்ரீமதிபரிநயம் சொல்லப்பட்டிருக்கிறது. சங்கல்பாத் ஜாயதேகாம்: என்பது கீதை. ஆசையின் முடிவு கோபம். கோபத்தால் சாபமும் தோன்றுகிறது. அதனால் எந்தச் சிறிய செயலுக்கும் அவனருள் இருந்தால் நலந்தோன்றும். இதன் இரண்டு நியாயம் வருணிக்கப்பட்டிருக்கிறது. ஒன்று மர்க்கடகிசோர நியாயம், மற்றொன்று மார்ஜாரகி சோர நியாயம். அவை குரங்குக் குட்டியையும் பூனைக் குட்டியையும் உவமை காட்டி விளக்கும் நியாயங்களாகும். இருபத்தைந்து மூர்த்திகள் விளக்கப்பட்டிருக்கின்றன. இவற்றுள் சரபமூர்த்தி ஒன்று. திரிபுவனத்தில் சரபமூர்த்தி வழிபாடு இன்றும இருக்கிறது. சரபஉபாசனு விபூதிப் பிரசாதத்தால் பிறந்த அரசன் சரபோஜ மஹாராஜா, உபமன்யுவிடம் கிருஷ்ண பகவான் சிவதீக்ஷையும்.பஞ்சாட்சர உபதேசமும் பெற்றார். இதனால்ஜாம்பவதியின் மூலம் அவருக்குப் பிறந்த குழந்தையே ஸாம்பன். பகவத் கீதையிலுள்ள 700 ஸ்லோகத்தில் 500 புராணஸ்லோகம். விபூதி செய்யும் முறையும் மஹிமையும் சொல்லப்பட்டுள்ளது. பஞ்சாக்ஷரம் ஜபியாத ஜன்மா பாழ் என்கிறது. வேடராஜன் ஆஹர, ப்ரஹ ஸம்ஹர, விஹர என்று கூறியும் பஞ்சாக்ஷரமிருப்ப தாகக்கொண்டு முக்தி கொடுத்த கதை கூறப்படுகிறது. ஹர - பாவத்தைப் போக்குபவன்.

**பாகவதபுராணம்:-** தேவி பாகவதம், விஷ்ணு பாகவதம் இரண்டும் வேதவியாசர் எழுதியவை. ஒவ்வொன்றிலும் 12 ஸ்கந்தமுள்ளது. ஒவ்வொன்றிலும் 18000 ஸ்லோகங்கள். முதலாவது பகவதியைப்பற்றியது. கண்ணன் திருடிய பால், தயிர், வெண்ணெய் மூன்றும் வெண்மையான சத்துவ குணத்தைக் குறிக்கும் நித்யோபவாஸி துர்வாசர் பால சந்நியாசி. கிருஷ்ணனது குரு. இவரது லீலை சொல்லப்பட்டிருக்கிறது தேவி பாகவதத்தில் 10-வது ஸர்க்கம் முதல் 11-வது வரை காயத்ரியின் ஸஹஸ்ரநாமா, கவசம், ஹிருதயம் முதலியன வகுக்கப்பட்டிருக்கின்றன. மகிஷாஸுரமர்தநம் கூறப்பட்டுள்ளது.

**பவிஷ்யோத்ரபுராணம்:-** இது பின்னால் வரப்போவதைக் கூறும் புராணம். 16000 சுலோகம் கொண்டது. சந்திர, சூரிய கிரஹணங்களின் தத்துவம் சொல்லப்படுகிறது. திரிபுராசுரனின் பேய் வடிவு நீங்கி முகமது நபியாக வந்தார். உலக்கை வைத்து கர்மாக்கள் செய்வதால் முஸல்மான் ஆயினர். முஸலம் - உலக்கை, மான் - உடையவன். போஜராஜன் காலத்தில் ஆஸ்தான வித்வான் காளிதாசன் இல்லாத சமயம் முகமதியப் பிரசாரமும், அவர் வந்தபின் அம்மத அழிவும் குறிக்கப்பட்டுள்ளது. அகில என்பதுதான் அல்லாவாயிற்று. பானுஷஷ்டி, கிராவா, ஜாமிதி, பிதிர், மாத்ரு, ஸ்வஸ்ரு, முதலான பெயர்களைக் குறித்து சர்ச்சை பண்ணப்படுகிறது. கணக்குகளின் ஸ்வரூபத்தை விஸ்தாரமாக வர்ணிக்கிறார். கபீர், உதயசங்கர், ஆபஸ்தம்பர், போதாயனர் முதலான அறிஞர்

தர்மசாஸ்திரங்களை இயற்றப்போகிறுர் என்று முன்பே வருங்காலத்தை வரையறுத்து இருக்கிறது. ஜ்யோதிஸ்சக்கரம், லலிதாதேவி அஷ்டோத்ரம், விரதம், தேர், உற்சவம் பற்றி, விவரிக்கப்படுகிறது. சமஸ்காரங்கள் உள.

**பவிஷ்யோத்ரபுராணம்:-** வருங்காலத்தைக் குறிக்கிறது. நான்கு லக்ஷம் பாஷை உள்ளதாக அப்புராணத்தால் அறியலாம். பாணி, ஷஷ்டி போன்ற பதங்களின் பாஷை விஷயமான சர்ச்சை உள்ளே புகுந்து வருணிக்கப்படுகிறது. சுவர்க்கநரகங்களைப் பற்றியும் இருப்பிடமும் விளக்கமும் தெரிவிக்கிறது. மனிதன் இறந்தபிறகு அடையும் மாறுதலையும் உடலின் சொரூபம் எந்த வகையில் கொடுக்கப்படுகிறது, திரும்புகிறது என்பதையும் கருடபுராணம் சொல்லுகிறது. த்ருடி முதல் கல்பம்வரை க்ஷணம், நாழிகை, முகூர்த்தம். பகல், வாரம், தினம், பக்ஷம், மாசம், ருது, சதுர்யுகம், மன் வந்தரம், கல்பம், காலக்கணக்கை அளவிடுகிறது. த்ருடி என்பது காலத்தின் பரமாணு பச்சிலை மரங்கள் தங்கமாகத் தெரிந்தால் 6 மாதத்திற்குள் மரணம். நடந்து போகும்போது காலடி நிழல் தெரியவில்லையேல் ஒருமாதத்தில் மரணம். கண்ணுடியில் தலை தெரியவில்லையாஞல் ஒருநாளில் மரணம். இவ்வாறு மரணத்தைப் பற்றிய செய்திகளும் புராணவாயிலாக அறியக்கிடக்கிறது. எழுத்துக்களின் பிறப்பிட வளர்ச்சிபற்றியும் சகுனம்பற்றியும் நல்ல தீய கனவுகள் பற்றியும் விளக்குகிறது.

நாயக நாயகியைக் கொண்டு இதிகாசங்கள் தொடர்ச்சியாக கதையைச் சொல்கின்றது. ஆனுல் குறிப்பிட்ட சில கதைகளே புராணத்துள் தொடர்ச்சியாக உள்ளன. நூல்கள் தொடங்குமுன் மங்களமாக ஆரம்பித்து மங்களமாக முடிக்க வேண்டும் என்று புராணம் விதிக்கிறது.

**நாரதபுராணம்:-** இது நாரதரால் சனகாதியர்க்குச் சொல்லப்பட்டது. ஜோதிட சாஸ்திரம், சங்கீதசாஸ்திரம். 18 புராண விஷயங்கள் உள. தீக்ஷை பாபத்தைநீக்கிப் புனிதம் அடையச்செய்கிறது. இதனை விஞ்ஞானந்தர் மொழிபெயர்த்துள்ளார். 40 அத்தியாயம் ருக்மாங்கதர் சரிதமுள்ளது. வேதபாதஸ்தவம் 50 சுலோகம் காணப்படுகிறது. இதனைப் பாடியவர் ஜைமினி. பிரதமை முதல் அமாவாசை வரையுள்ள விரதங்கள் சொல்லப்பட்டிருக்கிறது. கிருஷ்ண, லலிதா சகஸ்ரநாமம் உள்ளன. கட்கமாலா என்ற தேவிமந்திரம் உள்ளது.

**மார்க்கண்டேயபுராணம்;-** இது 9000 சுலோகங்கொண்டது. 134 அத்தியாயம். தேவி மகாத்மியம், சண்டி சப்தஸதீ மந்திரம் இங்குதான் உள்ளன. மூன்று காண்டமாகப் பிரித்து வருணிக்கிறுர். 14 மன்வந்தரம் வருணிக்கப்படு

கிறது. மார்க்கண்டேயரால் 4 பறவைகட்குச் சொல்லப்பட்ட புராணமும், மதாலஸா சரிதமும் உள்ளது

**ஆக்னேய புராணம்:-** அக்னியால் வசிஷ்டருக்குச் சொல்லப்பட்டது. 15000 சுலோகங்கள் கொண்டது. சகல மந்திரங்களையும். முத்திரைகளையும் வருணிக்கிறார். அரசர்க்குரிய அபிஷேகமுறை சொல்லப்பட்டுள்ளது, விக்ரஹங்களுக்குள்ள அளவு, உயரம் விதிக்கிறது. வீட்டுப் பூஜைக்கு கைமுஷ்டி அளவு தானிருக்கவேண்டும், இவ்வளவிற்கு மேலிருந்தால் தனியிடத்தில் பூஜைசெய்க. ஆலய அமைப்பும், சிற்பசாத்திரமும் கூறப்படுகிறது. ஆலய அமைப்பில் ஆண்டவன்மேல் சூரிய ஒளி படவேண்டும். சர்வரோகநிவர்த்திக்கு ஓஷதிகள் சொல்கிறார். இறந்தவரைப் பிறப்பூட்டும் மந்திரம் சொல்லப்படுகிறது.

404 கிராமங்களை இராமர் தானமாகக் கொடுத்த செய்தியை அறிகிறோம் இதனுள் கீதாசாரம், யமகீதை, துலாபுராணம், முதலியகதை சொல்பவனும், கேட்பவனும் இருக்க வேண்டிய நிலை முதலியவை உள்ளன.

**பிரமபுராணம்:-** இது 13000 சுலோகங்களும் 243 அத்தியாயங்களும் கொண்டது. பிரமா தன் பிள்ளை மரீசுக்குச்சொன்னது. புராணங்கள் நடந்த இடங்களைப்பற்றிய குறிப்பு இங்கே சொல்லப்படுகிறது. பூமியில் புண்ணிய இடத்தை ரிஷிகள் கேட்க பிரம்மா தர்ப்பையைச் சக்கிரம்போலச் செய்து உருட்டி விட்டார். அது விழுந்த இடமே நைமிசாரண்யம். அங்கேதான் புராணம் கேட்கப்பட்டது. வாடிசக்கர நுனிக்கு நேமி என்று பெயர். சூதபுராணிகர் பரம்பரையில் புராணம் வரவேண்டுமென்று முன்பு இருந்தது. இப்பொழுது அப்பரம்பரை அற்றுவிட்டது. 72 சதுர்யுகம் கொண்டது ஒரு மன்வந்தரம். 14 மன்வந்தரம் கொண்டது ஒரு கல்பம். இங்ஙனம் 100 கல்பம் பிரம்மாவின் காலம் சொல்லப்படுகிறது. பித்ருக்கள் வசுலோகத்திலும், பிதாமகாள் ருத்ரலோகத்திலும், பிரபிதாமகாள் ஆதித்யலோகத்திலும் இருப்பார்கள். சங்கல்பத்தாலும் கண்பார்வையாலும். குழந்தை பிறந்ததை இப்புராணம் தெரிவிக்கிறது. தக்ஷப்ரஜாபதிதான் முதன்முதல் ஆண், பெண் கூட்டுறவால் குழந்தை உண்டாக வேண்டும் என்ற நியதியை ஏற்படுத்தினர். அவர் இருமுறை சங்கல்பித்துப் பிறந்த 2000 புத்திரர்களும், நாரதர் உபதேசத்தால் தந்தை சொன்னதை மறந்ததால் தன் மனைவியுடன்கூடி புத்திரோத்பத்தி செய்தார். நாரதராகிய தன் தம்பிக்குச்சாபம் கொடுத்தார். இருவரும் பிரம்மபுத்திரர்கள், அக்ரம்ஹுத்யதி அக்ர ஹார உண்பதன்முன் அதிதிக்கு அன்னம் எடுத்து வைத்தல்பற்றி அக்ரகாரம் எனப்பெயர் பெற்றது. மிருதாண்டாத்ஜாத, மார்த்தாண்ட: சூரியன். பூரண கர்ப்பிணியான ரிஷிபத்தினியை அதிதிரூபத்தில் வந்து சோதித்த கதையால்

வந்தது. இதில் சூரிய அஷ்டோத்ரம், சிவ அஷ்டோத்ரம் காணப்படுகிறது. சிவ, விஷ்ணு அபேதமும் கைசிக ஏகாதசி மஹாத்மியமும் குறிப்பிடுகிறது.

ஏன் கருடா, சுகமா? இருந்தவிடத்தில் இருந்தால் சுகந்தான் என்னும் பழமொழிக்கு ஆதாரமான கதை இருந்துள்ளது.

**பத்மபுராணம் :-** இது 55000 ஸ்லோகங்களும், 6 காண்டமும் கொண்டது. சிரார்த்தத்தை நேரே பிறர்க்குக் கொடுப்பதைக் கண்ணால் நாம் பார்க்க முடியாது. ஆனால் சீதாதேவி சிரார்த்த தினத்தில் தசரத அஜராகு சக்கிரவர்த்திகளைக் கண்டதாகக் கூறுவதைப் பிரமாணமாகக் கொள்ளவேண்டும்.

பூர்வஜன்ம வாசனையே ஒவ்வொருவருக்கும் பிரதிபலிக்கும். பிரஹலாதன் உயர்ந்தரிஷி குமாரனாகயிருந்து பித்ரு சிஸ்ருஷையினால் நல்லபெருமை அடைந்தான். இறக்கும்போது ராக்ஷஸ என்று சொல்லி இறந்ததால் மறு பிறப்பில் ராக்ஷஸ வம்சத்தில் பிறந்தான்.

---



## சைவசித்தாந்த விருக்ஷம்

“‘பல்லுயிர்த் தொகுதியும் பயன்கொண் டுய்களனக்’ குடிலை யென்னுந் தடவயல் நாப்பண், அருள்வித் திட்டுக் கருணை நீர் பாய்ச்சி, வேத மென்னும் பாதபம் வளர்த்தனை, பாதப் மதனிற் படுபயன் பலவே — அவற்றுள், இலை கொண்டுவந்தனர் பலரே, தளிரொரீஇ அரும்பொடு மலர்பிஞ் சருங்கா யென்றிவை, விரும்பினர் கொண்டுகொண்டுவந்தனர் பலரே, அவ் ஆறு உறுப்பும் இவ்வாறு பயப்ப, ஒரும்வே தாந்தமென் றுச்சியிற் பழுத்த, ஆரா வின்ப அருங்கனி பிழிந்து, சாரம் கொண்ட சைவசித் தாந்தத் தேனமு தருந்தினர் சிலரே.”

உ
சிவமயம்

# சிவஞானசித்தியார்

## அருணந்திதேவர் வரலாற்றுச் சுருக்கம்

நடுநாட்டின்கண் பெண்ணையாற்றின் வடகரையிலுள்ள திருத்துறையூரில், பதின்மூன்றுவது நூற்றாண்டில், ஆதிசைவமரபில் அவதரித்தருளியவர் ஸ்ரீ அருணந்தி சிவாசாரியார், இவர் சகலாகம பண்டிதராய்த் திகழ்ந்தவர்.

திருப்பெண்ணாகடத்துப் பரம்பரைச் சைவவேளாளர் குலத்துதித்த அச்சுதகளப்பாளர்க்குக் குலகுருவாயிருந்தார், அவர் வேண்டலுக்கு இரங்கி, திருநெறித் தமிழ்மறையாம் திருமுறையைப் போற்றிக் கயிறுசார்த்திப்பார்க்க.

"பேயடையா பிரிவெய்தும் பிள்ளையினே டுள்ளநினை
வாயினவே வரம்பெறுவர் ஐயுறவேண்டா ஒன்றும்
வேயனதோ ளுமைபங்கன் வெண்காட்டு முக்குளநீர்
தோய்வினையார் அவர்தம்மைத் தோயாவாம் தீவினையே"

என்னுந்திருப்பாடல் எழ, அதன் பொருளுணர்ந்து, திருவாணை யிட்டருளினர். அவ்வாறே அச்சுதகளப்பாளர் திருவெண்காடு சென்று, மூர்த்தி தலம் தீர்த்தங்களைச் சிவாகம முறையால் வழிபட்டு ஸ்ரீ மெய்கண்டதேவரைப் புதல்வராகப் பெற்றார்.

மெய்கண்டதேவர், அவர்க்குக் குலகுருவாகிய தம்மினும் மெய்யுணர்விற் சிறந்து விளங்கக் கண்ட அருணந்தி சிவாசாரியார், அவர் திருவடிகளில் வீழ்ந்து வணங்கித் தம்மை ஆட்கொள்ளும் வண்ணம் வேண்டி, சிவஞானோபதேசத்தைப் பெற்றார், அப்பொழுது பெற்ற தீக்ஷாநாமமே அருணந்திதேவர் என்பது. இயற்பெயர் தெரிந்திலது. ஸ்ரீ மெய்கண்டதேவ நாயனர் அருளிய சிவஞானபோதம் என்னும் முதனூலைச் சென்னியில் தலைமையதாக்கொண்டு இச்சிவஞானசித்தியார் என்னும் இந்நூலைச் சிவாகமங்களுக்கெல்லாம் உரையாணி என்ற சீர்த்தி விளங்க அருளிச்செய்துதவினர் இதன் உள்ளுறை தெள்ளிதாக விளங்க இருபா இருபஃது என்னும் மற்றொரு நூலையும் அருளினர். இவ்வருணூ லிரண்டும் அருளிய இவரே ஸ்ரீ மறைஞான சம்பந்தர்க்கு உபதேசித்த உத்தமர். இவர் முக்தியடைந்த திருநாள் புரட்டாசித்திங்கள் பூர நட்சத்திரம்.

இவ்வருமை நூல், 'தண்டமிழின் மேலாந்தரம்' ஆனது, தனக்கு மேலொரு சாத்திரம் இல்லை என வழங்கப்பெறும் புகழ் உடையது. "சிவத்துக்கு மேலான தெய்வமில்லை. சித்தியார்க்கு மேலான சாத்திரமில்லை" என்பது அறிஞருரை. (நூல் வரலாறு சித்தியார் பரபக்கம், 10 பா. காண்க)

உ

சிவமயம்

# சைவசித்தாந்தம்

சைவம், சித்தாந்தம் என்னும் இரண்டும் சைவசித்தாந்தம் என்று இயைந்தன. சைவம் - சிவசம்பந்தமுடையது. சிவம் என்ற பெயர்ச் சொல்லடியாகத் தோன்றிய பெயரே சைவம் என்றது. திவம் - தைவம் திலம் - தைலம் என்பவற்றிற்போல மொழிமுதல் இகரம் ஐகாரமாகத் திரிதல் வடமொழிக்குரிய பண்புகளுள் ஒன்று. சிவம் என்றதன் முதலெழுத்தாகிய சகரம் தமிழில் இன்றும் இல்லை. அதனை ஒலிப்பதும் எளிதன்று. சித்தாந்தம் என்றதன் பொருள் முடிந்த முடிபு என்பதாம். ஆகவே சைவ சித்தாந்தம் என்பதற்குச் சைவ (சமய)த்தின் முடிந்த முடிபு என்பது பொருள் என்க.

1. புறச்சமயநெறி நின்று, 2. அகச்சமயம் புகுந்து, 3. மிருதி வழி உழன்று, 4. பிரமசரியம் முதலிய ஆச்சிரமத்துறைகளை அடைந்து, 5. அருந்தவங்களைப் புரிந்து, 6. அரிய பலகலைகளையுந் தெரிந்து, 7. வேதங்களைப் படித்து, 8. சிறப்புடைய புராணங்களை உணர்ந்து, 9. வேதாந்தத்தை மிகத்தெளிந்து ஒழுகுவோரே சைவத்திறத்தில் அடைதற்குத் தகுதிவாய்ந்தவர், இவரே சைவசித்தாந்தம் உணர்ந்தற்குரிய பருவத்தவர். இப்பருவம் மேற்கூறிய வழியால் அரிதின் பெறத்தக்கது. அத் தகுதியை உணர்ந்தவர்க்கே 'அரும்பருவம்' (பா 262) என்றார் ஆசிரியர் அருணந்திதேவ நாயனார்.

சைவத்திறம் என்றது சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் நான்கு நெறியையும் குறிப்பது. இச்சிவஞானசித்தியார் (சுபக்கம்) அச்சைவத்திறத்தையேதான் உணர்த்துகின்றது. "மெய்கண்டான் நூல் சென்னியிற் கொண்டு சைவத்திறத்தினைத் தெரிக்கலுற்றும்" (3) என்றும் "சைவத்திறத்தடைவர்; இதிற் சரியை கிரியா யோகம் செலுத்தியபின் ஞானத்தால் சிவனடியைச் சேர்வர்" (263) என்றும் வரும் பகுதிகளாலறியலாம். சைவத்திறத்திலும் சரியை கிரியை யோகம் மூன்றும் முற்றியதன் பயனாக எய்துவது சைவ சித்தாந்த ஞானம். அச்சைவசித்தாந்த ஞானத்தால் எய்துவது சிவனடி. இதனை விளங்க உணரவிரும்புவோர் இந்நூலின் 270-வது திருவிருத்தத்தை உணர்வாராக.

சைவசித்தாந்த ஞானத்தைப்பெற ஆர்வமுற்றவர் 275-ஆவது திருவிருத்தத்தை மட்டும் நன்குணர்ந்து, அதன் உண்மையை அநுபவத்திற் காண்பாரேல், சைவசித்தாந்தி அவர்க்கு மிக எளிதின் விளக்கிவிடுவாரென்பதில் எள்ளளவும் ஐயமில்லை.

எந்நூற் பொருளையும் விளங்கவுணரவேண்டின், முதலில், அந்நூற் பொருளை அறிதல் இயலாது. பொருளை உணர்வது எவ்வாறியலும்? நம் கண்ணிற்படும் மரஞ்செடி கொடிகளுள், பெயர் தெரிந்தனபோகப், பெயர் தெரியாதன எல்லாம் நம்மால் அறியப்பட்டன ஆகுமோ? புறப்பொருளில் இந்நிலை நமக்கிருப்பின், அகப்பொருளிலும் அறிவுப் பொருளிலும் நம் அறிவின் நிலை எத்தகையதாயிருத்தல் வேண்டும்?

பின்னர் எவ்வெப்பெயர்க்கு எது எது பொருள் என்று அறிதல் வேண்டும். மற்றும் அப்பொருளின் இயல்பை உணர்தல்வேண்டும். ஒவ்வொரு பொருளுக்கும் சிறப்பியல்பு உண்டு. சிறப்பியல்பு அப்பொருளினைவிட்டு நீங்காத தன்மை. இப்பொருட்கு இச்சிறப்பியல்பு உண்டு என்னும் உண்மையை ஆராய்தல் வேண்டும்.

சைவ சித்தாந்த நூல்கள் பதி, பசு, பாசம் என்னும் முப்பொருளையும் உணர்த்துகின்றன. இம்மூன்றும் பெயர்ச்சொற்கள். இவற்றால் குறிக்கப்படும் பொருள்களை அறிதல்வேண்டும். பதி கடவுளையும், பசு உயிர்களையும், பாசம் அவ்வுயிர்கள் கடவுளை அடையத் தடையாகஉள்ள பொருளையும் உணர்த்தும். அப்பாசம் மூன்று; அவை ஆணவம், மாயை கன்மம் என்றபெயரால் வழங்கப் படும். அவற்றுள், மாயை சுத்தமாயை அசுத்தமாயை என்று இருவகைப்படும். கன்மம் சஞ்சிதம், பிராரத்தம், ஆகாமியம் என்று மூவகைப்படும்.

> " ஏகன் அநேகன் இருள்கருமம் மாயைஇரண்
> டாகஇவை ஆறு தி யில் "

அந்த ஆறு பொருளும் ஒலியளவிலும் எழுத்தளவிலும் அறிய நின்றன. இவற்றுள் ஒவ்வொன்றன் தன்மையைத் தனித்தனி அறிந்தால், ஒன்றற்கொன்று வேறுபடுந்தன்மையை நன்குணரலாம். அப்பொருள்களையும் அவற்றின் வேறு பாட்டையும் செவ்விதின் அறியப் பெருமையால், பல்வேறு சமயங்கள் உண்டாயின.

இச் சிவஞான சித்தியார் அப்பொருள்களை உயரிய ஆராய்ச்சி வகையால் இனிது விளக்குகின்றது. அதனுவ் இந்நூற்பெயர்ப் பொருட்கேற்பச் சிவஞானம் சித்திக்கப் பெறுதல் எளிது. இவ்வருணூல், முதனூலாகிய சிவஞானபோதத்தைப் போன்று பன்னிருசூத்திரங்களைத் தலைக்கொண்டு, அவற்றின் பொருளைத் தெளிய உணர்த்துகின்றது, சிவஞான சித்தியாரில் ஆசிரியர் பரபக்கம் சுபக்கம் என்று இருபிரிவு செய்துகொண்டு, பரபக்கத்திற் பிறமதங்களின் கொள்கையைக்கூறி நிராகரணம் செய்தார். சுபக்கத்தில் சிவாகமஞான விரோத நிவிர்த்தியுடன் உண்மையை உணர்த்தினர். உணர்த்துங்கால், பின்வருமாறு நான்கியலாக விரித் துணர்த்தினர்:

1. பிரமாணவியல் சூத்திரம் 1, 2, 3.
2. இலக்கணவியல் ,, 4, 5, 6.
3. சாதனவியல் ,, 7, 8, 9,
4. பயனியல் ,, 10, 11, 12,

பரபக்கத்தில் நிறுத்திய முறையால் ஏழாகவும் கொள்ளலாம்.

1. இறைவன். (சுபக்கத்தின் முதற் செய்யுள்)
   செய்யுள் எண் 2.
2. இறைவனூல் 3—6.
3. அளவை 7—30.
4. (அ) பொருளுண்மைக்கு அளவு, சூத்திரம், 1. 2. 3.
   (ஆ) பொருளியல்பு ,, 4, 5, 6.
5. வேண்டுஞ் செய்திமுறைமை
   எனப்படும் சாதனங்கள தியல்பு ,, 7, 8, 9,
6. பெத்த நீக்கம் ,, 10.
7. (அ) முத்திப்பேறு ,, 11.
   (ஆ) அணைந்தோர் தன்மை ,, 12.

சூத்திரக் கருத்து:—

1. பதியுண்மைக்கு அளவு (நிமித்தகாரணம்) தடத்தப்பொருள்.
2. பாசத்தின் உண்மைக்கு அளவு (துணைக்காரணம், முதற்காரணம்) ,,
3. பசுவுண்மைக்கு அளவு ,,
4. பசுவிலக்கணம் ,,
5. பாசவிலக்கணம் (திரோதானசத்தியினியல்பு) ,,
6. பதியின் சொருபலட்சணம் ,,
7. ஆன்மசொரூபம் (சாதித்துப்பெறுதற்குரிய அதிகாரம் உயிருக்கே உண்டு)
8. ஞானதரிசனம் (சாதிக்கும்பேறு, சிறந்த சாதனம் அச்சாதனம் வரும்வழி)
9. ஞானம் ஞேயம் ஞாதிரு மூன்றும் அகலாத காட்சி. (சாதனஞ் செய்யும்வழி)
10. ஏகனாகி யிறைபணி நிற்றல் (அச்சாதனத்தால் பெறப்படும் இரண்டில் ஒரு பயன்)
11. அரனடிக்கீழ் இருத்தல் (முடிந்தபயனாகிய சிவப்பேறு)
12. அணைந்தோர்தன்மை. (சீவன் முத்திநிலைக்கண் நிகழும் இயல்பு)

இந்நூலில் தசகாரியம் அமைந்தவாற்றைச் சிவஞானபாடியத்தாலும் உபதேசக்கிரமத்தினாலும் உணரலாம்.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

குருபாதம்

# சைவசித்தாந்தம்

## சிவஞான சித்தியார் சுபக்கம்

தருமையாதீனப் புலவர், பல்கலைக்கல்லூரித் துணைத்தலைவர், சித்தாந்த ரத்நாகரம்,

**திரு. முத்து. சு. மாணிக்கவாசக முதலியார் அவர்கள்**

### காப்பு

ஒருகோட்டன் இருசெவியன் மும்மதத்தன் நால்வாய் ஐங்கரத்தன் ஆறு
தருகோட்டம் பிறையிதழித் தாழ்சடையான் தரும் ஒருவாரணத்தின் தாள்கள்
உருகோட்டன் பொடும்வணங்கி ஓவாதே இரவுபகல் உணர்வோர் சிந்தைத்
திருகோட்டும் அயன்திருமால் செல்வமும்ஒன் றோஎன்னச் செய்யுந் தேவே.

ஒரு கொம்பும் இரு செவியும் மும்மதமும் நாலுவாயும் ஐந்து கையும் உடைய யானைமுகப் பெருமான் கங்கையும் பிறையும் கொன்றையும் அணிந்த சடைக்கடவுள் தந்த மகனாதலின், அக்கங்கையின் செருக்கடக்கிப் பிறையை வாழ்வித்த தந்தையின் சீலம் மைந்தனுக்கு முள்ளதேயாம். ஆதலின், அப்பிரணவத்திறைவன் திருவடிகள் பேரன்பால் இடைவிடாமல் வழிபட்டுத் தியானிப்போருறிவிலிருக்கும் மலக்கோணைத் துரக்கும். மற்றும் 'கோகநதன் முதல் வாழ்வு குலவுபதமெல்லாம் (297) ஒரு பொருளல்ல என்று வெறுப்ப, எங்குமில்லாப் போகமாகிய சிவமாந்தன்மைப் பெருவாழ்வைத் தரும்.

இச்சிவஞான சித்தியார் உள்ளுறைப்பொருள்:

1. இறைவன்
2. இறைவனுல் இயம்பும் நூல்
3. அளவை
4. பொருளியல்பு
5. வேண்டுஞ்செய்தி முறைமைகள்
6. பெத்தம்
7. முத்தி

---

1954-இல், தருமையாதீனத்துக் குருபூஜைவிழாச் சார்பில் நடந்த சைவ சித்தாந்த வகுப்பில் கற்பித்தவாறு எழுதப்பெற்றது.

## 1. இறைவன்

அறுவகைச் சமயத்தோர்க்கும் அவ்வவர் பொருளாய் வேறுங்
குறியது உடைத்தாய் வேதா கமங்களின் குறியிறந்தங்
கறிவினி லருளான் மன்னி யம்மையோ டப்ப னாகிச்
செறிவொழி யாது நின்ற சிவனடி சென்னி வைப்பாம்.

புறப்புறம், புறம், அகப்புறம், அகம் என்னும் நால் வகையுள், முதல் மூவகைச் சமயத்தினர்க்கும் 1 அவ்வவர் பொருளாயும், 2 அவற்றின் வேறாய **அகச்சமயத்தார்க்கு** இலயம் போகம் அதிகாரம் என்னும் மூன்றவத்தையில் முறையே தொழில் வேறுபாட்டால் சத்திக்குச் சிவனும் உத்தியோகத்திற்குச் சதா சிவனும் பிரவிருத்திக்கு மகேசனும் ஆகும் பெயருடைய அருவம் அருவுருவம் உருவம் என்னும் தடத்தக் குறியே குறியாக உடைத்தாயும், 3 **சித்தாந்த சைவர்க்கு** அத்தடத்தக் குறியேயன்றி வேதாகமங்களின் கருத்திற்கு அதீதமாயும், 4 உயிர்க்குயிராயும், 5 உயிர்கட்கெல்லாம் அறிவைப் பிறப்பிக்கும் அம்மையப்பனுமாகி எங்கும் எக்காலமும் செறிந்து வியாபகமாய் நின்ற சிவபிரான் திருவடியைத் தலைமேற் கொள்வோம்,

புறப்புறம் முதலிய நாற்கூற்றுள்ளும் அவ்வாறு பிரிவுகள் உள

## 2. இறைவனுலியம்பப்படும் நூல்வழி

என்னையிப் பவத்திற் சேரா வகையெடுத் தென்சித் தத்தே
தன்னைவைத் தருளி னாலே தாளிணை தலைமேற் சூட்டும்
மின்னமர் பொழில்சூழ் வெண்ணெய் மேவிவாழ் மெய்கண் டானூல்
சென்னியிற் கொண்டு சைவத் திறத்தினைத் தெரிக்க லுற்றும்.

தம் திருவடித்தாமரைகளை எம் தலைமேல் சூட்டித் தீக்கை செய்தருளிக் "கருக்குழியில் எம்மை வீழாது எடுத்தாட்கொள்ளுங் கருணைமிகு மெய்கண்ட தேவராகிய திருவெண்ணெய்நல்லூர்ப் பெருமானருளிய சிவஞான போத மென்னும் நூலை ஏனையாசிரியன்மார் செய்த பிரமாண நூல்கட்கெல்லாம் சிரத்தானமாகக் கொண்டு, அம் முதனூலிற் கூறப்படுஞ் சைவாகமப் பொருட் கூற்றை விளக்குவாம்.

## நுதலிய பொருள், கேட்போர், பயன்

பண்டைநற் றவத்தாற் றோன்றிப் பரமனைப் பத்தி பண்ணுந்
தொண்டரைத் தானே தூய கதியினிற் றொகுப்பன் மார்க்கர்
கண்டநூ லோதி வீடு காதலிப் பவர்கட் கீசன்
புண்டரி கத்தாள் சேரும் பரிசினைப் புகல லுற்றும்.

பழைய நல்ல தவத்தால்தோன்றிச் சிவபத்திவாய்ந்த சாமுசித்தர்க்குத் தானே சிவகதி கிடைக்கும். ஆற்றலும், அறிவும், காதலும் இல்லாத பிராகிருதர்க்கு வீடுபேறு கிடைத்தலரிது. முறைமையின் மந்ததர முதலிய சத்தி நிபாத முடையவராகும் நூல்வழியான் முத்தி பெறவிரும்பும் வைநயிகர்க்குச் சிவகதி கூடும் முறைமையினை வகுத்துக் கூறுகின்றாம்.

நூலால் ஆகும்பயன் சாமுசித்தர்க்கு முற்பிறப்பிலே எய்தியதால், அவர்க்கு நூல் வேண்டாதாயிற்று. பிராகிருதர் நூற்பொருளுணரும் ஆற்றலும் அவற்றைக் ஆசிரியர் கற்பித்தவாறே அறிதலும், அப்பொருளில் காதலும் இல்லாமையால் அவர்க்கும் நூல் உதவாது.

## அவையடக்கம்

மறையினான் அயனான் மாலான் மனத்தினான் வாக்கான் மற்றுங்
குறைவிலா அளவி னாலும் கூறொணா தாகி நின்ற
இறைவனார் கமல பாதம் இன்று யான் இயம்பும் ஆசை
நிறையினோர் குணத்தோர்க் கெல்லாம் நகையினை நிறுத்தும் அன்றே.

வேதத்தாலும், பிரமனாலும், திருமாலாலும், மனத்தாலும், வாக்காலும் மற்றும் குறைவின்றி நிறைந்த ( பூரண ) பிரமாணத்தாலும் அறிதற்கரிய முதல்வனதியல்பை யான் சொல்லுவேன் என்று எழுந்த எனது புல்லிய ஆசை சான்றோரனைவரும் ஏ ஏ இதுவோ இவனறிவு என்று இகழ்ந்து நகைப்பதற்கு ஏதுவாம்.

## ஆசங்கை நீக்கம்

அருளினால் ஆக மத்தே அறியலாம் அளவி னாலுந்
தெருளலாம் சிவனை ஞானச் செய்தியாற் சிந்தை யுள்ளே
மருளெலாம் நீங்கக் கண்டு வாழலாம் பிறவி மாயா
இருளெலாம் இரிக்க லாகும் அடியரோ டிருக்க லாமே.

**கேட்டல்:** மேற்கூறியவாறு இறைவனியல்பு அறிதற்கரிதாயினும் அவனை அவ்விறைவனூலெனப்படும் வேதசாரமாகிய சிவாகமத்தின் அநுவப முடைய தேசிகர் அருளிச்செய்யும் உபதேசத்தாற் கேட்டறியலாம்.

**சிந்தித்தல்:** கேட்டதனை அதற்கனுகூலமான அளவையாற் சிந்தித்தும் அறியலாம்.

**தெளிதல்:** சிந்தித்ததனைத் தன்னறிவின்கண்ணே சிவஞானத்தால் மாசறத் தெளிந்தும் அறியலாம்.

**நிட்டை:** அதனாற் பாசக்ஷயம் பண்ணி நிட்டைகூடிச் சிவாநந்தாநுபூதி பெறலாம்.

## 3. அளவை

வினா:- அளவையின் வகை என்ன?

விடை: காண்டல், கருதல், உரை, அபாவம், பொருள், ஒப்பு என்று அறுவகைப் படுமென்பாரும், அவற்றோடு ஒழிபு, உண்மை, ஐதிகம், இயல்பு என்பவற்றைச் சேர்த்துப் பத்தென்பாரும், அவற்றின் மேலும் உள என்பாரு முளர். அவையெல்லாம் பிரமாணமேயாகுலும், காட்சி முதலிய மூன்றிலடங்கும். வேறுகா. அவற்றுள்,

வினா:- முதலாவதாகிய காட்சியளவையை விளக்குக.

விடை: காட்சியளவை (பிரத்தியட்சப்பிரமாணம்) சந்தேகமும் விபரீதமு மின்றிச் சவிகற்பத்தை எதிரிற்கொண்டு குற்றமற அறிவது. சந்தேகமாவது கண்டதொரு பொருளை இதுவோ அதுவோ என்று ஐயுறுதல். விபரீதமாவது பழுதையைப் பாம்பென்றலும் பாம்பைப் பழுதென்றலும் போல்வது. சவிகற்ப மாவது:- கண்ட பொருளின் பெயர் சாதி குணம் கிரியை பொருள் இவற்றைப் பகுத்தறியுமறிவு. நிருவிகற்பமாவது பொருளின் பெயரும் சாதியும் குணமும் கிரியையும் இல்லாமல் அப்பொருளிருப்பைமட்டும் அறிவது.

அக் காட்சியளவையானது வாயிற்காட்சி, மானதக்காட்சி, தன் வேதனைக்காட்சி, யோகக்காட்சி என்று நால்வகைப்படும்.

அவற்றுள் வாயிற்காட்சி:- ஆன்மசிற்சத்தி கண்ணையும், தேயுவையும் ரூப தன்மாத்திரையையும் அதிட்டித்துக்கொண்டு ஐயம் திரிபின்றி உருவமாகிய புலனை நிருவிகற்பமா யறிதலும் அவ்வாறே மற்றை நாற்பொறிகளையும், பூதங் களையும், தன் மாத்திரைகளையும் அதிட்டித்து நின்று ஏனைச்சுவை முதலிய புலன்களை யறிதலும் ஆம்.

2. மனக்காட்சி:- அவ்வாறு ஐம்புலன்களை இயைந்தறிந்த பின்பு, மீண்டும் மறவாமல் சிந்திக்கப்பட்டு நிலைபெறுவதாகிய அவ்வாயிற் காட்சியறிவு, பெயர், சாதி முதலியவற்றால் விபரீதமாகாமல் நிச்சயமாய்ப் புத்தி தத்துவத்தில் வருதலால் ஆகிய சவிகற்பவுணர்வாய் ஆன்ம சிற்சத்தியால் அறிவது:

3. தன் வேதனைக்காட்சி:- அம்மானதக் காட்சி விசேடம் பற்றி மேம்பட்டு நிகழும் சத்துவகுண முதலியவற்றின் விளக்கமான இன்பத்

துன்பங்கள் புருடனது அறிவிற்குப் புலப்படும்படி அராகமுதலிய ஐந்து தத்துவங்களோனும் புணர்க்கப்படுமதனை ஆன்ம சிற்சத்தி தெரிவது. (அராகம், வித்தை, கலை, நியதி, காலம்).

4. யோகக்காட்சி:- அவ்வாறன்றி அறிவைத் தடைசெய்து நின்ற மலசத்திகளை இயமம் நியமம் முதலிய அட்டாங்கயோக சமாதியால் ஒருவாறு கெடுத்து ஒரிடத்து ஒருகாலத்தில் இருந்தவாறேயிருந்து. மூவிடத்தும் மூக்காலத்துப் பொருள்களையும் காண்கின்ற காட்சியாய் ஆன்மசித்தி தெரிவது.

வினா:- இரண்டாவதாகிய கருதலளவையை விளக்குக.

விடை: இதை அநுமானப் பிரமாணம் என்பர்,

இது காட்சியளவைபோல நேரே அறியப்படுவதன்று. சார்ந்துப்பெறத்தக்கது. மறைந்து நின்ற பொருளை அறிய உதவுவது. அப்பொருளைவிட்டு எப்பொழுதும் நீங்காமல் உடனாய் நிகழும் ஏதுவைக்கொண்டு குற்றமற அறியற்பாலது. புகையாகிய ஏதுவைக்கொண்டு மறைவிடத்துள்ள நெருப்பை அறிவது போலுள்ள எல்லாம் அநுமானப் பிரமாணமேயாம்.

அவ்வநுமானப் பிரமாணம் இருவகைப்படும், ஒன்று தன்பொருட்டநுமானம், மற்றொன்று பிறர்பொருட்டநுமானம். இவ்விரண்டையும் முறையே சுவார்த்தாநுமானம் பரார்த்தாநுமானம் என்பர் வடநூலார். சப்தப்ரயோகம் பிறருக்கு ஞானந்தோன்றுதற்குக் காரணமாகிய பரார்த்தாநுமானத்திலுண்டு. சுவார்த்தாநுமானத்திற் சப்தமில்லை. தன் வியாப்பியம் முதலிய ஞானத்தாற் சாதிக்கத்தக்கது,

இம்மலைமேற் புகைபரத்தலால் நெருப்புண்டு என்றுணர்தல் சுவார்த்தாநுமானம், அதை அநுமான வாக்கியலட்சணம் கெடாதவாறு பிறர்க்குணர்த்தச் சொல்லுவது பரார்த்தாநுமானம். உதாரணம் வருமாறு :—

1. மலை தீயுடையது ... பிரதிக்ஞை
2. புகையுடைமையின் ... ஹேது
3. யாது யாது புகையுடையது அது அது தீயுடையது அடுக்களைபோல } உதாரணம்
4. இதுவும் அங்கனம் ... உபநயம்
5. ஆதலின் இங்கனம் ... நிகமனம்

1. பிரதிஞ்ஞையாவது:-சாத்தியமுடையதாகப் பக்கத்தைக் குறிப்பது. இங்கு, மலையாகிய பக்கத்தில் தீயாகிய சாத்தியம் இருத்தல் கூறப்பட்டதறிக, சம்மதியாவது இதுவே.

2. ஹேதுவாவது :- இலிங்கத்தை உணர்த்தற்பொருட்டு ஐந்தனுருபேனும், மூன்றனுருபேனும் முடிவிலேற்று இலிங்கத்தைப் பிரதிபாதிப்பது. இங்குப், புகையுடைமையின் என்று வந்ததறிக. புகையுடைமையாலென்று மூன்றனுருபேற்றும் வரும். இலிங்கம் - வியாப்தி வலிமையால் மறைந்தபொருளை உணர்த்துவது, வியாப்பியமாவதுமாம். புகை தீக்கு இலிங்கம். வியாப்தி உடனிகழ்ச்சி. செறிதல், வியாபித்தல்.

3. உதாரணமாவது:- வியாப்தியொடு கூடிய திருட்டாந்தத்தை உணர்த்துவது. திருட்டாந்தம் - காணப்பட்ட முடிபுடையது. அடுப்புள் தீயும், புகையும் உடனிகழக்கண்டதே இங்கு உதாரணமாக்குதற்கு இயன்றது. இதுவே எடுத்துக்காட்டாகும். இதை, வியாப்தியைப் பிரதிபாதிக்கும் வசனம் என்பர் வடநூலார்.

4. உபநயமாவது;- வியாப்திவிசிட்டமாகிய இலிங்கத்தைப் பிரதிபாதிக்கும் வசனம். தீயின் வியாப்பியமான புகையுடையது இது என்பது இவ்வுறுப்பு.

5. நிகமனமாவது:- சாதனசாத்திய முடையதாகப் பக்கத்தைப் பிரதிபாதிக்கும் வசனம், பக்கம் - மலை முதலியன, சாதனம் - புகை முதலியன சாத்தியம் - தீயுண்மை முதலியன.

அநுமான வாக்கியத்தின் உறுப்புக்களுள் முதலாவதில், பக்கம் துணியப்பட்ட பொருளுக்கு இடம். மலை முதலியன போல்வன. இது கருதலால் துணியப்பட்ட நெருப்புள்ள இடம். இரண்டாவதில் பொருளைத் துணிவதற்குள்ள ஏதுவைத்தெரிவிக்கும்சொற்றொடர் ஐந்தனுருபையோ மூன்றனுருபையோ ஈற்றில் ஏற்றுநிற்கும். 'புகையுடைமையின்' என்ற தொடர்போல்வன, அவ்வேதுக்களையுணர்த்துவன. மூன்றாவதாக உதாரணம் இருக்கும். அது காட்சிப் பிரமாணத்தால் அறிந்த (துணி) பொருளுக்கு இடம். அடுப்பிலுள்ள நெருப்பை அதன் புகைகொண்டு துணிந்தது கருதல், துணிந்த பொருளைச் சர்திக்கக், கண்டபொருள் உதாரணமாயிற்று.

நான்காவது உறுப்பு உபநயம் எனப்படுவது, அதன் பொருள் மாட்டேறு, ஏற்றல் என்பதாம்.

இதுவும் அங்கனம் (இம்மலையும் அவ்வடுப்பைப்போலப் புகையோடு கூடிய நெருப்புடையதாதல் வேண்டும்) என்று மலையாகிய பக்கத்திற்கும் அடுப்பாகிய சபக்கத்திற்கும் சம்பந்தத்தை முறையே புகையுடைமையாகிய ஏதுவாலும் காட்சியாலும் ஏற்றி நிற்பது இது.

ஐந்தாவதுறுப்பு நிகமநம் (முடிவு) எனப்படுவது. இம்மலையும் அடுப்பில் கண்டவாறு புகையைக் கொண்டிருத்தலால், நெருப்புடையதாதல் வேண்டும்.

அநுமானவாக்கியத்துள் வரும் ஐந்துறுப்புள் முன்னே பின்னே மூன்று கொள்வதே போதும் என்பது மிருதிநூலார் முதலோர் கொள்கை.

அநுமானத்துள் வரும் ஏது என்னும் உறுப்பும் நன்குணரத் தக்கது. அவ்வேது இயல்பு, காரியம், அநுபலப்தி என்று மூவகைப்படும்.

1. இயல்பேது;- மா முதலிய சொற்கள் மரம் முதலிய பொருள்களை உணர்த்துவதில் வேறு காரணமின்றி அச்சொற்களின் இயல்பாயிருப்பதாகிய சக்தி (ஆற்றல்).

2. காரியவேது:- புகை முதலிய காரியங்கள் தீ முதலிய (அதனதன்) காரணங்களை உணர்த்துவதில் உள்ள சக்தி.

3. அநுபலப்தியேது:- குளிரில்லாமை காரியம், அது காரணமாகிய பனியில்லாமையை உணர்த்தும். இவ்வாறு காரிய மின்மை காரண மின்மையும், காரணமின்மை காரியமின்மையும் உணர்த்துவது அநுபலப்தியேது. உபலப்தி - அறிதல். அநுபலப்தி - அறியாமை. இல்லை என அறியும் அறிவு. (லப்தி-பேறு).

காட்சி, கருதல், உரை என்னும் மூன்றிலும் அநுமானம் (கருதல்) உண்டு, அவை காட்சியநுமானம், கருதலநுமானம், உரையநுமானம் என்று பெயர் பெறும்.

1, உதாரணம்:—நாற்றத்தால் மலரை உணர்த்தல்போல்வனகாட்சியநுமானம், மலர் காட்சிப்புலனுதற்குரிய பொருளாயினும், மறைவிடத்திலிருக்கின், அங்கிருக்கின்றதென்று அதன் நாற்றமாகிய ஏதுவாலறிகின்றோம், அம்மலர்க்கு அந்நாற்றம் உண்டு என்று முன்னரே அறிந்தமையால்தான் அவ்வறிவு உதிக்கின்றது, அதனுல், இதைப் பூர்வக்காட்சியநுமானம் என்றனர். இதுபோல் வருவன எல்லாம் இதில் அடங்கும்.

2. கருதலநுமானம் :—ஓதப்பட்ட உரையாகிய ஏதுப்பற்றி அறிவின் அளவை உணர்தல்போல்வன உதாரணங்களாகும். உரையைக்கொண்டு, உரை யிட்டவர் உணர்வின் அளவைக் கருதியறிதல்போல வருவன எல்லாம் இதில் அடங்கும்.

3. முற் (பிறவியிற்) செய்த வினையின்பயன் பின்பயக்கும் என்றும். இப்பொழுது செய்யும் வினையின்பயன் இனிப்பயக்கும் என்றும் வேதாமங்களுள் சொல்லியதுகொண்டு சொல்லாதபொருளையும் ஒப்புமை பற்றி ஊகித்துத்துணி வது. இதுபோல்வன எல்லாம் உரையாலனுமானம், இவற்றை முறையே வடநூலார்

1. பூர்வதர்சனப் பிரமாணம், தர்மதர்மி யநுமானம் என்றும்

2. வசனலிங்கப்ரமாணம், வசனலிங்காநுமானம் என்றும்

3. அநுபவப்ரமாணம், ஆகமலிங்காநுமானம் என்றும் பெயர் கூறுவர்.

வினா:- மூன்றாவதாகிய உரையளவையை விளக்குக.

விடை:-இது காட்சியளவையாலும் அநுமானம் என்னும் கருதலளவை யாலும் உணரப்படாதவற்றை உணர்த்தும், இதன்வகை மூன்றாகும். அவை 1, தந்திரகலை 2. மந்திரகலை, 3. உபதேசகலை, என்பன. அநாதிமுத்த சித்துருவாகிய முதல்வன் அருளிச்செய்த வேதாகமங்கள், கருமகாண்டம், உபாசனா காண்டம், ஞானகாண்டம் என்று மூவகைப்படும், அம்மூன்றனுள், கரும காண்டம்பற்றி, முன்பின் முரண்படாமல் அநுட்டிப்பதை அறிவது தந்திரவுரையளவையாகும்.

உபாசனா காண்டம்பற்றி மனம் முதலியவற்றை அடக்கித் தெய்வத்தை வழிபடும் வாய்மையைத் தெரிவது மந்திரவுரையளவையாகும்,

ஞானகாண்டம்பற்றித் தனக்குமுதலும் முடிவுமில்லாத இறைவன் தன் னின் வேறல்லாத தன்மைகளையும் தன்னின் வேறாகிய பொருள்களையும் உடைய வன் என்பது முதலியவற்றைத் தான் உணரும் வண்ணமும் பிறர்க்கு உணர்த்தும் வண்ணமும் தெரிவது உபதேசவுரையளவையாகும்.

இறைவன் தன்னின் வேறல்லாத தன்மைகளையுடையனாதலும் எண் குணங்களையுடையனாதலும் ஒன்றே. தன்னின் வேறாகிய பொருள்களையுடைய னாதலாவன பசுபாசங்களையுடையனாதல் முதலியனவாம்,

இவ்வாறு சுருக்கி மூவகைப்பிரமாணங்களும் உணர்த்தப் பட்டன.

அநுமானப்பிரயோகத்தின்கண் படுங்குற்றங்கள் பலவுள. அவற்றை விரிந்தநூல்களுட் கற்றறிக. குற்றங்களை உணர்ந்தாலன்றிக் குணங்களை வரையறுத்துணர்தல் அரிது.

## முதற்சூத்திரம்

**4.** பொருளியல்பு.

**வினா:-** இனிக் கூறப்படும் பொருள் என்ன?

**விடை:** இதுவரை அளவை கூறப்பட்டது. அவ்வளவையாலளந்துணரப்படும் பதி பசு பாசம் ஆகிய முப்பொருள்களது இருப்பை மூன்று சூத்திரத்தில் அடக்கி உணர்த்தத்தொடங்கி, முதல் சூத்திரத்திற் பதியினிருப்புக் கூறப்படுகின்றது.

**வினா:-** அம் முதற்சூத்திரமாவது யாது?

**அவன் அவள் அதுஎனும் அவைமூ வினைமையின்**
**தோற்றிய திதியே ஒடுங்கிமலத் துளதாம்**
**அந்தம் ஆதி என்மனார் புலவர்.** (சிவஞானபோதம்.)

**விடை:-** ஒருவனோ டொருத்தி யொன்றென் றுரைத்திடு முலகமெல்லாம்
வருமுறை வந்து நின்று போவதும் ஆத லாலே
தருபவன் ஒருவன் வேண்டும் தான்முதல் ஈறும் ஆகி
மருவிடும் அநாதி முத்த சித்துரு மன்னி நின்றே. (சித்தியார்.)

**வினா:-** இதன் பொருள் என்ன?

**விடை:-** பிரபஞ்சம் அவன் அவள் அது என்று சுட்டியுணரப்படுவது. அவயவப் பகுப்புடையது, காரியமாயுள்ளது. தோற்றம், நிலை, இறுதி என்று முத்தொழிலும் அடையும் உலகு அறிவில்லாதது. அது தானே தோன்றி நின்று அழியாது. அதைத் தோற்றி நிறுத்தி அழிக்கும் ஒருவன் இருத்தல் வேண்டும். அவன் அநாதியே முத்தனுவன். ஆதிமுத்தனுயிருத்தல் இயலாது சித்து (ஞானவு) ருவன். பிரபஞ்சத்தின் முத்தொழிற்கும் அவனே முதல்வன். அதனால் மகாசங்காரக் கடவுள் என ஏனைய அயன்மால் முதலிய எவரும் ஆகார். அம் முதல்வனிடத்திலிருந்தே புனருற்பத்தி நிகழ்கின்றது.

வினா:- இம் முதற் சூத்திரப் பொருளில் எவ்வெவர் எவ்வெவ் வாசங்கை நிகழ்த்துகின்றனர்? அவருள் முதலில் எவர் எவ்வாறு ஆசங்கித்தார்?

விடை:- உலகாயதர் முதலிய பலர் பலவாறு ஆசங்கித்தனர். அவருள் **உலகாயதர்** முதலாசங்கையாக உலகிற்கு நிலைத்தொழிலொன்றன்றித் தோற்றமும் அழிவும் உண்டோ அவை உண்டு என்று கண்டதுண்டோ என்றனர். அவர் ஆசங்கைக்கு விடையாவது:- உலகம் (பிரபஞ்சம்) இருக்கின்றது, அவ்விருப்பைக் கொண்டே இது முன்தோன்றியது என்பதையும் இனி அழியத்தக்கது என்பதையும் நிச்சயிக்கலாம், முன்பு காரியப்பிரபஞ்சம் என்கிறோம், அவயவப் பகுப்புடையன எல்லாம் அழியும். அழிவனவற்றிற்கே மீளத்தோன்றுதல் உண்டு, தோற்றமும் அழிவும் இருக்குந்தொழிலை நடுவிற்கொண்டவை, தோன்றாதது நிற்றலும் அழிதலும் இல்லை. அதனால், உலகிற்குத் தோற்றமும் நிலையும் அழிவும் ஆகிய செயற்கை உண்டு.

வினா :- தோன்றிமாய்வது இயற்கை என்றால் வரும் குற்றம் என்ன ?

விடை :- இயல்பு (இயற்கை) க்குத் தோற்றம் மாய்தல் என்னும் செயற்கை பொருந்தாது.

வினா :- நீ கூறுஞ்செயற்கையே நான் கொண்ட இயற்கை என்றால் பொருந்தாதோ ?

விடை :- செயற்கையே இயற்கை எனப்படின், வேறே இயற்கை என்று ஒன்று இல்லையாம். இன்றாகவே, இயற்கை என்பது விட்டுப்போய்த் தோல்வி எய்துவை.

வினா :- இயல்பும் விகாரமும் வெவ்வேறானவே எனினும், நான்கு பூதங்களும் இயற்கை. அவை தோன்றி மாய்தலாகிய விகாரத்தைச் செய்யும். வேறு வினைமுதல் எதற்கு? மண் உயிர்க்கு அவசியமான பொருள்களைக் கண்கூடாக்கி நிறுத்தும். நீர் அவற்றை அழிக்கும். நெருப்பு அவற்றைப் பக்குவப் படுத்திப் பயன்படச்செய்யும். காற்று வன்மையைத் தரும், இவையே அம்முத் தொழில் செய்தலின், வேறு தலைவன் வேண்டாவே ?

விடை :- அப்பூதங்களும் தோற்றம் நிலை இறுதி ஆகிய முத்தொழிலை அடைகின்றன. அதனால், அம்மூன்றுமில்லாத ஒரு வினைமுதல் அவசியமாகும்.

சௌந்திராந்திகன் வினு:- விதை கெடும்போது முளை தோன்றுதல் போலச் சார்பிற்ருேற்றம்பற்றி இப்பிரபஞ்சம் எல்லாம் தாமே தோன்றும். இதற்கு வினைமுதல் ஏன்?

விடை: உள்பொருட்குத் தோற்றமா? இல்பொருட்குத் தோற்றமா?

மாத்திமிகர் வினு:- உள்பொருள் இல்பொருள் இரண்டுக்குமல்ல. இல்லதும் உள்ளதுமன்றி அநிர்வசனமாய் நிற்பதொரு பொருட்குத்தானே தோற்றம்?

விடை: உள்ளதாயின் உள்பொருள். இல்லதாயின் இல்பொருள், அதனுல் தோற்றமும் இசையாது. மண்ணுகிய காரணத்திலிருந்து குடம் முதலிய காரியங்கள் குயவனுல் செய்யப்படுமேயன்றி ஆடை முதலிய காரியங்கள் செய்யப்படா. அவ்வாறே, காரணமும் காரியமும் உள்பொருளேயாய்க் காரணத்திலிருந்து காரியம் ஒரு கர்த்தாவால் வெளிப்பட்டுத் தோன்றும்.

சமணர் வினு:- காரியப்படுமொருபொருள் உண்டுமாய் இல்லையுமாய் நிற்கும் இரண்டியல்பும் ஒருங்குடையது. இதற்கொரு கர்த்தா ஏனே?

விடை:- மாறுபட்ட இரண்டுதன்மை ஒரு பொருட்குப் பொருந்துதல் கூடாது.

வினு:- காரண ரூபமாயுண்டு, காரிய ரூபமாயில்லை என்ருலோ?

விடை:- காரணத்திற்கும் காரியத்திற்கும் வேற்றுமையில்லை. மண்ணிற்கும் குடத்திற்கும் வேற்றுமையுண்டோ? இரண்டும் மண்தானே? மண்ணுகிய காரணத்தில் குடமாகிய காரியம் சூக்கும ரூபமாயுள்ளதால், அது பின் தூல ரூபமாய் விளங்கித் தோன்ற ஒருவினைமுதல் வேண்டும். மண்ணிலிருந்து, குடம் தானே தோன்ருது.

மீமாஞ்சகர் வினு: பிரபஞ்சம் உடம்பு உலகம் என்றிருவகையாயுண்டு. அவற்றுள் உடம்பு ஆண், பெண், அலி என்று அவயவப்பகுப்புடையது. உலகம் அப்பகுப்புடையதாயில்லை. அதனுல், அவயவப் பகுப்புடையவை தோன்றி யழியும் என்பதுபற்றித் துணியப்படும் தோற்றக்கேடுகளை, உலகம் அடைவதேது?

விடை: உலகமும் நிரவயவமாகாது. நிலம், நீர், நெருப்பு, காற்று, ஆகாசம் முதலிய அவயவப் பகுப்புடையது. அதனுல் உடம்புபோல் உலகமும் தோன்றி நின்றழிவதேயாம்.

வினா:- சரி, உலகிற்கும் அழிவுண்டாயினும் ஓரிடம் அழியும் பிற இடம் அழியா, எல்லா இடமும் ஒருசேர அழியக் கண்டதுண்டோ?

விடை:- ஓரினப்பொருள்கள், வித்து முதலிய சடங்கள் ஒவ்வொரு காலத்தில் ஒருங்கே தோன்றலும் ஒருங்கே அழிதலும்கண்டு வருகின்றோம். அவ்வியல்புடைய உலகும் அவ்வழிவிற்குரிய காலவிசேடத்தில் அழியும். தோன்றற்குரிய காலவிசேடத்தில் தோன்றும். உலகம் முழுவதும் ஒருங்கே தோன்றி ஒருங்கே அழிதல் உண்டு. அதை ஏகதேச சம்பவ நாசம்கொண்டு அநுமித்துணரலாம்.

வினா: காலவிசேடம் என்றாய், அக்காலமே அது செய்யுமே?

விடை: காலம் சடம், காலத்தில் தோற்றம் இறுதி நிகழக்காண் கின்றோம். கண்டாலும், சடப்பொருள் ஒருசித்துப்பொருளின் உதவி யின்றித் தொழிற்படாது. அதனால், காலமும் அம்முதல்வனுக்குத் துணைக் காரணமாயுள்ளது.

தார்க்கிகர் வினா:- கன்மம்காரணமாக அணுக்களே உலகமாய் வருமே! இதற்கு வேறு ஒரு கர்த்தா ஏன்? கன்மகாலங்கள்போல இறைவனிச்சையும் ஒருகாரணமாம் அவ்வளவன்றி வேறில்லையே?

விடை: கன்மத்தையும் காலத்தையும்போல இறைவனிச்சையையும் எண்ணப்படுமோ? கன்மகாலங்கள் சடம். அவை தம்முட்கூடித் தொழிற்படுதல் சித்தாகிய முதல்வன்றொழிலையின்றி அமையாது, அதுவன்றியும், உலகம் ஒடுங்கும் காலத்தில்அணுவும் கூடவே ஒடுங்கும். அதனால், அணுக்கள் பின் உலகமாய் வந்து போதல் எப்படி?

வினா:- காரணம் அணுக்கள். அவை கெடில் உலகம் அழியும். அதனால், அவ்வுலகம் காரியமன்றோ?

விடை: அணுக்களும் அவயவப்பகுப்புடையன ஆதலின் அப்பகுப் பில்லா மாயையே உலகிற்குக்காரணம்.

வினா:- சற்காரியவாதம் பேசுகின்ற உனக்கு உலகம் அழிபொருள் என்றல் எப்படிப் பொருந்தும்?

விடை:- காரணப்பொருளும் காரியப்பொருளும் ஆகிய இரண்டும் நித்தப்பொருளேயாகும். ஒரு கர்த்தாவால் ஒருகாலத்து விளங்குதலும் ஒரு

காலத்து மறைதலுமாகிய அவத்தை வேறுபாடுபற்றி அழிபொருள் என்றும் சொல்லப்படும். அவத்தைபேதம் கருதாதவிடத்து நித்தப்பொருளென்பதே முடிபு.

சாங்கியர் வினு ;- சொல்லிய எல்லாம் உடன்பாடே. வேருெரு கடவுள் இதனைத்தருவான் என்றது பொருந்துமோ? மாயையே தன் காரியத்தைத் தாராதோ? இதற்கொருத்தன் ஏனோ?

விடை :- குடம், காரியம், மண் காரணம். மண்ணினின்று குடம்தானே வாராது, மண்ணும் தானே குடத்தைத் தோற்ருது. இரண்டிற்கும் வேருய்க் குயவன்ஒருவன்வேண்டியுள்ளானே! அதுபோல, மாயையினின்று பிரபஞ்சத்தைத் தோற்றக் கர்த்தா ஒருவன் வேண்டும். பதிபசுபாசம் மூன்றில், பாசத்துட்பட்ட மாயை முதற்காரணப் பொருளாயினும் சேதனப்பொருளன்று. பசு சேதனப் பொருளாயினும் அம்மாயாகாரியங்களான தனுகரணுதியைப் பெற்ருலன்றி அறியமாட்டாது. இவ்விரண்டும் இவ்வாருகவே பதியே மாயையினின்றும் பூத முதலிய பிரபஞ்சமெல்லாவற்றையும் தோற்றுவிப்பது என்று பாரிசேட ப்ரமாணத்தாலறியலாம்.

வினு :- ஒரு காரிய நிகழ்ச்சிக்கு ஒரு காரணத்தின்மேலும் வேண்டுமோ?

விடை: ஒரு காரியநிகழ்ச்சிக்கு முதல், துணை, நிமித்தம் என்ற மூன்று காரணமும் ஆவசியகம். அம்மூன்றும் ஒன்ருகா. வெவ்வேறேயாகும். இவ்வுண்மை குடமுதலிய காரியநிகழ்ச்சியிற் காட்சிப்புலனுல் அறியலாம். அவ்வாறே பிரபஞ்சத்திற்கு மூன்று காரணமும் வேண்டப்படும்.

பொது வினு :- அம்மூன்றுள் முதற்காரணம் எது?

விடை :- மாயை முதற்காரணம்.

வினு :- அது ஒன்ரோ? பலவோ?

விடை :- ஒன்றே மூவகையாயுள்ளது.

வினு :- அதை விளக்க முடியுமோ?

விடை :- முடியும். மாயையின் காரியம் மூவகையாயுள்ளது. அவை, சுத்தம் அசுத்தம் இவ்விரண்டும்கலந்த சுத்தாசுத்தம் என்பன. அதனுல் காரணமும் மூவகை ஆயின.

சுத்தமாயை, அசுத்தமாயை, பிரகிருதிமாயை என்று மூவகையான காரணத்துள், முதலாவது மலகன்மங்களோடு கலவாது முதற்காரணமாய் நிற்பது. இரண்டாவது மலகன்மங்களோடு விரவி முதற்காரணமாவது. மூன்றாவது இரண்டாவதாகிய அசுத்தமாயையின் தூலபரிணாமமாய்த் தோன்றுவது. அம்மூன்றில், சுத்தமாயை மற்றையிரண்டனையும் வியாபித்து மேலாய் நிற்கும் அசுத்தமாயை அதன் கீழடங்கியது.

வினா:- அம்மூன்றுமாயையிலிருந்து எவ்வெவை தோன்றும்?

விடை:- சுத்தமாயையிலிருந்து சூக்குமை, பைசந்தி, மத்திமை, வைகரி என்னும் வாக்குகள் தோன்றும். அசுத்த மாயையிலிருந்து காலம், நியதி, கலை, வித்தை, அராகம் ஆகிய காரணதத்துவம் ஐந்தும்தோன்றும். பிரகிருதி மாயையிலிருந்து குணதத்துவ முதலிய போக்கிய தத்துவம் இருபத்துநான்கும் தோன்றும்.

வினா:- இவை தோன்றற்கும் முதல்வன் வேண்டுமோ?

விடை:- சடரூபமான விந்து, மோகினி, மான் மூன்றும், தம்தம் காரியங்களைச் சிவசத்தி சங்கற்பரூப சந்நிதியினின்றுந் தோற்றுவிக்கும் ஆதலின், அச்சிவசத்தி சங்கற்ப ரூபசந்நிதி இன்றியமையாதது.

வினா:- நால்வகை வாக்குக்களையும் விளக்குக.

விடை:- வைகரிவாக்கு:- தன் செவிக்கும் பிறர் செவிக்கும் கேட்கப் பட்டு நினைந்த பொருளைச் சொல்லுஞ்சொல்; சொல்பவனுக்குங் கேட்பவனுக்குஞ் சவிகற்பஞானம் உண்டாவதற்கு ஏதுவானது; அகங்காரத்தாற் செலுத்தப்படும் பிராணன் என்னும் காற்றால் உந்தப்பட்டு எழுந்து புறத்தேயடையும் அக்கரங்கள் இவ்வாக்காதற்குமுன் மத்திமைத்தானத்தில், உதானன் என்னுங் காற்றால் உந்தப் பட்டுச் சூக்கும ரூபமாய்ப் பிரிந்து தோன்றின. அவ்வக்கரங்கள் அவ்வாறு புறத்தே அடைதலையுடையது இது.

மத்திமைவாக்கு:- செவியிற் கேட்கப்படாதது. மெல்லோசையானது. கண்டத்தில் விளங்குதலுள்ளது. அதனால், சொல்லுபவன் தன்னுள் உணருஞ் சவிகற்ப ஞானத்திற்கு ஏதுவாகி உள்ளே யுணரப்படும் ஓசையாயிருப்பது, சூக்கும ரூபமாய் அக்கரங்கள் பிரிந்து தோன்றினாலும் பல், இதழ், நா, அண்ணங்களிற் பட்டுச் சிதறிப்போகா. அதற்குக்காரணம் அங்கு உதானவாயுவின் தொழிற் பாடேயன்றிப் பிராணவாயுவின் தொழிற்பாடில்லாமையாகும். இது பைசந்திக்கும் வைகரிக்கும் வேறாய் அறியப்படுவது.

பைசந்திவாக்கு:- ஐந்து நிறங்களையும் சூக்கும ரூபமாய் அடைவுபட வொடுக்கிநிற்கும் மயில் முட்டையினீர்போலப் பலவகைப்பட்ட எழுத்துக்கள் பிரிவுபட விளங்கித் தோன்று நிலையிற் சூக்கும ரூபமாகக்கொண்டு சிந்தையில் நிற்கும். நிருவிகற்ப ஞானத்துக்கு ஏதுவாகும், இதுவே அக்கரங்கள் பிரிவுபட விளங்கித்தோன்றும் மத்திமை வாக்காக விருத்தியடைகிறது.

சூக்குமைவாக்கு:- பரசரீரத்தினுள் நாதமாத்திரையாய் விளங்குத லுள்ளது. ஞானத்திற்கு மட்டும் ஏதுவாதலுடையது. இதுவே பைசந்தி, மத்திமை, வைகரி என விருத்தி யடைகின்றது. இதன் விருத்திகளாகிய அவை அழியும். இது என்றும் அழிவதில்லை. அழிவின்றிச் சுத்தமாயா ரூபமாய் நிலை பெற்றிருக்கும். தவவிசேடத்தால் இதைக்காணப்பெறுவார்க்கு அந்தச் சுத்த மாயாபுவனத்திலுள்ள அபரமுத்திப் பெரும்போகம் உண்டாகும்.

வினு:- இவ்வாக்குக்கள் நான்கும் எவை பற்றுக்கோடாக எத்தனை வகைப்பட்டு எத்தத்துவங்களிலிருக்கும்?

விடை: இந்நான்குவாக்கும் நிவிர்த்தி முதலிய பஞ்ச கலைகள் பற்றுக் கோடாகச் சார்ந்து ஐவகைப்பட்டுச் சிவதத்துவ முதலிய ஐந்து தத்துவங் களிலும் இருக்கும்.

வினு:- இவ்வாக்குக்களின் காரியப்பாடு எவ்வாறு?

விடை:- இவை சுத்தமாயையினின்றும் விருத்தியாகிக் காரியப் படுவனவேயன்றி, அசுத்தமாயாகாரியம் போலப் பரிணமமாய்க் காரியப்படுவன அல்ல

வினு:- விருத்தி, பரிணமம் என்றால் என்ன?

விடை:- புத்தரும் சமணரும் எள்ளாலான குப்பைபோலச் சமுதாய வாதமும், தார்க்கிகர் நூலாலான ஆடைபோல ஆரம்ப வாதமும், மாயாவாதிகள் பேய்த்தேராலான நீர்த்தோற்றம்போல விவர்த்தன வாதமும் காரியப்பாட்டிற்குக் கூறுவர், அவை சித்தாந்தத்திற்கு ஏலா. பரிணமம் விருத்தி என்பவற்றுள், பரிணமமன்று, விருத்தியாகும் என்பர் சித்தாந்திகள். பால் தயிரானாற்போல் வன பரிணமத்திற்கு உதாரணம், படங்குடிலானாற்போல்வன விருத்திக்கு உதாரணம். பாலிலுண்டான தயிர்போல முழுவதும் பரிணமித்தலும் நெய்யி லுண்டாகிய புழுப்போல ஏகதேசத்திற் பரிணமித்தலும் என்று பரிணமம் இருவகைப்படும். அவ்விரண்டில் பின்னதே அசுத்தமாயையின் காரியப்பாடு. விருத்தியும் சூக்கும பரிணமம் என்பர்.

வினு :- சுத்தமாயை முதற்காரணமாவது வாக்குமட்டுமோ ?

விடை ;- அன்று, மந்திரேசுரர், மந்திரமயேசுரர், அணுசதாசிவர் முதலிய அபரமுத்தர்க்கு வேண்டப்படும் சுத்தாத்துவாக்கள் எவற்றிற்கும் மாயையே முதற்காரணம்.

வினு :- இவ்வாக்குகள் அவருக்குமட்டும் வேண்டுவனவோ ?

விடை :- அன்று, அவ்வாக்குக்கள், சவிகற்ப ஞானத்துக்கு ஏதுவாதலால், இச்சுத்தப்பிரபஞ்சம், மேற்குறித்தோர்க்கேயன்றி விஞ்ஞானுகலர், பிரளயாகலர், சகலர்க்கும் நிச்சயமாய் வேண்டப்படும் சவிகற்பஞானத்துக்கு ஏதுவாகிய அவ்வாக்குகள் தன்னின் வேருகக்காணப்பட்டு நீங்கவேண்டும். அதற்குமேலாகிய பேரறிவு விளங்கவேண்டும். அந்நீக்கமும் விளக்கமும் எப்பொழுதுண்டாகும்? அப்பொழுதே பரமுத்தியுண்டாகும்.

வினு :- ஏனைய அசுத்தமாயையிலும் பிரகிருதிமாயையிலும் படும் இயல்பு என்ன ?

விடை :- சூக்குமமாகிய மாயையினின்றும் தூலமாகிய கலாதியும், அவற்றினுந் தூலமாகிய மூலப்பகுதியும், அதனினுந்தூலங்களாகிய குணதத்துவம் முதலியனவும் தோன்றும். அத்தூலங்களிலிருந்து தோன்றுங்காரியம் அவற்றினுந் தூலமேயாம். இவ்வாறே எல்லாக்காரியப் பிரபஞ்சங்களும் தோன்றி, நிலம் நீர் தீ வளி விசும்பு ஆண் பெண் அலி என்பவை முதலிய அவயவப் பகுப்புடையனவாய், வளர்ந்தும் தேய்ந்தும் பரிணமித்துவரும். இத்தகைய காரிய காரணங்களுக்குத் தம்முள் பெரும்பாலும் வேற்றுமைகூறும் நையாயிகர் முதலியோர் மதம் அடாது.

வினு :- ஏன் அடாது.

1. பரிணமம் ஆவதால் பேதாபேதமாம்.

2. சற்காரியம் ஆவதால் அபேதமாம்.

3. முன்பு 'சிவனவன்றன் சந்நிதி தன்னினின்றே' (38) என்பதனுற் பெறப்பட்ட நிமித்த காரணனுகிய முதல்வன், அநந்தர் சீகண்டர் மூலமாக அவற்றைக் காரியப்படுத்துங்கால் கலப்பால் ஒன்ருயும், பொருளின் தன்மையால் வேருயும், செலுத்துதலால் உடனுயும் நிற்பன்.

மாயாவாதி வினு:- அருவமாகிய மாயை உருவமாகிய பிரபஞ்சத்தைத் தோற்றுவிக்காது. அவிகாரமான மாயையினின்றும் விகாரமாகிய பிரபஞ்சம் தோன்றுவதுமில்லை. அதனுல் உன் கொள்கை எப்படிப்பொருந்தும்?

விடை:- உன்மதத்தில் ஆகாயத்தினின்றும் வாயு முதலிய பூதங்கள் முறையே உதிக்கும். ஆகாயம் அருவமும் அவிகாரியும் ஆகும். அங்கு இக்கேள்வி எழாதோ? அதுவுமன்றி, அவ்வாகாயத்திலிருந்து பல மேகங்களும் மேகத்தின்கண் பல விகாரங்களும், பல வோசைகளும்' பல மின்னல்களும், பல இடிகளும் இன்னும் இவைபோல்வன பலவும் தோன்றுமாதலின், அதை மறந்து சொல்லுதல் உனக்கே வழுவாம். சற்காரியங்கொண்டஎமக்கோ அது வழுவாகாது.

வினு:- முதல்வன் 'மன்னி நின்றே மருவிடும்' என்றது எவ்வாறு? 'ஆரியன் குலாலனுய் நின்று ஆக்குவன் அகிலம் எல்லாம்' என்ருல், குடம் முதலிய காரியங்களை யெல்லாம் அவற்றின் காரணமாகிய நிலத்தில் நின்றும் செய்வது போல ஆரியன் அகிலமெல்லாம் எங்கு நின்று செய்வன்?

விடை:- அவன் வாக்கு மனுதீத கோசரப்பொருள். உலகம் போலல்லன். அவன் நிற்கும் நிலையும் அத்தன்மையுடையதே. ஒருவாறு உவமை கூறி விளக்குவேன். உலகமெல்லாம் காலத்தாற் காரியப்படும். இது சர்வமத சம்மதம். அவற்றைக் காரியப்படுத்தும்போது காலம் எல்லாப் பொருட்கும் ஆதாரமாயிருக்கின்றது. அக்காலத்திற்குப் பிறிதோராதாரமில்லை. அதுபோல, சிவசத்தியும் நிராதாரமாய் நின்று காரியப்படுத்தும்.

வினு:- காலம் தொழில் வேறுபாடுபற்றி இறப்பு, நிகழ்வு, எதிர்வு, கணம், இலயம், துடி முதலியவாய்ப் பலவகை அவத்தைப்படும். அதுபோல உலகிற்கு ஆதாரமாய் நின்று செய்யும் முதல்வனும் அவ்வத்தொழில்பற்றிப் பலவகை அவத்தைப்பட்டுத் துடக்குறுவனே?

விடை:- கரணங்களாலான சாக்கிரம் முதலிய அவத்தைகள் உயிரில் ஒடுங்கித்தோன்றுங்கால், உயிரும் அவத்தைப்பட்டுத்துடக்குறுகின்றது அது போல், முதல்வன் எல்லாவுலகும் தன்பால் ஒடுங்கி உதிப்பத் தானும் அதுபற்றி இலயம் போகம் அதிகாரம் என்னும் அவத்தைப்பட்டுத் துடக்குறுவோனு கின்ருன். இது பற்ருெடு நிற்றலுக்கு எடுத்துக்காட்டு.

கற்ற நூற்பொருளும் சொல்லும் வாசனுரூபமாய்ப்புத்தி தத்துவத்தை ஒட்டிநின்று ஆன்மபோதத்தின்கண் ஒடுங்கித்தோன்றுங்கால், அவ்வான்மபோதம் அதுபற்றித்துடக்குருது. அதுபோல், முதல்வன் துடக்குறுதலின்றியே நிற்பன். இது பற்றின்றி நிற்றலுக்கு எடுத்துக்காட்டு.

வினா :- 'ஈறுமாகிமருவிடும்' என்றதெவ்வாறு? சங்காரகர்த்தாவால் அழிந்த உலகம் அழிந்தவாறே தொலையாமல் மீண்டும் அவனிடத்தினின்றும் ஏன் தோன்றல்வேண்டும்? மீளத்தோன்றவேண்டின் அழிவது ஏன்?

விடை :- உயிர்க்குமலபரிபாகம் வரும்பொருட்டுத் தோன்றுகின்றது. உயிரின் இளைப்பை ஒழித்தற்பொருட்டு அழிகின்றது. முன்பு இளைப்பைச் செய்து நின்றகாரியங்கள் அழியுமாதலின். அழிந்தாலும் பழவினைத்தொடர்ச்சிக்கு உரியனவாய்த் தத்தம் காரணங்களில் கன்மத்தோடு பயின்றுகிடக்கின்றன. அக் காரியங்களை ஒடுங்கியவாறே உதிக்கச்செய்வன்.

வினா :- ஒருகடவுள் மூன்றுதொழிலும் இடைவிடாமல் செய்வானேல், பாரம் எய்தி விகாரி ஆகானோ?

விடை :- சூரியன் சந்நிதியில் தாமரை மலர்கின்றது. சூரியகாந்தக்கல் நெருப்பைக் கக்குகின்றது. மண்ணிலுள்ள நீர் வற்றுகின்றது. அம்முத்தொழில் செய்யும் அதனால் சூரியனுக்கு ஒருவிகாரமுமில்லை. அதுபோலக் கடவுளும் தன் சந்நிதியில் நிகழும் முத்தொழிலால் தான் விகாரம் ஒன்றும் அடைவதில்லை.

பாஞ்சராத்திரி, இரண்யகர்ப்பர் வினா :- சிருட்டி, திதி, சங்காரம் ஆகிய முத்தொழில்களுக்கும் தனித்தனி மூவர் இருக்க ஒருவனுக்கே மூன்றும் ஓதுவதேன்?

விடை :- அயனும் மாலும் புண்ணிய விசேடத்தால் முதல்வனததிகார சக்தியை அவனது ஏவலால் பெற்றுள்ளவர். அத்தொழிலுக்குச்சுதந்திரர் அல்லர். முத்தொழிலும் செய்தற்குரிய சுதந்திரம் சங்காரகர்த்தா வொருவனுக்கே உண்டு. சங்காரகாலத்தில் மற்றை இருவரும் தம்தம் சக்தியுடன் இருப்பாராயின், உலகம் சங்காரம் ஆதலில்லை. அப்பொழுது அவ்விருவருமில்லை என்பது பொருந்துமாறு பற்றி யறியலாம். சங்காரக்கடவுள் எனப்படுபவன் சிலவற்றையொழித்துச் சிலவற்றைச் சங்கரிப்பானோ? அது சர்வ சங்காரமாமோ? அச்சங்காரக்கடவுளைச் சங்கரிப்பாரில்லை. முழுதும் சங்கரித்தபோது அவனொருவனே நிலையாயுள்ளவன். ஒடுங்கிய உலகங்கட்குப் பெரியதோராதாரம் அவனேயாவான். ஒடுங்கிய உலகத்தை மீளத் தோற்றவும் நிறுத்தவும் அவனே உரியவன்,

நாத்திகர் + மாயாவாதிகள் + பரிணமவாதிகள் வினா :- சங்காரக்கடவுள் தோற்றம் முதலிய தொழில்களைச் செய்தற்குக்காரணம் யாது?

விடை :- 1. 'காத்தும் படைத்துங் கரந்தும் விளையாடி' என்பது முதலிய திருவாக்குகள்பற்றி, விளையாட்டு என்பர் சிலர்.

2. 'ஐயாநீ ஆட்கொண்டருளும் விளையாட்டின் உய்வார்கள் உய்யும் வகையெல்லாம் உய்ந்தொழிந்தோம்' என்பது முதலிய திருவாக்குகள் பற்றி விளையாட்டு என்றலின்கருத்து, ஐங்கலப்பாரஞ்சுமத்தல் சாத்தனுக்கு விளையாட்டு என்பதுபோல அவ்வளவு எளிதாகச் செய்யப்படுவதென்றுகும். ஆதலின், அக் கருத்தும் உயிர்கட்குப் பெத்தகாலத்துச் சுவர்க்காதிபோகமும் பதமுத்திகளும் முத்திகாலத்து வீடுபேறும் கொடுத்தலாகிய பிரயோஜனத்தையுடையது என்பர்,

இவ்விரண்டும் தம்முள் மாறுபடாதன, அதனுல் அவ்விடத்திற்குக் காரணம் உயிர்கள் மேற்கொண்ட கருணையே.

வினு:- காரணம் என்ன என்றுல் பயன்கூறி விடுத்தல் விடை வழுவாகாதோ?

விடை:- ஆகாது. பெத்தம் முத்திஇரண்டிலும் செய்வனவற்றிற்கு அவ்வருள் காரணமென்பதே தாற்பரியம்.

வினு:- அப்படியேயாயினும், அநுக்கிரகமல்லாத மற்றைநாற்றெழிலும் பிறப்பிறப்புக்களுட் படுத்துத் துன்புறுத்துவன அல்லவோ? அவற்றைச்செய்தல் அருளாதல் எவ்வாறு ?

1. விடை:- ஒடுக்கம் (சங்காரம்) இளைப்பாற்றுவது.

2. தோற்றம் (சிருட்டி) வினைதீரும் வழியால் மலபரிபாகம் வரச் செய்வது.

3. நிலை (ஸ்திதி) வினை தீருமாறு அதை நுகரச்செய்வது.

4. மறைப்பு (திரோபவம்) இருவினையொப்பு வருவித்து மலங்களை முதிரச்செய்வது.

5. அருள் (அநுக்கிரகம்) தளை (பந்தம்) விடுவிப்பது.

இவ்வாறு ஐந்தொழிலும் உயிர்க்கு உறுதியைப் பயப்பன ஆதலின், அவையெல்லாம் அருட்செயலேயாகும் அவற்றுட் சில மறச்செயல்போலும் எனப் பழிப்ப தொழிக.

வினு:- மேல், முத்தொழில் என்றுய், இங்கு ஐந்தொழில் என்றுல் மலைவாகாதோ?

விடை:- மறைப்பை நிலையிலும் அருளை ஒடுக்கத்திலும் அடக்கி, ஐந்தொழிலை முத்தொழிலென்றல் மரபாதலின் மலைவாகாது.

வினு:- இங்கே நாத்திகர் முதலிய மூவர்மதம் பரிகரித்தவாறு எப்படி?

1. விடை:- நாத்திகர் சங்காரக்கடவுள் செய்யுந்தொழில் மறமாய் முடியும் என்பர். அது கருணையே எனப் பரிகரிக்கப்பட்டது.

2. மாயாவாதிகள், வீண்தொழில் என்பர். அஃது இளைப்பாறுதல் முதலிய பயனுடையன எனப்பரிகரிக்கப்பட்டது. 'உயிர்க்குறுதிப் பயத்தன' என்று கூறப்பட்டதே அது.

3. பரிணமவாதிகள், தன் பொருட்டு என்பர். அது சங்கார கர்த்தாவின் பொருட்டல்ல. உயிர்களின் பொருட்டே என்று கூறி அது பரிகரிக்கப்பட்டது.

வினு:- முதல்வன் அநாதிமுத்த சித்துருவன் என்பது எப்படி? அவ்வுரு அருவோ? உருவோ? அருவுருவோ?

விடை: முதல்வனுக்கு அம்மூன்று உருவும்உண்டு. அநாதி முத்த சித்துருவம் சொரூபம். அருவம் முதலிய மூன்றும் தடத்தம்.

வினு:- முதல்வனுக்கு உருவம் உண்டாயின், எல்லா உருவங்களும் ஒருதன்மையன ஆதலின், நாம் உருவத்தால் பரதந்திரம் அடைவதுபோல அவனும் அடைவானே? சுதந்திரம் எவ்வாறு நிலைக்கும்? நிலைத்தால் நமக்கும் சுதந்திரம் இருக்கவேண்டுமே! ஏன் இல்லை? நம்மனோர்க்கும் யோகிகட்கும் மிக்க வேறுபாடுண்டு. அதுபோல யோகியர் முதலிய நம்மனோர்க்கும் முதல்வனுக்கும் மிக்க வேறுபாடுண்டு. ஒப்புமை கூறுதல் பொருந்துமோ? உருவடிவெல்லாம் ஒருதன்மையனவாம். ஆதலின், உருவத்தின் வேற்றுமையில்லாத வழி, அவ்வேறுபாட்டால் ஒருபயனு மில்லை.

விடை: அங்கம் - உறுப்பு. அங்கி - உறுப்பி. தேகம் - தேகி என்பன போல்வன, அங்காங்கிகள். அங்கியின் ஏற்றத்தாழ்வால் அங்கங்களும் ஏற்றத் தாழ்வுடையன அன்றித் தம்முள் ஒப்பன அல்ல. நம்மனோர் பலரும் ஆணவமலச் சார்புடைய பசுக்கள் ஒன்றையே அறிவதும், ஒன்றையே செய்வதும், ஒன்றற்கே முதன்மையாதலும் ஆகிய அற்பஞானமும் அற்பத்தொழிலும் அற்பமுதன்மையும் உடையவர்கள்.

முதல்வனே மலரகிதனும் முற்றறிவும் முற்றுத்தொழிலும முழுமுதன் மையும் உடையவன். இவ்வாறு அங்கிகட்கு ஏற்றத்தாழ்வுள்ள காரணத்தால் அங்கங்கட்கும் ஏற்றத்தாழ்வுள்ளன. பதியும் பசுவும் அங்கிகள். பதியின் உருவும் பசுக்களின் உருவும் அங்கங்கள்.

மலசம்பந்திகளாகிய பசுக்கட்கு அம்மலச்சார்புடைய ஏகதேச ஞானத்தைச்செய்யும் **மாயையுருவம் ஆயிற்று.**

மலரகிதனாகிய முதற்பதிக்கு மலம்நீங்கிய உயிர்க்கு வியாபக அறிவைச் செய்யும் **சத்தியுருவமாயிற்று.** அநாதிமுத்த சித்துருவாகிய பசுபதிக்கும் அநாதிபெத்த சித்துருவாகிய பசுக்கட்கும் ஒரு தன்மையவான உருவம் அமைந்தால் பெத்தம் - முத்தி என்ற அடைமொழி கொடுத்துப் பொருள் வேறுபாடு குறித்தல் வேண்டாததன்றோ? இயல்பான உருவ முதலியவற்றின் வேறுபாட்டை நோக்கியே அவ்வடைமொழிகள் தந்து பொருளை வேறுபடுத்தி உணர்த்தி வருகின்றனர்.

ஏகதேச ஞானத்தைச் செய்யும் பெற்றி ஏகதேசப்படுந்தகுதியுடைய பொருளுக்கேயன்றி மற்றதற்குரியதன்று. வியாபகஞானத்தைச் செய்யும் இயல்பு வியாபகப்பொருட்கே அன்றி ஏகதேசத்திலறியும் பசுக்களுக்கு ஏகதேசப்படுந் தகுதியுடைய மாயையே உருவமாயிற்று. வியாபகமாயறியும் பசுபதிக்கு அதுபோல் ஏகதேசப்படுந்தகுதியில்லாத சத்தியே உருவமாயிற்று.

வினா:- சிவசத்திக்குப் பரிணமித்து அழிவெய்தல் ஏலாது. உருவமெல்லாம் கண்டிதப்பொருள். அதனால், முதல்வன் அருவப்பொருளாதல் மாத்திரமே அமையாதோ?

விடை:- ஆறு அத்துவாக்களையும் கடந்த பொருளை அவற்றோடொக்க வைத்து அப்படிச் சொல்வது அமையாது.

வினா:- முதல்வன் அருவமென்றதால் அத்துவாக்களுளொருவனாய் முடிதல் எவ்வாறு?

விடை:- ஆகாயம் முதலியவை அருவப்பொருள். அவை உருவத்தின் தன்மையை உடையன ஆகா. நில முதலியவை உருவப்பொருள். அருவத்தின் தன்மையை உடையன ஆகா. திங்கள் முதலியவை அருவுருப்பொருள். அவை அருவியல்பேஉடையனவும் ஆகா. உருவியல்பே உடையனவும் ஆகா. இவ்வாறு ஆறு அத்துவாவுட்பட்ட எல்லாப் பொருள்களுள்ளும் ஒன்று மற்றொன்றின்

தன்மையை உடையதாகமாட்டாது. ஆதலால், அநாதிமுத்த சித்துருவாகிய முதல்வனே அருவப்பொருளே எனின், ஜீவனும் அவைபோல மாட்டாமை யுடையன் எனப்பட்டு அவற்றுள் ஒருவனும் முடியும்.

வினு:- அவ்வாறன்றிச் சத்தியே வடிவென்ருல், பரிணுமமாகும். ஆகவே, அநித்தமும் ஆய்விடும் என்ற குற்றத்திற்குப் பரிகாரம் என்ன?

1. விடை:- அநாதிமுத்த சித்துருவாகிய என் அப்பன், கட்டு வீடு என்னும் பதங்களையுடைய பசுபதார்த்தம் பாசபதார்த்தங்களின் இயல்பை யுடையவனல்லன்.

2. தோற்றம் இறுதி இல்லாதவன்.

3. அவை இல்லாதவனுதலின், அளவை (பிரமாணங்)கட் கெட்டாதவன்.

4. அருவம், உருவம், அருவுருவம் என்னும்முக்கூற்றுள் இன்னவனு வான் என்ருே அம்முக்கூறும்படும் விருத்தி, பரிணுமம், விவர்த்தனம் என்பவற்றுள் ஒன்றின் கண் படுவனென்ருே படானென்ருே சொல்வதற்கு ஓராசங்கையில்லை. அதனுல், அதற்குமறுமொழியாகிய பரிகாரமுமில்லை.

வினு:- உருவமுடையவரெல்லாரும், 1. விகாரப்படுதலும் 2. ஏகதேச மாதலும், 3. துடக்குறுதலும் உடையராவரே? முதல்வனுக்கு உருவமுளதாயின் அவனும் அவற்றை அடையானே?

விடை:- 1. விகாரப்படுதற்குப் பரதந்திரம் காரணம்.

2. ஏகதேசமாதற்குச் சிற்றுணர்வு சிறு செயல்கள் காரணம்.

3. துடக்குறுதற்கு விருப்பு வெறுப்புக்கள் காரணம் அன்றி வேறில்லை.

அநாதிமுத்த சித்துருவாகிய முதல்வனிடத்தில் அவ்வுபாதிகள் இல்லை. அதனுல், அக்குற்றங்களுக்கு அப்பாற்பட்டவன். மலநீக்கமுடைய ஆத்துமாக் களினறிவில் தங்கி அவர்களின் ஞானக்கிரியைகளைப் பொருத்துபவன். அவன், தான் நினைத்த வடிவைத் தனதாக்கிக்கொண்டருள்வன்.

வினு:- அக்குற்றங்கள் இல்லாத முதல்வன் உருவமில்லாமலேயே எல்லாத்தொழிலுஞ்செய்ய வல்லவனுவனே! உருவம் கொள்ளுதலால் போந்த பயன் என்ன?

1. உயிர்க்குத் தன் உடம்பை நடத்த மற்றொரு வடிவம் வேண்டா. அதுபோல, முதல்வனுக்குந் தன் உடம்பாகிய உலகத்தை நடத்த (த் தொழிற் படுத்த) மற்றொரு வடிவம் வேண்டா.

2. பிரளயாகலர், சகலர் எனும் உயிரினமிரண்டும் முறையே முன்னிலையிலும் படர்க்கையிலும் நின்று உணர்த்தினாலன்றி உணரமாட்டா.

3. உயிரினங்கள் **பொருளியல்பு** உணர்ந்து வீடுபெறுமாறு வேதாகமங் களைக் கோவைப்படச் செய்தற்பொருட்டும் அதைக் குரு பரம்பரை (வழி)யில் வைத்தற்பொருட்டும் திருமேனி நிச்சயமாக வேண்டப்படும்.

வினா :- அநாதிமுத்த சித்துருவான முதல்வனுக்கு உடம்புண்டேல், அவ்வுடம்பிற்குரிய தொழில் கரணம் புவனம், போகங்களும் உளவாம். ஆதலின், நம்முன்னோர்போல அவனும் சுட்டியுணரப் படுதலையுடையவனாயும் வாக்குமனா தீதன் அல்லனாயும் போகானோ ?

விடை :- முதல்வனுக்கு உருவம் அருளேயாதலின். உயிர்கட்கு உணர்வளிப்பதான அவ்வுருவில் தோன்றும் தொழில்களும் குணங்களும் ஆகிய கரணமும் அவ்வருள்வடிவே. கைகால் முதலிய உறுப்புக்களும் அருள் வடிவே. உபாங்க (ம் புவனபோகங்)களும் அருள் வடிவே. அவ்வருள் வடிவெல்லாம் உயிர்களின் பொருட்டுள்ளனவேயன்றித் தன்பொருட்டுள்ளனவல்ல. அதனால், முதல்வன் சிந்திதனாலும் அசிந்திதனே.

இதுவரை முதல்வனுக்கு உருவத்திருமேனி உண்டு என்பது பிறர்கூறுங் குற்றங்களால் இகந்துபடாமற்காத்து வலியுறுத்தப்பட்டது.

வினா :- அவ்வுருவின் பேதங்களும், அவற்றின் நிகழுந்தொழில்களும், அவற்றாலாயபயன்களும் எவை ? முதல்வன் சிந்திதனாகியும் அசிந்திதனே என்றது எவ்வாறு ?

விடை :- (இஃது ஆகம அளவைப்படி கூறும் விடை) உருத்திரன் 1. விஸ்வாதிகன், 2. விஸ்வகாரணன், 3. விஸ்வத்திற்கு அந்தர்யாமி, 4. விஸ்வரூபி எனல் அசிந்திதன் என்றதற்குச்சான்று.

1. விஸ்வாதிகன் என்பதை அயனும் அரியும் அடிமுடிதேடி அறியா வண்ணம் நீண்ட திருவுருவின் நிலையும்,

2. விஸ்வகாரணன் என்பதை மும்மூர்த்திகளும் தன்னுறுப்பில் தோன்றி நின்றவடிவின் இயல்பும்,

3. விஸ்வத்திற்கு அந்தர்யாமி என்பதை அவன் வடிவிலே விளைந்த வண்ணமே உலகத்துக்கு ஆகும் விளைவும்,

4 விஸ்வரூபி என்பதை மாதியலும் பாதிவடிவம் கூறும் புராண வசனங்களும் அதற்குச் சான்று,

வினா:- அசிந்திதன் என்றதற்கு ஏதுக்கள் உளவோ?

விடை; உள. கேள், முதல்வன்கொண்ட திருமேனிகளில்

1. போகவடிவம் சிலதிருமேனி, (உயிர்கட்குப் போகம்புரிவன).

2. கோரவடிவம் சிலதிருமேனி, (வினைகளை வீட்டுவன).

3. யோகவடிவம் சிலதிருமேனி, (யோகமுத்தி உதவுவன).

1. இம்மூன்று வடிவும் தம்முள் மாறுபட்டவை. அம்மாறுபட்ட பலவற்றையும் ஒருவனே கொண்டு நிற்றல்.

2. அத்தகைய பலவடிவங்களும் அவ்வாறு போகமும் வினைவீடும் போகமும் உதவும் வழியால் அநுக்கிரகம் ஒன்றினுக்கே ஏதுவாதல்

3. தீமை செய்வது நன்மையைத் தருதல் ஆகிய இம்மூன்றும் உலகத்தில் வைத்து அறியப்படாத அதிசய நிலையாதலால், இதுவும் அதற்குச் சான்று.

வினா:- அசிந்திதனே என்றதைக் கண்கூடாகத் தெளிவிக்கலாமோ?

1. விடை:- முதல்வியாகிய காமக்கண்ணியம்மை கச்சித்திருவே கம்பன் திருக்கண்களைப் புதைத்த திருவிளையாட்டின்கண் நிகழ்ந்தது அவ்வேடம் எல்லாம் அருள்புரி தொழில் என்பதற்குச் சான்று.

2 கண்ணுதற் கடவுள் போகத்திலிருந்த காலத்தில் வேட்கையை விளைக்க மன்மதன் இருக்கவும் தேவர் முதலியோர் மெலிந்த நிகழ்ச்சியும்.

3. அம்மெலிவு கெடற்பொருட்டு மாலவன் மன்மதனை ஏவியதால், அவன் சிவபிரானாகிய யோகவேந்தன் திருமுன் சென்று நெருப்புக் கண்ணாற் கறுத்து வெளுத்த நிகழ்ச்சியும் பலவேறுவகைப்பட்ட அருள்புரி தொழிலுக்கும் அவ்வேடம் இன்றியமையாதன என்பதற்குச் சான்று.

இவ்வாறு வேடமெல்லாம் ஆவசியகம் என்பதும் அறியலாம்.

வினு:- பிறர்க்குரிய வடிவங்களை முதல்வனுக்குரியவாக்கிச் சொல்லியது ஏன்?

விடை: சீகண்ட ருத்திரர்க்குரிய வடிவு பெயர் தொழிலெல்லாம் முதல்வனுக்கும் ஒப்பவுள என்பது ஆகமப் பிரமாணம்.

வினு: அவ்வடிவம் உபதேசத்திற்கே யன்றி ஐந்தொழில் செய்தற்கும் வேண்டுமோ?

1. ஆம், சரமும் அசரமும் ஆகிய எல்லாப்பொருளும் முதல்வன் திருமேனியில் ஒவ்வோருறுப்பினின்று தோன்றச்செய்தல் வேண்டும். (படைப்பு)

2. ஊனநடனம் இயற்றுதல் வேண்டும். (மறைப்பு)

3. மாதராளோடியைதல் வேண்டும். (நிலை)

4. யோகிருந்துகாட்டல் வேண்டும். (அருள்)

5. தோன்றிய முறையே அவ்வவ்வுறுப்புக்களில் ஒடுக்கல்வேண்டும் (அழிப்பு)

இவ்வாறுதலின், உருவத்திருமேனி ஐந்தொழிற்கும் இன்றியமையாச் சிறப்பின்வேயாம்

1. வினு:- முதல்வனுக்கு உபசாரத்திருமேனி எவை?

விடை:- அருவம், அருவுருவம், உருவம் ஆகிய மூன்றும் உபசாரத் திருமேனிகள். அத்திருமேனியும் நம் பிறப்பொழிக்கவந்த கருணை வடிவமேயாம்.

2. வினு:- மாயைவடிவனுகாமேல், அத்துவாரூபன் என்று ஆகமங்கள் உரைப்பது பொருந்துமோ?

விடை:- எல்லாமாகி அல்லவாய் உடனுமாம் இயல்புடைய முதல்வனுக்கு, அவனது திரோதானசத்தியால் அவற்றோடுள்ள சம்பந்தம் நோக்கிக் கூறும் உபசாரமேயாம்.

3. வினு:- அத்துவாக்களுள் மந்திர வடிவத்தை மட்டும் சிறந்தெடுத்து ஓதுவது ஏன்?

விடை:- தலைமையும் பயனும் பற்றி விசேடவுரிமையாதல் கருதி அதைச் சிறந்தெடுத்தோதியது.

4. வினா:- மந்திரங்களுட் பஞ்சப் பிரமமந்திர வடிவம் சிறந்ததெப்படி?

விடை:- மற்றைய மந்திரங்கட்கெல்லாம் முற்படத் தோன்றி முற்படக் கொண்ட வடிவமாதலால் அது சிறந்தது

(இந்நான்கு விடைகளும் உபசாரத்திருமேனியாக அறிவித்தலறிக.)

வினா :- சங்காரகர்த்தாவே முதல்வன் என்பது எவ்வாறு ?

விடை :- வேதாகமங்களில் அயனுருவம் அரியுருவம் முதலியவற்றை அரனுருவோடு ஒத்தவுருவாக வைத்துத்தத்தம் எல்லை வரையும் அத்துவநியாசம் மந்திரநியாசம் முதலியவற்றை விதித்தலால் சங்காரக் கடவுளோடொப்ப அவரும் முதல்வராவர் என்பது பொருந்தாது. படைப்பு முதலிய தொழில்செய்யும் செநநி முதலிய சிவசக்திகள் ஓரோவொன்று அவரிடம் பதிந்து நின்று செலுத்துவதால் அத்தொடர்புபற்றி வேதாகமங்களில் அவ்வாறு உபசரித்தோதப்பட்டன.

அரசனது சக்தியொன்றே மந்திரி, படைத்தலைவர், பாடிகாவலர் முதலியோரிடத்தில் நின்று செய்யுங் காரியங்களின் வேறுபாட்டாற் பலவேறு வகைப்பட்டாற்போலச் சிவசக்தியொன்றே அவ்வவரிடத்தில் நின்று செய்யுங் காரியங்களின் வேறுபாட்டால், செநநி முதலியனவாய்ப் பலவேறு வகைப்படும். அந்த மந்திரி முதலோர் எவ்வெவை செய்தாலும் அரசன் எண்ணியவாறன்றி ஆகா. அதுபோலப் போகம் வீடு பேறுகளெல்லாம் அரன் நினைந்தவாறே யன்றி ஆகா. அதுப்பற்றிச் சிவசக்தி ஒன்றே என்பதும் அதுவே கடவுளரிடத்தில் நின்று நடாத்தும் என்பதும் அறியப்படும். படவே அவனே முதல்வன் என்பது தெளிவாயிற்று.

உயிர்கட்கு அநுக்கிரகமாத்திரம் கருதிப் பொது வகையாலறிந்தும் அறிவித்தும் நிற்பதாகிய ஞானம் ஒன்றே சிவசக்தியின் சொரூபம்; அதுவே பராசத்தி. உயிர்கட்கு மலபரிபாகம் வருவதற்காக ஐந்தொழில் செய்யக்கருதிச் சிறப்பு வகையால் வியாபரிக்கும் போது ஒரு பகுதியால் திரோதானசக்தி என நிற்கும். நின்று இச்சா ஞானக் கிரியை என முத்திறப்பட்டு வியாபரிக்கும். வியாபரித்தாலும் அம்மூன்றும் ஞானத்தின் வேறல்ல, காரியத்தால் பலவான செநநி முதலிய வியாபாரசத்திகளெல்லாம் முற்கூறப்பட்ட பராசத்திரூபமான ஞானம் ஒன்றால் உண்டாவனவேயாம்,

பராசத்தியாவது தடையிலா ஞானம். இது பொதுமையாலொன்றாம். இதுவே வியாபாரபேதத்தால் இச்சா ஞானக் கிரியை என மூன்றாம். அவையே மற்றும் அவ்வச்செயல் வேறுபாட்டாற் பலதிறப்படும். **அம்மூன்றும்** முறையே.

1. உயிர்கட்கு மலத்தைநீக்கிச் சிவத்தை அளித்தற்கண் உளதாகிய கருணையும்,

2. அதற்குச் செய்யக்கடவ உபாயங்களையெல்லாம் அறியும் அறிவும்,

3. அவற்றை அவ்வாறே சங்கற்பித்துச் செய்யும் சங்கற்பமுமாம்.

(இச்சை - கருணை, ஞானம் - அறிவு, கிரியை - சங்கற்பம்). இதுவரை அநேகேசுரவாதி மதத்தை மறுத்துச் சங்கார காரணனொருவனே முதல்வன் என்பது உணர்த்தப்பட்டது அவ்வுண்மையை நுணுகியறிக

வினா:- இச்சா ஞானக் கிரியைகள் உயிர்க்கும் இருத்தலால், அவ்வுயிரும் முதல்வனும் ஒன்றாகாவோ?

விடை : உயிர்களின் இச்சா ஞானக்கிரியைகள்,

1. **கேவலத்தில்** மூலமலத்தால் மறைக்கப்படுதற்குரிய தன்மையும்,

2. **சகலத்தில்** கன்மத்தளவில் ஏகதேசப்பட்டு நிகழ்தற்கு உரிய தன்மையும்,

3. அக்கன்மத்தால் வரக்கடவதாகிய போகப்பயன்போலச் **சுத்தத்தில்** அதனின் வேறான முத்திப்பயனும் முதல்வன் கொடுக்கவே கொள்ளுமுரிமைத் தன்மையும் உடையன.

முதல்வனுடைய இச்சா ஞானக் கிரியைகள் இத்தன்மைகளில்லாதன. அதனால் வேற்றுமை மிகவுண்டு.

வினா: ஆகமங்களில் இலயசிவன் போகசிவன் அதிகாரசிவன் எனப் பன்மை கூறுதலால், அவனே முதல்வன் எனச் சங்காரகர்த்தா ஒருவன்மேல் வைத்தோதுவது அமையுமோ?

விடை : முற்குறித்த சிவசத்தி மூன்றில் இச்சை யாண்டும் ஒருதன்மை யதாய் வியாபரிக்கும். ஏனைய ஞானமும் கிரியையும், தனித்தனியாயும், சமமாயும், ஏற்றக்குறைவாயும் வியாபரிக்கும். அது வருமாறு:-

1. சிவம் - ஞானமாத்திரம் வியாபரித்தது

2. சத்தி - கிரியை மாத்திரம் வியாபரித்தது

3. சதாசிவம் - ஞானக்கிரியை சமமா வியாபரித்தது

4. மகேசுரம் - ஞானங்குறைந்து கிரியை ஏறியது

5. சுத்தவித்தை - ஞானம் மிகுந்து கிரியை குறைந்தது.

என்று இவ்வாறு ஐவகைப்பட்டு, 1. இலயம், 2. போகம், 3. அதிகாரம் என்று மூன்ருயடங்கும் அவத்தைகளையும் அவத்தைக்கேதுவாய் அவ்வாறு வேறுபட்ட ஆதாரங்களையும் உடையவனுகிய உருத்திரனொருவனே அவ்வப் பெயர்பெற்று நிற்பான்.

அவ்வவ் வியாபாரங்கட்கு இடமாய் ஐவகைப்பட்டு மேற்கூறிப்போந்த அவ்வப்பெயரே பெயராகக்கொண்ட ஐந்து சுத்த தத்துவங்களும் அவ்விறைவனுக்குச் சுதந்திரமாகிய அதிட்டானமும் ஆம்.

முன்பின்னுக நிகழும் ஞானக்கிரியா சத்தியிரண்டன் வியாபார பேதம் பற்றி இவற்றிற்கு முற்பிற்பாடு கூறப்படினும், இவ்வைந்தும் தோன்றிய பின்னர்க் காலதத்துவம் தோன்றிற்று. அதனுல், பிற்றேன்றிய காலம்பற்றி, முற்றேற்றங்கட்கு முற்பிற்பாடு கூறலாகாது; காலவரையறையைக் கடந்து நிற்றலால், அதுபற்றி இவை சிவனுக்கு நித்திய அதிட்டானம் என்று சொல்லப்படும்.

கூத்திற்குரிய பல வேடங்கட்டி ஒருவன் நடித்தாலும் அவன் தன்னியல்பிற் சிறிதும் பிறழான். முதல்வன் வேறுபாடு (விகாரம்) எல்லாம் அவனது சத்தியிற் காணப்படுவன. அதுபற்றித் தன்னியல்புவேறுபட்டு விகாரியாகான். சத்திகுணம், சத்தனுகிய சிவன் குணி, எல்லா விகாரங்களும் குணமாகிய சத்தியில் காணப்படுவன.

படிகம் பொன்மை நீலம் முதலிய நிறங்களைத் தன்னிறமே பற்றிடத் தானும் அத்தன்மைகள் எல்லாமாய்த்தோன்றி, வேற்றுமையின்றி நிற்கும். அதுபோல முதல்வனும் தனது சத்தியிற் காணப்படும் அப்பேதமெல்லாம் தானுகத்தோன்றி வேற்றுமையின்றியே நிற்பான். அவன் யாண்டுஞ் சத்தியினிடமாகவேதோன்றுவான். தானுக வேறு தோன்றுன்.

வினு: முதல்வன் பொதுவியல்பு பலவும் தொகுத்துணர்தல்படுமோ?

விடை:- சத்தி சிவம் என்னும் இவ்விரு வேறுவகைத் தன்மைகள் அவ்விறைவனிடத்தில் உள்ளமையால்தான் பல வேறுவகைப்பட்ட உயிரின் வடிவெல்லாம் குறிகுணமிரண்டாலும் ஆண் பெண் என அவ்வவ் யோனிக்குள் இரு வேறுவகையா யடங்கித், தம்முள் கூடிக்களித்து வாழ்கின்றன. இத்தகைய

வாழ்வுகளெல்லாம் சிவம் சத்தியிரண்டன் மணத்தாலாயினவே. அச்செல்லாம் இலிங்காங்க பகாங்கமாகும்படி சிவமும் சத்தியும் கொண்டருளிய பீடலிங்க வடிவே அங்ஙனம் இரு வேறுவகைப்பட வைத்ததைக் கண்கூடாக அறியச் செய்யும் சான்று.

வினா:- முதல்வனுக்குரிய சிறப்பியல்புகளைத் தொகுத்துணர்த்தலாமோ?

விடை:- உணர்த்தலாம், முன்போந்தன எல்லாம் முதல்வனுக்குத் தடத்தலட்சணமே. அவற்றின் வேறுவதே சொரூபலட்சணம். அச்சச்சிதாநந்த சொரூபி அருவனல்லன், உருவனல்லன், அருவுருவனல்லன் சித்துமல்லன். பஞ்சக்கிருத்தியம் பண்ணுமவனுமல்லன், வடிவங்கொள்வதில் யோகியுமல்லன், போகியுமல்லன். அவற்றைப்பொருந்திநின்றாலும் அவற்றில் சிறிதும் பொருந்தாத வனே நம் முதல்வன்.

## இரண்டாவது சூத்திரம்

(பாசவுண்மை)

**அவையே தானே யாய்இரு வினையின்**
**போக்கு வரவு புரிய ஆணையின்**
**நீக்கம் இன்றி நிற்கும் அன்றே.** (சிவஞானபோதம்)

*உலகெலா மாகி வேறாய் உடனுமாய் ஒளியாய் ஓங்கி*
*அலகிலா உயிர்கள் கன்மத் தாணையின் அமர்ந்து செல்லத்*
*தலைவனாய் இவற்றின் தன்மை தனக்கெய்த வின்றித்தானே*
*நிலவுசீர் அமல னாகி நின்றனன் நீங்கா தெங்கும்.* **(சித்தியார்.)**

வினா:- இதில்கூறப்படுவது யாது?

விடை:- இதில்பாசநிச்சயம் கூறப்படுகின்றது.

வினா:- இச்சூத்திரப்பொருள் என்ன?

விடை:- முதல்வன் புநருற்பவம் செய்யும்போது, உயிர்களிடத்தில் (1) உடலும் உயிரும். (2) கண்ணும் கதிரவனும். (3) அறிவும் ஒளியும் போலப் பிரிக்கமுடியாத அத்துவிதமாய், அவ்வவ்வுயிர்களின் வழியே நிற்பதான **சத்தி ரூபமாயும்** தன் ஆணையால் வரும் இருவினைக்குத் தக்கவாறு அவ்வுயிர்கள் பஞ்சகிருத்தியத்துட்பட்டுச் செல்லும்போது அவ்வைந்தொழில் நடாத்துவதான

பதி ரூபமாயும், அத்தன்மைகளின்வேருய் அவற்ருேடும் தாதான்மியமாய், எவ்விடத்தும் தானே சுயம்பிரகாச ரூபமாம் இயல்புடையனுய் நிற்பன் என்பதே இதன்பொருள்.

வினு:- வேதத்துள் ஆன்மா ஒன்று என்றதன் கருத்து என்ன?

விடை:- பரமாத்மா ஒருவனே என்பதாம்.

வினு :- அதன் விளக்கம் யாது ?

விடை :- அகரம் ஒன்ருய்ப்பல எழுத்துக்களிலும்கலந்து நின்றதுபோலப் பரமசிவன் ஒன்ருய்ப் பல உயிர்களிலும்கலந்து நிற்பன். வேருகியும் உலகெலாம் ஆகி நிற்றல் உணர்த்தப்பெறுகின்றது. இவ்வாறு வேருய் ஒன்ருய் உடனு யிருத்தல் அறிக.

வினு :- இருவினையைப்பற்றிய ஆராய்ச்சி என்ன ?

விடை :- அவ்வுயிர் முற்பிறவியிற் செய்யப்பட்டுக்கிடந்த இருவினைக் கிடாக இப்பிறவியில் வருவது இன்பத்துன்பநுகர்ச்சி. அந்நுகர்ச்சியால் மேலும் வினையேறும். ஏறுதலால் மீண்டும்மீண்டும் பிறந்திறத்தலும் துறக்கம் நிரயங்களில் சென்று மீளலும் உயிர்க்குள்ளன. உடம்பொடு நிலைபெறும் அவ்வினைப்பயன்களை வைத்தியனும் அரசனும்போல முதல்வனே அவ்வுயிர்க்குக் கூட்டுவன். அம் முதல்வன் தானே நேர்நின்று கூட்டான். தன் ஆணையாற்கூட்டுவன். அவ்வா றின்றி அவ்வினைகளே மறுமையில் வந்து கூடமாட்டா. அதற்குக்காரணம்:- சடமாயிருத்தல்.

தண்ணீர்க்குவாசமும் வெப்பமும் செயற்கையாதல்போல ஒரு பொருளுக்கு மாறுபட்ட இரண்டு தன்மை காரணத்தால் அன்றி உளவாகா. இன்பத்துன்ப நுகர்ச்சி சித்துக்கன்றிச் சடத்துக்குக்கூடாது, இருவினை எனப் படும் சஞ்சிதமே இன்பத்துன்பங்கட்குக் காரணம்.

அக்காரணம் முயற்சியன்று. சோம்பலின்றி முயலுங்கால் தளர்வுவருத லாலும், தளராது முயன்ருலும் பயன்கிட்டாமையாலும், வேண்டாதது விளைவ தாலும், ஒரு முயற்சியும் புரியாதவர்க்குச் செல்வம் முதலியவை உண்டாதலாலும் முயற்சியின் வேருய் நியதகாரணமாய் அங்குப்புலனுகாத சஞ்சிதவினை உண்டு.

இன்பத்துன்பங்கட்கு ஏதுசெல்வவறுமைகள், அவற்ருல்வரும் உயர்விழி வுகள், அவற்ருலாகிய இன்பத்துன்பங்கள் ஆறும் முன்னரே சூக்குமமாகக்

கருவில் அமைந்துகிடந்தவை. அவ்வப்போது உண்டாவன அல்ல. முயற்சி அவற்றைத் தூலமாய் வந்து கூடச்செய்யும் அம்முயற்சி அவற்றை அநுபவித்தற்குத் துணையாய் எழுந்து, அவ்வளவோடு அமையாது மற்றொருடம்பிற்படும் அவ்வாறு வகைக்கும் வித்தாகும், முற்பிறவியில் நிகழ்ந்த முயற்சி இப்பிறவியின் வரும் அவ்வாறற்கும் ஏதுவானாற்போலும் அவ்வளவே முயற்சியாலாவது, வேறில்லை.

உடலும் வினையும் வித்தும் மரமும்போலத் தம்முள் காரணகாரியமாய்த் தொன்றுதொட்டுப் பிரவாகாநாதியாய் வருதலின், அவற்றிற்குத் தம்முள் முற்பிற்பாடு வரையறுக்க முடியாது முன்வினையாவன நன்மை தீமைகள். (ஹிதம் அஹிதம்) அவை முற்பிறவியில் அவ்வாறு நிகழும் முயற்சியேயன்றி வேறில்லை. இப்பிறவியில் நிகழும் முயற்சி மேலைக்கு வினையாகும். அநுபவமாவது முயற்சியை ஒட்டியே நிகழும், பிராரத்த வினையுள்ள அளவும் முயற்சியும் இருக்கும். உலகில் உண்ணவிளைந்த பழம் முதலியவை உணவுமாய் வித்துமாதல் கண்கூடு, அதுபோல, 'நாம்' என்னும் முனைப்பாற் செய்யப்படும் முயற்சியும் **செயல்வகை**யால் வினைக்கீடாக வரும் அநுபவத்தைப் பயக்கும். **கருத்து** வகையால் ஹிதம் அஹிதம் எனப்படும் ஆகாமிய வினையைப்பயக்கும். ஹிதம் - உயிர்க்கு உறுதி என்று வேதாகமங்களில் விதித்தவற்றைச் செய்தல். அஹிதம் - அவற்றின் மறுதலையைச் செய்தல். அவ்விரண்டையும் அறியவல்லவன் முதல்வன். அவனே அவற்றைக்கொண்டு பயனளிப்பான், முதல்வன் அவற்றை ஏற்றுக்கொள்வது உயிர்கள் வீடுபேற்றை யடைதற்பொருட்டு வைத்த கருணையாகிய காரணம் பற்றியேதான். கருணை யானலும் காரணம் ஹிதமும் அஹிதமுமா யிருவேறு வகைப்பட நிகழ்ந்ததால் பயனும் இருவேறு வகைப்பட்டன. அஹிதம் செய்தவரைக் கண்டிப்பது நல்வழிப்படுத்தற்பொருட்டே ஆதலின் அதுவுங் கருணையேயாம், இவைபோன்றவை **செயல்வகை**யால் கோபம்போலிருப்பினும், **கருத்துவகை**யால் கிருபையே ஆதல் முடிவில் விளங்கும். ஓர் உதாரணம் வருமாறு :-

சென்னையில் ஆங்கிலங்கற்றிருந்த ஒருவர் தம் கல்லூரிக்குச் செல்ல மோட்டாரிலேற விரைந்தார். அதை ஓட்டுபவன் அவரை ஏறவொட்டாது, தனக்கு வேண்டிய ஒருவனை ஏற்றிச்சென்றான். பின் வண்டியில் இவர்க்கு இடம் கிடைத்தது. முன்வண்டி சைதாப்பேட்டைப் பாலத்தின்கண் சென்றபோது ஆற்றில் விழுந்து, வண்டி யோட்டியும் அவன் பக்கத்திருந்த ஒருவனும் இறந்தனர். மற்றையோர் காயமடைந்தனர். அக்காட்சி எய்தியவேளையே அக்கல்லூரி மாணாக்கர்க்கு அதில் தன்னை யேற்றாமையின் பயன் விளங்கும் முடிவான காலம். அப்போது தன்னை ஏற்றாத காரணத்தால் (வினையின்) வந்த கோபம், பயனை நோக்கிக் கடவுள் கருணை இவ்வாறிருந்ததுபோலும் என்று எண்ணுங்கால் நீங்கிற்று.

வினைகள்தாமே தம்பயனைத் தோற்ற வல்லன அல்ல முதல்வன் துணை வேண்டும்.

செய்தவினை கெட்டுப் பயன்தருதல் சிலவற்றிலன்றி, யாண்டுஞ் செல்லாது. வயலில்இடுந்தழையும் வாயில்இடும் (உண்ணும்) மருந்தும் இட்ட இடத்திற் கெட்டுப் பயன் தரும்.

உண்டவுணவு முதலியவை வயிற்றிலிட்டால் அங்குப்பயன் என்ன? அசாரமன்றோ? இவை கிடந்த இடத்தே கெட்டு ஆண்டே பயன் தருவனவாம்.

வினை அவ்வாறல்ல. இவ்வுடம்பிற் செய்யும் வினை இங்கேயே கெட்டு மற்றோருடம்பிற் பயன் தருவன. தீயொழுகக் காய்ந்த கலத்தில் ஊற்றிய நீர் முதலியவற்றிற்போல ஓரிடத்திற் கெட்டபொருள் பிறிதோரிடத்தில் பலியாமை காணலாம். வேறிடத்திற் பயனுதற்குரிய வினை தானே பயனுய் வாராது.

வினைக்குப்பயன் 1. துறக்கம், 2. நிரயம், 3. நிலம் என்பவற்றுட் பட்ட பல வேறுவகைப் புவனபோகங்கள் அவையெல்லாம் வயலின் விளைவுபோல ஆன்மபோதத்தில் கிடந்து தோன்றுவனவல்ல.

எல்லாச் செய்தியும் அதன் தன் செயப்படுபொருளிற்கிடந்து பின் பயன் தாராது. செயப்படுபொருள் முதலிய எல்லாம் நிலையாது கெடுவன. நிலையா நின்று பயன்தருமுதல்வன் வேறு வேண்டும். முயற்சி முதல்வனது ஏவல். அது பழவினையை நுகர அவனுல் தரப்படுவது. அதை நாமாக முனைந்து நின்று செய்தால் அதுதீர அச்செய்தியாலாய பாவபுண்ணியங்களை அறிந்து, அவ்வ தீர்தற்குரிய பயன்தருதல் அவ்வேவுகின்றவனுக்குக் கடப்பாடு.

இச்செய்தி ஈசனிடும் பணி (-ஏவல்). அது விளங்கக் கேள்.

உயிர்க்குத் துணையாக ஏழு காரகங்கள்வேண்டும் .அவை 1. உடல், 2. கர்ணம் 3. காலம், 4. பலம், 5. நியதி, 6. செயல் என்பன. அவற்றுள் நியதியை இன்னதற்கு 7. இதுபயன் என இரண்டாகக்கொண்டு ஏழாக்குக. 8. உயிரே வினைமுதல், ஆகக் காரகம் எட்டு. அவ்வெட்டனுள் வினைமுதற்காரகம் ஆன்உயிர்மற்றையஏழு காரகங்களையும் தனக்குத் துணையாகக்கொண்டு வினைகளைச் சம்பாதிக்கும். அநுபவிக்கும்

அக்காரகங்கள் சடம் அவை தாமே தொழிற்படா, அவற்றை உயிரே தொழிற்படுத்தும். அவைஇல்லாமல் உயிருக்கு அறிவு வெளிப்படாது. சிற்றறிவுடைய உயிர் அவற்றைத் தானே கூடமாட்டாது. இவ்வாறு பாசமும் பசுவும்

மாட்டாதன ஆயின. ஆதலால் இவற்றைக்கூட்டும் ஆற்றல் பதிக்கே உண்டு என்பது பாரிசேட அளவையால்பெற்றும், முதல்வன் சுதந்திர ஞானத்தன். அவன் தன் ஆணையாகிய திருவருளால் அவற்றை அவ்வவ்வுயிர்க்குப் பொருந்திச் செய்விப்பான். அதனால், அச்செயலெல்லாம் அவன் பணியேயாம்.

வினா :- ஈசன் பணி புண்ணிய பாவமாய் முடிதல் ஏன் ?

விடை :- 1. ஒழுக்கம், 2. அன்பு, 3. அருள், 4. ஆசாரம் (வேதாகம விதிவிலக்கறிந்து நடத்தல்) 5. உபசாரம், 6. உறவு, 7. சீலம், 8. வழுக்கிலாத்தவம், 9. தானம், 10. பெரியோரிடத்தில் வந்தனம், 11. வணக்கம், 12. வாய்மை, 13 அழுக்கிலாத்துறவு. 14. அடக்கம், 15. தக்க இன்ன தகாதன இன்ன என்று ஒக்கவுன்னும் உணர்வு, 16. அர்ச்சனை முதலிய பலவும் நலங்களும் ஒருவனுக்குள்ளன ஆயின், ஈசனிடும் பணியாகிய அம்முயற்சி அறமாய் முடியும்.

இவ்வொழுக்கம் முதலியவற்றின் மாறுபட்ட தீமைகள் ஒருவனுக்குள்ளன ஆயின், அம்முயற்சி மறமாய் முடியும்.

வினா :- எல்லாத்தெய்வ வழிபாட்டிற்கும் பயனளிப்பவன் சிவபெருமானே என்பது எப்படி ?

விடை :- அவ்வொழுக்கம் முதலிய நன்மைகளைக்கொண்டு, அவற்றின் மறுதலையான தீமைகளைத்தள்ளி ஒழுகுமவனுக்குத் தெய்வவழிபாடு யாதாயிருப்பினும், அவ்வறச்செயலை யேற்றுப் பயன் அருள்பவன் பரமேச்சுவரனே யோனி வாய்ப்பட்டுப்பிறப்பன எல்லாம் ஜீவவர்க்கம். அவ்வாறு பிறவாததே பதிப்பொருள். எல்லாத்தெய்வமும் தேவரும் பிறப்பிறப்புடைமை கேட்கப்படுகின்றது. நம் சோணேசன் பிறந்த கதையும் இறந்த கதையும் கேட்கப்பட்டில. அதனால், பரமசிவனொருவனே அவ்வத்தேவரிடமாக நின்று உயிர்கட்கு அவற்றையறிந்துகூட்ட வல்லவன், ஏனைத்தேவர் அது செய்யமாட்டார்

பசு, பார்ப்பார், தந்தை, தாய் முதலாயினோரை இம்மையில் வழிபட்டால் மறுமையிற் பயன்தருவான் கடவுள், அரசனாணை அமைச்சர் முதலோரிடத்து நின்று பிறர்க்கு அளிக்குமாறுபோல முதல்வன் ஆணை அவனேவல்வழி தாமே வினைத்துடக்கிற் பட்டுப் பரதந்திரராய் நிற்கும் அக்கடவுளர், பிறர்க்குப் பயன் கொடுக்கமாட்டார்.

அதனால், சிவனை வழிபடுதலே நல்லதோரறம் அவனையன்றிச் செய்வன யாவும் வீண்.

புண்ணியம் வேதாகமங்களில் அவ்விறைவன் விதித்த விதி. எதிலும பற்றின்றி உயிர்களிடத்தில் கருணை பூண்டு விருப்பஞ்செய்யும் அவ்விறைவன் திருவடிகளைப் பூசித்தலே நிச்சயமாகச் செய்யத்தக்க முடிவான பயனுடைய செயல்.

வினு :- அவனை எங்கனம் கண்டு பூசிப்பது ?

விடை :- சதாசிவ தத்துவத்தில் வைகும் அவ்விறைவன், புறத்தில் திருக்கோயிலினுள் இருக்குந் திருமேனியையும், திருவேடத்தையும், ஆதாரமாகக் கொண்டு நின்றும் அகத்தில் உயிரை இடமாகக்கொண்டு நின்றும், இங்குள்ளவர் செய்யும் பூசையைக்கொண்டு அருள்வான். அதை அறிந்து அவ்விடங்களில் வழிபடுக.

வினு: அறமும் மறமும் (புண்ணியமும் பாவமும்) பயன்தருவது வினைபற்றியோ! வினை செய்வாரைப்பற்றியோ? கொள்வாரைப்பற்றியோ? அம்மூன்று திறத்தின் வன்மை மென்மைபற்றியோ?

விடை :- சிவபத்தர் சிவனடிக்குச் செய்யும் பாவமும் புண்ணியமாகும். பத்தரல்லாதார் அப்பரனடிக்குச் செய்யும் புண்ணியமும் பாவமாகும். இதனுல் வினையின் வன்மை மென்மைபற்றிப் பயன் தருவது அன்று என்றறியலாம்.

'அன்பர்' 'அன்பிலாதார்' என்றதால், அவ்விருதிறத்தாரது மாறுபாட்டால், வன்மை மென்மைபற்றியும் பயன்தருவதில்லை எனல் விளங்கும்.

பாவம் புண்ணியமானதும், புண்ணியம் பாவமானதும், அரனடிக்கே யாதலின், கொள்வாரது வன்மை மென்மைபற்றியே பயன்தரும் என்று விளங்கிற்று.

வினு:- இறைவன் அரசனையும் வைத்தியனையும் போல்வது எப்படி?

விடை :- இருவினை முதலியன அழிவெய்தும், ஹிதாஹிதங்களெல்லாம் சிவபிரானே ஏற்றுக்கொள்வன். அவனே இன்பத்துன்பங்கள் ஈவன். வேதாகமங்கள் சிவபிரான் கற்பித்தருளிய வாய்மொழியே. நரகம், அம்மொழியின்படி நடவாதாரைத் தண்டித்தற்பொருட்டு, அவனுல் அமைக்கப்பட்ட சிறைக்களமே. துறக்கம், அம்மொழியின்படி நடப்பவரை வாழ்வித்தற்பொருட்டு அவனுல் அமைக்கப்பட்ட கோநகரமே (இராசதானியே). இவ்வுண்மைகளால் உயிர்கட்கு இன்பத்துன்பங்கள் அவனுலாகற்பாலனவே.

பூவேந்தர் ஆணையால் சொல்லிய மொழிவழி நடவாதாரைத் தண்டித்துச் சிறைக்களம்படவும் வைப்பர். நடப்பவரை வாழ்வித்துத், தம் கீழ் அதிகாரமும் செய்யவைப்பர் மந்திரி முதலியோரிடத்து அவ்வாறு காணப்படும் ஆணையும் அவ்வேந்தரது ஆணையே யாகும். அதுபோல, சிவபிரான் ஆணையால் சொல்லிய வேதாகம விதிப்படி நடவாதாரை நரகதண்டனை யநுபவிக்கச் செய்வார். நடப்பவரைத் துறக்கபோகம் நுகரச்செய்வார். சிவனுடைய ஆணையைப் பெற்றாரிடத்தும் சிவனாணையே நின்று பயன் செய்யும்.

அரசதண்டம் வைத்தது நரகதண்டம் வாராமற் காத்தற்பொருட்டும் நரக தண்டத்தை அறிவித்தற்பொருட்டும் ஆதலின், அரசனாணையும் முதல்வனாணையின் வழியதாமன்றிச் சுதந்திரமாகாது.

வேதாகமநூல்வழி நில்லாமை பாவம், நூல்வழி நின்று அருள்வழி நில்லாமை புண்ணியம், இரண்டும் உயிர்க்கு நோயே. அதனால் அவற்றால் பந்தம் அடையாமல்காக்கச் சிவபிரானாகிய வைத்தியன் இன்பத்துன்பங்களாகிய மருந்தை ஊட்டுவான்.

வாகடநூற்படி நடவாது தவறி நடந்தால், ஆன்மிகம் பௌதிகங்களால் வரும் நோய்களைத் தக்க மருந்துகளைத் தந்தும், தவறுமலொழுகியும் தைவிகத்தால் வரும் நோய்களை அவற்றிற்குத் தக்க உபாயங்களிலே (தானம், பூசை, ஓமம் முதலியவற்றில் செலுத்தியும் தீர்ப்பான் வைத்தியன். அவ்வாறே சிவபிரானும் உயிர்கட்கு வரும் இருவினையைப் பலதிறத்தாலும் ஊட்டித்தீர்ப்பான்.

முதல்வனால் வரும் இன்பம், வைத்தியனால் தரப்படும் இனிய மருந்து போலும். துன்பம், அறுத்துக் காரம் வைத்துண்டாக்கும் வருத்தம்போலும். எவ்வாறேனும், அவை நோய்தீர் மருந்தே ஆகும்.

வினா:- உயிர்கள் அச்சுமாறிப் பிறத்தல் எவ்வாறு?

விடை:- இத்தூலவுடல் கழிந்தால், தானும் உடன்கழியாமல் நிலை பெற்றிருக்கும் சூக்கும தேகத்திலிருந்து அவ்வினைப்பயன்களை அநுபவித்தற்குரிய வெவ்வேறுடம்புகள் இருக்கின்றன. அதனால், கடவுளாணை செலுத்தச் சென்று துறக்கத்தின்பமும் நரகத்துன்பமும் அநுபவித்து, பின்பு, எஞ்சிய வினையை அநுபவிக்க அச்சூக்கும தேகத்தொடு பூமியிற் போந்து கருப்பாசயத்தைப் பொருந்தும் உயிர்கள்.

பூதனுசரீரம் யாதனுசரீரம் ஆகிய இரண்டில், வினைகளின் வன்மை மென்மைகட்கேற்ப ஏதேனும் ஒன்றை எடுத்தலுண்டு. இச்செயல் இடைவிடாதும் விட்டும் நிகழும்.

பாம்பு தோலுரிய விட்டுச்செல்வதுபோல உயிர் உடலைவிட்டுச்செல்லும். முட்டையைப் பறவை விட்டுச்செல்வதுபோல உயிர் இடத்தைவிட்டுப்போகும். பரகாயப் பிரவேசம்புரிவோர் முன்னைய அச்சினைவிட்டு மற்றோர் அச்சினைப் பற்றுவதுபோல உயிர் அச்சு வேறுபாடுறும். நனவுமாறிக் கனவை அடைவதுபோல அறிவு வேறுபாடுறும். இவையெல்லாம் சுவர்க்க நரககதியின் கட்படும் இயல்புகள்:

வினா:- இதுவரை ஆராய்ந்த கன்மமலமாகிய இருவினையின் சொரூபம் என்ன?

விடை:- கன்மமலமாவது சதசத்தாற் செய்யப்படுவது. புண்ணியம் பாவம் என்றிருவகைப்படுவது. செயப்படுபொருள். செய்பொருளாகிய உயிர்க்கு அவ்விருவகைக்குமுரிய பயன்தருவது. தனக்கொரு முதற்காரணமுடையது. பந்தம் அடைவிப்பதால் மும்மலத்துள் ஒன்று என்று உடன்வைத்து எண்ணப் படுவது. நாசமும் உற்பத்தியும் உடையது. சந்தானமாய் வருவது, காரியப் பிரபஞ்சம்போல ஆதியும் அந்தமும் உடையது பிரவாகாநாதியாய் ஏனை இரு மலங்களின் காரியங்களோடுகூடி உயிரைப் பந்தித்துத் தன் காரியபேதத்திற்கேற்ப அவ்வவ்வுயிர்க்கு வெவ்வேறுப் பலவகைப்பட்ட யோனிகளைத் தோற்றுவித்து, சூக்குமமாய் நின்று இறைவன் ஆணையின் நடக்கும். வினைக்கீடாக அவ்வவ்வுயிர் அவ்வவ்யோனியில் மாறிப்பிறத்தலன்றி அச்சுமாறி மற்றொரு யோனியிற்பிறத்த லுண்டு. கர்மாநுபவம் அடைதற்காக, மனிதராயிருந்து புண்ணியத்தின் பயனை (இன்பப்பெருக்கத்தை)த் தேவராகி அநுபவிக்காமல் நரகராகி அநுபவித்தல் இல்லை.

விண்ணுலகில் மனிதராயிருந்து புண்ணியப்பயனை அநுபவிப்பரெனின், அவ்விண்ணுலகு மண்ணுலகேயாகும், தேவராயிருந்தே அநுபவிப்பரென்றால்; அச்சுமாறாமல் இராது, புண்ணியப்பயனை நுகர்ந்து முடிந்தபின், மீண்டும் மண்ணுலகில் வரும்போது மனிதராவதன்றித் தேவராய்ப் பிறப்பதில்லை.

வண்டு முதலியன அச்சுமாறுதல் கண்கூடு. எல்லாச் சமயங்கட்கும் இது சம்மதம் (பிரத்தியக்ஷமும் ஆகமமும் கொள்ளாதார் கூற்றுப் பொய்யாம்).

அகலிகை கல்லானதும், அரியினவதாரமும், சிலந்தி கோச்செங்கணானதும், எலி மாவலியானதும் அச்சு அழிந்தே மாறுதலைத் தெளிவிக்கும்.

எல்லாம் சாபாநுக்கிரகங்களின் பயனே. இறைவனே மாயையையும் வினையையும் காரியப்படுத்தி உயிர்க்குச்சேர்ப்பான். உயிர் முதலியவற்றின் செயலன்று. அவன் தான் செய்த அச்சினைத் தான் மாற்றுதற்கு வல்லன்.

செய்வானது ஆற்றலால் ஒரு பொன் வெவ்வேறு அணிகலங்களாய்ப் பரிணமிக்குமாறுபோல இறைவனது ஆற்றலால் ஒரு சூக்குமதேகம் வெவ்வேறு அச்சுக்களாய்ப் பரிணமித்துத் தோன்றும். இது சற்காரியமுறை.

சூக்குவுடம்பிலிருந்து தூலவுடம்பெல்லாம் வருவது, ஆரம் வீரசங்கிலியானுற்போல ஒன்று பிறிதொன்ருவதும் அன்று. வித்து மரமானதுபோல ஒன்று கெட்டு ஒன்று தோன்றுவதுமன்று. சந்திரனிடத்துக் கலைகள்போல ஒன்றின்கண் ஒன்று கிடந்து தோன்றுவதுமன்று.

மரவேரில் மற்ருெருமரம்போலச் சூக்கும தேகத்தில் தூல தேகங்கள் சத்திருபமாயிருந்து தோன்றுவன. வித்தின்றி மரம்தோன்ருது. ஒரு முதலின்றித் தூல தேகமும் தோன்ருது. அதனுல் அத்தூலதேகத்திற்கு ஒரு முதல் அச்சூக்கும தேகமாய் உண்டு. (இஃது அருத்தாபத்தி) மோகினியே பரம முதற்காரணம், அதன் காரியம் மூலப்பிரகிருதி, அதன்காரியம் சூக்குமதேகம், அதன் காரியம் தூலதேகம். குண்டலினி சத்தியோ சுத்தமாய் அவை அனைத்தையும் வியாபித்து நிற்கும், இவ்விருவகைப் பிரபஞ்சமும் ஆன்மா, சிவமானபின் தோன்ருவாம்.

அத்தோன்ருமையும், இலயம் போகம் அதிகாரம் என்ற அவத்தைகளின்நின்ற இறைவன் செய்யுஞ்செய்தி; அது கருணையே. இது முன்னுங் கூறப்பட்டது.

தநுகரணுதிகள் மலகன்மங்களாகிய நோய்க்கு மருந்தாக அம்முதல்வன் அமைத்தான். அவற்ருல் நோய் தீர்ந்ததும் பரஞானம் விளங்கும். சிவாநந்தம் உண்டாகும்.

முன் இன்பத் துன்பங்களை மருந்து என்ருேம். இப்போது மாயா காரியங்களை மருந்து என்ருேம். நோய் தீர்தற்கு ஏதுவாகும் பலவும் மருந்தெனப்படும். " உற்றவன் தீர்ப்பான் மருந்துழைச் செல்வான் என்றப்பால் நாற்கூற்றே மருந்து" (திருக்குறள். மருந்து, 10)

அழுக்கைக்கொண்டு அழுக்கைப் போக்கவேண்டும் அதனுல். மாயாமலம் ஏனைய ஆணவம் கன்மம் இரண்டற்கும் மருந்தாகக்கூறப்பட்டன.

வின :- மாயையின் இலக்கணம் என்ன ?

விடை : நித்தியம், அரு, ஏகம், உலகிற்கு வித்து, அசித்து, சர்வவியாபி, விமலனுக்குப் பரிக்கிரக சக்தி, உயிர்கட்குத் தநுகரண புவனபோகமாய் விரிந்த மலம், (தன்னியல்பாகா) விபரீதவுணர்வைச் செய்வது.

வினா :- அம்மாயையினின்றுந் தோன்றுவன எவை?

விடை : அம்மாயையிலிருந்து காலம்முதலிய தத்துவங்கள் உளவாகும்.

வினா :- அத்தத்துவங்களை விளக்குக.

விடை : காலதத்துவம் முதல்வன் ஆணையால் முத்திரப்பட்டு, அதன்கீழ் உள்ள காரியப் பிரபஞ்ச மெல்லாவற்றையும் கால எல்லையிற்படுத்திக் கன்மத்தை எல்லைப்படுத்தும்.

அக்காலத்தின்பின், நியதிதத்துவம் தோன்றும், அவ்வவ்வுயிர் செய்த கன்மத்தை அவ்வவ்வுயிரே அநுபவிக்குமாறு நியமிக்கும்.

பின், கலைதோன்றும். அஃது ஆணவத்தைச் சிறிதுநீக்கி, ஆன்மாவின் கிரியாசத்தியை விளக்கி, வினைக்கு ஈடாகவரும் போகத்திற் புகுத்திநிற்கும்.

அக்கலையிலிருந்து வித்தைதோன்றும், அஃது அவ்வான்மாவின் ஞான சத்தியைச் சிறிது விளக்கும், விளக்கி அதிற்செலுத்தும்.

அவ்வித்தையினின்றும் அராகம்தோன்றும், அஃது இச்சாசத்தியை விளக்கி, அப்போகத்திற் செலுத்தி நிற்கும்.

இவ்வாறு கலைமுதலிய மூன்றும் முறையே தொழில்முதலிய மூன்றையும் விளக்கியவழி, கன்மத்தை வரையறுத்தலும் நியமித்தலும் செய்யும் முகத்தால் உபகாரமாய் நிற்கும் காலம் நியதிகளும் உளப்படப் பஞ்ச கஞ்சுகமுடைய உயிர், அவ்விச்சை முதலிய மூன்றையும் சிறிது பொருந்திப், பொதுவகையாற் புருட தத்துவம் என்று பெயர்பெற்று, அப்போகத்தில் உன்முகமாய் நிற்கும். (உன் முகம் - மேனோக்கம்.) மூலப்பகுதியிற் றோன்றும் அவிச்சை முதலிய பஞ்சக் கிலேசமும் உடைய வழி, சிறப்பு வகையாற் புருடதத்துவம் என நிற்கும்.

அதன்பின், மூலப்பிரகிருதி அதே கலையிலிருந்து அவ்வியக்த குணரூப மாய்த் தோன்றித், தன்னிடத்திலிருந்து வியக்தமாகத் தோற்றப்படும் குணதத் துவம் மூவகைப்படும். அவை சாத்துவிகம், இராசதம், தாமசம். அவை தனித் தனி மும்மூன்றுவகையாய் ஒன்பதுவகையாம். அக்குண தத்துவத்திலிருந்து புத்தி முதலிய தத்துவங்களும் தோன்றிக் குணவடிவேயாய் உயிரைப் பந்திக்கும் போகசாதனமாகும். அப்பந்தத்துடன் போக நுகருமிடம் எங்கும் உயிரும் குணரூபமாய் நிற்கும்.

குணதத்துவத்திற்குக் காரணம் என்று சித்திக்கப்பட்ட மூலப்பிரகிருதி. அக் குணதத்துவத்தைத் தோற்றுவிக்கும். அதுவே விபரீத உணர்வுடையதாகிய அவிச்சையினையும் தோற்றுவிக்கும்.

பின், அக்குண தத்துவத்திலிருந்து புத்தி தத்துவம்தோன்றி, அவ்வவ் வுயிர்கள் செய்த புண்ணிய பாவங்கள் தன்னிடம் சாரப்படுதலும், அவ்விரு வினைக்கீடாக வந்த விடயத்தை இஃது இன்னதென நிச்சயித்தலும், நிச்சயித்தபின் சுகதுக்கமோக வடிவாய்ப் பரிணமித்தலும், பரிணமித்தவழி உயிரினறிவு தொழில்கட்கு விஷயமாதலும் உடையதாய் நிற்கும்.

அப்புத்தியிலிருந்து அகங்காரந்தோன்றி, என்போல்வார் எவருமிலர் என்று அகந்தைப்படுதற்குக் காரணமாய், வாயிற்காட்சிக்கு விஷயமாய்த் தோன்றிய தொன்றனை இஃது இன்னதென்று புத்திதத்துவம் நிச்சயிக்கும்படியாக 'யான்' என்றும் 'எனது' என்றும் அதில் ஒருப்பட்டெழுந்து, ஆன்மாவொடும் வேற்றுமையின்றி நிகழும். அதுவும் குணவேற்றுமைபற்றிப் பூதாதி முதலிய வேறுபாட்டால் முத்திறப்படும்.

அம்மூன்றும் முறையே.

1. தைசதவகங்காரம்.

2. வைகாரியகங்காரம்.

3. பூதாதியகங்காரம் எனப்படும். அவற்றுள், (1) தைசதவகங்காரத் திலிருந்து மனம் தோன்றி, எதிர்ப்பட்டதொரு விடயத்தை இஃது யாதாகற்பாலது எனச்சித்தருபமாய் நின்று சிந்தித்தும், பின் அதன்கண் ஐயுற்று நிச்சயித்தற்கண் ஆகிய வேட்கையை விளைத்தும் நிற்கும்.

மனத்தின்பின் ஞானேந்திரியங்களும் அத் தைசத அகங்காரத்தினின்றே தோன்றும்.

(2) வைகாரி யகங்காரத்திலிருந்து கன்மேந்திரியம் ஐந்துந் தோன்றும்.

மெய் வாய் கண் மூக்குச் செவி ஐந்தும் ஞானேந்திரியம், ஊறு சுவை ஒளி நாற்றம் ஓசை ஐந்தும், முறையே அவற்றின் விஷயமாம் வாக்கு, பாதம், பாணி, பாயு, உபத்தம் ஐந்தும் கன்மேந்திரியம், வசனம் கமனம் தானம் விசர்க்கம் ஆநந்தம் ஐந்தும் முறையே அவற்றின் தொழிலாம்.

அவ் விருவகை யிந்திரியங்களும் ஒன்றை விஷயிக்கலுறுவார்க்கு உடம் பின் புறத்தே தோன்றி விஷயிக்கும் புறக்கருவிகள்.

மனமுதலியன அவ்விந்திரியங்களால் தரப்பட்ட விஷயத்தை உடர்பின கத்தே நின்று விஷயிக்கும் உட்கருவிகள்.

மற்றைக் கலாதிகள் அவ்வந்தக் காரணங்களால் விஷயிக்கப்பட்டு வந்த பயனை ஆன்மாவின் இச்சா ஞானக் கிரியைகட்குப் பொருந்து இன்ற உள்ளந்தக் கரணங்கள். இவை அவற்றின் வேறுபாடு. இம்மூவகைக் கருவிகளும் நிச்சயமாக வேண்டப்பட்டு உயிரைப் பந்தித்து நிற்கும்.

அவ்விருவகையிந்திரியங்களும் தோன்றியபின், ஏனைப்பூதாதி யகங்கா ரத்திலிருந்து சத்தம், பரிசம், ரூபம், ரசம், கந்தம் என்னும் ஐந்துதன் மாத்திரை களும் தோன்றி, அவ்விந்திரியங்கள் அவற்றின் விடயங்களை விடயிக்குமாறு ஊக்கம் செய்வித்து, உடனிற்கும். இத் தன் மாத்திரைகள் ஐந்தும் அந்தக் கரணங்கள் மூன்றுமாகிய எட்டுங் கூடிப் புரியட்டக வுடம்பு எனப்படும்.

அச் சத்தம் முதலியதன் மாத்திரைகள் ஐந்திலிருந்தும் முறையேஆகாசம் முதலிய தூலபூதம் ஐந்தும் தோன்றும். அத்தோற்றம் பின் வருமாறு.

இங்குச், சத்த தன்மாத்திரையிலிருந்து ஆகாயமும், பரிச தன்மாத்திரை யிலிருந்து வாயுவும், ரூப தன்மாத்திரையிலிருந்து தேயுவும் ரச தன்மாத்திரையிலி ருந்து அப்புவும், கந்த தன்மாத்திரையிலிருந்து பிருதிவியும் ஆகிய தூல பூதங்கள் தோன்றும். தோன்றி, அவற்றுடன் பிரிப்பின்றி முறையே ஒன்றற்கொன்று ஏற்றமான சத்த முதலிய குணங்கள் வியக்தி ரூபமாக வுடையனவாய் நிற்கும்.

இவ்வைம்பெரும் பூதங்கள் தன் மாத்திரையோடு கூடி நின்று இந்திரி யங்களின் தொழிற்பாட்டை ஊக்குதற்கு இவற்றின் காரிய பூதங்களாகிய தாத்து விகங்கள் அறுபதும் அங்காங்கி முறைமை உடையனவாய் உடனிற்கும்.

இத்தத்துவங்களெல்லாம் அகமும் அகப்புறமும் புறமும் என மூவகைப் படும்.

வினா :- புறப்பூதங்களும் அவற்றிற்படும் விசேடமும் யாவை?

விடை :- ஆகாயம் வெளியாதல் இடங்கொடுத்தல் ஆகியகுணமும் தொழிலும் உடையது. வாயு பரந்தவை திரட்டலாகிய குணமும் சலித்தலாகிய தொழிலும் உடையது. தேயு சுடுதலாகிய குணமும் ஒன்றுவித்தலாகிய தொழிலும் உடையது. அப்பு இடைவிடாது குளிர்தலாகிய குணமும் பதஞ்செய்தலாகிய தொழிலும் உடையது. பிருதிவி கடினமாதலாகிய குணமும் தாங்குதலாகிய தொழிலும் உடையது.

| பூதம் | வடிவு | நிறம் | பீஜம் | குணம் | தொழில் | குறிகள் | அதிதெய்வம் | கலை |
|---|---|---|---|---|---|---|---|---|
| பிருதிவி | நாற்கோணம் | பொன்மை | ல | கடினம் | தாங்குதல் | வச்சிரம் | அயன் | நிவர்த்தி |
| அப்பு | பிறை | வெண்மை | வ | குளிர்தல் | பதஞ்செய்தல் | தாமரை | மால் | பிரதிட்டை |
| தேயு | முக்கோணம் | செம்மை | ர | சுடுதல் | ஒன்றுவித்தல் | சுவத்திகம் | உருத்திரன் | வித்தை |
| வாயு | அறுகோணம் | கறுப்பு | ய | பரந்தலை திரட்டல் | சலித்தல் | அறுபுள்ளி | மகேசுரன் | சாந்தி |
| ஆகாசம் | வட்டம் | புகைமை | ஹ | வெளியாதல் | இடங்கொடுத்தல் | அமுதபிந்து | சதாசிவம் | சாந்தியதீதை |

வினா :- அகப்பூதங்களின் இயல்பும் அகப்புறப் பூதங்கள் இயல்பும் என்னென்ன ?

விடை : முன், புரியட்டகவுடம்பு சொல்லிய இடத்திற் காண்க.

வினா :- முப்பத்தாறு தத்துவங்களும் சித்தா ? அசித்தா ?

விடை : முதற் சூத்திரத்துள் குறித்த சுத்த தத்துவம் சடமானாலும் சிற்சத்திக்குச் சுதந்திர வடிவாகலின், **சைதந்நியம்** எனப்படும். சேதநசம்பந்த முடையது சைதந்நியம்.

மற்றைய முப்பத்தொன்றில் புருடதத்துவம் சார்ந்ததன் வண்ணமாய்ச் **சிதசித்து** எனப்படும். உயிர் சிதசித்து அன்று, அது புருட னின் வேறு.

அப்புருட தத்துவம் ஒழிந்த முப்பதும் **அசித்து** எனப்படும்.

வினா :- முப்பத்தாறு தத்துவங்களையும் மூவினமாக்குதல் எவ்வாறு ?

விடை : முன்னைந்தும் சுத்தம். பிரேரககாண்டம், நடுவேழும் மிச்சிரம். போசயித்திருகாண்டம், பின் இருபத்துநான்கும் அசுத்தம். போக்கியகாண்டம். அருவும் உருவும் அருவுருவுமாயுள்ள காரியப் பிரபஞ்சமனைத்தும் இத்தத்துவ வடிவேயாம்.

இம்முப்பத்தாறும்.

1. தூலதத்துவம்
2. சூக்குமதத்துவம்
3. அதி சூக்குமதத்துவம் என ஒவ்வொன்றும் மூவகைப்பட்டுப்
1. பொதுவும்
2. பொதுச்சிறப்பும்
3. சிறப்புமாய் நிற்கும்,

இத்தன்மையனவாய தத்துவங்களை அதிட்டிக்கும் அணுபக்ஷம் சம்பு பக்ஷம்பற்றிய அதி தெய்வங்களும் அவ்வத் தத்துவப் பெயர்பெறும். அதனால், எல்லாப் பொருளையும் தத்துவங்களின் வைத்துக்காண்க.

வினா :- தத்துவங்களைத் தோற்றி யொடுக்குங் காரணக்கடவுளர் எவர்?

விடை:- முப்பத்தாறு தத்துவங்களும் சங்கார காலத்தில் தம் தம் காரணங்களில் ஒடுங்கும் வழி, நிலம் முதல் மூலப்பிரகிருதி முடிவாகிய இருபத்து

நான்கு தத்துவங்களும் சீகண்ட ருத்திரனால் ஒடுங்கும். மூலப்பகுதிக்கு மேலுள்ள ஆறு தத்துவங்களும் வித்தையீசராகிய அனந்தரால் ஒடுங்கும். அவற்றின் மேலுள்ள சுத்த தத்துவ முதலிய மூன்று தத்துவமும் இலயத்தினின்ற சிவனுலொடுங்கும். ஏனைச் சத்திதத்துவமும் சிவதத்துவமும் சுத்த சிவனால் ஒடுங்கும்.

இவை புனருற்பவமாங்காலும் அவ்வவை அவ்வவரால் ஆகும். இவருள் சுத்த சிவன் ஒருவனே நித்தியன். மற்றையோரை நித்தியரென்பது உபசாரம்.

வினு;- முதல்வன் அமலனுதல் எவ்வாறு?

1. புறப்புறச்சமயமும்

2. புறச்சமயமும்

3. அகப்புறச்சமயமும் என்னும் முக்கூற்றுச் சமயத்தெய்வங்களெல்லாம் பூதமுதல் அசுத்தமாயா தத்துவ முடிவாக ஒவ்வொரு தத்துவங்களில் நிற்கும்.

சிவாகமங்களில் கூறப்படும் 1. ஏகன், 2. அநேகமாகிய ஆன்மாக்கள், 3. இருண்மலம், 4. கன்மமலம், 5. சுத்தமாயை, 6. அசுத்தமாயை என்னும் ஆறு பொருட்கும் உண்மைத்தன்மை விளக்குகின்ற சைவம் எனப்படுந் தலையாய அறுவகைச் சமயங்களின் தெய்வமாய் நின்ற அதிகார போக லய சிவபேதங்கள் சுத்தவித்தை முதலிய ஐந்து தத்துவங்களுள் ஒவ்வொன்றின் நிலைபெறும்.

சித்தாந்த சைவத் தெய்வமாகிய சுத்தசிவம் அம்முப்பத்தாறையும் கடந்து நிற்கும்.

வினு:- தாதான்மியமாய் நீங்காது நிற்றலைத்தெளிவாய்க் கூறுக,

விடை:- அவ்வாறு ஒன்றும் இன்றி நிற்கும் எம் இறைவன் ஒன்றின் ஒன்ருகத் தோன்றி ஒவ்வொரு தத்துவங்களிலின்று கொண்டு தத்தம் தொழில்களைச் செய்யுஞ் சிவமுதல் அயன் முடிவாகிய முத்திறத்து ஒன்பது வர்க்கத்திலும் வேற்றுமையின்றி அவ்வத்தொழில்களைச் செய்வன். இவை நவந்தருபேதம்.

நவந்தருபேதத்துட் சிவபேதம் ஏழு. அவை சத்தியும் விந்துவுமல்லாதவை. அவ்விரண்டும் சத்திபேதம், ஏனை மனோன்மனி முதலிய பேதம் போலல்லாமல் ஒன்றின் ஒன்ருகப் பவந்தரு முறையிற் காரணமாய் இடைநிற்றல்பற்றிச் சிவபேதத்துடன் வைத்து எண்ணி நவந்தருபேதம் எனப்பட்டன

| | | | |
|---|---|---|---|
| 1. | சிவம் | — | சத்தி |
| 2. | சத்தி | | |
| 3. | நாதம் | — | விந்து |
| 4. | விந்து | — | |
| 5. | சதாசிவன் | — | மனோன்மணி |
| 6. | மகேசன் | — | மகேசை |
| 7. | உருத்திரன் | — | உமை |
| 8. | மால் | — | திரு |
| 9. | அயன் | — | வாணி |

இவ்வாறு சிவபேதம் ஏழனுக்குமுரிய சத்திபேதம் ஏழும்காண்க.

வினா:- இவ்வாறு சிவபேதம் சத்திபேதம் என்று ஆனதேன்?

விடை:- சத்தி நாதமுதலியனவாகும். சிவம் அச் சத்தி முதலியன் வாகும். மரமும் வைரமும் போலச் சமமாக இயைந்து நிற்றலின், எல்லாத் திருமேனியும் சத்திசிவம் இரண்டற்கும் பொது வடிவேயாம். ஆயினும் சத்த னுக்குச் சத்தி தேவியும் ஆதலால், அதற்குரிய வடிவு, குணம் என்பவற்றின் விசேடம்பற்றிச் சிவபேதம் சத்திபேதம் என்றாயின.

வினா:- சத்தியும் சிவமும் செய்யும் செய்கைகள் எல்லாம் உண்மையோ?

விடை:- சிவதத்துவத்திலிருந்து சத்திதத்துவம் தோன்றிற்று. அதனால் சிவத்துக்குச் சத்தி மகள் முறையள். சத்தி தத்துவத்திலிருந்து சாதாக்கிய தத்துவம் தோன்றிற்று. அதனால், சத்திக்குச் சிவன், மகன் முறையன். இருவருங்கூடிச் சேதநமும் அசேதநமும் ஆகிய பிரபஞ்சம் எல்லாவற்றையும் தோற்றியதால் அவ்விரு பிரபஞ்சங்கட்கும் அம்மையப்பர் முறையர். இவை யெல்லாம் இறைவனுக்குத் தடத்தமாதலின், அவன் பிரமசாரியும் அவள் கன்னி யுமான உண்மை (சொரூப) நிலையர். இது பல்லூழி காலம் பயின்று பூசித்த புண்ணியத்தால் நண்ணிய ஞானத்தவர்க்கே தெரியும், பிறர் அறிவது அரிது.

இச்செயல்களெல்லாம் சிவபிரானுக்கு நம்மனோர் பொருட்டாக நடித்துக் காட்டும் நாடக மாத்திரையே அன்றிப் பிறிதில்லை.

தநுகரண புவனபோகங்களும், அவைமூலமாயுள்ள பெந்தமுத்திகளும், அப்பெந்தமுத்திகளிற்படும் பேதங்களும் எல்லாம் முற்கூறிய தத்துவங்களால்

ஆயின. அத்தத்துவங்கள் உயிர்களோடு இயைவனவே, முதல்வனோடு இயைவன அல்ல. இவ்வுண்மையைத், தத்துவங்களைக், கழியும் முறையின் வைத்துக் கழித்து அவற்றிற்கு மேலாய் நிற்ப தொன்றை ஐயந்திரிபின்றி உணரப் பெற்றோன் (ஞானி) ஒருவனே, அம்மையப்பர் கன்னியும் பிரமசாரியுமாம் இயல்பை உணரும் வன்மையுடையவன்.

உயிர்கட்குத் தத்துவச் சேர்க்கையால் வரும் பயன் இருவினைகளை அநுபவிக்கச்செய்து நீக்கலும். அதனால் எய்திய பருவத்தில் மேலும் வித்தா காதபடி தீக்ஷையால் அவற்றை முதிர்வித்துப் பற்றறக் கழித்தலும், அவை கழியும் வழியால் எல்லா அநர்த்தங்கட்கும் மூலமாகிய ஆணவமலத்தைப் போக்கலும் ஆகும்.

வினா:- ஆணவமலத்தின் இயல்பு என்ன ?

விடை:- ஒன்றாய், அளவற்ற சத்திகளுடையதாய், எண்ணில்லாத உயிர்களோடும் செம்பிற்களிம்பு போற் சேர்ந்ததாய், அநாதியாய், உயிர்களின் ஞானக்கிரியைகளை மறைத்து நின்று போகாநுபவத்திற்கு வினைமுதலாகுந் தன்மையை நிகழ்த்தி அறியாமையை நிகழ்த்துவது ஆணவமலத்தின் இயல்பு.

வினா :- அத்தகைய ஆணவமலம் உண்டென்பது எவ்வாறு ?

விடை :- மாயாகாரியங்களே ஆணவமலத்தின் விளைவு என்றவற்றைச் செய்கின்றன, ஆணவம் என்றொன்று இல்லை என்பர் பிறர், அது பொருந்தாது. மாயை உயிர்களின் இச்சா ஞானக்கிரியைகளை எழுப்பும். ஆணவமலம் அவற்றை மறைக்கும், மாயை உயிர்க்கு வேறாயிருப்பது. ஆணவமலம் உயிர்க்கு வேறா யிராது ஒற்றித்து நிற்பது. மாயை தநுகரண புவனபோகமாய் நின்று உயிர்க்கு முற்கூறியவாறு இச்சா ஞானக் கிரியைகளை எழுப்பும். ஆணவம் அவற்றை மறைக்கும்.

வினா :- சூரியனை மேகம் மறைப்பதுபோல உயிரை(ஞானக்கிரியைகளை) மாயையே மறைக்கும். மேகம் நீங்கின் சூரியன் பிரகாசிக்கும். அதுபோலக் காயம் நீங்கின் உயிரின் ஞானக்கிரியை விளங்கும் என்றல் பொருந்தாதோ ?

விடை :- பொருந்தாது. மேகம்போல மாயை மறைக்குமானால் மறைத்தலாகிய காரியம் சூரியனிடத்திற்போல உயிரில் நிகழ்தல் வேண்டும். மாயாகாரியமான உலகுடல் கரணங்களைப்பெற்றால், உயிரின் இச்சாஞானக்கிரியை

விளங்கும் என்று உடம்பாட்டிலும் அவற்றைப் பெறுவிட்டால்; அம்மூன்றும் விளங்கா என்று எதிர்மறையிலும் வைத்து அறியப்படும். படவே, மாயையின் வேறாய், மறைப்பது ஆணவமே என்று நிச்சயமாகும். மலத்தாலாகும் அறியாமை மேகத்தாலான மறைவு போலன்று. உயிரோடு வியாபகமாய் விரவிக் குணம் போலத் தோன்றி நிற்பது. தொழிற்பாட்டில் மாயை ஒளியும் ஆணவம் இருளும் போலாகும். ஆகவே, ஆணவமலமே உயிருணர்வின் காரியப்பாட்டைத் தடுக்க வல்லதெனத் தெளிவாகும்.

**வினா :-** ஆணவம் ஒன்று ஏன்? அறியாமை உயிரின் குணம் என்னல் பொருந்தாதோ?

**விடை :-** ஒரு பொருளின் குணமுங்குற்றமும் உடன்விரவி நிற்கப் பெறும். குருடன் கண்ணில் ஒளியை மறைத்து நிற்கும் படலம் குற்றம். குண மன்று. கண்ணின் ஒளிக்குணம் வேறு. படலத்தின் மறைப்பு வேறு. இருவேறு தன்மையும் ஒன்றில் விரவி நிற்பதால், குற்றம் குணமாகி விடுமோ? குணம் குற்றமாகி விடுமோ? அறியாமைக்குக் குணிப்பொருள் சடமாகும். சித்தாகாது. உயிர் அறிதற்றொழிலுடைய சித்தேயாம். உயிரினிடத்துக் குற்றமாய்க் காணப்படும் அறியாமைக்குக் குணிப்பொருள் மலம் என்று வேறுண்டு.

**வினா:-** மும்மலமும் உயிர்க்குப் பந்தமாதல் எவ்வாறு?

**விடை:-** தன்மமோடு அதன்மமுமாகி என்ற கன்மமலம் நெல்லுக்கு முளைபோல **உயிரைப் பந்தித்து நின்று** போகத்தைப் பண்ணுவது. நித்தமா யருவாயென்ற மாயா மலம் தவிடுபோலப் பந்தம்பண்ணுவது. ஒன்றதாய் என்ற இவ்வாணவ மலம் உமிபோலப் போத்திருத்துவம் பண்ணுவது. இவற்றொடு வேறும் இருமலங்கள் இருக்கின்றன. அவை மாயாகாரியமும் திரோதான சத்தியும் ஆம். அவற்றுள் மாயாகாரியங்கள் (மாயேய மலம்) அச்சுகதுக்கவிளை வுகட்கெல்லாம் இடமாய் நின்று வியாபகமாகிய ஆன்மாவின் அறிவிச்சை செயல்களை ஏகதேசப்படுத்தும். திரோதாயி என்பது அம் மலங்களுக்கு அநுகூலமாய் நின்று செய்யுஞ் சிவசத்தி. அது பராசத்தியிலடங்குமாயினும்; தொழில் வேற்றுமை பற்றி உபசாரத்தால் வேறு வைத்தெண்ணப்பட்டது. இவ்வைந்தும் உயிர்தோறும் நின்று செய்யும் பந்தபேதம் அறிக. இவை உயிர்களிடத்தில் நிற்றலால். அவை பிறப்பிறப்புட்பட்டு நிலம் நரகதுறக்கங் கட்குக் கொள்ளிவட்டம் காற்றுடிபோலப் போக்கு வரவு செய்து சுழல்கின்றன.

வினா:- அம்மலபந்தத்தைப் போக்கும் வழி என்ன?

விடை:- மனிதப்பிறப்பே அதை நீக்கும்வழி. அதிலும் உத்தம சமயம், உத்தம நாடு, உத்தம சாதி மூன்றும் சிறந்த வாயில். உயர்ந்த சாதியிலும் உயர்ந்த குடிப்பிறப்பே மிகச்சிறந்தது. அதிற்பிறந்து சைவராகிச் சித்தாந்த நெறியுணர்ந்து சிவபிரானை வழிபடுவோரே மலத்துன்பம் நீங்கி வீட்டின்பம்பெறுவர். அத்துன்பம் நீங்குதற்குச் சிவத்தொண்டு மற்றைப் பிறவிகளிற்கிட்டாது. ஏனை உலகங்களிற் பொருந்தாது. இவ்வுண்மை ஏனையோர் அறியமாட்டாராதலின், சாதி விசேடமும் குடிப்பிறப்பு விசேடமும் வேண்டப்பட்டன. பிறவி விசேடம் தேசவிசேடம் முதலிய நான்கும் அலமரல் அகன்று வீட்டில் நிலைபெற வாயிலாவன.

வினா :- வாழ்வெனும் மையல் விடுதற்கு யாது உபாயம்?

விடை :- அத்தகு பெருமையுடைய மானிடதேகம் இத்துணைப் பொழுது நிற்கும் என்று அறிய வாராது. "ஒருபொழுதும் வாழ்வதறியார் கருதுப கோடியும் அல்லபல" நீர்க்குமிழிபோல் எப்பொழுதும் அழிதற்பாலது. யாக்கையும், இளமையையும், உடம்பின்கண்ணதான அறிவும், செல்வமும் நிலைத்தலில்லை.

அதிகாரத்தாற் செருக்குறுவார்க்குஞ் செத்தார்க்கும் நிகழ்ச்சி ஒத்திருப்பதால், வேறுபாடில்லை.

இவ்வுண்மைகளை அறியவல்லார் யாக்கை இளமை முதலியவற்றால் வரும் மையலை விட வல்லவராவர்.

வினா :- வறுமைச்சிறுமை தப்புவதெப்படி?

விடை :- க்ஷணத்திலழியும் செல்வம் உடம்பின் பொருட்டு வருந்திஈட்டப்படுவது. அது சிவபிரானை வழிபட்டுப்பெறும் இறவாச் செல்வத்தினை நோக்க ஒரு செல்வமெனக் கருதத்தக்கது ஆகாது. இச்சிறு செல்வத்தைவேண்டி, அவ்வதிகாரச் செருக்குடையாரது பின்சென்று ஏக்கறுஞ்சிறுமையை அகற்றல்வேண்டும். இஃது இறவாச்செல்வமே செல்வம். "செல்வன் கழலேத்துஞ் செல்வம் செல்வமே" என்றுணரவல்லாரே அகற்றவல்லார். சிறு செல்வத்தை வேண்டுவோர் வறுமையாஞ்சிறுமையின் நீங்குதலரிது, இறவாச்செல்வத்தை வேண்டிய ஞானியர் இறவாச் செல்வச்சிறப்பின் நீங்குதலரிது.

## மூன்றாவது சூத்திரம்

பசுவுண்மை

உளதில தென்றலின் எனதுடல் என்றலின்
ஐம்புலன் ஒடுக்கம் அறிதலின் கண்படில்
உண்டிவினை யின்மையின் உணர்த்த உணர்தலின்
மாயா இயந்திர தனுவினுள் ஆன்மா. —சிவஞானபோதம்.

*உயிரெனப் படுவ திந்த உடலின்வே றுளதாய் உற்றுச்*
*செயிருறும் இச்சா ஞானச் செய்திகள் உடைய தாகிப்*
*பயில்வுறும் இன்பத் துன்பப் பலன்களும் நுகரும் பார்க்கின்*
*துயிலொடும் அஞ்சவத்தைப் படும்உண்மை துரியா தீதம்.*
*சிவஞானசித்தியார்.*

*வினா:- பசு என்பது யாது? அஃது இவ்வுடம்பில் உண்டோ? இல்லையோ?*

*1. விடை: உயிர் என்று சொல்வதொன்றுண்டு. அதனாற் சூனிய மன்று.*

*2. உடம்பிற்பொருந்தி அகந்தையும் மமதையும் அடைதலுண்டு. அதனால் உடம்பன்று.*

*3. ஞானத்தோடு கிரியையும் இச்சையும் உடையது அதனால் ஞான மாத்திரைக்கே கருவியான ஐம்பொறியுமன்று.*

*4. கனவை நனவிலறிவதால் சூக்கும உடம்புமன்று.*

*5. ஒடுங்காதவிடத்தும் இன்பத்துன்பப் பயனை நுகர்ந்து நிற்பதால், பிராணவாயுவே உயிரென்பதும் பொருந்தாது.*

*6. அறிந்தாங்கறிவது பிரமம். ஐந்தவத்தைப் பட்டறிவது உயிர். அதனால் பிரமமே உயிரென்பதும் பொருந்தாது.*

*7. எல்லாம்கூடிய கூட்டமே உயிரென்பதும் பொருந்தாது. எல்லாம் நீங்கிய துரியாதீதத்தும் உயிர் உண்டு.*

இவற்ருல், இவை எல்லாவற்றிற்கும் வேருய் இவ்வுடம்பின்கண் உயிரெனப்படுவ துண்டு.

விஞ:- இவ்வுடம்பே அறியும், இதனின் வேருய் ஒருயிர் உண்டென்பது ஏன் ?

விடை:- தேகம் பூரணமாயிருந்தும் பிணக்கிடப்பிலும் தூக்கத்திலும் அறிவு நிகழக்காணுததால், உடம்புஅறியும் என்பதுபொருந்தாது.

விஞ:- பிணமாகும் போது கெட்டொழியும் ஐம்பொறிகள், அறியாவோ ?

விடை:- அவை நனவிலறியும், தூக்கத்தில் அறிதலன்றி ஒடுங்கி நிற்கும். ஒவ்வொரு பொறியாயறியும், ஒருங்கே அறியமாட்டா. ஒன்று அறிந்ததை ஒன்று அறியாது. இவ்வைம் பொறிகளாலும் ஐம்புலன்களையும் அறிவதொன்று உளது அதுவே உயிர். அவ்வுயிர் ஐம்பொறி முதலியவற்றிற்கு வேறேயாம்.

விஞ:- பிராணவாயுவை அடக்கியும் விட்டும் அறிவு நிகழப்பெறுதலால் அதுவே உயிராகாதோ?

விடை:- தூக்கத்தில் பிராணவாயு இயங்கினுலும் அறிவு நிகழக் காணுமையால் அதற்கு வேருய் உயிருண்டு.

விஞ:- தூக்கத்தில் கருவிகள் இல்லாமையால் பிராணவாயு அறியாதாயிற்று. அதனுல், அதனின் வேருய் மற்ருென்று வேண்டுவதேன்?

விடை:- கரணங்களுக்கு முதலி நிற்கும்போது, கரணங்கள் போதல், உடையான் நிற்தம்போது ஏவலாட்கள் போவதுபோலும். கரணங்களையும் பிராண வாயுவையும் கொண்டறிவது உயிர். அதனுல் அப்பிராண வாயுவின் வேருய் உயிர் உண்டு.

இவ்வுயிருண்மை சிவஞானபோதமாகிய முதனூலில் விரித்தமையால் இதிற் சுருக்கியுணர்த்தப்பட்டது.

16

## நான்காவது சூத்திரம்

## 4. பொருளியல்பு

### பசுலட்சணம்

அந்தக் கரணம் அவற்றினென் றன்றவை
சந்தித்த தான்மரச் சகசமலத் துணரா(து)
அமைச்சர சேய்ப்பநின் றஞ்சவத் தைத்தே —சிவஞானபோதம்.

உணர்வன கரணமென்னின் ஒன்றையொன் றுணரா வெவ்வே(று)
அணைதருஞ் செயல்கள் நான்கும் அறிந்தவை அடக்கி ஆக்கிப்
புணருமுட் கரண மாக்கிப் புறக்கரு வியினும் போக்கி
இணைதரு மிவற்றின் வேறு யானென தென்ப தான்மா.

(சிவஞானசித்தியார்)

(1) ஒன்றையொன்றுணராத அந்தக்கரணத்திற்கு வேறாய், (2) யான் எனது என்னுஞ் செருக்குக்கு ஏதுவான ஆணவமலம் உடனாயிணைந்து நிற்கும் ஆதலான், தனக்கென அறிவின்றி, இவ்வந்தக் கரணங்களாலாகிய நான்கு தொழிலையும் இவற்றொடு கூடியறிந்து, இவற்றை அடக்கவேண்டுழி அடக்கி உட்கருவிகளாக்கியும், ஆக்கவேண்டுழி ஆக்கிப் புறக்கருவிகளிற் போக்கியும் வெவ்வேறு அவத்தைகளை அணையும். (இது செய்யுளால்தெளியாதவுரை, சிவஞான முனிவருரையால் தெளியத்தக்கது. அதனால் உணர்ச்சி நலம்பற்றி உள்ளவாறே இதில் எழுதலாயிற்று)

வினா :- அந்தக்கரணங்கள் எவ்வாறு கருத்தாவாகா ?

விடை :- மனம் முதலிய நான்கும் விடயத்தையறியுங் கருவிகள். உயிரோடு ஒற்றித்து நின்று நிகழ்வன. அவையே கர்த்தா என்னும்படி மருவும். கண்ணுக்கு விளக்குப்போல உயிர்க்குக் கருவியாய் வேறு நிற்பவை இவை. இவற்றின் வேறாய்நின்று இவற்றைக்கொண்டு அறியுங்கருத்தா எது? என்ற ஆராய்ச்சியுடையவர்க்கு ஆன்மசொரூபம் இனிது விளங்கும். அதன் பின்பு அங்கனம் ஆராய்ந்து அறியும் அறிவு பசுஞானம். அப்பசுஞானத்தைத் தரும் பொருள் யாது என்று தேர்வார்க்குச் சிவ ஞானம் அப்பசு ஞானத்திற்குமேலாய் விளங்கும். இவ்வுண்மையால் அந்தக்கரணங்கள் கர்த்தா ஆகா என்க.

வினா :- அந்தக்கரணங்கள் கருவியாகும் முறைமை என்ன ? அது விளங்குவதெப்படி ?

விடை :- 1. அகரம் 1. அகங்காரத்தையும்
2. உகரம் 2. புத்தியையும்
3. மகரம் 3. மனத்தையும்
4. விந்து 4. சித்தத்தையும் செலுத்தும்படி
5. நாதம் 5. ஆன்மாவைத் தொழிற்படுத்தும்.

இவ்வைந்தும் சமட்டியிற் பிரணவருபமாம். இவற்றால் உயிரின்கண் உணர்வு மாறிமாறித்தோன்றும். அது கடலின்கண் அலை புதிதுபுதிதாகத்தோன்றியும் ஒடுங்கியும் வருதல்போலும். சவிகற்பவுணர்வுக்குக் காரணம் நிவிர்த்தி முதலிய கலையைப்பற்றி ஐந்தாய்த்திகழும் நால்வகை வாக்குகள் என்பதை உற்று நோக்கின், இவ்வியல்பு இனிது விளங்கும்.

வினா :- ஆன்மா அறிதற்பயனை அடைவதெப்படி ?

விடை :

| எழுத்துக்கள் | கருவிகள் | அதிதெய்வம் | |
|---|---|---|---|
| நாதம் | ஆன்மா | சதாசிவம் | இம்முத்திறத்(துப் பதினைந்)தொடும் ஆன்மாப்பரவியவழி அறிதற்பயனை அடையும் பரவாவிடிற் சடம்போல் அறிவிலதாம். இவ்வியல்பு இருவகை வளியும் அடக்கிச் செய்யும் யோகப்பயிற்சியுடையார்க்கு இனிது விளங்கும். |
| விந்து | சித்தம் | மகேசன் | |
| மகாரம் | மனம் | உருத்திரன் | |
| உகாரம் | புத்தி | மால் | |
| அகாரம் | அகங்காரம் | அயன் | |

வினா :- இப்பதினைந்தும்கூடிய கூட்டமே அறிவுக்கு முதலாயமையும். உயிர் என்று ஒன்று வேறு எதற்கு ?

விடை : கூட்டம் என்று ஒரு பொருள் இல்லை. கூடிய பொருள் அனைத்தும் வேறுயறியப்பட்டு நிற்கின்றன. அறியப்படுவதும் அறிவதும் ஒன்றுகா. இப்பதினைந்தும் கூடியவாற்றையும் இவற்றையும் அறிவது உயிர். அவ்வுயிர் இவற்றுள் ஒன்றன்று, இவற்றின் கூட்டமும் அன்று வேறொன்றேயாம்.

வினு:- உயிரைப்பற்றிப் பிறமதங்கள் கூறுவன யாவை?

விடை: 1. பரிணுமவாதிகள் கூற்று:-

சீவான்மாக்கள் எல்லாம் பிரமப்பொருளின் பரிணுமம். அறிவிச்சை செயல்களை அடையும். தீயும் சூடும்போலப் பேதா பேதமாகிய குணகுணித் தன்மையுற்றுப் பல வேறுவகைப்பட்டு நிற்கும்.

மறுப்பு:- கருவிகளையன்றி அறியமாட்டாத சீவான்மாக்கள் அவ்வாருதல் இல்லை.

2. சாங்கியர் கூற்று:-

(அ) குணகுணித் தன்மையின்றிக் கேவலம் அறிவு மாத்திரையாய் நிற்றல் உயிரியல்பு.

(ஆ) அவ்வுயிரினது சந்நிதியின் உடம்பில் நின்று கரணங்களெல்லாம் செயற்படும்.

(இ) அதனுல் இச்சா ஞானக் கிரியைகள் அவ்வுடம்பில் நிகழும்.

மறுப்பு:- பிணத்திலும் தூக்கத்திலும் சந்நிதி உண்டு. உடம்பில் அவை நிகழக்கண்டிலம். அதனுல், சந்நிதி மாத்திரத்தால் அவை நிகழ்வதில்லை.

சாங்கியர் ஆசங்கை:-

வினு: வியாபகமாய் நிற்கப்பெறுவதுமட்டும் சந்நிதியன்று, மற்றுக் காந்தத்தின்முன் இரும்புபோல் உயிர்முன் உடம்பு தொழிற்படுதற்கு ஏதுவான தொரு குணவிசேடம் சந்நிதி எனக்கொண்டாம். ஆதலின் அக்குற்றம் இங்கு எய்துவதெப்படி?

மறுப்பு:- அவ்வாருயினும், ஒரு குணம் ஒரு தொழிலன்றித் தம்முள் மாறுபட்ட பலதொழில் செய்வது எப்படி?

3. பௌராணிகர் கூற்று:- உயிர் உருவப்பொருள்.

மறுப்பு:- பரிணமித்தழிதலும் காட்சிப் புலனுதலும் இல்லாத பொருள் அவ்வியல்புடைய பூதங்களோடு ஒப்ப உருவாவது எப்படி?

பௌராணிகர் ஆசங்கை:-

பூதம்போலக் காட்சிப் புலனுதற்கு உரிய தூலரூபமாதலின்றிச் சூக்கும ரூபமாய் நிற்பது உயிர்.

மறுப்பு:- அது தூலரூபத்தைத் தோற்றுவிக்குஞ் சடமாகிய புரியட்டக தேகமேயாம்

ஆசங்கை : அப்புரியட்டக தேகத்துள் அதிசூக்கும ரூபமாய் நிற்பது உயிர்.

மறுப்பு:. அது கலையாதி மண்ணந்தமாயுள்ள பரதேகம். அந்த ரூபமெல்லாம் அசித்தும் அசத்தும் ஆகும். அவ்வியல்பில்லாத உயிர் உருவப் பொருளாவதெப்படி?

4, கவுளர் கூற்று :- அருவுருவப்பொருள் உயிர்.

மறுப்பு:- ஒன்று மற்றொன்றாகாது. மறுதலைப்பட்ட இரண்டு தன்மை ஒருபொருட்கில்லை. விறகும் தீயும் தம்முள் வேறு. உருவிற்கும் அருவிற்கும் அவ்விறகுக்குந் தீயும் உதாரணமாதல் பொருந்தாது.

அக்கவுளர் ஆசங்கை:-

மதி (சந்திரன்) தலையுவாவின் அருவாய்நின்றே பின் முறையால் வளர்ந்து பூரணையில் தூலவுருவாய் விளங்குதலைக் கண்டாம். அதுபோல உயிரும் அருவாய் நின்றே கருவுட் பதிந்து முறைமுறையே வளர்ந்து இவ்வுடம்புருவாய்த் தோன்றும் வழியில் அருவுருவென அமையாதோ?

மறுப்பு:- சித்தாய் நித்தியமாய்ப் பந்தத்திற் பட்டு நீங்குவதாயினர், அசித்தாய்ப் பூதகாரியமாய்ப் பந்தமாவதாகிய உடம்புருவமாவது பொருந்தாது.

5. பாதஞ்சலர் கூற்று:-

ஆகாயம்போல் அருவாய் விகாரியாய் நிற்பது உயிர்

மறுப்பு:- காட்சியளவையால் உடம்பில் நிகழும் நிகழ்ச்சிபற்றி அறியப்படும்.

6. வைசேடிகர் முதலியோர் கூற்று:-

உயிர் சடம். அது மனத்தொடுங் கூடிச் சித்தாய் அறியும்.

மறுப்பு:- சடம் சித்தாகாது. சித்துச்சடமாகாது.

7. சைவரில் ஒரு சாரார் கூற்று.

உயிர் சிதசித்து

மறுப்பு :- மாறுபட்ட இரண்டு தன்மை ஒருங்கு நில்லா.

8. பட்டாசாரியர் கூற்று:- உயிர்சித்தேயாகும்.

மறுப்பு :- அசித்தாகிய கருவியையின்றி உயிர் அறிதல் செல்லாது.

9. பாஞ்சராத்திரிகள் கூற்று:- உயிர் உடம்பிற் பரமாணு அளவினதாய் நிற்பது.

மறுப்பு :- அணுவானால் ஒரு துவாரத்தால் ஓடிப்போவதன்றி, உடம்பிற்கட்டுப்படுதற்கும் சுமைதாங்குதற்கும் உடம்படாது என்பதும் வேறும் ஆகிய குற்றங்கள் ஏற்படும்.

10. மிருதி நூலார் கூற்று :- உயிர் உடம்பில் புல்லின் நுனியிலுள்ள துளிபோல் ஏகதேசமாய் இருதயஸ்தாநத்தில் நிற்க, அவ்வுயிரின் அறிவு விளக்கொளிபோல எங்கும் வியாபிக்கும்.

மறுப்பு :- உயிர் ஏகதேசமானால், பரிணமித்தழிதல், காட்சிப்புலனுதல் முதலிய குற்றங்கள் உண்டாகும். குணம் குணியளவைக்கடவாது. விளக்கின் ஒளி விளக்கினது சூக்குமவடிவே; குணமன்று, அதுகாட்டாகாது. ஆனாலும் அதற்கும் இதற்கும் வேற்றுமை மிகுதியாம்.

11. சமணர் கூற்று- உயிர் உடம்பளவில் நிறைந்து நின்றுணர்வது.

மறுப்பு :- உறக்கமடைதல், ஐம்பொறியிலும் ஒருங்கே அறிவு நிகழாமை, அவ்வவ்வுடம்பளவிற்குத் தக்க அறிவாதலின்மை. குறைப்பக் குறையாமை, இன்னோரன்ன பிறவற்றைநோக்கின் அவ்வாறு கூறுர்.

12. ஐக்கியவாதிகள் கூற்று:- ஆன்மா முதல்வன்போல் எங்கும் வியாபியாய் நின்று அறிவன்.

மறுப்பு: - அவத்தை போக்குவரவுகள் அடைதலும், ஐம்புலனும் ஒருங்கே அறியாமையும், எல்லாமாய் வியாபித்தல் ஒழிந்தவனுகி. உடம்பில் ஏகதேசமாய் நிற்றலும் எவ்வாறு கூடும்? முதல்வனுக்கு இவை ஏலா.

அவ்வைக்கியவாதிகள் ஆசங்கை:-

உயிர் எங்கும் வியாபகமாய் நின்று அறியவதாயினும் மாயாகாரியம் அவ்வறிவைத் தடைசெய்து நிற்றலால், உறக்கம் முதலியவை அடைந்து ஏகதேசப் படுவதாயிற்று.

மறுப்பு:- அது பரிகாரமன்று. மாயாகாரியம் அறிவு விளங்குதற்கு ஏதுவானது. அதற்கு மறுதலையாய்த் தடைசெய்தல் கூடாது

முன் சுத்தமாயிருந்த உயிரை அதுபந்தித்ததெனின், வீடுபெற்ற பின்னும் பந்திக்கும் எனப்பட்டு முத்தியில்லையாய் முடியும்.

வீடுபெற்றபின் பந்திக்காது எனின், அநாதி நிலையுடன் இதனிடைப் பேதமில்லை. அதனால் அநாதியே பந்தமுறாமல் முத்தனாய் விளங்குதல் வேண்டும்.
அவ்வைக்கியவாதிகள் வினா:- உயிரிலக்கணம் யாது?

வினா :- அசித்தினது அருவும் வியாபகமும்போல வியாபகமும் அருவும் இல்லதாய், அதுவதுவாய் வசிப்படையும் வியாபி என்னும் வழக்குடையதாய், அழியாத இச்சா ஞானக்கிரியைகளை அநாதியே மறைத்து நிற்கும் பசுத்துவம் எனப்படும் ஆணவமலத்தையுடையதாய்ப் பசு என்று நிற்பது உயிரிலக்கணம். இஃது உயிர்க்கு அநாதிநிலையாகிய தன்னுண்மையாம்.

வினா :- ஆன்மா வசித்திட வருமாறு எவ்வாறு ?

விடை :- 1 பசுத்துவம் (ஆணவம்) மாத்திரத்தாற் கேவலப்பட்டு நின்ற ஆன்மா, அக்கேவலாவத்தையின்பின், அசுத்தமாயையில் அனந்ததேவராற் கலக்குண்ட பாகமாகிய காரண சரீரத்தைப் பொருந்தி, அவ்விச்சா ஞானக் கிரியைகள் **பொதுவகையாற்** சமட்டிரூபமாய் விளக்கப்பெறும்.

2. அதன்பின், அம்மாயாதத்துவத்திலிருந்து தோன்றும் கலாதி களாகிய கஞ்சுகசரீரத்தைப் பொருந்தி அவை வியட்டிரூபமாய்ப்பிரிந்து தோன்றிச் **சிறப்பு வகையால்** விளங்கப்பெறும்.

3 அதன்பின் அந்தக்கரணம் முதலியவற்றைத் தம்முள் அடக்கிநிற்கும் முக்குணங்களாகிய குணசரீரத்தைப் பொருந்தி அவ்விச்சா ஞானக்கிரியைகள் பின் சொல்லப்படும் இரண்டு சரீரங்களிடமாகவரும் விடயங்களில் வியாபரிக்கப்பெறும். இவ்வாறு பரசரீரம் மூவகைப்படும். அம்மூவகையும் முறையால் எய்தியபின் **சூக்குமதேகத்தைப்** பொருந்திப் போக்குவரவுசெய்து **சூக்கும வினைப்பயன்களை**

ஈட்டியும் நுகர்ந்தும், தூலதேகத்தைப் பொருந்திப் போக்குவரவுசெய்து தூல வினைப்பயன்களை ஈட்டியும் நுகர்ந்தும் இவ்வாறு அதீதமுதல் அஞ்சவத்தைப் பட்டுநிற்கும்.

காரணசரீரம் முதலிய அந்த ஐந்தும், அவ்வாறு மாயையினின்றுந் தோன்றி ஆன்மாவிற்கு வடிவாய் முறையே ஆனந்தமயகோசம் முதலிய ஐவகைப் பெயர்பெற்று ஒன்றற்கொன்று தூலமாய்நிற்க, கேவலத்தில் யாதுமின்றி மலமாத்திரமாய் நின்ற ஆன்மா இவ்வைந்து கோசங்களில் அதுவதுவாய் வசிப்புண்டு ஏகதேசியாய்ப் போக்குவரவு செய்து நிற்கும்.

| கோசம் | உண்மை |
|---|---|
| 1. அன்னமயகோசம் | 1. தேரைப்பூமியில் செலுத்துவோர் தன்மை |
| 2. பிராணமயகோசம் | 2. மரப்பாவையியக்குவோர் தன்மை |
| 3. மனோமயகோசம் | 3. தோற்பாவையாட்டுவோர்தன்மை |
| 4. விஞ்ஞானமய கோசம் | 4. பரகாயப்பிரவேசம் செய்வோர் தன்மை |
| 5. ஆனந்தமயகோசம் | 5. வேடங்கட்டியாடுவோர் தன்மை |

இவ்வாறு ஆன்மா இக்கோசங்களை வேற்றுமையின்றி நின்று செலுத்தும். இவ்வைந்தும் முறையே ஒன்றற்கொன்று அந்தரங்கமாகும்.

'என்னுடல்' என்பொறி, என்பிராணன், என்கரணம், என்உணர்வு என்றற்கும் என்மனை என்றற்கும் பேதம் உண்டு. 'என்மனை' என்றதில், மனைக்கும் எனக்கும் உள்ள தொடர்பு நீங்கி விடலாம். என் உடல் என்பொறி முதலியவற்றில் உள்ள உடல் பொறி முதலியவை என்னின் நீங்கமாட்டா. அதனால் அவைவேறு நான்வேறு அல்ல எனின் அது பொருந்தாது. உடல்பொறி முதலியவற்றுள் எனதென்று வழங்கப்பட்டுச் சில நீங்குதலும் காணப்படுதலால், ஆன்மா அவற்றின் வேறு. 'இராகுவினதுதலை' என்பது சிறுபான்மை வழக்கும் உடல்பொறி முதலியவற்றை எனதென்றல் பெரும்பான்மை வழக்கும் ஆயினும், அவற்றை அபேதம்பற்றிய கருத்தால் எனதென்றலும் உடம்பிற்படுத்திய ஆபரணங்கள் முதலியவற்றை எனதென்றலும் ஒன்றே. ஆபரணம் முதலியவற்றை எனதென்றிருந்ததுபோல அறிந்தும் பிரித்து பாராதது மடமையே.

எல்லாக்கோசங்களும் உயிரின் வேருவனவே. அபேதத்தாலும் அவற்றை உயிரெனக் கோடல் பொருந்தாது.

என்றன் ஆன்மா என்பதில், ஆன்மா ஆகுபெயராய் மற்றென்றின்மேல் நிற்கும்.

உபநிடதங்களில் ஐங்கோசங்களை ஆன்மா என்றது விளக்குத்தாழியை விளக்கென்றாற்போலத் தானியாகுபெயராதற்குரிய சம்பந்தம் பற்றியே யன்றிப் பிறிதில்லை. அவை எல்லாவற்றிலும் அபேதமாய்ப் பிறிதலின்றி அறிவதாகிய ஆன்மா அவற்றிற்குவேறு.

அன்னமய கோசம் முதலிய நான்கையும் ஒவ்வொன்ருக விட்டுவிட்டு அஞ்சவத்தைப்பட்டு விழித்தபின் அவை கூடிநின்று அறிவிக்கும்போது, முறையே சொல்லியும் கருதியும் உண்டி வினையுறுதலாகிய மறுதலையின் வைத்தும் அங்கனம் அவத்தைப்பட்டவாற்றை அறியா நிற்கும். இதனாலும் உயிர் அவற்றின் வேறென்றே தெளியப்படும்.

ஆன்மா முதல்வன்போலச் சுத்த சித்தேயாகில், மாயாகாரியங்களைப் பற்றி நின்று அறிதல் வேண்டா. அவ்வாறன்றி அமைச்சரும் அரசும்போல் உடனின்று மாயாகருவிகளைப்பற்றி அறிதல் உண்மையால் அநாதியே ஆணவ மலத்தில் மறைந்து அருவனாய் நிற்றல் பெறப்படும்.

வினு:- உயிர் வெவ்வேறு அவத்தை அணையுமாறு என்னை?

விடை:- ஆன்மா, அக்கோசங்களோடு மந்திரிமாரும் அரசனும் போலிருப்பதால், அமைச்சர், படைத்தலைவர் முதலாகிய பரிசனத்தொடும் உலாச் சென்ற மன்னன் மீள அரண்மனையுட் புகும்போது, வாயில் தோறும் அவரவர்க்கு விடைகொடுத்துக் காவலும் வைத்துப்பின், அந்தப்புரத்தின்கண் தனித்துச் செல்லுதல்போல் உடம்பில் முறையே அக்கருவிகளின் நீங்கிப் பிராணவாயுவைக் காவலாக நிறுத்திவைத்து, ஐந்தவத்தை யடையும்.

அவத்தையும் இடமும் கருவியும் வருமாறு:-

| அவத்தை | இடம் | கருவி |
|---|---|---|
| 1. சாக்கிரம் | நுதல் (நெற்றி யன்று) புருவநடு | முப்பத்தைந்து |
| 2. சொப்பனம் | கழுத்து | இருபத்தைந்து |
| 3. சுழுத்தி | இருதயம் | மூன்று |
| 4. துரியம் | நாபி | இரண்டு |
| 5. துரியாதீதம் | மூலாதாரம் | ஒன்று |

வினு :- அவத்தை வகைகள் யாவை?

விடை: அச்சாக்கிரம் முதலிய ஐந்தும் கீழ்நோக்கிச் சென்று ஒடுங்கும் முறையும் மேனோக்கித்தோன்றும் முறையும்பற்றி இருவகைப்படும். அவற்றுள் வினையீட்டத்திற்கு ஏது ஒடுங்குமுறை. அது கீழ்ச்செலுத்திப் பிறவிக்கு வித்தாகும். வினை நுகர்ச்சிக்கு ஏது தோன்றுமுறை. அது பரம்பரையிற் பிறவி தீர்த்தற்குக் காரணமாய் மேற்படும்.

இதயம் முதல் துவாதசாந்தம் முடிவாகிய இடங்களில் புறக்கரணங் களையும் அகக்கரணங்களையும் பற்றியும் பற்றுதும் பிரத்தியாகாரம் முதல் ஐவகைப்பட்டு நிகழும் யோகாவத்தையும் அதைப்போல் ஒடுங்கியும் தோன்றியும் அவ்வாறே பயன்தரும்.

அச்சாக்கிராதி ஐந்தவத்தையுள் முதலவத்தையாகிய சாக்கிர ஸ்தானத் திலும் ஐந்தவத்தையுள்ளன.

அவை 1. சாக்கிர சாக்கிரம்
2. சாக்கிர சொப்பனம்
3. சாக்கிர சுழுத்தி
4. சாக்கிர துரியம்
5. சாக்கிர துரியாதீதம் என்பன.

இவ்வைந்தும் புருவநடுவில், கருவியால் விஷயங்களை அறியுஞ் செய்கை தொறும் அதிநுணுக்கமாய் இடையீடு இன்றி நிகழ்தலை நுண்ணுணர்வாற் கண்டு கொள்ளப்படும்.

இவையன்றி கேவல சகலங்கள் நீங்கிய சுத்தத்திலும் அவ்வாறே ஐவகை அவத்தை உள. அவை உண்மையதிகாரத்துள் உணர்த்த நின்றன.

| | |
|---|---|
| 1. சாக்கிர சாக்கிரம் | 1. சிவதத்துவம் ஐந்தும் கலாதிகளைச் செலுத்தும் |
| 2. சாக்கிர சொப்பனம் | 2. மகேச்சுரம்முடிய நான்கும் ஷை |
| 3. சாக்கிர சுழுத்தி | 3. சாதாக்கியம் முடிய மூன்றும் ஷை |
| 4. சாக்கிர துரியம் | 4. சிவமும் சத்தியும் ஆகிய இரண்டும் |
| 5. சாக்கிர துரியாதீதம் | 5 சிவம் ஒன்றே. |

வினு :- அவத்தைகட்குக் காரணம் எவை? அவற்றின் இயல்பு என்ன?

விடை: ஆன்மா அங்ஙனம் நிகழுங் காரிய அவத்தைகளை அடைதற்குக் காரணமாகக் கேவலம் சகலம் சுத்தம் என மூன்று அவத்தை எய்துவன். அவற்றுள்,

கேவலமாவது :- ஆன்மா, தன் இச்சா ஞானக்கிரியைகளின் நிகழ்ச்சி சிறிதுமின்றித் தான்மாத்திரமே உளனாதல்.

சகலம்:- பின்பு தநு, கரணம்பெற்று, அவ்விச்சா ஞானக்கிரியைகள் ஒருபுடை விளங்கும் அவதரம் சகலம்.

சுத்தம்:- பின்பு ஐம்மலங்களும் நீங்கிச் சிவத்தோடுகூடி அவ்விச்சா ஞானக்கிரியைகள் எங்குமாய் வியாபித்து விளங்கும் அவதரம் சுத்தம்.

வினா:- இக்காரணாவத்தை மூன்றிலும் ஆன்மாவின் நிலை என்ன?

1. விடை:- காரணகேவலத்தில் ஆன்மா

1. அறிவின்மை (ஞானராஹித்யம்)
2. அமூர்த்தம்
3. நித்யம்
4. அராகாதி குணராஹித்யம்
5. கலாதி ராஹித்யம்
6. கிரியாராஹித்யம்
7. இச்சாராஹித்யம்
8. சுதந்திரஹீநம்
9. போகாபாவம்
10. மலசஹிதம். ஆகிய பத்தும் உடையன்.

2. காரண சகலத்தில்,

1. காரணகேவலத்திலில்லாதொழிந்த பத்தும் உடையன். சுவை அறிதல் முதல் ஏகதேசியாதல் முடிய உள்ளவை.

3. காரண சுத்தத்தில்,

1. சத்தாதிவிடயராகம் கழிதற்கேதுவான இருவினையொப்பு.

2. போகபோக்கியக் கருவிச் செறிவுகழிதற் கேதுவான சத்திநிபாதம்.

3. உருக்கழிதற்கேதுவான குருவருள்.

4. எல்லா யோனியும் புக்குழலுதல் கழிதற்கேதுவான ஞானசாதநம்,

5. சென்று திரிதரலாகிய ஏகதேசத்துவம் கழிதற்கேதுவான மும்மல நீக்கம்.

6. சத்தாதி விஷயாநுபவம் கழிவதற்கேதுவான வாதனை நீக்கம்.

7. பாசவறிவிச்சை செயல்கள் கழிதற்கேதுவான ஞானப்பெருக்கம் ஆகிய ஏழும் முறையே கிடைப்ப. அவற்றால் அக்காரியம் பத்தும் நீங்கப்பெற்றுத் திருவருளைக்கூடுதல் சுத்தம்.

## ஆன்மா

ஆன்மா உண்டா? இல்லையா? என்ற ஐயத்தை முதலில் தீர்த்துக் கொள்ளல் வேண்டும். இந்த ஐயம் தோன்றுவதே குற்றம், உண்டா? இல்லையா? என்று ஐயம் அடைவதே ஆன்மா. ஆன்மா இல்லை என்று சொல்லுவது யாது? உடம்பு சொல்லுமோ? உடம்புக்குள் அப்படிச் சொல்லுவது ஒன்று இருந்தாக வேண்டும். அதுவே ஆன்மா. 'இலது என்றலின் ஆன்மா உளது'

என் உடம்பு என்று தனக்கு இடமாயிருக்கும் உடம்பைச் சொல்லிக் கொள்வது ஆன்மாவே அன்றி வேறில்லை. எனதுடல் என்பதில் எனது+உடல் என்ற இரண்டு சொற்கள் இருக்கின்றன, உடல் (உடம்பு) பேசவல்லது அன்று: எனது என்று சொல்லிக் கொள்ளத்தக்கது பேசவும், எண்ணவும், அறியவும் வல்லதாகிய ஆன்மாவே. 'எனதுடல் என்றலலில் ஆன்மா உளது'

உடம்பு ஆன்மா அல்ல. மெய் வாய் கண் மூக்குச் செவிகளாகிய ஐம்பொறிகளும் வேறு. ஆன்மா வேறு. சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் ஆகிய விஷயங்கள் ஆன்மா அல்ல. அவற்றின் வேறாயிருந்து, ஆன்மா அவற்றை அடைகின்றன. தான் அல்லாத எலலாப் பொருளையும் 'இது ஆன்மா அன்று' 'இது ஆன்மா அன்று' என்று தனித்தனியே விலக்கி நிற்பது எது? அதுவே ஆன்மா, அதுவே 'எனதுடல் இவ்வுடல்' என்று தனக்கு இடமாகிய உடம்பைச் சுட்டுகின்றது. சுட்டுதற்கு எது அறிவுடையதோ அதுவே ஆன்மாவாகும். அறிவில்லாத உடம்பும் பொறிகளும் புலன்களும் மற்றையவையும் அறிவு (ஆன்மாவு)க்கு வேறே. யான் உடம்பு, யான் கை. யான் கால் என்று வழங்குவது இல்லை. அதனாலும் உடம்பு முதலியவற்றிற்கு வேறாக யான் என்றும் எனது என்றும் செருக்கு அடையும் ஆன்மா ஒன்று இருப்பது தெரியும்.

என் வீடு, என் ஊர் என்றாற்போல என்கை என்கால் என்று சொல்லும் போது, வீட்டையும் ஊரையும் கையையும் காலையும் ஆன்மா என்று எண்ணுவது பொருந்துமோ? பொருந்துமானால், மனைவி முதலிய புறப்பொருள்களே ஆன்மா என்று மயங்குவதும் மயக்கமாகாமல் தெளிவாகிப்போம்.

ஆன்மாவே மெய் (துவக்கு) ஆகிய பொறிவழியாக ஊற்றை (ஸ்பரிசத்தை) அறிகின்றது. வாய் (ஜிஹ்வா) ஆகிய பொறி வழியாகச் சுவையை (ரசத்தை) அறிகின்றது. கண் (சக்ஷு) ஆகிய பொறிவழியாக ஒளியை (ரூபத்தை) அறிகின்றது. மூக்கு (ஆக்கிராணம்) ஆகிய பொறிவழியாக நாற்றத்தை (கந்தத்தை) அறிகின்றது. காது (சுரோத்திரம்) ஆகிய பொறிவழியாக ஒலியை (சப்தத்தை) அறிகின்றது. சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்னும் ஐந்தும் புலன் (விஷயங்)கள். மெய் வாய் கண் மூக்குச் செவி என்னும் ஐந்தும் பொறி (இந்திரியங்)கள். இப்பொறிகள் ஆன்மா புறப்பொருள்களை அறிதற்குதவுங் கருவிகளாதலின், ஞானேந்திரியங்கள் என்று சொல்லுவதுண்டு. ஐம்பொறிகளால் ஞானம்மட்டும் வரும். தொழிலும் விருப்பும் வரா. ஆதலால், அறிவு, தொழில், விருப்பு மூன்றுமுடைய ஆன்மா வேறும்.

ஐம்பொறிகளும் ஒன்று அறிந்த விஷயத்தை மற்றொன்று அறியாதன, கண்ணுக்குத் தெரியும் வடிவம். காது முதலிய மற்றைய நான்கிற்கும் தெரியாது. காதுக்கு வரும் ஓசை, கண் முதலியவற்றால் அறியப்படாது. இப்படியே மற்றைய முப்பொறிக்கும் காண்க.

ஐந்து பொறிகளின் வழியாலும் ஐந்து புலன்களையும் அறிந்து வருவது ஓரான்மாவே. ஓரே உடலில் ஐந்து ஆன்மாக்கள் ஒருசேரத் தங்கி ஐம்பொறிகளாலும் ஐம்புலன்களையும் தனித்தனி அடைகின்றன என்று சொல்லுவது பொருந்தாது. அப்படி ஓர் உடலுள் ஐந்து ஆன்மாக்கள் இருந்தால், கண்ணுக்கு வந்த குற்றத்தால் துன்பமும், காதுக்கு வந்த நலத்தால் இன்பமும், நாவிற்கு வந்த இன்சுவையால் விருப்பமும், மூக்குக்கு வந்த தீநாற்றத்தால் வெறுப்பும், மெய்க்கு நேர்ந்த இடையூற்றால் வருத்தமும் ஒரேகாலத்தில் அடைந்தாகவேண்டும், ஒரேகாலத்தில் ஒரே நாக்கின் வழியாக ஐந்து ஆன்மாக்களும் ஒருசேர ஆறு சுவையுள், தாம்வேண்டிய சுவைகளைக் கவர்தல்வேண்டும். அவ்வாறு சம்பவிக்குமோ? ஒருகாலும் சம்பவிக்காது.

ஒருதலைக்கு ஆன்மா ஐந்து உண்டு என்றுகொண்டு, நான்முகனுக்கும், சண்முகனுக்கும், தசமுகனுக்கும் பெருக்கி, முறையே இருபது, முப்பது, ஐம்பது ஆன்மாக்களாகச் சொல்லலாமோ? ஓர் உடம்பில் ஓர் ஆன்மாவே இருப்பது அநுபவசித்தம். பொய்யுணர்ச்சியால் பல ஆன்மா உண்டு என்று தோன்றினாலும். மெய்யுணர்ச்சி நேர்ந்தபோது அப்பொய்யுணர்ச்சி விலகிப்போம்.

கனவு கண்டதும் ஆன்மாவே; உடம்பல்ல. நனவில் அறிவதும் ஆன்மாவே; உடம்பல்ல. உடம்பே கனவு கண்டதாயின், நனவில் அவ்வுடம்பு மயங்கியறியக் காரணமில்லை. கண்டபடியே அறியவேண்டும். ஆன்மாவே

கனவு கண்டதனுல், உடம்பின் உள்ளேயும் உடம்பின் வெளியேயும் செல்லுதற்கு உரிய அவ்வான்மா மயங்கி அறியலாயிற்று. ஆகவே, நுண்ணிய உடம்பே (சூக்குமதேகமே) பருத்த உடம்பினுள் (ஸ்தூல தேகத்துள்) நின்று பொறிகளை வெளியில் போக்கி அறியும் என்பது பொருந்தாது.

நனவு பருத்தவுடம்பில் நடப்பது. கனவு நுண்ணிய உடம்பில் நடப்பது. இரண்டு உடம்பிலும் ஆன்மா போக்கும் வரவும் செய்வதால், கண்டபடி அறியவும் மயங்கி அறியவும் கூடும். அதனுல், நுண்ணிய உடம்பிற்கு வேருக இருப்பது ஆன்மா.

பிணமாகக்கிடக்கும் உடம்பில் உறுப்பு ஒன்றும் குறையவில்லை. எல்லாவுறுப்புக்களும் இருந்தும் அப்பிணம் ஒன்றையும் அறிவதில்லை. அதனுலும் உடம்பிற்கு வேருக ஆன்மாவுண்டு என்று தெரிகின்றது. தேகத்தில் அவயவங்கள் எல்லாம் (குறைவில்லாமல்) இருக்கும் நிலைமை பிணத்திற்கும் உண்டு. பிணமான பின்பு அவயவக்குறைவு ஏற்படாமல் இருந்தும் அறிவு நிகழவில்லை. அதனுலும் 'உடம்பே அறியும், உடம்பிற்கு வேருக உயிர் இல்லை' என்ற சிலர்கொள்கை தவருனது என்று அறியலாம். பிராணவாயுவே ஆன்மா. ஆன்மா என்று வேறு இல்லை என்று துணிவதும் உண்டு. அத்துணிவும் மெய்யான துணிவாகாது. பொய்த்துணிவே.

தூங்கியபோதும் இன்பத்தையும், துன்பத்தையும் ஆன்மா அநுபவிக்கின்றது. 'சுகமாகத் தூங்கினேன்' என்ற அநுபவம் அதை மெய்ப்பிக்கும். பிராணவாயு நமக்கு விழிப்பில் இயங்குவதுபோலத் தூக்கத்திலும் இயங்குகின்றது.

உடம்பில் இருந்த காற்று (பிராணவாயு) வெளிப்பட்டதால், உடம்புக்கு அறியும் தன்மை ஒழிந்தது. இருந்த காற்று வெளிப்படாமல் இருந்தபடி இருந்தால் உடம்பிற்கு அறியுந்தன்மை ஒழியாது என்பதே அவர் கொள்கை. மண், நீர், நெருப்பு, விண் (ஆகாயம்) ஆகிய நான்கும் வெளிப்படாமல் இருந்தால் உடம்பே அறியும் என்றும் கூறுவர். அது ஆராய்ச்சியில்லாத கூற்றே என்பது எளிதில் தெரியும். காற்று, விண், தீ, நீர், மண் ஆகிய ஐம்பூதங்களுள் யாதும் குறையாமல் கிடக்கும் நிலைமை தூக்கத்திலும் உண்டு. அப்போது அறிவு நிகழவில்லையே! உடம்பே அறியுமானுல் தூக்கத்தில் அறியாதது ஏன்?

ஐம்பொருளும் (மெய், வாய், கண், மூக்கு, செவி) பிணமாகும்போது கெட்டுவிடும். அவை கெடாமல் உடம்பில் நின்ருல் ஐம்பொறிகள அறியும். அவ்வறிவும் நனவில் நிகழ்வதே. தூக்கத்தில் நிகழாது. தூக்கத்தில் ஐம்பொறிகளும் அறியாமல் ஒடுங்கி நிற்கும்.

நனவிலும் ஒவ்வொரு பொறியாய்த்தான் அறியும். மொத்தமாய் அறியமாட்டா,

ஒவ்வொரு பொறியாய் அறிவதிலும், ஒரு பொறி அறிந்ததை மற்றைப் பொறிஅறியாது. கண்ணுக்குத் தெரிந்தது மற்றவற்றிற்குத் தெரியாது, இது போல மற்றவற்றிலும். இதை முன்னும் குறித்தோம்.

ஐம்பொறிகளேயுப் கொண்டு ஐம்புலன்களேயும் அறிவது ஒன்று உண்டு. அதுவே ஆன்மா,

பிராணவாயு சஞ்சாரம் செய்தால்தான் அறிவு உண்டாகக் காண்கிறோம். இன்பமோ துன்பமோ அநுபவிக்கும் நிலைமையும், உடம்புக்கு அசைவும் பிராண வாயு இல்லையானால் இல்லை. அதனால் பிராணவாயுவே ஆன்மா. அதற்கு வேருக ஆன்மா ஒன்றுமில்லை. அவர் - ஐம்பொறிகளேயும்கொண்டு அறிவது அப்பிராணவாயுவேயாகும், தூக்கத்தில் அப்பிராணவாயு சஞ்சரித்தும், ஐம் பொறிகளாகிய கருவிகளின் தொடர்பு நீங்கினதால் அறியாதாயிற்று என்று சிலர் கொள்வர். அதுவும் பொருந்தாத கொள்கையே.

பிராணவாயுவுக்கு ஐம்பொறிகள் கருவிகள். அக்கருவிகளேக்கொண்டு காரியத்தைச்செய்யும் தலைமை அவ்வாயுவுக்கு உண்டு. தலைமையுடைய பிராண வாயு சஞ்சரிக்கும்போது அதன் கருவிகளாகிய ஐம்பொறிகளும் நீங்குமோ? நீங்க லாமோ? நீங்கினால், அவற்றை நீங்கவிடாமல நிறுத்தும் ஆற்றல் அவ்வாயுவுக்கு இல்லை என்றுதானே விளங்கும், விளங்கவே அவ்வைம்பொறிகளேயும் அப்பிராண வாயுவையும் கொண்டு அறிவது வேறு ஒன்று உண்டு என்று பெறப்படும்,

இதுவயைில், ஆன்மா உண்டு என்பதும், அந்த ஆன்மா. தேகம், இந்திரியம், பிராணவாயு முதலியவற்றின் வேறு என்பதும் விளக்கப்பட்டது.

ஆன்மா உடம்பே, உடம்பினும் வேருக ஆன்மா ஒன்றில்லை என்பாரைத் தருக்கலூலார் மறுத்துரைக்கும் உண்மையையும் இங்குணர்தல் நன்று, "சரீரமே ஆன்மா என்பார்க்குக், கைகால் முதலிய சரீரம் நசித்தலால், ஆன்மாவும் நசித்த தெனல்வேண்டும் ஆதலின், சரீரம் ஆன்மா அன்று" (தருக்க சங்கிரக தீபிகை). உடம்பில் ஒவ்வொருறுப்பும் சிற்சில வுறுப்பும் உறும்பியும் ஆக அழிவடை கின்றன.. உடம்பு அழியும்போது அவ்வுடம்பினுள் இருந்த ஆன்மாவும் அழிவ தில்லை. உடம்பே ஆன்மா ஆயின் உடம்பழிய ஆன்மா அழிதல் வேண்டும். உடம்பழிவதே ஆன்மாவின் அழிவு என்று முடியும் உடலுறுப்புக்கள் அழிய அழிய ஆன்மாவும் அழிந்து வருவதாகும் அவ்வாறில்லாமையால், உடம்பு

வேறு ஆன்மாவேறு என்பது வெற்றவெளி. உடம்பிற்கு வளர்ச்சியும் தளர்ச்சியும் உள. காலவரையறை உண்டு. 'நெருநல் உளனொருவன் இன்றில்லை' என்பது உடம்பு பற்றியதே. பிணக்கிடையில் உணர்வில்லை.

இந்திரியங்களே ஆன்மா என்பதும் பொருந்தாது. குடத்தினைப் பார்த்தது கண்ணிந்திரியம். அதனைத் தொட்டது துவக்கு (மெய்) இந்திரியம். கண்ணிந்திரியம் ஆன்மா ஆனால், 'கண்டேன்' என்னும் ஒருணர்ச்சிமட்டும் ஏற்படல்வேண்டும். குடத்தைத் 'தொட்டேன்' என்னும் உணர்ச்சி ஏற்படுவது கண்ணிந்திரியத்தாலன்று; மெய் ஆகிய இந்திரியத்தால் ஆம். 'குடத்தைக் கண்டயானே இப்பொழுது அதனைத் தீண்டினேன்' என்னும் **தொடர்ச்சியறிவு** ஏற்படுகின்ற படியால், கண்ணாற்கண்டதும் கையால் தீண்டியதும் ஒன்றுயிருந்தாலன்றி அத்தொடர்ச்சியறிவு ஏற்படவழியில்லை. அதனால் கண்ணினும் மெய்யினும் வேறாக ஆன்மா இருத்தல் விளங்கும். அவ்வான்மாவிற்கு, முன் கண்ணாற் கண்ட குடத்தைப் பின் கையால் தீண்டி, காண்டல் தீண்டல் இரண்டும் தொடர்ச்சியாக நிகழ்தல் பொருந்தும். அவ்வாறு உணர்வனவும் அவ்விந்திரியங்களே என்றாலோ, அவ்விந்திரியங்கள் தம்தம் விடயங்களை வேறு வேறு கண்டறியுமே அன்றி, இத்தொழிற்பாடு நம்மால் ஆகின்றது என்றும் அறியமாட்டாத சடங்கள் ஆதலின், சித்தாகிய ஆன்மா வேறு இந்திரியங்கள் வேறு என்று அறியலாம்.

இந்திரியங்கள் கெடுதல் கண்கூடு. முத்தன் முனியனைப் பார்த்து நெடுங்காலம் ஆகிவிட்டது. மீண்டும் ஒருகால் இருவரும் சந்தித்தனர். முத்தன் முனியனைப் பார்த்து, "என்னைத் தெரியுதா" என்றான் முனியன் உடனே, "முத்தன்தானே" என்றான், முத்தனோ, என்ன முனியா, கண்குருடாயிருந்தும் என்னைத் தெரிந்து கொண்டதெப்படி? என்றான். கண் குருடானாலும் நான் குருடாகவில்லையே. கண்ணுள்ளபோது உன்னைப் பார்த்தும் உன்பேச்சைக் கேட்டும் உற்ற ஞானம், அக்கண் போற்கு நடும் கேட்ட காது செவிடாதல் போலச் செவிடும் ஆதல் உண்டோ? அந்த ஞானம் அநுபவித்தது. அந்த அநுபவத்தால் நினைப்பு உண்டாயிற்று. அந்த நினைப்பால்தான் உன் குரலைக்கேட்டதும் முத்தன் என்று உணர்ந்து கொண்டேன்" என்றான். இத்தகைய அநுபவம் எல்லார்க்கும் உண்டு. இதனால், இந்திரியங்கள் கெட்டாலும் ஆன்மா கெடுவதில்லை, கெட்ட இந்திரியங்களின் வேறாக ஆன்மா இருந்து முன் இந்திரியங்களாற் பெற்ற அநுபவத்தைப் பின் நினைப்பது விளங்கும்.

அன்றியும், இந்திரியங்கள் எல்லாருடம்பிலும் உள்ளன, இந்திரியங்களே ஆன்மா ஆனால், ஒருவனது அநுபவத்தை மற்றொருவனும் ஒட்டி உணர்தல் வேண்டும். அவ்வாறு உணர்தல் இல்லையே! அதனாலும் இந்திரியம் ஆன்மா அன்று என்று தெரிகின்றது.

மனுதியின் வேறு ஆன்மா. மனுதியும் அணுவும் ஞானத்தைப்போலப் பிரத்தியக்ஷமன்று. பிரத்தியக்ஷஞானம் அப்பிரத்தியக்ஷமாகிய மனத்திலிராது, இருந்தால், ஞானமும் அப்பிரத்தியக்ஷம் எனப்படும் மனம் மகத்தன்று. அணு பரிமாணமுடையது. மனத்தில் பூரண ஞானம் ஏககாலத்தில் ஏற்படாததால் அது நிச்சயமாயிற்று. மனத்தினியற்கை ஏகதேசமேயன்றிப் பிராயிகமன்று. சதாவதானம் சகச்சிராவதானம் முதலியவை விரைவில் நடத்தல்பற்றி ஏககாலத்தில் நடப்பதுபோலத் தோன்றும். உண்மையில், காலத்தால் இடையீடு படுதல் அறிஞர்க்கு விளங்கும்.

ஞானத்தின் வேறு ஆன்மா என்பர் நையாயிகர். ஞானம் குணம். குணியைவிட்டுக் குணம் தனித்திராது. ஞானத்திற்குப் பற்றுக்கோடு ஒன்று வேண்டும். ஞானம் (அறிவு) ஞாதுரு (அறிஞன்) ஞேயம் (அறியப்படுபொருள்) மூன்றும் வெவ்வேறாயிருத்தலின், ஞானமே ஆன்மா அன்று. உலக வியவகாரம் அப்படியே இருக்கின்றது (இவ்வளவும் நையாயிகர் கொள்கை)

தலைமாத்திரமாய் நிற்கும் இராகுவை இராகுவினது தலை என்று வழங்குவது அபேதம்பற்றியேயாகும். அவ்வாறே "எனதுடல்" என்று அபேதம் பற்றி வழங்கியதெனலாம்.

'எனதுடல்' என்பதில், 'எனது' என்னுஞ் சொல்லால் குறிக்கப்படுவது ஒன்றும் 'உடல்' என்னும் சொல்லால் குறிக்கப்படுவது ஒன்றும் ஆக இரண்டு உண்டு. அவ்விரண்டனுள், உடல் உடைமையாகும். அதை உடையதே மற்றொன்று. உடையதும் உடைமையும் ஆகிய இரண்டும் ஒன்றாகா. உடல் வேறு. அவ்வுடலை எனதென்ற ஆன்மா வேறு இவ்வாறு ஆறும் வேற்றுமைப் பிறிதின்கிழமைப் பொருளில் கூறும் "எனதுடல்" என்பதும் "இராகுவினது தலை" என்பதும் ஒன்றாகா.

இராகுவினது தலை என்றாற்போல்வன சிறுபான்மை வழக்கம். அங்கு ஒற்றுமை (அபேத)ப்பொருள் கொள்ளுதல் பொருந்தும், எனதுடல், என் கை, என் கால், என் கண், என் காது, என் பொறி, என் பிராணன், **என் அறிவு** எனப் பலவற்றையும் பெரும்பாலும் உலகத்தில் வழங்கக் காண்கிறோம். இப்பெரு வழக்கம் பிறிதின்கிழமைப் பொருள்லேயே வரும். வரவே, அவ்வாறு கூறிக் கொண்டு நிற்கும் பொருள் வேறொன்று உண்டு என்பது பெறப்படும். அதுவே ஆன்மா.

**என்னறிவு** என்பதில், பாசஞானத்தை அறிவென்றதால், நையாயிகர் கூற்று அவ்வளவிற் பொருந்தும். பசு ஞானத்தைப் பசுக்கள் தனித்தனி என்று கூறிக்கொள்வதற்குத் தனுகரணாதிகள் கூடுதல் வேண்டும். கூடின்

பாசஞானம் கலந்துவிடுகின்றது தனித்த பசுஞானம் பாசக்கலப்புள்ள காலத்தில் தோன்றுது. அந்த ஞானத்திற்கு ஆன்மா வேறு என்பது இங்குப் பொருந்தாது. இதை நையாயிகரும் அறியார். அதனால், நையாயிகர் கூற்று அதை மறுத்திடும் அளவு மதிப்புடையதன்று. (சிவஞானசித்தியார் 293, 294, 295 பார்க்க.)

1. பரிணாமவாதிகள் கொள்கை.

சீவான்மாக்கள் பிரமத்தின் பரிணாமம். அறிவு, விருப்பம், செயல்களை உடையவை, தீயும் சூடும் போலப் பேதாபேதம் ஆகியகுணமும் குணியுமாம் தன்மையுற்றவை. தீயைப்போலக் குணியாம் தன்மையும் சூட்டைப்போலக் குணமும் உள்ளவை குணம்வேறு குணிவேருக நோக்கின் பேதமாம். குண குணிக்குப் பேதம் பாராட்டாமல் அபேதமாகக் கொள்வதும் உண்டு. அதனால் பேதாபேதம் எனப்பட்டது. அச்சீவான்மாக்கள் பலவேறுவகைப்பட்டு நிற்கும்.

சைவசித்தாந்தி மறுப்பு :-

கருவிகள் இல்லையானுல் அறியமாட்டாத சீவான்மாவுக்குப் பரிணாமம், பேதாபேதம், குணகுணிபாவம், நாநாவிதம் ஆதல் ஆகியவை எவ்வாறு சித்திக்கும்?

2. (அ) சாங்கியர் கொள்கை:-

குணகுணிபாவம் இல்லாமல், கேவலம் அறிவுமாத்திரையாய் நிற்பது உயிரின் இயற்கை. அவ்வுயிரின் சந்நிதியில் உடம்பின்கண்நின்று கரணங்கள் தொழிற்படும். அதனால் தொழிலும் அறிவும் விருப்பமும் அவ்வுடம்பில் நிகழும்

சைவசித்தாந்தி மறுப்பு:-

சாங்கியர் குறித்த சந்நிதி பிணத்திலும் உண்டு: உறக்கத்திலும் உண்டு. பிணமாக்கிடப்பது உடம்பு. உயிரின் சந்நிதிக்கு அழிவில்லை, உயிர் அழியாதது. அதன் சந்நிதியும் அழியாதது. உறக்கத்திலும் உயிரின் சக்திக்குக் கேடில்லை சந்நிதி கெடாதிருந்தும் பிணத்திலும் உறக்கத்திலும் கரணங்களின் தொழிற்பாடும் தொழிலறிவு விருப்பங்களும் உடம்பில் நிகழக் கண்டிலம், அதனால் சாங்கியர் சொல்லுமாறு, சந்நிதி மாத்திரையால் அவை நிகழா.

(ஆ) சாங்கியர் கொள்கை:-

வியாபகமாய்நிற்கப்பெறுவது ஒன்றே சந்நிதி அன்று. உயிர் அழியாமல் வியாபகமாய் நிற்பதுபற்றிச் சந்நிதிக்குக் கேடில்லை எனலாகாது, காந்தத்தின்முன்

இரும்புபோல உயிர்முன் உடம்பு தொழிற்படுதற்கு ஏதுவாகிய ஒரு குணவிஷேடம் சந்நிதி. அத்தகைய சந்நிதியைக் கொண்டால் குற்றம் உண்டாகாது.

சைவசித்தாந்தி மறுப்பு:-

ஒரு குணம் ஒரு தொழிலே செய்தற்குரியது. தம்முள் மாறுபட்ட பல தொழில்களைச் செய்தல் பொருந்தாது. நினைப்பு, மறப்பு, ஓட்டம், இருப்பு, கிடக்கை, நிலை முதலிய மாறுபட்ட தொழில்கள் எல்லாம் ஒரு குணத்தால் ஆவன அல்ல. காந்தம் இரும்பை இழுத்தல் ஒன்றே செய்யும். அகற்ற மாட்டாது. சேர்த்தலும் பிரித்தலுமாகிய மாறுபட்ட தொழில்களைக் காந்தம் செய்யாது.

3. (அ) பௌராணிகர் கொள்கை:-

உயிர் உருவத்தையுடைய பொருள், அஃதாவது உயிர்க்கு இவ்வுடம்பல்லாத வேறு சொந்தவுருவம் உண்டு.

சைவசித்தாந்தி மறுப்பு:-

உயிர் பரிணமித்து அழியாது, காட்சிக்குப் புலனாகாது. பரிணமித்தழிதலும் காட்சிப்புலனாதலும் இல்லாதஉயிர், பரிணமித்தழியும் இயல்பும் காட்சிக்குப் புலனாகும் இயல்பும் உடைய பூதங்களுக்கு ஒப்பாக உருவுடையது என்பது பொருந்தாது, உயிர் உருவுடையதானால், இவ்வுடம்பிற்குள் வேறு ஒரு வடிவம் காணவேண்டும், உருவமுடைய எல்லாம் காட்சிக்குப் புலப்படும்; பரிணமம் அடையும்; அழியும், உயிர் உருவுடையதானால் கருவில் நுழையும் படியும் காட்டல்வேண்டும். கண்ணுக்குப் புலப்படாத உருவம் உடையதென்றால் அதை வாயால் உருவம் உடையது அன்று என்றே சொல்லிவிடல் நன்று.

(ஆ) பௌராணிகர் கொள்கை:-

பூதம்போலக் காட்சிக்குப் புலனாகக்கூடிய தூலவுருவமாகாமல், சூக்கும உருவாய் நிற்பது உயிர்.

சைவசித்தாந்தி மறுப்பு:-

தூலவுருவத்தைத் தோற்றுவிக்கும் உடம்பு புரியட்டக தேகம். அதுவும் சடம். சித்தன்று! சூக்கும உருவாய் நிற்பது உயிர் என்றால் உயிர் சடம் எனப்படும்.

(இ) பௌராணிகர் கொள்கை:-

அப்புரியட்டக தேகத்தின் உள்ளே அதிசூக்கும ரூபமாய் இருப்பது உயிர்.

சைவசித்தாந்தி மறுப்பு:-

கலை முதல் பிருதிவி முடிய உள்ள தத்துவங்களாலான பரதேகமே புரியட்டக தேகத்தின் உள்ளே இருக்கின்றது. அப்பரதேகமும் சித்தன்று அசித்தாதலும் அசத்தாதலும் உருவங்களுக்கெல்லாம் நிச்சயமாயுண்டு. அவ்வாறு ஆகாமல் சித்தும் சத்துமாயுள்ள உயிர் உருவப்பொருளாகாது.

4, (அ) கவுளர் கொள்கை:-

உயிர் அருவுருவப்பொருள். அஃதாவது உருவமும் அன்று, அருவமும் அன்று. உருவமும் அருவமும் கூடியது. விறகும் தீயும்போல அருவுருவப் பொருள்.

சைவசித்தாந்தி மறுப்பு:-

ஒன்று பிறிதொன்றாகாது. மறுதலைப்பட்ட இரண்டு தன்மை ஒரு பொருளில் இல்லை. விறகும் நெருப்பும் தம்முள் வேறு. அவ்வுவமை இங்குப் பொருந்தாது. விறகு உருவம். தீ அருவுருவம். இரண்டுங்கலந்த நிலையில் அருவுருவம் உண்டு என்று காட்டினால், உயிரிடத்திலும் இரண்டுபொருளின் கலப்பு உண்டு என்று காட்டவேண்டும். உயிரை அருவுருவப்பொருள் என்றதன் மேலும், அதனிடத்தில் கலந்துள்ள இரண்டு பொருளுக்கும் உருவாராய்ச்சி நிகழும் அவ்வசம்பாவிதத்தால், கவுளர் கொள்கை பொருந்தாது.

(ஆ) கவுளர் கொள்கை:-

தலையுவா (அமாவாசி) நாளில் அருவாய் நின்றே பின் முறை முறையால் வளர்ந்து, பூரணையில் தூலவுருவாய் விளங்குகின்றது மதி. அம்மதியி னிடத்தில் அருவும் உருவும் காண்கின்றோம். அதுபோல உயிரும் அருவாய் நின்றே கருவுள் பதிந்து, முறை முறையால் வளர்ந்து, இவ்வுடம்பாகிய உருவாய்த் தோன்றுகின்றது. அதனால், உயிர் அருவுருவே ஆகும்.

சைவசித்தாந்தி மறுப்பு:-

உயிர் சித்து. சடமன்று; நித்தியம் (அழியாதது) அநித்யமன்று; பந்தத்திற்பட்டு நீங்குவது. அத்தகைய உயிர் அருவுரு ஆனால், அசித்து (சடம்) ஆம். பூதகாரியமாம். உடம்புருவமெல்லாம் பூதங்களின் காரியங்களே, பந்தத்திற்

படுவதாகாமல் பந்தமாம். பந்தம் உடம்பு. பந்தத்திற்பட்டு நீங்குவது உயிர். பூதகாரியம் உடம்பு. அவ்வுடம்பிற்பொருந்தி நீங்குவது உயிர். உருவாயினும் அருவாயினும் கண்ணிற்குப் புலப்படும். படாமையால், உயிர் அருவுருவுமன்று. உடம்புருவமுமன்று.

பாதஞ்சலர் கொள்கை :-

உடம்பைக் கட்டுவது, ஆட்டுவது, ஓட்டுவது (போக்கு). மீண்டும் உலாவுவது (வரத்து). நிறுத்துவது, இருத்துவது, கிடத்துவது, மண்ணிற் புரட்டுவது முதலிய பல விகாரங்களைச் செய்வது யாது? உயிரோ? அன்றோ? உயிராயின் அவிகாரி ஆதல் எவ்வாறு? காட்சியளவையால் (பிரத்தியட்ச பிர மாணத்தால்) உடம்பில் நிகழும் நிகழ்ச்சிபற்றி அது பொருந்தாது என்று தெளியப் படும்.

வைசேடிகர் கொள்கை :-

உயிர் சடம், அது பின்பு மனத்தொடு கூடிச் சித்தாகி அறியும், மனத் தொடுங் கூடுதற்கு முன் சடமே. சித்தன்று, அறியமாட்டாது,

சைவசிந்தாந்தி மறுப்பு :-

அசித்து ஆன்மா என்றால் அறியமாட்டாது, அசித்து சித்தாகும் என்பது உலகத்தில் இல்லாத விந்தை, சடப்பொருள் சித்தாகாது. சித்துப் பொருள் சடமாகாது.

சைவரில் ஒருசாரார் கூற்று :-

உயிர், சித்தும் அசத்துமாகிய இரண்டு தண்மையும் ஒருங்கு கூடியது.

சைவசித்தாந்தி மறுப்பு :-

சித்தும் அசித்தும் ஒன்றற்கொன்று மாறுபட்ட தன்மைகள் ; ஒளியும் இருளும்போல. அவையிரண்டும் ஒருங்கு நில்லா,

பட்டாச்சாரியர் கூற்று :-

உயிர் சித்தேயாகும்.

சைவசித்தாந்தி மறுப்பு ;-

அசித்தாகிய கருவியை அடைந்தால்தான் உயிர்க்கு அறிவு நிகழ்கின்றது. உயிர், சித்தேயானால் கருவியை அடைவதன் முன்னேயும் அறிதல் வேண்டும். அப்பொழுது அறியமாட்டாமையால் சித்தே எனல் அமையாது.

பாஞ்சராத்திரிகள் கூற்று ;-

உடம்பினுள்ளே பரமாணுவின் அளவுடையதாகி நிற்பது உயிர்.

சைவசித்தாந்தி மறுப்பு ;

உயிர் அணுவளவானால் உடம்பில் உள்ள பல தூவாரங்களுள் ஒன்றின் வழியால் ஓடிப்போய்விடும். அங்கனம் போகவில்லை. உடம்பில் கட்டுண்டும் சுமைதாங்கியும் இருக்க உடம்படாது. இன்னும் இவைபோல நிகழ இடங் கொடாது. உயிரை அணுவளவு என்று இசையின் இத்தகைய குற்றங்கள் பல உள்ளன.

மிருதி நூலார் கொள்கை :-

உயிரானது உடம்பினுள்ளே புல்லின் நுனியில் தங்கும் பனித்துளிபோல் ஏகதேசமாய் இருதயத்தில் நிற்கும். அவ்வுயிரின் அறிவு விளக்கின் ஒளிபோல எங்கும் வியாபிக்கும்.

சைவசித்தாந்தி மறுப்பு:

உயிர் ஏகதேசமானால், பௌராணிகர் (கவுளர், பாதஞ்சலர்) கொள்கையை மறுத்தற்கு உற்ற குற்றம் எல்லாம் நேரும். குணமாவது குணியின் அளவைக் கடவாது. விளக்கினது சூக்குமரூபமே விளக்கொளி. விளக் கொளியைக் குணமாக் கொள்ளலாகாது. அவ்வுவமை இங்குப் பொருந்தாது. பொருத்தினும் மிக்க வேறுபாடுண்டு. அஃதாவது உயிர் ஏகதேசம். ஆனால், உருவாகி மாய்ந்துபோம். உயிர் மாய்வதில்லை அறிவுக்கு அழிவில்லை. சித்தாகிய உயிர் ஏகதேசமானால், உருவாய் அசித்தாய் முடியும். விளக்கின் சுடர் தொட்டால் அன்றிச் சுடாது. இருந்த இடத்தில் அறிந்து மற்ற இடத்தில் பரிசத்தாலும் அறியமாட்டாது. உயிரோ பரிசித்த இடமெங்கும் அறியும் தன்மையது. விளக்கு ஓரிடத்திலிருந்து, மற்றையிடங்களையும் விளக்கும், அவ்வாறு உயிரின் அறிவு ஐம்புலனிடத்தும் ஒருங்கே நிகழ்தல் வேண்டும். அப்படி நிகழவில்லை. அக்காரணங்களால் மிருதி நூலார் கொள்கை பொருந்தாது.

11. சமணர் கொள்கை:-

உயிரானது, உடம்பின் அளவைப் பொறுத்தது. உடம்பு முழுதும் நிறைந்து நின்று உணர்வது.

சைவசித்தாந்தி மறுப்பு:-

உயிர் உடம்பு முழுதும் நிறைந்து நிற்பதானால் உறக்கத்தை அடைதலாகாது உடலில் ஓரிடத்தில் உயிர் இளைப்பாறத் தங்குவதே உறக்கம் வருதற்குக் காரணம். ஐம்பொறிகளிலும் ஒருசேர அறிவு நிகழ்வதில்லை உடல் முழுதும் இருந்தால் ஒருசேர நிகழத் தடை ஏது? பெரிய உடலுக்குத் தக்க பேரறிவும் சிறிய உடலுக்குத்தக்க சிற்றறிவும் ஆதல் உண்டோ? உடலையேனும் ஒவ்வோர் உறுப்பையேனும் குறைக்கக் குறைக்க அறிவும் குறைந்து, உடலொழியும்போது அறிவும் ஒழிதல் வேண்டும். யானைக்குப் பேரறிவும் எறுப்புக்குச் சிற்றறிவும் ஆகும். (சித்தியார்பரபக்கம் பா. 157 இருபா இருபஃது 6 பார்க்க) இத்தகைய பல குற்றங்களை நோக்கின். சமணர் உரைக்கும் உயிரிலக்கணம் பொருந்தாது.

12 (அ) ஐக்கியவாதிகள் கொள்கை:-

ஆன்மா, கடவுளைப்போல எங்கும் வியாபியாய் நின்று அறியும் இயல்புடையது.

சைவசித்தாந்தி மறுப்பு:-

ஆன்மாக்கள் நனவு, கனவு, உறக்கம், பேருறக்கம், உயிர்ப்படக்கம் (ஜாக்கிரம், சொப்பனம், சுழுத்தி துரியம், துரியாதீதம்) ஆகிய ஐந்து அவத்தைகளை அடைகின்றன. அடையும்போது வியாபகம் ஏது? சுவர்க்க நரக பூமி யாத்திரையைச் செய்கின்றது. செய்யும்போது ஓரிடத்தில் இருந்தால் ஏனையிடத்தில் இல்லை. அது வியாபகம் ஆமோ? முதல்வனது வியாபகம் இப்படியோ? ஐம்புலனையும் ஒருசேர அறியாதது ஏன்? வியாபகம் ஒழிந்து உடம்பினுள் ஏகதேசமாய் நிற்றல் யாங்ஙனம்?

(ஆ) ஐக்கியவாதிகள் கொள்கை:-

உயிரானது எங்கும் வியாபகமாய் நின்று அறிவதானாலும், மாயையின் காரியமான உடம்பு முதலியவை அவ்வறிவைத் தடைசெய்து நிற்கின்றன, அத்தடையால் உறக்கம் முதலியன அடைந்து உயிர் ஏகதேசப்படுவதாயிற்று.

சைவசித்தாந்தி மறுப்பு:-

மாயாகாரியம் உயிர்க்கு அறிவு விளங்குவதற்கு ஏதுவானது. அதற்கு விரோதமாகத் தடைசெய்தல் கூடாது. முன் சுத்தமாயிருந்த உயிரை அம்மாயா காரியம் பந்தித்தது என்றால், முத்தியை அடைந்த பின்பும் அது பந்திக்கலாமே! அங்கும் பந்தித்தால் முத்தி என்றும் ஒன்று உண்டோ? முத்தியைப் பெற்ற பின்பு அடையாது என்றால், அநாதி நிலைக்கும் இதற்கும் வேறுபாடு இல்லை. இல்லாமையால், அநாதியே பந்தம் அடையவேண்டா. அநாதியே முத்தனாய் விளங்குதல்வேண்டும். சித்தியார் சுபக்கம் 209, 208 உரை விசேடத்தில் உள்ள மறுப்பும் உணரத்தக்கது.

ஆன்மா குணி, ஆன்மஞானம் குணம், ('அறிய இரண்டல்லன்' என்னும் சிவஞானபோத வெண்பாவுரை சூ. 6 பார்க்க.) ஆன்மா பசு என்று கூறப்படுதற்குக் காரணம் ஆணவ மலச்சார்பே ஆகும். ஆணவமலத்தைப் பசுத் துவம் என்பர். பசு - குணி, பசுத்துவம் - குணம், பசுவை நோக்கிப் பசுத்துவம் குணம் எனப்படும். பசுத்துவத்தை நோக்கிப் பசு குணி எனப்படும். ஆணவ மலத்தில் மறைப்பை அடைந்துகிடக்கும் காரணத்தால் ஆன்மா பசு ஆயிற்று அம்மறைப்பு நீங்கினால், ஆன்மா எனப்படும். ஆன்மாவின் இச்சையும் (விருப் பமும்) ஞானமும் (அறிவும்) கிரியையும் (தொழிலும்) ஆணவமலத்தில் மறைந்து கிடக்கும், அப்பொழுதுதான் பசு என்ற பெயர் பொருந்தும். மலம் நீங்கிய உயிரையே ஆன்மா என்ற பெயரால் குறித்தல்வேண்டும். இது சொற்பொரு ளுண்மைக் கேற்றவாறு, பொருளுணர்ச்சியின்றி எல்லாச் சொல்லையும் ஆளுவது போல இதையும் ஆளும் வழக்கம் சான்றோர் நூலகத்தும் காணப்படுகின்றது. தொல்காப்பியர் முதலியோர், சொற்பொருளையும் பெயர்ப்பொருளையும் கருதி ஆளும் இயல்பினர் என்பது அவர்செய்த நூல்களை ஆராய்வார்க்கு இனிது புலப்படும்.

ஆன்மா வியாபகம் உடையதாயினும் ஆண்டவனைப்போல வியாபகம் உடையதன்று. வியாபகம் எங்கும் நிறைந்திருக்கும் இயல்பு. பாலின் நெய், பழத் தின்சுவை, எள்ளின் நெய்போல ஒருபொருளில் முழுதும் வியாபகமாக ஒன்றுபட் டிருத்தலை வடமொழியில் உபச்சிலேடம் என்பர். உபச்சிலேட வியாபகம் என்பது ஔபச்சிலேடிக வியாபகம் என்று விருத்தியுற்ற வடிவம் உடையது. ஔபச்சிலேடிக வியாபகம் ஆண்டவனுக்குள்ளது. அது அதுவாய் வசிப்புண்ணும் வியாபகம் ஆன்மாவிற்கு உள்ளது. அதுவதுவாம் வசிப்புண்ணுதல் ஆன்மாவின் இயல்பு. அதுவே சார்ந்ததன் வண்ணமாய் நிற்றல். படிகம்போலத் தன்னால் சாரப்பட்ட பொருளின் தன்மையே தன் தன்மையாகக் கொண்டு அதுவதுவாய் நிற்பது ஆன்மாவினிலக்கணம். இதனை உறுதிப்படுத்தும் அநுமான வாக்கி யத்தைக் காண்க :-

1. ஆன்மாச் சார்ந்ததன் வண்ணமாய் நின்று அறிவன். (மேற்கோள்).

2. ஒன்றனை அறியும் வழி மற்றொன்றனை அறியாமையின் (ஏது).

3. யாவன் சார்ந்ததன் வண்ணமாகாது நின்று அறிவான்? அவன் ஒன்றனை அறியுங்கால் மற்றொன்றனை அறிவான் அல்லன், சிவன்போல (எடுத்துக் காட்டு).

('தற்றருமதருமி' என்றதும் சார்ந்ததன் வண்ணமாம். இயல்பி என்றதும் மொழியால் வேறுபடினும் பொருளால் வேறுபடாமை காண்க).

ஆன்மா எதனைச் சார்ந்தான் அதனதன் சுபாவமே தன் சுபாவமாய் நிற்பன். ஆன்மா தன் இயல்பை அறியாது பசுத்துவத்தொடு கூடிய வழிப் பசுவாய் நின்றான். அதுபோலத் தன்னை அறிந்து சிவத்துவத்தொடு கூடிய வழிச் சிவமாய் நிற்பதற்கு ஐயமில்லை.

ஆன்மா, பசுத்துவக் கூட்டத்தால் பசு எனப்படும். சிவத்துவக் கூட்டத்தால் சிவம் எனப்படும். கூட்டம் - சார்பு.

அதுவதுவாதலைச் சருவஞானோத்தராகமம் ஆறு வகைப்படுத்துக் கூறுகின்றது. அவ்வாற்றால் அதை விளங்க உணர்தல் கூடும். ஆதலின், அவ்வாறு வகையையும் சுருக்கிக் கூறுகின்றோம்.

1. பூதான்மா.

உடம்பு பஞ்சபூத பரிணாமம். மண், நீர், தீ, கால் விண் என்னும் ஐந்து பூதங்களின் பரிணாமமே உடம்பு. அத்தகைய உடம்பில் உயிர் புகுந்து இருந்து (வாழ்ந்து) இறக்கின்றது. உயிர்க்கு உடம்பு இடம். உடம்பாகிய இடத்தில் இருக்கும் பொருள் உயிர். சார்ந்தது உயிர், சாரப்பட்டது உடம்பு. சார்ந்த உயிர் சாரப்பட்ட உடம்பின் வண்ணமாய் நிற்கின்றது. உடம்பே உயிர் என்று கொண்டுள்ள உயிர்களுக்குக் கணக்கில்லை. சில உயிர்களே உயிர் (நாம்) வேறு; (நமக்கு இடமாகிய) உடம்பு வேறு என்று உணர்ந்துள்ளன. இங்கு இதைப் படிப்பவர், தம்மையும் தம் உடம்பையும் வேறாக எண்ணியது எப்போது என்று சிந்திக்க. உடம்பே தாமாக இருப்பவர் பெரும்பாலோர். அவர் எல்லாரும் பூதான்மாக்கள் ஆவர். பிணத்தைக் கட்டிக்கொண்டு அழுபவரிடத்தில் இவ்வுண்மை புலனாகும்.

2. அந்தரான்மா.

உடம்பு தூலதேகம், சூக்குமதேகம், பர (அதிசூக்கும) தேகம் என மூன்று பிரிவுடையது. பர (அதிசூக்கும)தேகம் காரண சரீரம், கஞ்சுக சரீரம், குணசரீரம் என மூவகையது.

பரசரீரத்தின் உள்ளாக நாதமாத்திரையாய் விளங்குவதும் ஞானமாத்திரைக்கு ஏது ஆவதும் இலக்கணமாக உடைய சூக்குமவாக்கு உண்டு. அவ் வாக்கே பைசந்தி, மத்திமை, வைகரி என்று விருத்தி அடையும் அதிகாரம் உடையது. சூக்குமவாக்கோ அழியாது. அதன் அதிகாரமாகிய பைசந்தியும் மத்திமையும் வைகரியும் ஆகிய வாக்குக்கு அழிவுண்டு. சூக்கும வாக்கு சுத்த மாயாரூபமாய்க் கேடின்றி நிலைபெறுவது. தவவிசேடத்தால் அதனை உள்ளபடி காணலாம். 'அகர முதல எழுத்தெல்லாம்' என்ற தொடர்ப்பொருளை உணர, அவ்விடத்தைச் சார்தலே அநுபவமாகும்.

சூக்குமை முதலிய நால்வகை வாக்குகளையும்பற்றி அவற்றின் வண்ணமாய் நிற்கும் ஆன்மா அந்தரான்மா எனப்படும்.

பாட்டொலி முதலியவற்றில் ஈடுபட்ட ஆன்மாக்கள் நிலையை நோக்கின் இது புலப்படும். உடம்பை மறந்து, ஒலி வண்ணமாகி நிற்கும் ஆன்மாக்களே அந்தரான்மா'க்கள், (அந்தர் - உள், உடம்பின் உள்ளிடத்தன வாக்குகள். அந்த ரான்மா - அகத்துயிர்.)

## 3. தத்துவான்மா

'பூதான்மா' என்றதன் விளக்கத்தில், தூலபூதங்கள் குறிக்கப்பட்டன. அவற்றால் ஆகிய உடம்பு தூலதேகம். சூக்கும பூதங்களால் ஆகிய உடம்பு சூக்கும தேகம். தூல தேகத்தில் இருந்து சுகதுக்க போகங்களை அநுபவிக்கின்றன ஆன்மாக்கள். போகின்றன வருகின்றன. சூக்கும தேகமும் அவ்வாறு செய்யப் பயன்படும் படினும் அவ்விரண்டற்கும் வேறுபாடு ஒன்றே. அஃதாவது:- பருமை நுண்மை ஆவதே. பருமை (ஸ்தூலம்) நுண்மை (சூக்ஷமம்). தூலதேகம் இவ்வுலகில்மட்டும் போக்குவரவு செய்தற்குக் கருவியாகும்: சூக்கும தேகம் ஓர் உலகினின்றும் மற்றோருலகிற் போக்குவரவு செய்தற்கும் கருவியாகும். தூல தேகத்திற்குப் புற இந்திரியங்கள் இன்றியமையாத உறுப்புக்கள். அவை உடன் நிற்றலின் அவற்றையும் கூட்டிச் சூக்குமதேகம் என்பர். தன் மாத்திரை ஐந்தும் அந்தக்கரணம் மூன்றும் (மனம் புத்தி அகங்காரம்.) புரியட்டக தேகம் எனப்படும்.

தூலதேக வடிவாகிய தத்துவங்கள் அவரவர் போகநுகர்ச்சிக்குச் சிறப்புவகையால் நிலைக்களம் ஆகும். சந்தனம் பூமாலை முதலியவைபோலப் பொதுவகையால் மனைவி முதலியோர்க்குப் போக்கியம் ஆகும். ஆதலின் பொதுச்சிறப்பு எனப்படும். படவே பொதுவெனவும் சிறப்பு எனவும் தனித்தனி இரண்டு இருக்கின்ற உண்மை புலனாகும்.

புவனவடிவாகிய தத்துவங்கள் போக நுகர்ச்சியில் எல்லாவுயிர்க்கும் பொதுவாய்ப் போகம் பயப்பித்தலின், பொது எனப்படும்.

புரியட்டக வடிவாகிய தத்துவங்கள் உயிர்தோறும் வேறுவேறாய் நின்று போகம் பயப்பித்தலின். சிறப்பு எனப்படும். இவ்வாறு தத்துவங்கள் மூவகைப்படும்.

நிலம் முதல் கலைமுடிய உள்ள முப்பத்தொரு தத்துவங்களும் புறப்புறக் கருவி, புறக்கருவி, அகப்புறக்கருவி, அகக்கருவி என்று நான்கு வகைப்படும்.

1. புறப்புறக்கருவி:- ஐந்து பூதங்களும் ஐந்து தன் மாத்திரைகளும்.

2. புறக்கருவி:- பத்து இந்திரியங்களும், (மெய் வாய் கண் முதலியன + வாக்கு, பாதம் முதலியன.)

3. அகப்புறக்கருவி:- மனம் முதலியன.

4. அகக்கருவி:- அராகம் முதலியன.

இந்நால்வகைக் கருவிகளாகிய முப்பத்தொரு தத்துவங்களும் பொது, சிறப்பு, பொதுச்சிறப்பு என்ற மூவகையில் பயன்படும்போது. ஆன்மா அத்தத் துவங்களைச் சூக்கும நிலையிற்பற்றி அவற்றின் வண்ணமாய் நிற்கும். அந்நிலை யிலும் ஆன்மா எவ்வெத் தத்துவத்தைப்பற்றும்? அவ்வத்தத்துவ மயமேயாய் நிற்கும். மண்ணை நினைந்துபற்றி மண்ணுயும், விண்ணை எண்ணிப்பற்றி விண் ணுயும் நிற்கும் இயல்பு முதலியன எல்லாம் தத்துவான்மாவிற்கே உரியன. இவை அநுவத்தில் பலர்க்கு எய்தியிருக்கலாம். அநுபவிக்கும்போது சுட்டியுணர்த்தின் இனிது புலப்படும்.

ஆன்மா, போத்திருத்துவம் (போகநுகர்ச்சிக்கு வினைமுதலாம் இயல்பு) அடைந்து புருடதத்துவம் என நிற்கும்.

4. ஜீவான்மா:-

முற்கூறியவாறு புருடதத்துவமாய் நின்று, பிரகிருதி குணங்களைப்பற்றி இன்பத் துன்பங்களை அநுபவிக்கும் நிலையில், ஆன்மாக்கள் ஜீவான்மாக்கள் என்று குறிக்கப்படும். சிவஞானபோதம் மூன்றாவது சூத்திரத்தின் ஐந்தாவது அதிகரணத்தில் 'இன்பத்துன்பம் ஜீவனம் பிரகிருதிக்கு இன்மையின்' என்றது உணர்க.

இன்பத்துன்ப நுகர்ச்சி 'உண்டி' என்றும், ஜீவனம் (உடம்பு சேட்டித்தல்) 'வினை' என்றும் அச்சூத்திரத்தில் உணர்த்தப்பட்டன. 'உளது... ...கண்படில் உண்டிவினை இன்மையின்... ... தநுவினுள் ஆன்மா,'

இங்கு மாயாவாதிகள், ஜீவான்மா' என்று குறிக்கும் நிலையையும் ஆராய்க.

5. மந்திரான்மா

சுரர், நரர், விலங்கு, புள், தாவரம் எல்லாவற்றிற்கும் அதி தெய்வ மந்திரங்கள் உள்ளன. அவை தமிழில் இல்லை. இருந்தன என்பவர் ஆதாரம் காட்டவல்லாரல்லர். எல்லா மந்திரங்களும் வடமொழியில் இருத்தலால், தமிழில் ஆலயகிருத்தியங்களைச் செய்ய வழியில்லை. அதிதெய்வமந்திரங்கள் இருந்தால்தான், நச்சுக்கடித்துன்பநீக்கம் முதலிய சிறு பயன்களும் பிறவித்துன்பநீக்கம், பேரின்பப் பேறு ஆகிய முடிந்த பெரும்பயன்களும் உயிர்கட்கு எய்தல்கூடும். தாவரங் களிலும் ஜங்கமங்களிலும் மந்திரங்களால் அதிட்டிக்கப்படாத உயிர்கள் இல்லை. மந்திரங்களை உச்சரிக்கும் முறைமையை அறிவது இன்றியமையாதது. மந்திரங் களின் இயல்பையும் உணர்தல் வேண்டும்.

ஆன்மா, எவ்வெம் மந்திரத்தைக் கணித்தாலும் அவ்வம்மந்திரமயமாய் நிற்கும். கருடமந்திரமயமான காரணத்தால்தான் விடம் நீக்கும் காரியம் உண்டாகிறது. மந்திர ஜபம்புரியும் ஆன்மாக்கள் அவ்வம் மந்திரமயமாய் நில்லாதொழிந்தால் அவ்வம்மந்திரத்தால் ஆகும் பயனை அடையமாட்டார். நில்லாமை அசம்பவம், ஆரம்பத்தில் சம்பவிக்கலாம். பயிற்சியில் மந்திரமய மாகியே தீரும்.

தன்னைச்சார்ந்த பலவேறுவகைப்பட்ட வர்ணங்களையே தன்பால் காட்டிநிற்கும் இயல்புடைய படிகம்போல, ஆன்மா தன்னைச்சார்ந்த மந்திரங் களின் மயமாகும். இச்சார்ந்ததன் வண்ணமாந்தன்மையே ஆன்மாவின் பொது வியல்பு.

6. பரமான்மா:-

அப்பொதுவியல்பு, ஆன்மாவிற்கு இந்திரியச்சார்பால் வந்தது. தன்னைச் சார்ந்த இந்திரியங்களின் இயல்பையே தன்மாட்டு விளக்குவது அச்சார்ந்ததன் வண்ணமாந் தன்மையுள் ஒன்று. பொதுவியல்பு பலவேறுவகைப்படும். சார்ந்த தன் வண்ணமாந்தன்மையைச் சிந்தித்து உணர்ந்துகொண்டு, அப்பொதுவியல்பை வெளிப்படுத்தும் துணையான இந்திரியங்களை வேறாகக் கண்டு, நீங்கி, சிறப் பியல்பை உணர்தல் வேண்டும். உணர்ந்த ஆன்மா, பரம்பொருளாகிய சிவபிரா னுக்கு அடிமையாகும், அச்சிவச்சார்பால் அப்பரம் பொருளின் இயல்பு தன்பால் விளங்கும். சிவமயமாகும். 'சிவமயம்' என்பதன் உண்மைப்பொருள் இங்குச் சிறிது புலப்படும். சிவமயமாகிய ஆன்மாவைப் பரமான்மா என்பர். இங்குச் சிவம் எனப்படும் பரமான்மாவை மறத்தல் ஆகாது.

# ஐந்தாவது சூத்திரம்

## பாசத்தியல்பு

*திரோதானசத்தியினியல்பு*

**விளம்பிய உள்ளத்து மெய்வாய் கண்மூக்கு
அளந்தறிந் தறியா ஆங்கவை போலத்
தாந்தம் உணர்வின் தமியருள்
காந்தங் கண்ட பசாசத் தவையே.** —சிவஞானபோதம்.

*பொறிபுலன் கரண மெல்லாம் புருடனுல் அறிந்தான் மாண்வ
அறிதரா அவையே போல ஆன்மாக்க ளனைத்தும் எங்குஞ்
செறிதருஞ் சிவன்ற ஞலே அறிந்திடும் சிவனைக் காணு
அறிதருஞ் சிவனே யெல்லாம் அறிந்தறி வித்து நிற்பன்.*

—சிவஞான்சித்தியார்.

**வினு :-** ஐந்தாவது சூத்திரப் பொருள் என்ன?

**விடை :-** புருடன் தன்னை அறியமாட்டாத பொறி முதலியவற்றைத் தான் அறிந்து, அறிவித்து, உடன் நிற்கும். அதுபோல் சிவம், தன்னையறிய மாட்டாத அப்புருடனை அறிந்து அறிவித்து உடன் நிற்கும். இது திரோதான சத்தியின் இயல்பு. உபசாரத்தாற் சிவன்மேலேற்றிக் கூறப்பட்டது.

**ஆருகதர் வினு :-** அறிவுகள் ஒரு தன்மையவாயில்லை. ஏற்றத்தாழ்வு களாயிருத்தற்குக் காரணம் கன்மம் எனின் அதுவே அமையும். அறிவித்தற் பொருட்டு இறைவன் ஏன்?

**விடை :-** தாமரையின் மலர்ச்சிக்குத் தாமரையேயன்றிக் கதிரவனும், உழவு முதலிய செயல்களின் பயனுக்கு அச்செயலேயன்றி விளைநிலமும் காரணமாகும். அவைபோல், அவ்வக்கன்மம் பக்குவமாதலும் பயன் தருதலும் வேறோரிறைவனை இன்றி அமையா. அதனுல் அறிவித்தற்கு இறைவன் வேண்டும்.

**மீமாஞ்சகர் வினு :-** உயிரே அறிவிக்க அமையும்: இறைவன் ஏன்?

விடை :- 1. ஆன்மா விஷயம் ஒன்றை ஓரிந்திரியத்தாலறிதலாலும்

2. அறிந்தவற்றை மறத்தலாலும்

3. உணர்த்த உணர்தலாலும்

4. அறிகின்ற தன்னைத்தான் அறியாமையாலும் தானே அறியுஞ் சுதந்திர ஞானத்தனல்லன், அறிவிக்க அறியுந்தன்மையன.

சாங்கியர் வினு :- மாயையமே அறிவித்தல் அமையும், இறைவன் ஏன்?

விடை :- 1. கருவி, 2. பொருள், 3. காட்டு, 4. காலம், 5, கருமம், 6. உரு. 7. அளவு, 8. நூல் ஆகிய எட்டும் ஒரு சேதநப் பொருளுங்கூடி நின்று ஒரு விஷயத்தை உணர்த்த உயிர் உணர்தலாலும், அல்லாத விடத்து உணராமையாலும் இவை எல்லாவற்றையுங்கொண்டு கூட்டி அறிவிப்பான் ஒரு சேதநன் வேறு வேண்டப்படும். ஆதலின் இறைவனையின்றி அறிதல் அமையாது.

வினு :- அவற்றுல் இறைவன் அவத்தையில் துடக்குற மாட்டானே ?

விடை :- துடக்குறுகின்றுன். இறைவனுக்கு அறிவு நிகழக் கருவி முதலியன கூடும்கூட்டம் வேண்டா. உயிர்கட்கு மேலாய் ஒருவன் அவாவப்படுவதுபோல இறைவன் தனக்குவமையுமில்லாதவனுதலின் மிக்கானுமில்லாதான். தானேதமியனும் அறிந்தும் ஆக்கியும் உணர்த்தியும் நிற்பன்.

வினு :- கருவித்துணையறிவால் வரும்பயன் உயிர்க்கானதுபோல உயிரறிவால் வரும்பயன் இறைவனுக்காவான் செல்லும். செல்லவே இறைவனும் பந்தம் அடைவன் எனப்பட்டு வழுவாம். ஆதலின் உயிர்போல் இறைவன் அறிவிப்பானென்பது இழுக்காமே !

விடை :- இறைவனுலன்றி உயிர் சேட்டியாது. இது முன்னரே பிரமாணத்தால் விளங்கிக்கிடந்தது. எல்லாவற்றினும் நிறைந்து நின்ற இறைவன் சந்நிதியில் நிகழும் அவ்வறிவின் பயன் வினைக்கீடாய்வரும் வடிவுடைய உயிர்கட்கே உண்டாம் அதுவன்றி இறைவனுக்காதல் செல்லாது. காரணம் :— சடமாகியவுலகம் அவனெதிர்முனைந்து நிற்றலாற்றுமையேயாம். ஆதலின், அறிவித்தல்பற்றி இறைவனுக்குத்துடக்கில்லை என்றறிக.

வினு :- துடக்கின்றேனும் விகாரம் இல்லையோ ?

விடை :- புருஷன் உணர்தற்கு உடம்பு முதலியவற்றைக் கொள்ளல் போல இறைவன் உணர்தற்கு உலகம் முதலியவற்றைக்கொள்வன். கொள்ளவே புருஷனுக்குத் தன் உடல்பொறி கரணங்களைச் செலுத்துவதில் விகாரமில்லாமை போல இறைவனுக்கு உலகம் முதலியவற்றைச் செலுத்துவதுபற்றி விகாரமில்லை என்க.

வினு:- அதிசூக்கும ஐந்தொழில் யாது?

விடை:- விச்சுவரூபியாகி, யோநிபேதங்களைப் புறத்தேயுள்ள அவயவங்களாகக்கொண்டும், அநாதியே பிரகாசித்தும் பிரகாசிப்பித்தும் வரும்வியாபகமானதன்னுடைய இச்சா ஞானக் கிரியைகளை அந்தக்கரணங்களாக் கொண்டும் எண்ணில்லாத உயிர்களிடத்தில் அறிவுக்கறிவாய் நின்றும் உணர்த்தி, அவ்வாறுணர்த்துவதாகிய நன்மை மிக்க அதிசூக்கும ஐந்தொழிலையுமே நாடகமாகச் செய்தருள்வன்.

வினு:- அவ்வதிசூக்கும வைந்தொழிற்குப் பயன் எது? அத்தொழில் எதன்கண்படுவது?

விடை:- ஐந்தொழில் தூலம் சூக்குமம் அதிசுக்குமம் என்று மூவகைத்து. தூலவைந்தொழிலில் தோற்றமும் அழிப்பும் பிரபஞ்சத்திற்குரியன. நிலை தோன்றிய பிரபஞ்சம் ஒடுக்கம் வருமளவும் நிற்றல். மறைப்பு - பந்தம். அருள் - வீடு.

சூக்குமவைந்தொழில்கள்:- சங்கரித்த பின்னர் மேல் செய்யக்கடவனவாய தூல ஐந்தொழிற்கு யோக்கியமாகும்படி கேவலத்தின்கண் நிகழ்த்துவன.

அதிசூக்கும ஐந்தொழில்கள் அவ்வவ்விடய நுகர்ச்சி தோறும் நிகழ்தலைக் கண்டுகொள்ளலாம். இது சிவஞான பாடிய வசனம்.

ஏகதேச அறிவை நிகழ்வித்தல் பருவம் முதிர்வித்து வியாபக அறிவை நிகழ்த்தற்கும், சிறுபோகங்கொடுத்துப் பிறவியிற் படுத்துதல் பரபோகங்கொடுத்தற்கும் ஆகும்.

சிறு போகநுகர்ச்சிக்கு ஏகதேச அறிவு நிகழ்தல் வேண்டும். பரபோக நுகர்ச்சிக்கு வியாபக அறிவு நிகழ்தல் வேண்டும். நிகழாதேல் நுகர்ச்சியில்லை.

1. அதிசூக்கும பஞ்சகிருத்தியம் ஏகதேச அறிவைச் செய்து சிறு போகங் கொடுத்துப் பிறவியிற்படுத்துதல்.

2. அதிசூக்கும பஞ்சகிருத்தியப் பயன் பருவமுதிர்வித்து வியாபக அறிவைச்செய்து பரபோகங்கொடுத்தல் ஆகிய இவ்விரண்டனுள் முதலதன் பயன் இரண்டாவது ஆகும்.

வினா:- அருள் இறைவனுக்கு எவ்வாறு உபயோகப்படுகிறது?

விடை:- ஏகதேச அறிவை நிகழ்த்திச் சிறு போகங்கொடுத்து வியாபக அறிவையுங்காட்டி வீட்டையும் அளிப்பதாகிய அக்கருணை இறைவனுக்கு இயற்கைக் குணம் எனப்படுஞ் சத்தியாகும். அவ்வருளின்றிச் சிவமும் சிவமின்றி அருளும் இல்லை. குணம் குணியைவிட்டு நீங்காது. ஞாயிற்றிற்கு ஒளிபோல இறைவனுக்கு அவ்வருட் குணம் மேம்படுதலின், வேறுயாகக் கடவது பிறிதில்லை. இரவி கண்கட்கு இருளை ஒளியால் ஓட்டி உதவுவன். ஈசன் உயிர்கட்கு மருளை அருளால் வாட்டி அளிப்பன். இதனால் அவ்வருள் இறைவனுக்கு அணிகலமாகும்.

## ஆறுவது சூத்திரம்.

(பதிப்பொருளுக்கிலக்கணம்)

உணருரு அசத்தெனின் உணரா தின்மையின்
இருதிற னல்லது சிவசத் தாமென
இரண்டு வகையின் இசைக்குமன் னுலகே. —சிவஞானபோதம்.

*அறிவுறும் பொருளோ ஈசன் அறிவுறு தவனே என்னின்*
*அறிபொருள் அசித்த சத்தாம் அறியாத தின்றும் எங்கும்*
*செறிசிவம் இரண்டு மின்றிச் சித்தொடு சத்தாய் நிற்கும்*
*நெறிதரு சத்தின் முன்னர் அசத்தெலாம் நின்றி டாவே.*

—சிவஞானசித்தியார்.

வினா:- சிவன் சுட்டியறியப்படும் பொருளோ? ஓராற்றலும் அறியப் படாத பொருளோ?

விடை:- சிவன் சுட்டியறியப்படும் பொருளானால் சடமாய் அழிவுடைய தாய்விடும். ஓராற்றலும் அறியப்படாத பொருளானால் சூனியமாய்விடும். அதனால், சிவம் அவ்விரண்டு தன்மையும் உடையதன்று. சிவம் சிவஞானத்தால் தரப்பெறுவது. அது சித்தும் சத்தும் ஆதலின், அதனெதிர் அசத்து ஆகிய பாச ஞானம் சிறிதும் நில்லாது.

வினா:- 'அறிபொருள் அசித்தசத்தாம்' என்று ஆசிரியர் கூறியதன் பொருள் என்ன?

விடை:- சுட்டியறியப்படும் பொருள் அசித்தும் (அறிவில்லாததும்) அசத்தும் (நிலையாகி நிற்பதல்லாததும்) ஆம் என்பது பொருள்.

வினா:- அசித்தாவது எவ்வாறு?

விடை:- சுட்டறிவு காலத்தாலும் இடத்தாலும் ஏகதேசப்படும். அது வ்துவ்வாகும். பலவேறு வகைப்படும். மலத்தொடுகலக்கும், வேறுபடும். அஃது இத்தன்மைகளை உடைமையாற் சத்தாகமாட்டாது அசத்தேயாகும். ஆகவே, இவ்வறிவால் அறியப்பட்ட எல்லாம் அசத்தாவனவே. சத்தாதலில்லை.

வினா:- அசத்தாவது எவ்வாறு?

விடை: மண்ணுண்டு வாழும் வாழ்க்கையும் இந்திரபதவி, பிரமபதவி, விஷ்ணுபதவி முதலியவற்றைப் பெற்று உறைவதும், எண்பத்துநான்கு லக்ஷம் யோநிபேதம் எல்லாவற்றினும் பொருந்தி வாழ்வதும் ஆகிய எல்லாம், தோன்றும் பொழுதே இல்லையாய் வேறுபடும் இந்திர ஜாலத்தையும், கடைபோதலின்றி, இடையே யழியும் கனுக்காட்சியையும், ஒரு காரணங்காட்டி யழியும் பேய்த் தேரையும்போல நெடுங்காலம் நிலைபெறுவனபோலத்தோன்றி அங்கனம் விரையக் கெட்டு மறைந்துபோம்இயல்புடைமையால், அவ்வுலகத்தை அசத்து ஆகுமென்றுங் குறித்தனர் சிவாகமசிலர்,

வினா:- அறியாதது உண்டு என்றால் என்னகுற்றம்?

விடை: அவ்வாறு கொண்டதாற் பெறக்கூடியதொரு பயனில்லை. ஒருபொழுதும் அதனொடு எமக்கு ஓர் இயைபு தோன்றுமாறுமில்லை. அதனு லாகக் கூடியதொரு செயலுமில்லை. இதை ஆகாயப்பூமாலை ஆமை மயிர்க்கம்பலம் முதலிய அறியாத பொருள்களில் வைத்தறியலாம். அதனால், அது பொருளன்று.

வினா:- மாயாவாதி 'சுட்டியறியப்படுவதும் ஒருவகையாலும் அறியப் படாததும்ஆகிய இவ்விரண்டும் இன்றி நிற்கும்பொருளை அநிர்வசநீயம் என்னுமல் சித்தொடு சத்தாய் நிற்கும் என்பது எப்படி?

விடை: அநிர்வசநீயம் என்றது உண்டும் இல்லையுமாம் என்பது. உண்மையும் இன்மையும் ஒரேபொருளில் இயலா. உண்டு எனில் உள்பொரு ளாகும். இன்று எனில் இல்பொருளாகும். ஆகவே அநிர்வசனம் என்பது போலியாய் ஒழியும். சூனியமும் ஆம்.

இல்லை எனில், உணராத பொருட்கு ஓதிய குற்றம் ஆகும் என்று அஞ்சி உண்டென்று கூறுவாயேல், பிரமம் உள்பொருளாம் அநிர்வசனமாகாது. இதற்கு உன்பேச்சே சான்று.

உள்பொருளாயின் அறியப்படுதல் வேண்டும் எனில், சுட்டுணர்விற் பட்ட யாவும் சமமாய் அழிவெய்திவிடும். ஆதலாற் சுட்டுணர்வைக் கடந்து நின்ற சேதநப்பொருளே அது. அச்சிவப்பொருள் அதனோடு ஒற்றித்து நின்று அவ்வருளாலே அறியற்பாலதாம். அங்கனம் அறியப்படும பொருளாகிய அதுவே அவ்வறிவேயாய் வேறுமாய் உடனுமாய் நிற்பதோரியல்புடையது.

வினா:- (பாதஞ்சலர்) யோகபாவனை செய்துகாணவே அமையும் அருளால் அநந்நியமாகக் காண்பது ஏன்?

விடை:- உனது யோகபாவனை 1. கருவிகளோடுங்கூடி நின்றுசெய்வது, 2. கருவிகளை நீங்கிநின்று செய்வது, 3. இரண்டுமின்றிச்செய்வது, 4. பாவனைக்கு எய்தாதபொருளை எய்தியதாக வைத்துப் பாவிக்கும் பொருள் யான் எனத் தன்மேல் வைத்துச்செய்வது என்னும் நால்வகையுள் எதுவாயினும், அது இம்முறையே மறுக்கப்படும். மறுக்கப்படும் முறையாவது:-

1. சகலமாய்ப்போதலாலும்,
2. கேவலம் வந்துதலைப்படுதலாலும்,
3. அநிர்வசநீயம் எனப்பட்டுப் பாழாய் முடிதலாலும்,
4. ஒருபயனும் இன்மையாலும்

அப்பாவனையெல்லாம் நாடக மாத்திரையேயாம். மேற்கூறியவாறு அநந்நியமாய் நின்று அவ்வருளாற் காண்டலே ஈண்டைக்குரிய பாவனை ஆவதன்றிப் பிறிதில்லை.

வினா:- (சமவாதசைவர்) அருளாற் பாவிக்கப்படுவதென்னுமல், மலம் நீங்கியபோது சிவத்தோடொக்கும் உயிரின் அறிவே அதை அறியும் என்பது பொருந்தாதோ?

விடை:- பொருந்தாது, அச்சிவம் ஒன்ருய் வேருய் உடனுமாய் நிற்ப தொன்று. அந்த நிலை அறிபவனும் அறியப்படும் பொருளும் அறிவும் எனப் வாராது. அதனுல் அஃது உயிரினறிவா லறியப்படுவதொன்றன்று.

வினு:- அம் மூன்றுதிறமும் அங்குள என்பது தெரிவது எப்படி?

விடை:- 'சிவமும் உயிரும் ஒன்று' என்று மற்ருெரு பொருள் அறிந்து கூறுவதே, அதனுல் அச்சிவம் வேறே. 'வேறு' என்றவரை நோக்கி அறிவுக்கறிவு பிறிந்து தோன்ருமை பற்றி, வேறென்னும் அறிவிற்கெட்டாது உடனுதல் பெற்ரும். அவ்வளவே கூறுமவரை நோக்கி, அவ்வறிவினுள்ளாக நீர்நிழல்போல் ஒற்றித்து நிற்றல்பற்றி உயிரே சிவம் என்னும்படி ஒன்ருதல் வேண்டும். ஆதலின், அப்பெற்றித்தாய அத்துவித நிலையை அருளால் அநந்நியமாகக் காண்பதே தக்கது.

இது முன்னதன் விளக்கம் :- 1. சிவமும் உயிரும் ஒன்று என்ருல், ஒன்று என்று சுட்டியது வேறு, சுட்டப்பட்டசிவம் வேறு என்ருதலின், **வேருய் நிற்றல்** எய்திற்று, (அது என்னும் ஒன்று அன்று. அதுவன்றி, வேறே அது என்று அறியும் அறிவும் உண்டு : சிவஞானபோதம்)

2. சிவமும் உயிரும் 'வேறு' என்ருல், அறிவிற்கறிவு பிறிந்து தோன்ருமைபற்றி வேறு என்னும் அறிவுக்கு எட்டாமல் **உடனுதல்** எய்திற்று. எய்தவே, ஆன்மாத் தன் அறிவால் அறிவதற்குத் தன்னின் வேறு அல்லன். ('அது என்றறிய இரண்டல்லன்'—சிவஞானபோதம்)

3. வேருய் நிற்றல், உடனுதல் என்னும் அளவே கூறின், அவ்வறிவின் உள்ளாக நீர் நிழல்போல் ஒற்றித்து நிற்றல்பற்றி உயிரே சிவம் என்னும்படி **ஒன்ருதல்** எய்திற்று. ('ஆங்கறிவுள் நிற்றல் அறியும் அறிவே சிவமும் ஆம்,'—சிவஞானபோதம்)

## ஏழாவது சூத்திரம்

V வேண்டுஞ் செய்தி முறைமை

**யாவையும் சூனியம் சத்தெதிர் ஆகலின்**
**சத்தே அறியா(து) அசத்தில தறியா(து)**
**இருதிறன் அறிவுள(து) இரண்டலா ஆன்மா** —சிவஞானபோதம்.

அனைத்துஞ்சத் தென்னின் ஒன்றை அறிந்திடா தசத்தா லென்னின்
முனைத்திடா தசத்துச் சத்தின் முன்னிருள் இரவி முன்போல்
நினைப்பதிங் கசத்தே யென்னின் சத்தின்முன் நிலாமை யானும்
தனைக்கொடொன் றுணர்த லானும் தான் அசத் துணரா தன்றே.

—சிவஞானசித்தியார்.

பதிபசுபாசங்களுள், சாதித்துப், பதியைப் பெறற்குரிய அதிகாரமுடையது பசு என்றுணர்த்துவது.

## ஆன்ம சொரூபம்

வினு :- ஏழாவது சூத்திரப்பொருள் யாது ?

விடை :- பதி பசு பாசம் என்னும் முப்பொருளும் சத்தே. அவற்றுள் யாதும் அசத்தன்று, 'பதி சித்தொடு சத்தாய் நிற்கும்' 'அறிபொருள் அசித்து அசத்தாம்' என்றுரைத்தது பொருந்தாது என்பது பிறர் கூற்று. அப்பிறருள், **சிவாத்துவிதசைவர்,**

1. சத்தாகிய சிவமே அசத்தாகிய பாசமெல்லாவற்றையும் அறிவது என்பர்'

**அதற்கு மறுப்பு:-** சத்தாகியசிவம் வியாபக அறிவாதலால் எவற்றையும் ஒருங்கே அறிந்து நிற்பதன்றி ஏகதேசமாய்ப் பகுத்து ஒன்றையறியுமாறில்லை.

2. அற்றேல் சிவம் வியாபக அறிவாயினும் உயிரின்பொருட்டு அசத்தெனப்படுங்கருவிகரணங்களிடமாக நின்று அங்கனம் பகுத்தறிதல்கூடும் என்பர்.

**அதற்கு மறுப்பு:-** இரவிமுன் இருள்போலச், சத்து எதிர் அசத்து முனைத்து நில்லாமையின், அசத்திடமாய் நின்று அங்கனம் அறியும் என்பதும் கூடாது.

சிவசங்கிராந்த வாதிகள்,

1. விகாரமின்றி நிற்கும் ஆன்மசந்நிதியில், அசத்தாகிய கருவியே சத்தாகிய சிவத்தைச் சிவகரணமாய் நின்று அறிவது என்பர்.

**அதற்கு மறுப்பு:-**

சத்து எதிர் அசத்து முனைத்து நில்லாது. அவ்வசத்து மற்றொன்றுணர்வு பெறுதற்குத் தான் கருவியாய் நிற்பது, தனக்கோரறிவில்லாதது.

இவ்வாறு பதி பசு பாசம் என்னும் முப்பொருள்களுள், பதியும் பாசமும் ஆகிய இரண்டும் ஒன்றனையொன்றறிதலில்லை என்று பெற்றமையால், பாரிசேடத்தால் இவற்றின் வேறாய் எஞ்சிநின்ற பசுப்பொருளே பதியையும் பாசத்தையும் பகுத்தறியும் என்பது பெற்றாம்.

வினு :- பசுவே, பதியையும் பாசத்தையும் அறியும் என்றதெப்படி?

விடை: பசுவே, பதிக்கும் பாசத்திற்கும் வேருய் அவ்விரண்டனிடத்தும் பூவின்கண் மணம்போல அதுவதுவாய் நின்று சதசத்தாவதோருரிமையுடையது. அதனுல், அவ்வுரிமை தம்முள் இல்லாத அவ்விரண்டனையும் அறிவது பசுவேயாம்.

வினு : சிவனும் ஜீவனும் சித்தேயாயிருந்தும், அசத்து அச்சிவனெதிர் முனைந்து நிற்றல் ஆற்ருததும் ஜீவனெதிர் அவ்வாறு நிற்றல் ஆற்றுவதும் ஏன்?

விடை: சிவனும் ஜீவனும் நித்த வியாபக சித்து ஆகும் பொதுத்தன்மையில் ஒக்கும். கடலும் நீரும் தூய்மையில் ஒக்கும். சிவம் அதிசுக்கும சித்து. சீவன் தூலசித்து. அதனுல் கடலின் பொருந்தலாற்ருத, கடலது நீரில் பொருந்தி நிற்கும் உப்புப்போல, சிவத்தினெதிர் முனைந்து நிற்றலாற்ருது, ஜீவனெதிர் முனைந்து நிற்கும் அசத்து.

வினு: சிவம் அதிசூக்கும சித்து என்றும் ஜீவன் தூல சித்து என்றும் அறிந்தெதப்படி?

விடை: ஜீவனதறிவு நிகழ்ச்சிக்கு வியஞ்சகம் இன்றியமையாதது. அதனுல், அது தூலசித்தாம். சிவம் அவ்வுயிரின் கண்ணதான மலத்தை நீக்கி அறிவிக்கும் வியஞ்சகப் பொருளாதலால் தனக்கொரு வியஞ்சகம் வேண்டாத அதிசூக்குமசித்து ஆம் என்று இனிது விளங்கும்.

## எட்டாவது சூத்திரம்

(ஞானதரிசனம்)

**ஐம்புல வேடரின் அயர்ந்தனை வளர்ந்தெனத்**
**தம்முதல் குருவுமாய்த் தவத்தினில் உணர்த்தவிட்டு**
**அந்நியம் இன்மையின் அரன்கழல் செலுமே.**

(சிவஞான போதம்)

மன்னவன்தன் மகன்வேட ரிடத்தே தங்கி
வளர்ந்(து) அவனை அறியாது மயங்கி நிற்பப்
பின்னவனும் என்மகன்நீ என்றவரிற் பிறித்துப்
பெருமையொடுந் தானுக்கிப் பேணுமா போல்
துன்னியஐம் புலவேடர் சுழலிற் பட்டுத்
துணைவனையும் அறியாது துயருறும்தொல் லுயிரை
மன்னும்அருட் குருவாகி வந்(து) அவரின் நீக்கி
மலம்அகற்றித் தானுக்கி மலரடிக்கீழ் வைப்பன்.

வினா:- முதற்சூத்திரப் பொருளென்ன?

விடை:- உயிர் தனது நிலையில் பிறழ்ந்து, ஐம்பொறிகளுட்பட்டு அறிவிழந்து வருந்துமாற்றை, நித்த முத்த சுத்த சித்து எனப்படும் அவ்வீசன், குருவடிவம் கொண்டு எழுந்தருளிவந்து தவத்தின் முயற்சியை நோக்கி உணர்த்தி மீட்டுத், தொன்னிலையிற் பிறழாது வைத்து வாழ்விப்பன் என்பது பொருள்.

வினா:- இதற்கு உவமையாகக் கூறப்படும் வரலாறென்ன?

விடை:- இராசகுமாரன் வேடரிடத்தில் வளர்ந்து வந்தான். அவன் தான் இராசகுமாரன் என்னும் உண்மைக்கு மாறாக, வேடர் மகன் என்னும் பாவத்தொடும் இருந்தான். அதற்கு அவன் அறியாமையே காரணம். பின்னொரு காலத்தில், அவ்விராசன் அவ்வேடரிடத்தில் வந்து, அம்மகனைப் பார்த்து, 'நீ என்மகன்' என்று வாய்மைகூறி, அவனை அவ்வேடரின் நீக்கி, தன் அரசப் பெருஞ் செல்வத்தை நல்கித் தானாக்கிப் பேணினன் என்பது அவ்வரலாற்றின் சுருக்கம்.

வினா:- அவ்வரலாறும் குருமூர்த்திசெயலும் எவ்வாறு பொருந்தும்?

விடை:- ஐம்புலங்கள் - வேடர்கள். ஐம்புலச்சூழலிற்பட்டறியாதிருந்த உயிர் - வேடர் சூழலிற்பட்டறியாதிருந்த அரசகுமாரன். உயிர்த்துணைவன் (குரு) - மன்னவன். துயருறுதல் (பிறப்பிறப்பு) - அரசவாழ்வகன்று வேடர் தாழ்வுறுதல். ஐம்புல நீக்கம் - வேடரின் விலக்கு. மலமகற்றல் - அறியாமை தீர்த்தல், மலரடிக்கீழ் வைத்தல் - அரசனாக்குதல்.

வினா:- தீக்ஷையின் பொருளும் வகையும் விரியும் என்ன?

விடை: உயிர்கள் விஞ்ஞானகலர், பிரளயாகலர், சகலர் என்று மூன்று வகைப்படும். விஞ்ஞானகலர் ஆணவமலம் மாத்திரம் உடையவர். பிரளயாகலர் ஆணவம் கன்மம் இரண்டும் உடையவர். சகலர் மும்மலமும் உடையவர். விஞ்ஞானகலர்க்கும் பிரளயாகலர்க்கும் சிவபிரான் நிராதார தீக்ஷைசெய்வான். விஞ்ஞானகலர்க்கு உள்நின்றருள்வான். பிரளயாகலர்க்கு முன்நின்று அருள்வான். சகலர்க்குச் சாதாரண தீக்ஷைசெய்வான். இவர்க்கு நால்வகைச் சத்திநிபாத முறைமையின் வைத்து அரிதுணர்த்தவேண்டும். அதனால், குருவாகிவரல் வேண்டும். பிரளயாகலர்க்கும் விஞ்ஞான கலர்க்கும் தீவிரம் தீவிரதரம் என்னும் இருவகைச் சத்திநிபாதத்தின் வைத்துணர்த்த அமையும்.

தீக்கை - மலத்தைக் கெடுத்து ஞானத்தைக் கொடுப்பது

உயிரிடத்துள்ள மலம் பலவகையாற் பரிபாகம் அடையும். அதற்கேற்ப அம்மலத்தைப் போக்குந் தீக்ஷையும் பலவகைப்படும். அவற்றுள் ஔத்திரி தீக்ஷை சிறந்தது. மற்றையவை இதற்கு அங்கமே. ஔத்திரி தீக்ஷை ஞானவதி கிரியாவதி என்றிருவகைப்படும்.

ஞானவதி: குண்டமண்டலம் அக்கி, நெய், சுருக்கு, சுருவம் முதலிய எல்லாவற்றையும் மனத்தாற் கற்பித்துக்கொண்டு விதிப்படி அகத்தே ஆகுதி முதலிய கிரியை செய்வது.

கிரியாவதி: அவற்றையெல்லாம் புறத்தே நிலவக்கொண்டு புறம்பே அக்கிரியை செய்வது.

இவ்விருவகை ஔத்திரி தீக்ஷையும் நிர்ப்பீசம் சபீசம் என்றிருவகைத்து. அவற்றுள் நிர்ப்பீசம் மலபரிபாகம் உடையராயும் தீக்ஷைபெற்றபின் நிச்சயமாய்த் தவறுமல் சமயாசாரங்களை அநுட்டிக்கும் ஆற்றல் அறிவில்லாதவர்க்கு ஆசாரியன் அதை உணர்ந்து, கன்மங்களோடு கூடச் சமயாசாரத்தையும் ஆகுதியால் சுத்திசெய்து ஒழித்து, நித்தியகன்ம மாத்திரையின் அதிகாரமுடையவராகச் செய்வதாம். ஆயினும், சமயாசாரங்களைச் சுத்திசெய் தொழித்தமையின் நைமித்திகத்தும் காமியத்தும் அதிகாரம் கொடுக்கவில்லை. அதனால் இது நிரதிகார தீக்ஷையாம். அத்தீக்கை மூன்றனுள், சமயமும் விசேடமும் ஒவ்வொன்றேயாகும். நிருவாண தீக்ஷை அசத்யோ நிர்வாண தீக்ஷை என்றும் சத்தியோ நிர்வாண தீக்ஷை என்றும் இருவகைப்படும். முன்னது தேகாந்தத்திலும் பின்னது அப்பொழுதிலும் முத்திதரும்.

சபீசம் மலபரிபாகத்தொடு கூடக் கற்று அறிவும் ஆற்றலும் மிக்குடையரானவர்க்கு, ஆசாரியன் அந்நிலையையறிந்து, சமயாசாரகன்மத்தை மாத்திரம் நிறுத்தி, ஏனையவற்றைச் சுத்தி செய்து ஒழித்து, நித்திய கன்மம் முதலிய மூன்றினும் பேரதிகாரம் உடையராகச் செய்வது. அதனால் இது சாதிகாரதீக்ஷை எனப் பெயர் பெறும்.

இதைப் பெற்றவர் தீக்ஷைவேறுபாட்டாற் சாதகரும் ஆசாரியரும் என்று இருதிறப்படுவர். இச்சபீசதீக்ஷை இல்லறத்தார்க்குத் திரோதான சுத்தி ரூபசிகாச்சேதமின்றிச் செய்வதாய் உலக தருமிணி எனப்படும்.

துறவறத்தார்க்குத் திரோதான சுத்தி ரூபசிகாச்சேதத்தோடு செய்வதாய்ச் சிவதருமிணி எனப்படும்.

இவ்விரண்டும் முறையேபௌதிக தீக்ஷை நைட்டிகதீக்ஷை என்று பெயர்பெறும்.

சமயம் விசேடம் நிருவணம் அபிஷேகம் என்னும் பேதமெல்லாம் நிர்ப்பீசம் சபீசம் என்ற இரண்டுள் அடங்கும்.

வினு: ஆசாரியன் தீக்ஷைசெய்யும் முறை யாது?

விடை: அரன்குருமூர்த்தியை அதிட்டித்து நின்று மந்திர முதல் ஆறு அத்துவாக்களும் ஒன்றிலொன்றடங்க ஈற்றில் நின்ற கலை திரோதானசத்தியிலும் அத்திரோதானம் சிவத்திலும் அடங்குமாறுணர்ந்து, அவ்வாறு அடங்கி நிர்ப்பீசம் சபீசம் எனத்தனித்தனி இருவகைப்படும் என்று மேற்கூறிப் போந்த ஞானவிதி கிரியாவதி என்னும் இரண்டுள் ஒருதீக்ஷையால் உத்தமத்தில் உத்தமர் முதலிய மூவர்க்கும் ஷடத்துவாக்களையும் சோதிக்கும் முகத்தால், பிறவிக்கேதுவான மலத்தைக் கெடுத்துச் சிவம் பிரகாசித்தற்கு ஏதுவாகிய ஞானத்தைக் கொடுத்தல் ஆசிரியன்தீக்ஷை செய்யும் முறையாகும்.

வினு: அத்துவாக்கள் எவை? அவற்றுள் எதெது எதெதில் அடங்கும்? கலைகள் எத்தனை? அவற்றுள் மற்றையைந்தும் அடங்குமாறு யாது?

விடை: மேல்வரும் பட்டியலில் அறிக.

மந்திராத்துவா முதலிய ஐந்தும் கலாத்துவாவில் அடங்கும்.

## 1. நிவிர்த்திகலை.

| 1<br>மந்திரம் | 2<br>பதம் | 3<br>வர்ணம் | 4<br>புவனம் | 5<br>தத்துவம் | 6<br>அதிதெய்வம் |
|---|---|---|---|---|---|
| 2 | 28 | 1 | 108 | 1 | அயன் |

## 2. பிரதிட்டாகலை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 2 | 21 | 24 | 56 | 23 | மால் |

### 3. வித்தியாகலை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 2 | 20 | 7 | 27 | 7 | உருத்திரன் |

### 4. சாந்திகலை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 2 | 11 | 3 | 18 | 3 | மகேசன் |

### 5, சாந்தியதீதகலை.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 3 | 1 | 16 | 15 | 2 | சதாசிவன் |
| மொத்தம் 11 | 81 | 51 | 224 | 36 | |

வினு :- அத்துவசுத்தியின் சிறப்பு என்ன ?

விடை :- அநாதிமறைப்பு ஆணவமலம் வாதனைபற்றி நிகழ்வது ஆகாமியவினை. இரண்டும் ஒளி முன் இருள்போல இறைவனது ஞானசத்தியால் ஒழியற்பாலன.

அவ்வாணவமலத்தை முதிர்வித்தற்பொருட்டு ஈட்டிய முறையாலன்றிப் பக்குவ முறையால் அநுபவிக்கப்பட்டு எஞ்சிக்கிடந்த கன்மமலமும் அதற்குப் பற்றுக்கொடுத்து நிற்கும் முன்னிலையாகிய மாயேயமலமும் இறைவனது கிரியா சத்தியால் ஒழியற்பாலன.

உடம்பு முகந்துகொண்ட பிராரத்தகன்மம் அநுபவத்தால் ஒழியற்பாலது.

இவ்வாறுகலின், கிரியாசத்திவிருத்தியாகிய தீக்ஷையால் எஞ்சிநின்ற கன்மங்களைச் சுத்திசெய்தற்பொருட்டு, அவற்றிற்குப் பற்றுக்கோடாகிய அத்துவ சுத்தியே சிறந்தது.

வினா:- இதுவரை கூறப்பட்டது யாது? இனி யாது கூறுவாய்?

விடை:- இறைவன் குருவாகி வந்துணர்த்துமாறு கூறப்பட்டது. இனி அருளின் வகையும், வாயிலாமாறும், பிறவும் கூறப்படும்.

வினா:- அருளின் வகையும் வாயிலாமாறும் என்ன?

விடை:- 1. புறச்சமய நெறிநிற்றல், 2. அகச்சமயம் புகுதல் 3. ஸ்மிருதி வழியுழலுதல், 4 ஆச்சிரமதரும மார்க்கம் அடைதல், 5. அருந்தவங்கள் புரிதல், 6. அருங்கலைகள் பல தெரிதல், 7. ஆரணங்கள் படித்தல், 8. சிறப்புடைய புராணங்கள் உணர்தல், 9. வேதாந்தப் பொருளை மிகத்தெளிதல், 10. இவ்வளவும் முற்றிய பின், சைவத் திறத்தை அடையலாம், 11. அடைந்து அதன் முதற்படியாகிய சரியையில் ஒழுகலாம், 12. கிரியையைச் செய்துணரலாம். 13. போகஞ் செய்து சாதிக்கலாம். 14. ஞானம் பெறலாம், 15. சிவனடியைச் சேரலாம்.

இவற்றுள் சரியை முதலிய நான்கும் அருளின் வகையாம். அவற்றிற்கு முன் கூறப்பட்டவை அவற்றிற்கு வாயிலாவன.

வினா:- புறச்சமய நெறிநிற்றல் முதலியன வாயிலாமாறு எவ்வாறு?

விடை:- ஏனைச்சமய நூலார் கூறும் முத்திகள் சோபான முறையால் நில முதல் நாதம் ஈறாய்க்கிடந்த முப்பத்தாறு தத்துவங்களின் இடைப்படுவன ஆகிய அரிவையர் இன்புறுமுத்தி முதலியவை.

வேதாகம நூலுண்மை யுணர்ந்த சைவசித்தாந்தி கூறும் முத்தியாவது முப்பத்தாறு தத்துவங்களுக்கும் அப்பாற்பட்ட சிவனடியைச் சேரும் முத்தியாம்.

வினா- சைவசித்தாந்த முத்தியே முடிவான முத்தி என்பதற்கு நூற்பிரமாணம் கூறுக.

விடை:- முற்றுணர்வுடைய முதல்வன் அருளிய வேதாகமங்களில் கூறும் பொருளியல்பின் ஏகதேசமாய்க் காணப்பட்டு அவற்றுள் அடங்குவனவே, ஏனைச்சமயத்தார் தத்தம் நூல்களிற் கூறும் பொருளியல்புகள் எல்லாம்.

சிவபிரான் அருளிய வேதாகமங்களிரண்டும் அவனையே தமக்கு முதலாகக் கொண்டுரைப்பனவாய், அவன் திருவடியில் அடங்குவன.

வினா:- எல்லாம் வேதாகமங்களுள் அடங்குதல் எப்படி?

விடை:- நூல்கள் 1. முதனூல், 2. வழிநூல், 3. புடை நூல், 4. பூர்வபக்ஷநூல் 5. சித்தாந்தநூல் எனப் பலவேறு வகைப்படும்.

மேல்மேல் நூல்களை நோக்கிக் கீழ்க்கீழ் நூல்கள் மேன்மையுடையன.

முதனூலாகிய வேதாகமப்பொருளை முழுதும் உள்ளவாறுணர மாட்டாதாராய்ச் சிலபொருள்களைச் சமுத்திரகலச நியாயம்பற்றி அங்கங்கு எடுத்துக்கொண்டு தத்தம் அறிவின் அளவிற்கேற்பத் தொகுத்தும் விரித்துஞ் செய்த நூல்களே ஏனைச்சமய நூல்கள். அதனால் அவை பூர்வபக்ஷ நூல்களாம்.

சமயநூல் அல்லாத மிருதி புராணம்கலைகள் உபாகமம் முதலிய எல்லாம் அவ்வேதாகமப்பொருளை உள்ளவாறுணர்ந்தோர், பிறர்க்கு இனிது விளக்க வேண்டிச்செய்தவை. அதனால் அவை வழிநூல்களாம்.

காருடம் தக்கிணம் முதலிய ஆகமாங்கங்களும் சிக்ஷை, கற்ப சூத்திரம் முதலிய வேதாங்கங்களும் முறையே அவ்வாகமங்களையும் வேதங்களையும் உள்ள வாறுணரச் சார்பாய்ப் புடைபட்டு நிகழ்கின்றன. அதனால், அவை சார்பு நூல்களாம்.

இவ்வாறு அன்றி வேதாகமங்களின் அடங்காத பொருளாய் ஒன்றை எடுத்துக்கொண்டு சுதந்திரமாய்ச் செய்யும் நூல் ஒன்றுமில்லை. உண்டென்று சொல்லிப் பிணங்குவோர் பேதையர், அவரது பேதைமையை நீக்க இறைவனே வல்லவன்.

வினா:- சிவாகமத்தின் சிறப்பு என்ன?

விடை:- வேதநூல் சைவநூல் இரண்டே. மற்றையவை இவ்விரண்டின் விரிவாகும். இவையே ஆதிநூல். இரண்டும் அநாதியமலன் அருளிய நூல். இவ்விரண்டுள் வேதநூல் பொது, ஆகமநூல் சிறப்பு, வேதநூல் உலகர்க்கும் ஆகமநூல் சத்திநிபாதர்க்கும் அருளப்பட்டன.

வேதத்தில் கூறுங் கர்மகாண்டப் பொருள்கட்கு இன்றியமையாது வேண்டப்பட்டு எஞ்சி நின்றனவாய பொருள்களையும் வேதமுடிவான உபநிடதத்தின் சாரமான பொருள்களையும் வேறெடுத்துக்கொண்டு இனிது விளக்குவது சிவாகமம்.

இவ்வாற்றால் வேதத்தின் பூர்வபக்ஷப்பொருளைச் சொல்வதனால் ஏனை நூல்கள் பூர்வபக்ஷ நூல்கள்.

வேதத்தின் சித்தாந்தப்பொருளைச் சொல்வதனால் சிவாகமம் சித்தாந்த நூல்களாம்.

வினு :- சைவத் திறத்துஅடைதலின் சிறப்பு யாது?

விடை: உபமன்னியு அகத்தியன் முதலிய உயர்ந்தோர் எல்லாரும் வாயுசங்கிதை சிவகீதை முதலியவற்றுள் வீடுபேற்றிற்கு நேர்வழி சித்தாந்த நெறியே என்று விரித்தெடுத் தோதியிருந்தும், அதனைத் தெளிய வலியின்றித் தத்தமக்கு வேண்டியவாறெல்லாம் துரபிமானம்கொண்டு பிதற்றும் அவ்வுலகத்தார் நரகம் அடைவதன்றி வேறென்செயக் கடவர்? இதனுல் சைவத்திறத் தடைதற் சிறப்புணர்க.

வினு :- சைவத்திறம் யாது?

விடை: சைவத்திறம் சரியை கிரியை யோகம் ஞானம் என்ற நால் வகைத்தாய் நிற்கும் ஒரு பெருந் திருநெறியாகும், இந்நெறியே சிவபிரானை அடைவிக்கும் நேர்வழி.

வினு :- அந்நெறியா லடையப்படும் சிவன் பரமன் என்பது எப்படி?

விடை: இறைவன் முற்றறிவன், முற்றுத்தொழிலன் (முழுமுதல்வன்) முழுவருளன். வேதாகமங்களை யருளியதால் அவனது சர்வஞ்ஞத்துவம் விளங்கும். வேதாகம நெறியில் வருவோர் வாராதோர் எல்லோர்க்கும் முறையே சுகதுக்கம் அளித்துவருவதால் அவனது சர்வகர்த்திருத்துவம் விளங்கும். அச்சுகதுக்காநுபவத்தால் வினை தீர்த்தலால் சர்வாநுக்கிரகத்துவம் விளங்கும்.

வினு:- சைவத்திறம் என்ன?

விடை:- சங்கரனை அடையும் சைவத்திறம் சன்மார்க்கம் சகமார்க்கம் சற்புத்திர மார்க்கம் தாசமார்க்கம் என நால்வகைத்து. அவை முறையே ஞானம். யோகம் கிரியை சரியை என்னும் அருளின் வகையினவாகும்.

வினு:- அவற்றிற்குரிய முத்திபேதம் என்ன?

விடை:- ஞானமாகிய சன்மார்க்க முத்தியே முத்திமுடிவு

யோகமாகிய சன்மார்க்க முத்தி<br>கிரியையாகிய சற்புத்திர மார்க்க முத்தி<br>சரியையாகிய தாசமார்க்க முத்தி } மூன்றும் பதமுத்திகள்

வினு:- தாசமார்க்கம் ஆவது யாது?

விடை:- சிவாலயத்தைத் தூய்மை செய்யத் திருவலகிடல், திருமெழுக்கு இடுதல், சிவபெருமானுக்குப் பூக்கொய்து தார் + மாலை + கண்ணிகளைத் தொடுத்துச் சார்த்தி மகிழ்தல், தோத்திரம் புரிதல், திருவிளக்கிடுதல், திருநந்தன வனம் அமைத்தல், திருவேடம்தொழுது பணிசெய்தல் முதலிய திருப்பணிகள் சரியை எனப்படும். இச்சரியையாளர் சிவலோகம் அடைவர்.

வினா:- கிரியையாவது யாது?

விடை:- புதிய மணமலர், தூபம், தீபம், திருமஞ்சனம், திருவமுது முதலியவற்றைச் சித்தஞ் செய்துகொண்டு, பஞ்சசுத்தி செய்து, ஆசனம் மூர்த்தி மூர்த்திமான் மூன்றும் பாவித்து, ஆவாகனம் பண்ணி, தூய அன்பால் அருச்சனை செய்து பரவிப், போற்றிப் பத்தியுடன் அக்கிகார்யமும் செய்தல் கிரியைஎனப்படும். இக்கிரியையாளர் சிவசாமீபம் பெறுவர்.

வினா:- யோகமாவது யாது.

விடை:- ஐம்புலனையும் அடக்கி, இருவளியையும் தடுத்து, சித்த சலனமும் தேகசலனமும் அற்று, ஆறுதாரங்களையும் அவ்வவ்வாதாரத்தில் திரிகோணம் முதலியவற்றையும் அக்ஷரங்களையும் அகமார்க்கத்தாலறிந்து அங்குள்ள தேவதைகளையும் தியானித்து, மேலேறிப்போய்ச் சந்திரமண்டலத்தின் ஒழுகும் அமிர்தத்தைப் பானம்பண்ணி, உடம்பு முழுதும் நிரப்பிப் பூரண ஜோதியைத் தியானித்தல் முதலியனவாக, வினைகள் கெடும்படி, அஷ்டாங்க யோகத்தை முழுதும் அநுட்டித்தல் யோகம் எனப்படும். இவ்யோகியார் சிவசாருபம் பெறுவர்.

வினா :- சரியையாளர் முதலோர்க்கு எவ்வெத் திருமேனிவழிபாடு உரியதாக விதித்திருக்கின்றது ?

விடை ; சரியையாளர்க்குப் புறத்தொழில் மாத்திரத்தால் உருவத் திருமேனியை நோக்கிச் செய்யும் வழிபாடுஉரியது.

கிரியையாளர்க்குப் புறத்தொழில் அகத்தொழில் இரண்டாலும் அருவுருவத் திருமேனியை நோக்கிச் செய்யும் வழிபாடுஉரியது.

யோகியர்க்கு அகத்தொழில் மாத்திரத்தால் அருவத் திருமேனியை நோக்கிச்செய்யும் வழிபாடுஉரியது.

வினு ;- ஞானவான்கட்குரிய சன்மார்க்கம் யாது?

விடை: சகல கலைகள், புராணங்கள், வேதங்கள், சமய சாத்திரங்கள், புலவும் உணர்ந்து பல வழிப்படுகின்ற பொருள்முழுவதும் கீழாகக்கண்டு கழித்து, மேலானதாகிய முப்பொருளுண்மையைத் தடத்தம் சொரூபம் என்று இருதிறத்திலும் வைத்துத், தெரிசித்துணர்த்திப், பரமசிவனைக் காட்டும் நல்ல ஞானமார்க்கத்தை நாடித், திரிபுடிரகிதமாய்ச் சிவாத்துவிதம் அடைவது, சன்மார்க்கமாகிய ஞானம். இஞ்ஞானிகளே சிவப்பேறுறத் தக்கவர்.

வினு :- அந்தஞானம் எத்தனை வகையது?

விடை: ஞானநூல்களை ஓதல், ஓதுவித்தல், அவற்றின் பொருளைக் கேட்பித்தல், கேட்டல், அப்பொருளைச் சிந்தித்தல் ஆகிய ஐந்தும் இறைவன் திருவடி சேர்ப்பிக்கும் ஞானவழிபாடு எனப்படும்.

வினு :. ஞானவேள்விக்கு முன் உள்ள நான்கு எவை? அவற்றினும் இது மேலாதல் எப்படி?

விடை ;- கன்மவேள்வி தவவேள்வி செபவேள்வி தியானவேள்வி ஞானவேள்வி ஆகிய ஐந்துவேள்விகளுள் முதல் நான்கும் போகத்தை ஊட்டும் ஓதல் முதல் ஐவகைப்பட்ட ஞானவேள்வி ஒன்றே வீடு பேற்றைத்தரும், அதனுல் ஞானவேள்வியே வேட்கற்பாலது.

வினு :- அந்தஞான வேள்வி ஐந்தனுள்ளும் பயனுல் பேதம் உண்டோ?

விடை :- உண்டு. ஓதல் முதலிய மூன்றிலும் ஆசிரியன் உபதேசித்தருளும் உண்மை ஞானம் நிகழாது. உண்மை ஞானம் கேட்டல் சிந்தித்தல் தெளிதல் நிட்டை கூடல் என்ற நான்கேயாகும். இம்முறையே வந்து நிட்டை உற்றோர் வீடெய்துவர். இந்நான்கிலும் மேவாமல் தீக்ஷையில் அத்துவசுத்தி பண்ணப்பட்டு, ஓதல் ஓதுவித்தல் கேட்பித்தலோடும் நின்றவர் பதமுத்தியடைந்து, மீண்டும் ஆசிரியனிடம் கேட்டல் முதலிய நெறியால் நிட்டைகூடி வீடுபேறு எய்துவர்,

வினு :- தானம் முதலியவற்றிற்கும் சரியை முதலியவற்றிற்கும் பயனுல் வேறுபாடென்ன?

விடை :- தானம், யாகம், தீர்த்தம், ஆச்சிரமம், தவங்கள், சாந்தி (பிராயச்சித்தங்கள்) விரதம். கன்மயோகங்கள் அநுஷ்டித்தோர் சுவர்க்க போகம் நுகர்ந்து விரைந்து மீண்டும் பிறப்பர்.

சரியை முதலிய மூன்றையும் அநுட்டித்தோர் பதமுத்தி அடைவர். சங்காரகாலத்தில் சிவதரிசனங்கிடைத்தால் அவ்வாறே முத்தியும் அடைவர். கிடைக்கா விட்டால் பிறந்து ஞானம் பெற்று வீடெய்துவர். இதனால் ஞானம் அடையாது வீடு பெறலரிதென்றறிக.

வினா :- சிவஞானிகட்குச் செய்யும்தானப்பெருமையும் பத்திநெறி நின்றோர் பெறும்பயனும் என்ன ?

விடை :- சிவஞானி கையிற் செய்த தானம் எள்ளளவேயாயினும், பூமியினும் மலையினும் பெரிதாகிப்பலன்தரும். செய்தார்க்குப் பிறவி தீர்க்கும், அப் பக்தர் சரியை முதலிய மூன்றும் அடையாமல், நேரே ஞானத்தையடையுந் தகுதியராவர். அந்த ஞானத்தால் திருவடிப் பேறுஉறுவர்.

வினா:- அந்த ஞானத்தின் சிறப்பென்ன?

விடை:- ஞானத்தால்தான் வீடுபேறு என்று வேதங்கள் புராணங்கள் எல்லாம் எடுத்தோதவும், அல்ல என்பவர் பேதையர் அஞ்ஞானம் பந்தத்தை விளைக்கும். மெய்ஞ்ஞானம் அப்பந்தத்தைப்போக்கும். கதிர்முன் நில்லாமல் இருள் நீங்குதல்போல் மெய்ஞ்ஞானத்தின் முன் நில்லாமல் அப்பந்தம் நீங்கிவிடும். அஞ்ஞானம் விடப்பந்தம் அறும், முத்தி எய்தும். தார்க்கிகர் முதலிய மதத்தோர் ஞானம் ஞானமன்று சைவசித்தாந்தி கூறும் திருவடி ஞானமே ஞானமெனப் படுஞ் சிறப்புடையது. அதனால், ஐவகை வேள்வி முதலிய கன்மங்களே அமையும் பத்திநெறிமாத்திரையே அமையும் என்று பிதற்றுவது பேதைமையே.

வினா:- கேட்டலும் அதன் அநுபவமும் என்ன?

விடை:- சூரியன் சந்நிதியில் சூரியகாந்தக்கல்லில் தீ விளங்கித் தோன்றுதல்போல, ஆசிரியன் சந்நிதியில் மாணாக்கனிடத்தில் முந்திய ஞானமாகிய கேட்டலறிவு விளங்கித் தோன்றும் அது தோன்ற முப்பொருளும் ஒன்றி னொன்று வியாபக வியாப்பியங்களாமாறு நிருவிகற்பமாய்த் தோன்றும்.

வினா:- சிந்தித்தலும் அதன் அநுபவமும் என்ன?

விடை :- நாலாஞ்சத்திநிபாதம் மேவியவர்க்கு அக்கேட்டலறிவு முதிர்ந்து முறுக விளையும் அப்பொழுது ஆசிரியராலோ தம்மின் மூத்தமாணாக் கராலோ சிந்திப்பிக்கப்பெறும். அந்நாற்பொருளின்கண் கருத்து ஒருங்கி நுழைந்து முன்பின் மலைவற ஏது திருட்டாந்தம் முதலியவற்றால் சிந்தித்து நிட்டை கூடுதற் கண் வேட்கைமிக் குறப்பெற்றவர், சிந்தித்தற்கருமமே மேற்கொண்டு மற்றொன்றி லும் பற்றுச் சிறிதும் இன்றி, சீவன் முத்தரோடு ஒத்தும் பேரறிவாகிய சிவமும்

சிற்றறிவாகிய தாமும் ஞாயிற்றினொளியும் கண்ணொளியும் போல் அத்துவிதமாய் நிற்றலால், அங்குத் தாம் உளராதல் அறியப்பெறாது சிவத்தோற்றம் ஒன்றே காணப்பெற்று நிருவிகற்பம் சங்கற்பம் என்னும் இரண்டிற்கும் நடுநிலத்தே நிற்பர்.

வினா:- தெளிதலும் அதன் அநுபவமும் என்ன?

விடை: கேவலத்தின் அஞ்ஞானம், சகலத்தின் ஞானம் ஆகிய இரண்டும் நீங்கிச் சுத்தஞானத்தால் கேட்கும் முறையிற் கேட்டுச் சித்திக்கும் முறையிற் சிந்தித்து, பின்பு அன்பு செய்து அடங்கி நிற்கப் பெறுவார்க்கு முதல்வன் இயல்பு கேட்டற் காலத்துப் பொருட்டன்மை பற்றிப் பேதமாய்த் தோன்றும்.

சிந்தித்தற் காலத்துக் கலப்புப்பற்றி அபேதமாய்த் தோன்றும்.

தெளிந்தபின் இவ்விரண்டும் இன்றி, நேரியனும் பரியனுமாயதோர் முறைமைபற்றி எவற்றினும் ஒற்றித்து நின்றே எதிலும் பற்றில்லாதவனாய்த் தோன்றும்.

வினா: நிட்டையாமாறும் அதன் பயனும் என்ன?

விடை: வியாபகமான உயிர் அவ்வியல்பு இழந்து கீழும் மேலும் ஏக தேசப்பட்டுச் செல்லுதற்குக் காரணம், அங்கனம் சென்று அவ்வப்பயன் நுகரச் செய்யும் இருவினைத் தளையேயாகும். ஆதலின், அத்தளையிரண்டையும் ஞான நூல் ஓதல் முதல் சிந்தித்தல் முடிய உள்ள ஞானபூசையின் பலனாய் நிகழ்ந்த தெளிதல் உணர்வு எனப்படும் அரத்தால் அறுக்கப் பெற்றார்க்கு, காரணமில்லா மையாற் காரியமான ஏகதேசச் செலவும் இன்றாயொழியும், அஃது ஒழியவே, அவர் கரணங்களின் வயத்தார் ஆதலில்லை, மேல் அங்கனம் தோன்றிய இறைவனது வியாபகத்தைத்தலைப்பட்டு ஒருவாற்றானும் குறைவின்றி இம்மையே ஜீவன் முக்தராவர்.

மாசு நீங்கினதும் ஆடையின் வெண்மை ஆடை முழுதும் விளங்கினாற் போல இவ்வுடம்பு நீங்கப்பெறும் பரமுத்தி நிலையில் தம் வியாபகம் எங்கணும் அறிவு விளங்கப்பெற்று முதல்வனோடு ஒத்து நிற்பார்.

வினா: நிட்டையடைந்தோர்கள் ஆசாரம் என்ன?

விடை: நிட்டையடைந்தோர்க்கு இருவினையும் இல்லை, ஒன்றை வேண்டிச்செய்யும் வினையில்லை, சமயாசாரம் தவம், விரதம், ஆச்சிரமம், தியாகம், சித்த சலனம், சமயவேஷம், புலனடக்கம், அந்தக்கரண அடக்கம், குணவிசேடம்,

குலவிசேடம் முதலிய எவையும் வேண்டுதலில்லை. பாலர்போல அறவொழிதலும், உன்மத்தர்போல ஒருகாற்செய்து ஒருகாலொழிதலும், பேய் பிடியுண்டவர் போலச் செயலிழப்பினின்று செய்தலும் ஆகிய குணங்களைப் பொருந்திப் பரமானந்த மேலீட்டாற் பாடல் ஆடல்களாகிய தொழில்களைச் செய்திடினும் செய்வர்.

அவர்கட்கு ஒருதேசம் ஓரிடம் ஒருகாலம் ஒருதிக்கு ஓராசனம் என்னும் வரையறையில்லை. ஒருகாரியம் செய்வதுபோலச், செய்யாச்செயலைச் செய்தற்கு வேறொரு நியதியும் வேண்டா. ஊசலாடும் மனம் இல்லை. மேலும்,

உலாவல் - நிற்றல், உறக்கம் - உணர்வு, உண்டி - பட்டினி, இருத்தல்- கிடத்தல், மாசு - தூய்மை, வறுமை - வாழ்வு, வருத்தம் - திருத்தம் (மகிழ்வு) திருப்தி, மைதுனம் - நட்பு, சினம் - பகை, ஆசை (விருப்பு) - வெறுப்பு, ஆகிய துவந்துவங்களும் இவையல்லாத துவந்துவங்களும் அடைதலில்லை. அடைந்தாலும் அவர்கள் திருவடியின்கீழ் நீங்காது நிற்பார்கள்.

**இந்நிலையே ஜீவன்முக்தர் நிலை.**

வினா :- இந்நிலை கைகூடாவிடின் வேறென்ன உபாயம் செய்தால் அது பெறலாம்?

விடை: இந்நிலை கூடிற்றிலையேல், எல்லாம் ஈசனிடத்திலும், ஈசன் எல்லா இடங்களிலும் வியாபக வியாப்பியமாய் நின்ற நிலையை அறிந்து, அந்தக் கரணங்களை அடக்கி, அறிவதொரு குறியைக் குருபதேசத்தின், அவரருளால் அறிந்து, சிவத்தையுற்று, அவனால் பசுகரணங்கள் சிவகரணமாகத் துன்னிய சாக்கிரத்தில் துரியாதீதம் தோன்ற முயல்க. முயன்றால் சிவாநந்தாநுபூதி கூடும்.

வினா:- அவ்வாறு முயன்றவரது பெருமை என்ன?

விடை:- சகல சாக்கிரத்திலே சுத்ததுரியாதீதத்தைப் புரிந்தவர்கள் உலகிற் சர்வசங்க நிவிர்த்தியுடைய தவச்செல்வர்கள், இவர்கள் சொல்லற்கரிய பாக்கியம் பெற்றவர்கள். இப்பிறப்பிலே உயிரின் பற்றை அறுத்துச் சிவத்தை அடைந்த நடமாடுஞ் சிவனார் ஆவர். இவர்கள் அரசராயிருந்து பெண்மயலில் முழுகியிருப்பினும் அகப்பற்று இல்லாதவர்களே. அவ்வதீதத்தைப் புரியாதோர் புறப்பற்றற்ற ஆண்டியாயிருந்து சிவம்போலத் தோன்றினும் வினையும் விலகாது. பிறப்பும் ஒழியாது.

வினு:- 'இங்ஙிலேதான் இல்லையேல்' என்றதில் கருவி கரணங்களை அடக்கி அறிதல்வேண்டும் என்றது பொருந்துமோ? கருவிகழிந்தாற் காண்பது எப்படி?

விடை:- 'இருவரும் புணர வந்த இன்பம் பேசரிதாயினும் மணந்தவர் தாம்உணர்வர்'. அக்காமரசம் கன்னிக்குத் தெரியாது. அதுபோல, அருள் பெற்ருல், அந்த இருவரையும் அறிவிறந்தங்கறிவர். காணமாட்டாத அபக்குவர் அதைக்காணுரேயாவர். அதனுல், அவர் உணரவோ வழியில்லை. இதுநிற்க.

பலநிறங்களால் மயங்கித் தன் ஒளியை இழந்த படிகம்போல் உருவால் மயங்கியே ஆன்ம சொருபம் உணரப் பெற்றவர். அதை உணர்ந்தார் அப்பெற்றியுடையுதான உருவுணர்வால் அவ்வான்மாவிற்குள்ளாகிய சிவனையும் அறியலாம் என்பது பாவகமாத்திரமே யாம்.

அதனுல், கருவியறிவிறந்து நின்று அருளான் அறியப்பெற்ருர்க்கு ஏகதேசமாகிய கருவி உள்ள அளவும் ஏகதேசக்காட்சி நீங்காது. நீங்காமையாற் பிறவி ஒழியாது. பிறவிக்கு மூலமாகிய ஆணவமலமும் பற்றறக் கழியாது.

வினு:- கருவிகள் அப்பெற்றியன ஆனபின் அவற்றை நீங்கி, அருள் பெறுவது எங்கனம்?

விடை:- படிகம் தன்னைச்சார்ந்த பல நிறங்களினியல்பையே தன்னிடத்திற்காட்டி நிற்கும்பொதுவியல்புடையது.

ஆன்மாவும் தன்னுற் சாரப்பட்ட கருவிகளினியல்பையே தன்னிடத்திற் காட்டிநிற்கும் பொதுவியல்புடையது. இதை முன் சிந்தித்து அறிந்துகொண்டு, பின் அப் படிகவொளி அவற்றின் வேருயுள்ளதுபோல ஆன்மாவாகிய தனது சிறப்பியல்பு இக்கருவிகளின் வேருயுண்டு என்பதும் உணர்ந்து, பின் அங்கனம் பொதுவியல்பையே தன் (சிறப்பு) இயல்பாகச் செய்துநிற்கும் கருவி ஞானம் பொதுவியல்பேயாய் ஒழியும்படி தன்னியல்பு விளங்குதற்கு ஏதுவாகிய உண்மையை உணர்ந்தவன் அத் தன்னியல்பின் விளங்கித்தோன்றும் சிவத்தையுறுவன், மீள அக்கருவிக் கூட்டத்திற் செல்வானல்லன். சிறைபட்டநீர் முறிந்த வழிக் கடலீற் சென்றடங்கி மீளாதவாறு போலும். அக்கடலாறுவமையால் சிவன் சர்வவியாபகன் என்ருல் நாம் சென்று அடைதல் ஏன்? அவ்வாறு வியாபகன் அல்லன் எனில் அவன் இறைவனுமல்லன், உடலில் உயிர்போல்வான் எனில் உடலுறுப்புக்கள் கண்ணைப்போலக் காணமாட்டா.

சிவபிரான் தன்றிருவடி ஞானத்தைத் தந்து திருவடியையுந் தருதலால், நாம் தத்துவங்களின் வைத்து ஆன்மாவை அறிகின்றோம்.

ஒளியிழந்த கண் அவ்வொளியையும் உள்ளொளியையும் பெற்றதுபோல அவ்வான்மா, தம்மையும் தம் உள்ளுயிரையும் அறியப்பெறும்.

வினு:- மலவாசனை தீர்வழி எது? தடுமாறுவோர்க்குபாயம் என்ன?

விடை:- பாசிபட்ட குளத்தில் கல்லை விட்டெறிந்தக்கால் அப்பாசி நீங்கியும் வாளா இருந்தக்கால் பரந்தும் நிகழ்தல் இயல்பு. மும்மலவாதனையும் அவ்வாறே திருவடியை உணர்ந்தக்கால் அகன்றும் உணராது மறந்தக்கால் அணுகியும் நிகழ்தல் இயல்பு அதனுல், இடையரு அன்புடன் திருவடி வியாபகத் துள் நீங்காமற்றூங்கி நிற்கும் நினைவுடையோர் (சாக்கிராதீதம் புரிவோர்) அதுவே நிலையாகி நின்றிடுவர். அம்மலவாசனையால் தாக்குண்டு பெந்தத்திலும் முத்தி யிலும் அலமருவோர் ஒழிதற்கரிய பாசத்தை ஒழிக்கும் உபாயத்தை (த் திருவருள் நெறியை) உபதேசிப்போம்.

## ஒன்பதாவது சூத்திரம்.

(சாதனஞ் செய்யுமாறுணர்த்துவது)

**ஊனக்கண் பாசம் உணராப் பதியை**
**ஞானக் கண்ணினிற் சிந்தை நாடி**
**உராத்துனைத் தேர்த்தெனப் பாசம் ஒருவத்**
**தண்ணிழலாம் பதிவிதி எண்ணும்அஞ் செழுத்தே** —சிவஞானபோதம்.

பாசஞா னத்தாலும் பசுஞானத் தாலும்
பார்ப்பரிய பரம்பரனைப் பதிஞானத் தாலே
நேசமொடும் உள்ளத்தே நாடிப் பாத
நீழற்கீழ் நில்லாதே நீங்கிப் போதின்
ஆசைதரும் உலகமெலாம் அலகைத்தே ரமென்(று)
அறிந்தகல அந்நிலையே யாகும் பின்னும்
ஓசைதரும் அஞ்செழுத்தை விதிப்படி உச்சரிக்க
உள்ளத்தே புகுந்தளிப்பன் ஊனமெலா மோட —சிவஞானசித்தியார்.

பாசஞானம் பசுஞானம் இரண்டிலும் அடைதலரியவன் பரம்பரன். அவனை அவனது திருவடி ஞானத்தால்தான் அறிதற்கியலும். அத்திருவடி ஞானத்தால் தன் அறிவில் வைத்தாராய்தல் வேண்டும்,

இடையறு அன்புடன்திருவடி வியாபகத்துண் நீங்காதே தூங்கப்பெறுத போது, அப்பெருமை ஒழிய வேண்டின், மற்றுச்செய்தற்கு ஏதுவான எவ்வகைப் பிரபஞ்சமும் நின்றுழிநில்லாமல் பெயரும் பேய்த்தேரின் தன்மையுடைவையாகக் கண்டுகழித்தல் வேண்டும். கழித்தால் அத்திருவடி ஞானம் விளங்கி அங்கிலே கைகூடப்பெறும். அதன் பின்னும் அவ்வாறு பாசத்தை நீக்கி ஞானத்தைப் பெற்று ஞேயத்தைக்கண்டகாட்சி ஓரோவழி வாசனைபற்றிச் சலிக்கும். அச் சலிப்பு ஏற்படாதபடி அப்பொருளைக்குறிக்குந் திருவைந்தெழுத்தை அவ்விதிப் படி அறிந்து கணித்தல் வேண்டும் என்பது ஒன்பதாஞ் சூத்திரப்பொருள்.

வினு :- பாசஞானம் பசுஞானம் என்றவற்றின் இயல்பு என்ன ?

விடை :- பதிஞானம், பசுஞானம், பாசஞானம் என்று மூன்றுண்டு.
1. அவற்றுள், வேதமுதலிய சொற்பிரபஞ்சமும் நிலமுதல் நாதமுடிவான பொருட்பிரபஞ்சமும் என்னும் இவை வாயிலாக நிகழும் ஏகதேசஞான மெல்லாம் பாசஞானமாகும்.

2. இவற்றைப் பொருந்திய ஆன்மா இவை எல்லாவற்றையும் தன்கீழ் வியாப்பியம் என்றறிந்து நீங்கித் தான், அவற்றிற்கு மேற்படுதலால், அங்கனம் அதுபற்றி நிகழ்வதொரு செருக்கால் அநாதிமுத்தனைப்போல முத்தனுகிய யானும் அவ்வாறு பிரமம் ஆவேன் என்று சடக்கென மதிக்கவருவதோர் சிவசமவாத ஞானம் பசுஞானமாகும். ஏகான்மவாதம்பற்றி நிகழும் அகம்பிரமஞானமும் பசுஞானமேயாதலின், அதுவும் இங்குக் கொள்ளல்கூடும்.

1. நான்பிரமம் என நிகழும் ஞானமேயன்றி ஆன்மா இவை கீழ்நாடி நீங்குதலே முத்தி என்று அந்த ஞானத்திற்கு முன்னுக நிகழும் பாடாணவாத ஞானமும்.

2. தூரத்திற் சென்றநிழல் உச்சிப்போதில் நடந்தவன் காலடியுள் வந்தொடுங்கினுற்போல, கரணங்களிற்சென்ற தன் அறிவு பக்குவம் வந்தபோது அக்கரணங்களிற் செல்லாமல் தன்பால் வந்து ஒன்றி நிரந்தரமாய் நிற்பதுவே முத்தி என்ற பாடாணவாத ஞானத்தின் பின்னுக நிகழும் பேதவாத ஞானமும் ஆகிய இவையும் பசுஞானமாம்.

இவ்வாறு நிகழும் பசுஞானங்களுக்கேதுவாகிய பசுத்துவ வாதனை, இவற்றைக் கைவிட்டுச் சிவஞானத்தாற் சிவனையும் தம்மையும் அறியப் பெற்றோர்க்கே நீங்கும். ஏனையோர்க்கு நீங்காது.

வினா:- சிவஞானத்தாலன்றி யறியப்படாமைக்கு ஏது யாது?

1. **பதிஞானம்:-** தானே தற்பிரகாசம் (ஒளிஞானம்) பரப்பிரகாசம் (ஆன்மாவைக்காட்டல்) இரண்டுமுடையது.

2. **பசுஞானம்:-** தற்சொரூபமே அறியமாட்டாது பலதலைப்பட்டு ஐயுற்று நிற்பது.

3. **பாசஞானம்:-** முப்பொறி முதலியவைபற்றி ஏகதேசமாய் நிகழுஞ் சுட்டுணர்வு.

இம்மூவகை ஞானங்களுள் பதிஞானமே எல்லாப் பொருளையும் இனிது விளக்குவது. ஏனை இரண்டுக்கும் விளக்கும் ஆற்றல் செல்லாது. அதனால், சிவஞானத்தால்தான் சிவத்தை அறியலாகும்.

பாசஞானமும் பசுஞானமும் பரப்பிரகாசமாய் நிற்பினும் தற்பிரகாசமாய் நிற்றல் செல்லாது. இதைக் கண்மேல்வைத்துணரலாம். பதிஞானத்துக்குத் தற்பிரகாசமாய் நிற்றலும் செல்லும். இதைப் பசுபாசங்கட்குக் காட்டாகித் தனக்கொருகாட்டு வேண்டாது நிற்றலாலறியலாம். இதனாலும் சிவனை அவன் திருவடிஞானத்தாற்சேரலே பொருத்தமுடையதாதல் காண்க.

வினா:- பாசம்கூடினும் திருவடியிற்கூடும் உபாயம் என்ன?

விடை:- குருவருளாலறிந்த குறியில் உறைத்து நிற்றல் வேண்டும். எல்லாப்புவனங்களும் முன்பு அநுபவித்துக் கழித்தமையால் கக்கிய சோறு எனக் கண்டு அருவருத்துவிடுக. ஆறத்துவாவுள்ளும் அடங்கிய மூவகைப் பிரபஞ்சமும் காரணரூபத்திற் சிறிதுங்காணப்படா. அதனால், அவற்றைச், சுவருருவைக் கண்டார்க்குச் சித்திரவடிவம் காணப்படாதது போல முழுப்பொய் எனக்காண்க. அவ்வாறு கண்டகாட்சி சலியாதிருக்கப்பெறுக. பெற்றால், அப்பிரபஞ்சத்திற்கு வேறான ஞானசொரூபம் இனிது விளங்கித் தோன்றும். தோன்றவே தரித்திரர்க்கு நிதி வாய்த்தவிடத்துப்போல அச்சொரூபத்திற் பெருங்காதல் மீதூரும். அது மீதூரவே அவ்வன்பின் வழியே பேரின்பமயமாய்ப் புகுந்து உயிரின்கண் விளங்கித் தோன்றுவது அந்த ஞானத்திற்கு முதலாகிய ஞேயம். இதுவே குறித்தடியில் நிறுத்தும் உபாயம்.

வினா:- திருவைந்தெழுத்தை விதிப்படி உச்சரிப்பார்க்கு வேண்டப் படும் பாவனை யாது?

விடை:- 'உடம்பே நான்' உடம்பு நீங்கினபின் பிரமம் நான் என்றும் இவ்வாறு விபரீதமாய் உணர்கின்ற உயிராவது சுட்டுணர்வுட்பட்ட அப்பாசமும்

அன்று. சுட்டுணர்வு கடந்து நின்ற அப்பதிப்பொருளுமன்று. இரண்டிற்கும் வேறே எனக்கண்டு வேருகிய பாசத்தை மேற்கூறியவாற்ருல் நீங்கி, ஏனைப்பதிப் பொருள் வேருயினும் வியாப்பிய வியாபக பாவத்தாற் கண்ணொளியும் ஞாயிற்றி ெனாளியும் போல வேற்றுமை சிறிதும் தோன்ருதவாறு ஒற்றித்து நிற்றற்குரிய தனது தொண்டினையும் இறைவன் கலப்பினையும்நோக்கி நின்று. கருடோகம் பாவனை போலச் சிவோகம் பாவனை ஒருவன் செய்யப் பெறுவானுல், அக்கருடன் அம்மாந்திரிகனுக்கு வேருதல் இன்றி அத்துவிதமாய்த் தோன்றி, விஷத்தை நீக்கித் தெளிவு செய்யுமாறுபோல, சிவனும் இவனில் வேருதலின்றி அத்துவித மாய்த் தோன்றி மலங்களை நீக்கிச் சுத்தனுகச் செய்வன். வேதாந்த மகா வாக்கியத்திற்கும் இதுவே பொருளாகக் கொள்க.

வினு:- அப்பாவனைக்கு வேண்டப்படும் மந்திரமும் கிரியையும் யாவை?

விடை:- இறைவன் நின்றகலப்பால் சிவோகம் எனப்பாவித்தற்கண் ஆன்மாவும் சிவமும் முறையே உடைமையும் உடையானுமாய் நிற்குந் தன்மையை ஐந்தெழுத்தோது முறையின் வைத்து உணர்ந்து, அவன் திருமேனி ஐந்தெழுத் தால் அமைந்த பரிசும் உணர்ந்து, உண்மைவிளக்கத்திற் குறித்தவாறு அங்க நியாச கரநியாசங்களும் அத்திருவைந்தெழுத்தாற் செய்துகொண்டு இதயம் உந்தி புருவநடு முறையே பூசைத்தானம், ஓமத்தானம், தியானத்தானமாகக் கற்பித்துக் கொண்டு, அங்கனம் வழிபட்டு நின்றுகொண்டு, அத்திரு வைந்தெழுத்தை வழிப் படியே மாறி நெஞ்சழுத்தி யுச்சரித்தல் செய்க.

இவ்வாறு சிவோகம்பாவனையும் திருவைந்தெழுத்து மந்திரமும் அந்தரி யாகக்கிரியையும் என்னும் இம்மூன்ருனும் ஒருவழிப்பட நின்றுகொண்டு அதனைக் கணிக்கப்பெறுவார்க்கு நவக்கோள்களுள் ஏனைய ஏழும்போலக் காண்டல் செல் லாத இராகு கேதுக்கள் உபராகத்தில் (கிரகணகாலத்தில்) சந்திர சூரியரிடத்தில் காணப்படுமாறுபோல, முப்பொருள்களுள் யான் இதை அறிந்தேன் இதை அறிகின்றிலேன் என்னும் அறிவிற்கு விடயமாய்த்தோன்றும் ஏனைப்பசுபாசங்கள் போலப்புலனுகாத அப்பதிப்பொருள் அவ்வுச்சரிப்பில் ஆன்மாவிடத்தில் விளங்கித் தோன்றும்.

வினு :- அந்தர்யாகஞ் செய்யுமாறு யாது ?

விடை:- இதயத்தில் அர்ச்சித்தற்கு நிலமுதல் சத்திதத்துவம் முடிய உள்ள முப்பத்தைந்து தத்துவங்களையும் கிழங்குமுதல் பீசம் முடிய உள்ள அவய வங்களாக உடைய இருதயகமலம் ஆசனமும் அதன்மேற் சத்தி மூர்த்தியும் சிவன் மூர்த்திமானும் ஆம். இம்முறைமையறிந்து அந்தர்யாகம் செய்தல் வேண்டும்.

அந்தர்யாகத்தால், முத்தி சித்திக்கும், அதனை ஆன்மசுத்தி என்பர், சிவபூஜாகரணங்களை மனத்தால் சிந்தித்துக்கொண்டு இதயத்தில் அர்ச்சிக்க வேண்டும். இவ்வாறு சிவனை ஞானத்தாற் சிந்திக்கச் சிந்திக்க, கண்ணாடியை விளக்க விளக்க ஒளி விளங்குவதுபோலச் சிவன் உள்ளத்தில் வரவர வந்தருள்வன். மலம் முற்றக்கெடும்.

வினா:- புறப்பூசையும் வேண்டுவதேன்?

விடை:- மெய்யடியார் அகத்தேனும் புறத்தேனும் ஒருபெற்றியாய் நிற்பர். அகம்புறம் என்றிரண்டால் அருச்சனை புரியும் இந்தச் சகம்போலப் புண்ணியபாவங்களைக் குறித்தலிலர். அதுவேறு இதுவேறு என்று பிரித்துக் காண்டலுமிலர். இட்டபணி செய்து நிற்பர். இதுவே மெய்யடியார் செய்தி ஆதலின், அகத்தே காணும்படி புறத்தேயும் ஒரு குறியிற்கண்டு அரன்கழல் பூசிக்கற்பாலது.

அதற்கு உபகரணம் வேண்டுமானால், முயன்று வருந்துதலும் பிறவுயிர்களை வருத்துதலும் ஆகாமையான், மரத்தின் கீழ் உதிர்ந்த பூக்களும் ஆறுகுளம் முதலியவற்றின் உளதாகிய நீரும் யாசகம புரியாமல் வந்த அமுத முதலாயினவுமே ஆண்டைக்கு அமையும்.

வினா:- அகப்பூசை புறப்பூசைகளுள் எது விசேடமுடையது?

இறைவன் அகம்புறம் என்னும் பிறிவின்றி எங்கும் உளன். அகத்தேனும் புறத்தேனும் வழிபடின் அநுக்கிரகம் புரிதல் தேற்றம். அவ்வாறாயினும், ஆன்மாவினிடத்தேதான் வாதனைமல நீக்கம் வேண்டுவார்க்கு அகப்பூசையால் அவ்விதிப்படி வழிபடுவது ஒருதலையாவேண்டும்.

இறைவன் விளங்கித்தோன்றி வாசனையைப் பற்றறத்துடைத்தற்கும் தன் வண்ணமாக்கித் தன் பேரானந்தப் பெருஞ்செல்வ முழுவதும் இவனுடையதாகச் செய்தற்கும் உரிமையுடைய விசேட இயைபு அகத்ததேயாகும். ஆதலின், புறப்பூசையினும் அகப்பூசையே விசேடமுடையது.

## பத்தாவது சூத்திரம்

பாசநீக்கம், சிவயோகம்

**அவனே தானே ஆகிய அந்நெறி**
**ஏக னாகி இறைபணி நிற்க**
**மலமாயை தன்னொடு வல்வினை இன்றே** —சிவஞானபோதம்.

இவனுலகில் இதமகிதம் செய்த எல்லாம்
இதமகிதம் இவனுக்குச் செய்தார்பால் இயையும்
அவனிவனாய் நின்றமுறை ஏக னாகி
அரன்பணியின் நின்றிடவும் அகலுங் குற்றம்
சிவனும்இவன் செய்தியெலாம் என்செய்தி யென்றும்
செய்ததெனக் கிவனுக்குச் செய்த தென்றும்
பவமகல உடனாகி நின்றுகொள்வன் பரிவாற்
பாதகத்தைச் செய்திடினும் பணியாக்கி விடுமே.
—சிவஞானசித்தியார்.

பயன் பெந்த நீக்கம் முத்திப்பேறு. அவற்றின் முதலாவதாகிய பாச நீக்கம் (ஏகனாகி யிறைபணிநிற்றல்) உணர்த்துவது.

**வினா:-** பத்தாவது சூத்திரப் பொருள் யாது?

**விடை:-** பதிஞானத்தாற் காணப்பட்ட இறைவன் **பெந்தநிலையில்** உடனாய் நிற்பினும் வேறுகாணப்படுமாறு இன்றி ஆன்மாவேயாய் ஒற்றுமைப் பட்டு ஆன்மாவின் வழிநிற்கின்றான். அதுபோல முத்திநிலையில், ஆன்மா அம்முதல்வனோடு உடனாய் நின்று அறிகின்றது. அறியினும் தான் என வேறு காணப் படாது அவ்வாறு அம்முதல்வனோடு ஒற்றுமைப் பட்டு நிற்கின்றது. செய்வனயாவும் இறைபணியாச் செய்து வருகின்றது. அவ்வகையிற் சிறிதும் வழுவாது நிற்கின்றது.

அவ்வாறு **ஏகனாகி நிற்றலால்** யான் எனது என்னுஞ் செருக்கு அறும். அதனால், அவ்விறைவனும் இவன் செய்யும் நன்மை தீமைகளை யெல்லாம் யான் செய்யும் நன்மை தீமைகள் என்று உடனாய் நின்று ஏன்று கொள்வன்.

இறைபணி நிற்றலால் இந்திரியங்களின் வயமாய் நிற்கும் பரதந்திரியம் ஒழியும். அதனால், அவ்விறைவனும் இவனுக்கு இன்பத் துன்ப நுகர்ச்சி ஆகும்படி பிறர் செய்யும் நன்மை தீமைகள் எனக்கு நுகர்ச்சியாகும்படி செய்தனவே என்று உடனாய் நின்று ஏன்று கொள்வன்.

இவ்விருவகையாலும் முறையே இவன் செய்யும் நன்மை தீமைகள் இவனுக்குப் பணியாய் முடியும். இவனுக்கு நன்மை தீமை செய்தாரிடத்தில் அந் நன்மைதீமைகள் அவ்வளவின்றி மிகுதிப்படுதற்குத் துணைக்காரணமாய் இயையும்.

இவ்வாறு ஆர்ச்சிப்பும் நுகர்ச்சியும் இவனைப் பந்தியா தொழியும். ஒழியவே, ஏனைச் சஞ்சித வினையும் மாயையும் ஆணவமும் ஆகிய குற்றங்கள் மூன்றும் இவனைப்பந்திகக மாட்டாதனவாய் விண்டொழியும்.

வினா:- திரிபுடி ஞானத்தில் நின்று காண்பதே அமையும். ஏகனாகி நிற்பது எற்றுக்கு?

விடை:- யான் எனது என்னுஞ் செருக்கு அற்றால்தான் இறைவன் உடனாய் நின்று கொள்ளுதலும் அதுபற்றி வினை நுகர்ச்சியும் ஆர்ச்சிப்பும் இவனுக்கு இல்லாதொழியும். அதுபற்றிக் குற்றம் அகலும். அச்செருக்கறுதியைக் கொடுப்பதும் அவன் இவனாய் நின்ற முறை ஏகனாகி நிற்கும் ஞானம் ஒன்றே, பிறிதில்லை. அச்செருக்கறுதியின் பொருட்டு ஏகனாகி நிற்கும் ஞானம் ஒருதலையால் வேண்டற்பாலது.

வினா :- ஏகனாகி நிற்றலே அமையும், இறைபணி நிற்பது எற்றுக்கு?

விடை :- ஏகனாகி நின்றாலும் தன்பணி மடங்கினாலன்றி வினைத் தொடக்கு அடைவதற்கு ஏதுவாய் இந்திரியங்களின் வழிப்பட்டுச்செல்லும் பரதந்திரம் நீங்காது. அது நீங்குமாறு தான் பணியை நீத்தல் வேண்டும். அதன் பொருட்டு இறை பணி நிற்றலும் ஒரு தலையான் வேண்டும்

வினா :- இறைபணியில் நிற்கும் இவன் பாதகத்தைச் செய்திட்டாலும் பணியாக்கிவிட்டு, உலகில் இவன் செய்த நன்மை தீமைகளை யெல்லாம் இவனுக்கு நன்மைதீமை செய்தவரிடம் இசையச்செய்வது இறைவனுக்குச் சலமாய் முடியாதோ ?

விடை :- 1. நீயே எனக்கு உள் நின்று செய்கின்றாய். அதனால் என்னாற்செய்யப்படும் நன்மை தீமைகளெல்லாம் நீ செய்யுஞ் செயலே என்றும்

2. நீயே பிறரைக்கொண்டு செய்வித்தும் செய்கின்றாய். அதனால், எனக்குப்பிறரால் வரும் நன்மை தீமைகளும் நீ செய்யும் செயலே என்றும்

இங்கனம் அவனருளை அல்லது ஒன்றனையும் கருதாதவராய்த் தம்மை இழந்து நிற்கப்பெறுவாரிடத்தில் அஞ்ஞான கன்மம் பிரவேசிக்கமாட்டாதாய் ஒழிந்துவிடும். ஆதலின், அத்தகைய மெய்யுணர்வுகொண்டு அடைக்கலம்புக்க வரைத் தன்னையே போலச் சுத்தராகச்செய்து பாதுகாப்பன். மந்திரவலியால் அடங்கி இரை நுகரப்பெறுமல் கிடக்கும் பாந்தள் யாதானும் ஓர் இலக்குவந்து வாய்த்தபோது வறிதுகிடவாது. அதுபோல, அவரிடத்தெழுந்து அவரைச்சாரமாட்டாமல் ஒழிந்து கிடந்த ஆகாமியவினை, அவர்க்கு நன்மை தீமைகளைச் செய்வார் பிறர் உளராயபோது, அவ்வியைபு பற்றி ஆண்டு அந்நன்மை தீமைகளுக்குத் துணையாய்த் தலைக்கூடத்தக்கது. அதனால், அவ்வாறு செலுத்திப் பிறர் செய்யும் அந்நன்மை தீமைகளை மிகுவித்து நுகர்வித்து ஒழிப்பன்.

அதுபற்றி இறைவன் சலமுடையன் அல்லன்'

வினா:- இறைபணி நிற்றலின் ஆற்றல் யாது?

விடை:- இறைபணியில் நிற்றலாகிய மெய்த்தொண்டு செய்யும் ஞானத்தால் தரப்படும் பேற்றை (வேறு பெரும் பேறெல்லாம் கொடுக்க வல்ல எவ்வளவு) நன்மைகளும் கொடுக்க வல்லன அல்ல. ஞானமேதரவல்லதாகும்.

அப்பேற்றை (எல்லாப் பெரும்பேற்றையுங் கெடுக்க வல்ல எவ்வளவு) தீமைகளும் கெடுக்க வல்லன அல்ல. அப்பேறு அழியாது நிலைப்பதாகும்.

அவ்வளவு பெருஞ்சிறப்புடையது இறைபணி நிற்றல்.

வினா:- ஏகனாகி இறைபணி நின்றார் சிறப்பென்ன?

1. விடை:- சுடுகின்றதீயைத் தம்பிக்கச்செய்ய வல்லார், அத்தீயுள் முழுகினும் அவர்பாற் சூடு நிகழாது.

2. கொல்கின்ற விஷங்களைத் தடுக்கவல்ல மந்திர மருந்துகளைப் பெற்றுடையார் அவ்விஷங்களை நிறையப் பருகினும் அவர்பாற் கொலை நிகழாது. அவ்வாறே, விருப்புவெறுப்புக்கள் நிகழ்த்தும் இந்திரியங்களை மேற்கூறிய முறையின் நின்று தம்வசப்படுத்தவல்ல ஞானிகள் எவ்விந்திரியங்களில் நின்று எத்தொழில் செய்யினும் அதுபற்றி அவர்பால் விருப்புவெறுப்பு நிகழ்ந்து மேலைக்கு வித்தாதல் செல்லா.

ஏனைப் பிராரத்தவினையும் தற்பணி நீத்த அவர்பால் தலைக்கூடமாட்டாது. வெந்தபடம் (துணி) போலச் சத்திகெட்டேபோய் வாதனை மாத்திரை

யாய் நின்றே சிறிது தாக்கும். அவ்வளவே யன்றி வாதனையாற் செய்யக்கடவது பிறிதில்லை. காயம் இருந்து ஒழிந்த பாத்திரத்தில் அவ்வாதனைகெடாது கிடந்து (கந்தித்தும்) மணந்தும் ஒருகறிக்குப் பயன்படல் இல்லாதது.

குயவன் குடத்தை வனையும் வரையிலும் சுழற்றிவிட்ட சக்கிரத்தில் அவ்வாதனை கிடந்து தன்வேகம் உள்ள அளவும் அதை மெலிதாகச் சுழல்வித்து மற்றொன்றை வனைவதற்குப் பயன்படல் இல்லாததைப் போல்வது அது.

ஆதலின், வாதனை மாத்திரத்திற்குத் துணையாய் நின்ற ஏனைமல வாதனைகளும் அவ்வுடம்பு மாயுங்காலத்து வேறொரு பற்றில்லாமையால் அதனொடு மாய்ந்து ஒழியும்.

## பதினொன்றாவது சூத்திரம்

(சிவப்பேறு, சிவபோகம்)

**காணும் கண்ணுக்குக் காட்டும் உளம்போல்**
**காண உள்ளத்தைக் கண்டு காட்டலின்**
**அயரா அன்பின் அரன்கழல் செலுமே.** —சிவஞானபோதம்.

காயமொழிந் தாற்சுத்த னாகி ஆன்மாக்
 காட்டக்கண் டிடுந்தன்மை யுடையன் கண்ணுக்கு
ஏயும்உயிர் காட்டிக் கண்டிடுமா போல
 ஈசனுயிர்க் குக்காட்டிக் கண்டிடுவன் இத்தை
ஆயுமறி வுடையனாய் அன்பு செய்ய
 அந்நிலைமை இந்நிலையின் அடைந்தமுறையாலே
மாயமெலாம் நீங்கிஅரன் மலரடிக்கீ ழிருப்பன்
 மாறாத சிவாநுபவம் மருவிக் கொண்டே. —சிவஞானசித்தியார்.

**வினா :-** பதினொன்றாவது சூத்திரப்பொருள் யாது?

**விடை :** மாயாகாரிய தேகத்தின் தடை நீங்கிய பின்னர் ஆன்மா மிக்க சுத்தனாகி உணர்த்த உணருந்தன்மை (வியாபக ஞானத்தன்மை) அடைவன்.

கண்ணுக்கு உயிர்காட்டியுங் கண்டும் உபகரித்து வருவதுபோல உயிர்க்கு ஈசன் காட்டியும் கண்டும் உபகரித்து வருவன். இவ்வுபகாரம் பெந்தம் முத்தி இரண்டிலும் இடைவிடாது நிகழ்வதை ஆராயும் அறிவுடையனாய்க் காதலன்பு செய்துவர, ஆன்மா அக்காயமொழிந்த நிலைமையிற்படும் முத்திப்பேறு

காயமுள்ள இந்நிலைமையில் அடைவான். அம்முறையில் தடையாகிய மாயாகாரிய மெல்லாம் நீங்கி (பரந்தநெறி யறுவகையும் ஒருவி) முதல்வன் மலரடி நிழற்கீழ் மாருத சிவாநுபவத்தை மருவிக்கொண்டு இருக்கும். இவ்வாறு,

1. ஆன்மாவின் அறிவு முதல்வன் அத்துவிதமாய் நின்று காட்டு மூபகாரம் காணுமுபகாரம் இரண்டனையும் ஆராய்ந்தறிதலைச் செய்யும்.

2. ஆன்மாவின் இச்சை அத்தொடர்புபற்றிய அம்முதல்வன் திருவடிகளைத் தலைப்படுதற்கண் இடையருது நிகழும்.

3. அவ்வாறு அறிவிச்சைகள் இரண்டும் பிறிதொன்றிற் சேறலின்றி அவ்வத்துவிதநிலை ஒன்றேபற்றி முதல்வன்றிருவடிக் கண்ணவாய் ஒருங்குநிகழும். நிகழவே, காயமொழிந்தபின் மலம்நீங்கிச் சுத்தனாய் நிற்கும்முறைமை காயத்தொடு நிற்கும்போதே கைகூடப் பெறுதலால், எல்லா மலங்களையும் இம்மையே நீத்தொழித்து அவ்வறிவிச்சைகளோடு ஒப்ப ஏனைக்கிரியையையும் ஒரு வழிக் கொண்டு, அம்முதல்வன் திருவடியைத் தலைக்கூடப் பெறும். பெற்றுச் சிவாநுபூதியே சுவாநுபூதியாய்க் கொண்டு வாழ்வான்.

வினு :- பிராரத்தவினையின் வாசனை பற்றறக் கழிவது எவ்வாறு?

விடை: பரஞானத்தால் பரத்தைத் தெளிய நோக்கி அன்பு செய்யப் பெற்றவர், அப்பரத்தையே உணர்ந்துகொண்டு நிற்பர். பிராரத்த வினையின் வாசனை தாக்குதற்கு உரிய மற்றைப் பதார்த்தங்களைச் சிறிதும் காண்பார் அல்லர்.

வினு:- அப்பதார்த்தங்களைக் காணவரும் ஞானங்கள் எவை?

விடை: இந்நூலின் முதலில் **அளவை** என்ற தலைப்பில் விளக்கப் பட்ட காட்சி, கருதல், உரை எனப்பலவகையான ஞானங்கள், கடவுளல்லாத மற்றைப் பதார்த்தங்களைக்காண உதவுவன, அவை கருவிகளைப் பற்றிநின்று அறிவன.

வினு :- அந்த ஞானங்கள் எக்காரணத்தால் சிறப்பில்லாதன?

விடை: அவையெல்லாம் சுட்டியுணரும் உணர்வின் பேதங்கள், சுட்டுணர்வு சிறந்தன்று, சுட்டிறந்துணரும் உணர்வே மேலானது.

வினு :- அளவைஞானங்களிலும் வேருன ஞானங்கள் உளவோ? உள ஆயின், அவை எவை?

விடை: அளவை ஞானங்களிலும் வேறாய ஞானங்கள் உள. அவை கேட்டலின் கண்ணதாகிய சாத்திர ஞானமும் சிந்தித்துத் தெளிதற் கண்ணதாகிய பேதஞானமும், அநுபூதி ஞானமும் ஆகும்.

விை:- சாத்திரஞானம் அநுபூதிஞானமாகாதோ?

விடை: சூக்குமை, பைசந்தி, மத்திமை, வைகரி என்னும் நால்வகை வாக்கைப்பற்றி நிகழும் விந்து (சுத்தமாயை) ஞானமே ஆதலின், சாத்திரஞானம் அநுபூதி ஞானம் ஆகாது.

விை:- சிந்தித்துத் தெளிதற்கண்ணதான பேதஞானம் அநுபூதி ஞானமோ?

விடை: அன்று. அது பாவனை ஞானம். அதனின் வேறே அநுபூதி ஞானம்.

விை:- பதார்த்தங்களைப் பார்க்கவாராத சிறப்புடைய ஞானம் எது?

விடை: அளவைஞானம், சாத்திரஞானம், பேதஞானம் எல்லா வற்றிற்கும் மேலாகிய ஞானம் சிவஞானமே. அதுவே தனக்கு மேலொரு ஞான மில்லாதபடி தலைமை உடையது.

விை:- அந்தச்சிவஞானத்தைப் பெற்றோர் நிலை என்ன?

விடை: அதைப்பெற்ற ஜீவன் முக்தர் சிவம் ஒன்றனையே கண் டிருப்பார். ஏனைப் பதார்த்தங்களை நோக்கிப் பிராரத்த வாதனையிற் படுவாரல்லர்.

**விை:- பிராரத்தவினையின் வாசனை பற்றறக் கழியும் என்று எதனால் சாதிக்கப்பட்டது?**

விடை:- ஜீவன் முக்தர் பரம்அல்லாத ஒன்றனைப் பாரார் என்று வற்புறுத்தி ஓதியதால், மங்கியது வினை. மங்காது நின்றுழல்விப்பது அதன் வாசனை,

விை:- கேட்டலறிவு கலக்கம் தருவது எப்படி?

விடை:- கேட்டதன்பின் சிந்தித்துத் தெளியும்படி ஐயத்தை விளைக் கின்றதால், அக்கேள்வி கலக்கம் தருவது ஆகும்.

விை:- உருவசமவாதிகள் கொள்கை என்ன?

விடை :- உடம்பு அநாதி, அஃது உயிரைப்பற்றிவருகின்றது. நீரோட்டம்போலத் தொடர்ச்சியானது. அதற்கு ஒரு முடிபுகூறுதல் பொருந்தாது. முத்தியிலும் அழியாத - தூய - மங்களமயமான திவ்விய சரீரம் உண்டு என்பது ரூபசமவாதிகள் கொள்கை

வினு :- அக்கொள்கை பொருந்துமோ? பொருந்தாதோ? **மாயாமலம்** பற்றறக் கழியும் வகை யாது ?

விடை :- உடம்பு இருந்தால், அவ்வுடம்பிற்குக் காரணமான மாயை இருந்தால்வேண்டும். விடயங்களினிடமாகவரும் இன்பத்துன்பநுகர்ச்சி (உண்டி) அவ்வுடம்பில் நிகழும். அந்நுகர்ச்சிக்கு ஏது கன்மம் (வினை). அஃது உடம்பு சேட்டித்தல் ஆகும். அம்மாயையையும் கன்மத்தையும் இயைவிப்பது ஆணவம். மும்மலமும் விட்டுநீங்குதல் இல்லை. அதனால், அம்மங்களமயமான திவ்விய சரீரத்தோடு நிற்கும் முத்தி நிலையும் துன்பம் ஆக்கும் நிலையே ஆகும். ஆகவே அதை முத்தி என்பதற்குத் தாற்பரியம் பதமுத்தி என்பதேயாகும். மனம் முதலிய புரியட்டகதேகத்தினின்றும் தோற்றுவது இவ்வுடம்பு. அக்காரியப்பாட்டால் ஆதியுடையதாயிற்று, மலம் அநாதி, அம்மலநோய் தீர்த்தற்கு மருந்தாய்வரும் இவ்வுடம்பு ஆதி. இக்காரியதேகம் காரணமான மூல மலநோய் நீங்கினல் தானும் உடன் நீங்கியொழியும், நில்லாது நிற்றற்கு ஓர் இயைபும் இல்லை. அதனால், ரூப சமவாவாதி கொள்கை பொருந்தாது.

வினு:- **ஆணவமலம்** பற்றறக்கழியும்வகை என்ன ?

விடை:- மெய்ஞ்ஞானத்தைப் பெற்றால் சிவம் பிரகாசிக்கும். அச்சிவப் பிரகாசத்தால் ஜீவன் முத்தி எய்தும், மெய்ஞ்ஞானம் (பரஞானம்) சேரப் பெற்றாரிடத்தில் மாய்ந்து கிடக்கும் ஆணவ மலத்தின் ஆற்றல், ஒரு காரணத்தால் மேற்பட்டாலும், ஒட்டின்றி, விண்டொழியும். (1) தேற்றாமரத்தின் வித்தால் தெளிவிக்கப்பட்ட நீரில் பொருந்திய கலங்கலை ஒப்பது அது. (2) சிவப்பிரகாசம் உடையவரிடத்தில், சிறிதேனும் இயைபு இல்லாதொழிந்தும் தொலைவில் உள்ளதுபோலத் தோன்றும் அம்மலசக்தி, ஒளிமிக்க தீ முன்னர், இருள் இல்லாதொழிந்தும் தொலைவில் இருப்பதுபோலத் தோன்றுவதைப் போல்வது அது. (3) ஜீவன் முக்தரிடத்தில், ஒருவகையாலும் தொடர்பில்லாதொழிந்தும், அந்த ஜீவன் முக்திநிலையின் மெலிவு பார்த்துத் தான் சார்வதற்கு உரியதாயிருக்கும் அம்மலசக்தி. மருந்தால் தடுத்தலை உற்ற நஞ்சு அம்மருந்தின் ஆற்றல் நீங்கும் அளவு அடங்கியிருந்து அது நீங்கியதும் தன் ஆற்றலைத் தோற்றும் நஞ்சு போல்வது அது. இம்மூவகை ஒப்பும்போல், ஆணவமலம் தனது ஆற்றல் கெட்டுத் தான் கெடாது, வாசனை மாத்திரமாய் அவ்வுடம்புள்ள அளவும் நின்று, மற்றொரு பிறவிக்கு ஏதுவாகாமல், அவ்வுடம்பொடுபற்றறக்கழிந்தொழியும்.

பாடாணவாதசைவர் வினு:- சகஜமலம் ஆணவம், அது முத்தியிலும் நீங்குவதில்லை. பற்றற நீங்குமெனல் இழுக்கன்றோ?

விடை :- இரசகுளிகை பட்டமாத்திரத்தில் செம்புடன் சகஜமாய் நின்ற களிம்பு நீங்கிவிடுகிறது. செம்பின் உருவம் வேறு நிற்கின்றது. அதுபோல, மெய்ஞ்ஞானம் சேர்ந்த மாத்திரத்தில், உயிர் வேருய் நிற்க, உயிரோடு சகஜமாய் நின்ற ஆணவமலம் நசிக்கும், இதற்கு இழுக்கு யாது? நசிக்காது என்பது அடாது.

பேதவாதசைவர் வினு:- மெய்ஞ்ஞானம் சேர்ந்த மாத்திரத்திலே மலம் நீங்கிவிடும். அதுவே முத்தியாதல் அமையும், அதன்மேலும் திருவடியைக் கலத்தல் வேண்டுமோ?

விடை:- கதிரொளி பொருந்தினும் கதிரவனெடு கண்ணெளி கலந்தால்தான் இருள் பற்றறக்கழியும், கலவாதொழியின் இருள் பற்றறக் கழியாது, அதுபோல, மெய்ஞ்ஞானம் சேர்ந்தாலும், சிவம் பிரகாசித்துத், திருவடியை உயிர்பொருந்தினல் அன்றி, ஆணவமலம் பற்றறக்கழியுமாறில்லை. அதனுல், மலநீக்கமும் திருவடிக்கலப்பும் ஆகிய இரண்டுமே முத்தியாகும். அவற்றுள் மலநீக்கமே முத்தி ஆதல் அமையும். திருவடிக்கலப்பாகிய முத்தி வேண்டா என்பது அடாது.

வினு :- முத்திநிலையில் மும்மலங்களும் உண்டோ? இல்லையோ?

விடை : அரிசிபோல உயிர்கள். அரிசியுடன் சகஜமாய் நின்ற மூன்றனுள் முளைபோலக் கன்மமலமும், தவிடுபோல மாயாமலமும். உமிபோல ஆணவமலமும் உயிருடன் சகஜமாய் நிற்றலுடையன. உயிரின்கண் சுகதுக்கங்களை முதற்காரணமாய் நின்று தோற்றுவித்தலுக்கு நெல்லின்கண் உள்ள முளைத்தற் சக்தி முளையைத் தோற்றுவித்தல் ஒப்பாகும். அச்சுகதுக்கங்கள் அங்குத்தோன்றத் துணைக்காரணமாய் உடம்புமுதலிய காரியங்களையும் உயிரையும் பொருந்தி நிற்கும் காரணமான மாயைக்கு நெல் முளைத்தற்கு அநுகூலம்செய்து, உடன் நிற்கும் தவிடு சமமாகும். அம்முளை அங்குத் தலைகாட்ட, நிமித்த காரணமான உமிபோல்வது, அச்சுகதுக்கத் தோற்றத்திற்கு நிமித்த காரணங்களை முறுகுவித்து நின்று அவற்றை உயிர் நுகருமாறு நிலைபெறச்செய்யும் ஆணவ மலம். அம்முளையும் தவிடும் உமியும் கெட்டொழியும். அரிசி கேடில்லாமல் நிலைபெறும். அவ்வரிசி முன்போல வேருெரு நெல் தோன்றக் காரணமாகாது. அவை அவ்வரிசியில் அடங்கி நிற்கும் என்பதற்கும் ஓர் இயைபு இல்லை. அதனுல்

அங்கு இல்லை என்பது உறுதியாயிற்று. ஆகவே, உயிர்களொடு சகஜமாய் நின்ற மும்மலங்களும் முத்திநிலையில் நீங்கியொழியும் என்றே கொள்க. அவை பெத்த நிடத்தில் காணப்படுதலால், நித்தியப்பொருள் என்றதும் வாய்மையாயிற்று.

வினா :- 'இத்தை விளைவித்தல் மலம்' என்று சிவாகமம் கூறியது எவ்வாறு பொருந்தும்?

விடை :- ஆன்மாவால் அறியற்பாலது சிவம் ஒன்றே. ஆன்மாவிற்கு வேண்டும் பெரும்பயனில் சிறிதுங் குறைவில்லை, அதனால் அச்சிவத்தை அன்றி, ஏனையவற்றை அறியாமையால் தாழ்வு ஒன்றும் இல்லை. ஏனையவற்றை அறிவுழி, சிவாநுபவ விளைவில் குறைபடும். அது முத்திப்பெரும் பயனுக்கு இடையூறும். அவற்றை அறியாமையே அப்பயனுக்குச் சிறந்த காரணம். "இன்பம் கொடுத்தல் இறை, இத்தை விளைவித்தல் மலம்" என்பது இக்கருத்துப்பற்றியதே.

வினா :- சிவன் உயிர்க்குக் காட்டிக் கண்டிடுவன் என்பது எப்படி? சிவனை விட்டு நீங்கி உயிர்கள் தனித்து நிற்றல் உண்டோ?

விடை :- ஈசன் திருவடியை இன்றி ஆன்மாவிற்கு அறிவும் செயலும் விளங்குதலும் இல்லை. விளங்கியபின் விஷயத்தில் சென்று பற்றுதலும் இல்லை. இறைவன் திருவடியே அவற்றை ஆன்மாவிற்கு விளக்கி இயக்குகின்றது. பந்த முத்தி இரண்டிலும் திருவடியேதான் அவ்வாறு உதவுகின்றது. அக்ஷரங்களை இயக்கும்பொருட்டு அகரம் அவ்வக்ஷரங்களுடன் நிற்கின்றது. அதுபோல, இறைவன் அறிவு செயல்கள் முன் விளங்குதற்பொருட்டு உயிர்களோடும் கலந்து நிற்பன். பின் அவ்வறிவு செயல்கள் விஷயத்தில் சென்று பற்றுதற் பொருட்டு அவ்வுயிர்களை அதிட்டித்துக்கொண்டு, (அவ்வுயிர்கள்) செல்லுமா றெல்லாம் அறிந்து செலுத்தி, அவ்விஷயங்களிலும் உடனாகக் கலந்து நிற்பன். ஆதலால், ஆணவமலத்தின் நீங்கி, வேறு நின்ற உயிர்கள், அதுபோல, சிவத்தின் நீங்கித் தனித்து நிற்றல் ஓரிடத்துமில்லை.

வினா :- சிவபிரானது உபகாரம் இரண்டும் யாவை?

விடை :- மேற்கூறிய, காட்டும் உபகாரம் காணும் உபகாரம் ஆகிய இரண்டுமே ஆகும்.

வினா :- மேற்கூறியவற்றுள் காட்டும் உபகாரம் என்ன? காணும் உபகாரம் என்ன?

விடை :- உயிரில் கலந்து நின்று அறிவு செயல்களை விளக்குவதே காட்டும் உபகாரம். அவ்வுயிரை அதிட்டித்துக்கொண்டு சென்று விடயத்தில் கலந்து நிற்றலே காணும் உபகாரம்.

வினா :- சிவபிரான், இவ்வளவு கலப்பு உடையவனாயிருந்தும் அவனை உயிர்கள் காணாதது ஏன் ?

விடை :- காணும் பேறும் அச்சிவபிரானால்தான் கிடைக்கும், அவனருளாலேதான் அவன் தாள் வணங்குதல் எய்தும், அதற்குத்தக்கபக்குவம் இருந்தால்தான் அவனருள் பெறலாம். அருளைப்பெற்றால் அன்றி அச்சிவபிரானைக் காணமுடியாது, அவனருளே கண்ணாகக்காணின் அல்லால் வேறு எவ்வாற்றாலும் காணமுடியாது. அம்முதல்வனைக்காண, அவனது அருட்கண்ணும், அக்கண்ணைப்பெறத்தக்க பருவமும், அப்பருவத்தைக் கொடுக்கும் முதல்வன் கருணைக்கொடையும் ஒன்றற்கு ஒன்று காரணமாகும். ஆதலால், அத்தகைய அருட்கண்ணை, முதல்வன், அதற்குரிய பக்குவம் பார்த்துக் கொடுத்தால், அது பெற்றவர், அறிவுக்கு அறிவாய் நின்று அவ்வாறு உபகரித்துவரும் **அத்துவித நிலையை** இனிதுணர்வர்.

ஈசுர அவிகாரவாதி வினா :- சிவன், அருட்கண்ணைக் கொடுத்துத் தோன்றுவதேன் ? உயிரே பருவத்தில் அக்கண்ணைப்பெற்றுச் சிவனைச்சேராதோ? வழிப்போக்கரை மரநிழலோ சென்று அடையும்? மரநிழல்போல இறைவன் விகாரமின்றி நிற்க, வழிப்போக்கர்போல உயிரே அவனை அடையும் என்றல் பொருந்தாதோ ?

விடை :- அப்படியாயின், வழிப்போக்கர்க்கே சுதந்திரம் ஆம். மரநிழலுக்குச் சுதந்திரம் இல்லை, அவ்வாறே உயிர்க்குச் சுதந்திரம் ஆகும். சிவபிரானுக்குச் சுதந்திரம் இல்லை எனப்படும். அது வழுவாய் முடியும். அதனால் அது பொருந்தாது.

பரிணாமவாதி வினா :- சிவனடியில் கூடும் உயிர் கெட்டு ஒன்றாய்ப் போகுமே அன்றிக் கெடாது ஒன்றாதல் உண்டோ ?

விடை : கெட்டால் கூடுமாறில்லை. கெடாது நின்று கூடிற்று எனில் அவ்வாறு கூடியவழிக் கேடு என்பது ஒன்று இல்லை. ஒன்றாதலும் பெறப்படாது. கூடியபின் கெட்டதெனில், கெட்டால் முத்தியின்பம் பெறுவது யாது? கேடே முத்திஎன்றால், உயிர் நித்தியம் என்பதும் பொய்யாகும். ஆதலின், அதுவும் பொருந்தாது.

ஐக்கியவாதி வினா :- நீரிலே நீர் சேர்ந்தாற்போல. உயிர் சிவனடியைச் சேர்ந்து ஒன்றாகாதோ ?

விடை: நீரும் நீரும்போலச் சிவனும் ஜீவனும் தம்முள் சமமாதல் செல்லாது.

வினா:- செம்பு களிம்பிருக்கும் வரையில் பொன்னுடன் ஒத்து ஒன்றுமாறு இல்லையாயினும், களிம்பு நீங்கிய வழி. ஒத்து ஒன்றுதல் செல்லும். அவ்வாறே உயிர் மலம் நீங்கிச் சிவனோடு ஒத்து ஒன்றுகும். இது அடாதோ?

விடை:- உயிர்க்கு மலத்தை நீக்கும் ஆற்றல் சிவபிரானுக்கு உண்டு செம்பிற்குக் களிம்பை நீக்கும் ஆற்றல் இரசகுளிகைக்கு உண்டு. அதனுல் சிவபிரானை இரசகுளிகையோடு ஒப்புறுத்துதலே ஏற்கும். பொன்னோடு ஒப்புறுத்துதல் ஏலாது. மலம் நீங்கிய வழியும், உயிர், சிவாநுபவம் ஒன்றற்கே சுதந்திரமாவது. சிவபிரான், ஐந்தொழில் எல்லாவற்றிற்கும் சுதந்திரன், உயிர் சிவபிரானோடு ஒத்து ஒன்றுமாறில்லை, அதனுல் அது சிறிதும் அடாது.

வினா:- சிவனும் சீவனும் சித்தே ஆதலால், ஒத்து ஒன்றும் என்றல் ஏன் அமையாது?

விடை:- கதிரவனொளியும் கண்ணொளியும் ஒளி என்னும் பொதுமையால் ஒத்து ஒன்றுகும், ஆயினும், கதிரவனொளி. தானே எல்லாவற்றையும் ஒருசேர விளக்கிநிற்கும் கண்ணொளி அதுவதுவாய் முந்திக் காணும். கதிரவனொளிக்குக் கதிரவனொளியே வியஞ்சகம், வேறு வியஞ்சகம் வேண்டா. கண்ணொளிக்கு முச்சுடரொளியாகிய வியஞ்சகம் இன்றிக் காண்கின்ற சக்தி இல்லை. அவ்விரண்டொளிக்கும் வேற்றுமை பெரிதாயினற் போல, அவ்விரு சித்துக்கும் அந்தரங்க பேதம் பெரிதுண்டு, அதனுல் அவ்விரு பொருளும் தம்முள் கூடியவழியும் அத்துவிதமாய் நிற்றலே அன்றி ஒன்றுய்ப் போமாறில்லை, இதனுல் அஃது அமையாது.

### சிவனுக்கும் ஜீவனுக்கும் இயல்பாக உள்ளவேற்றுமை

| சிவன் | ஜீவன் |
|---|---|
| 1. அருட்சித்து | 1. அருளைச்சேரும் சித்து |
| 2. பிறவி நீக்கமும் புத்தி முத்தியும் பண்ணுஞ்சித்து | 2. பிறவி நீக்கத்தையும் புத்தியையும் முத்தியையும் அடையும் சித்து |
| 3, தானே அறியுஞ்சித்து | 3. அறிவித்தால் அறியுஞ்சித்து |

## உவமான உவமேயத்தால் உள்ள வேற்றுமை

| உவமை | உவமேயம் |
|---|---|
| 1. உயிர் | 1 சிவம் |
| 2. புத்திதத்துவம் | 2. உயிர் |
| 3 உயிரை நோக்கப் புத்திதத்துவம் அசித்து | 3. சிவத்தை நோக்க உயிர் அசித்து |

வினு :- முத்திநிலையை விளக்குக.

விடை: (1) காந்தம் விகாரம் இன்றி நின்றே இரும்பை வலிப்பது போல இறைவனும் விகாரமின்றியே உயிரைத் தன்வழிப்படுத்து நிற்பன்.

(2) தீ இரும்பைக் கெடுத்தல் இன்றித் தன் வண்ணம் ஆக்கிக் கறை மாத்திரம் கெடச்செய்யும். தீவண்ணமாக்க அக்கறை உரியதன்று. அதுபோல, சிவனும் உயிரைத் தன்வண்ணமாக்குவன். அவ்வுயிரொடு தோன்றி நின்ற மலத்தைக் கெடுப்பான். அம்மலம் அச்சிவன் வண்ணம் ஆதற்கு உரியது அன்று.

(3) நீரொடுசேர்ந்த உப்பு, தன் சுவைமுழுதும் நீர்க்கு ஆக்கித், தன்னோடு ஒப்பச் சமம்செய்து நிற்கும். அதுபோல, பரமேச்சுரனும், தனக்குரிய எண்குணங்களையும், தான்சேர்ந்த உயிரின்கண் பதிப்பித்து, தன்னோடு ஒப்பச் செய்து நிற்பன்.

(4) இரசகுளிகை செம்பை உருக்கித், தன்னொடுகூட்டிப் பேதப்படுத்திப் பொன்னுகச்செய்தும், பொன்னியல்பைக் காட்டாமல், தன்னுள் அடக்கி நிற்கும். அதுபோல, முதல்வன் உயிரை அவ்வாறெல்லாம் செய்தும், அவ்வுயிரியல்பு சிறிதும் தோன்ருமல் அறிவிறந்து நிற்குமாறு தன் வியாபகத்துள் அடக்கிநிற்கும்.

(5) கருப்பஞ்சாறு முதலிய சுவைப்பொருளெல்லாம் ஒன்ருகக்கலந்த வழி, உண்டானசுவை, இத்தன்மையுடையது எனப் பிரித்து அறியவாராது, அதுபோல ஆண்டானும் அடிமைக்கண் அங்கனம் கலந்தவழி, உண்டான ஆநந்த சொரூபம் இத்தகையதென்று பிரித்து அறியவாராது. (இங்குச் சிவஞான முனிவரருளிய உரையின் பெருமையை உணர்தல் நன்று.)

## பன்னிரண்டாவது சூத்திரம்

*சீவன்முத்தரியல்பு*

செம்மலர் நோன்றாள் சேரல் ஒட்டா
அம்மலம் கழீஇ அன்பரொடு மரீஇ
மாலற நேயம் மலிந்தவர் வேடமும்
ஆலயந் தானும் அரனெனத் தொழுமே —சிவஞானபோதம்

*செங்கமலத் தாளிணைகள் சேரலொட்டாத்*
*திரிமலங்கள் அறுத்தீசன் நேசரொடுஞ் செறிந்திட்டு*
*அங்கவர்தந் திருவேடம் ஆலயங்க ளெல்லாம்*
*அரனெனவே தொழுதிறைஞ்சி ஆடிப் பாடி*
*எங்கும்யாம் ஒருவர்க்கும் எளியோ மல்லோம்*
*யாவர்க்கும் மேலானோம் என்றிறுமாப் பெய்தித்*
*திங்கள்முடி யார் அடியார் அடியோ மென்று*
*திரிந்திடுவர் சிவஞானச் செய்தியுடை யோரே.* —சிவஞானசித்தியார்

வினா :- ஜீவன் முக்தர் சுபாவம் யாது?

விடை : விளக்கு அற்றுப்போவதைப் பார்த்துக்கொண்டிருக்கும் இருள், அறிவு அற்றுப்போவதைப் பார்த்துக் கொண்டிருக்கும் பற்றறக்கழிந்த மும்மலங்கள். அம்மலங்களை அஞ்சிப் பரிகரித்தல் வேண்டும். அப்பரிகாரத்துக்குத் துணையாவது மெய்யடியாரிணக்கம். அவ்விணக்கம் நிலைபெறும்படி அவரது திருவேடத்தையும் சிவாலயத்தையும் அரன் எனக்கண்டு வழிபடுதல் வேண்டும். அப்பரிகாரம், இணக்கம், வழிபாடு மூன்றும் பெறுதவரது சிறுமையும் பெற்றவரது பெருமையும் நோக்கிக் களித்து வாழ்வது ஜீவன் முக்தர் சுபாவம்.

வினா :- ஜீவன் முக்தர்க்கு மிக்கவுவகையை விளைப்பது எவ்விணக்கம்? வெறுப்பை விளைப்பது எவ்விணக்கம்? எதெதுபோல?

விடை : கழிபெருங்காம முடையவர்க்கு அக்காமத் தொடர்புடையவரது இணக்கம் அக்காமப் பயிரை வளர்க்கும் நீராதல் பற்றி, அதில் கழிபேருவகையை உண்டாக்கும். அதுபோல, மாறுத சிவாநுபவம் மருவிக்கொண்டு அரன்மலரடி நீழலில் இருப்பவர்க்கு, அதனை வளர்க்கும் நீர்மையையுடையவராகிய அத்தொடர்புடையவரொடு வாய்ந்த இணக்கம் கழிபேருவகையை உண்டாக்கும்.

கழிபெருங்காமத்தினர்க்கு, அவரல்லாதவரது இணக்கம், அக்காமப் பயிரை அழிக்கும் களையாதல்பற்றி, அதில் மிக்க வெறுப்பை விளக்கும். அது போல, சிவாநுபவத்தைக் கெடுக்கும் நீர்மையையுடைய பிறரொடு கொள்ளும் இணக்கம் மிக்க வெறுப்பை விளக்கும். இவை இயல்பாக உண்டாவன.

வினா :- அடியவர்க்கு அன்பில்லாமையால் ஈசனுக்கு அன்பில்லாதவர் என்றது எவ்வாறு?

விடை :- காமுகனுக்குத் தன் காதலியிடம் அன்புடையவன் என்பதை, அவனது சுற்றத்தைக்கண்டால் நிகழும் அன்பினளவால் அறியலாம். அதுபோல, சிவபக்தியையும் சிவனடியாரைக்கண்டால் நிகழும் பத்தியளவால் அறியலாம். ஆதலால், அடியவர்பால் அன்புடையார்போல ஒழுகுவது நாடகமாத்திரையே. பிறிதில்லை, அதனால், 'அடியவர்க்கு அன்பில்லார் ஈசனுக்கு அன்பில்லார்' ஆவர்.

வினா :- சிவபக்தியில்லாதவர் ஜீவகருணையில்லாதவரே என்பது எப்படி?

விடை :- சிவபிரான் எவ்வுயிரிடத்தும் இருக்கின்றான். அச்சிவபெருமானிடத்தில் அன்புடையாரே அத்தொடர்புபற்றி, எவ்வுயிர்க்கும் அன்புடையாராவர் ஆதலால், அதை எதிர் மறையில்வைத்து, ஈசனுக்கு அன்பில்லார் எவ்வுயிர்க்கும் அன்பில்லார்' என்றனர் நல்லோர்.

வினா :- தமக்கும் அன்பில்லாராதல் எவ்வாறு?

விடை :- அடியரிடத்திலும் ஆண்டவனிடத்திலும் அன்பில்லாத தம் உயிருக்கு உறுதிசெய்து கொள்பவர் அல்லர். அதனால், தமக்கும் அன்பில்லாதவர் ஆவர்.

வினா :- தற்போதம் முனைத்துச்செய்யும் குற்றம் எது?

விடை :- அடியவர் (ஜீவன்முக்தர்)க்கு அடியவரை அடைந்து அவர் பணிகளை உன் பணிகளாகவே தற்போத முனைப்பொடு செய்வது குற்றம் ஆகும். ஆகவே, தற்போதம் முனைத்தல் இன்றி, திருவருளாகிய ஞானக் குறியில் நின்று பணிசெய்தல் பிறப்பிறப்புக்களாகிய குற்றங்களை யொழிக்கும் என்றதாம்.

வினா :- அறிவில்லாப் பிணங்கள் எவை?

விடை :- சிவனடியாரிடத்திலும், சிவபிரானிடத்திலும், சகலஜீவராசிகளிடத்திலும், தம்மிடத்திலும் அன்புவைத்து வாழாத மாக்களே 'அறிவில்லாப்பிணங்கள்.'

வினா:- ஜீவன் முக்தர்கள் எவரைத் தொழவும் எவரை விட்டகலவும் வேண்டும்? தொழுவது ஏன்! விடுவது ஏன்?

விடை:- ஜீவன் முக்தர், திருவேடம் உடைய மெய்யன்பர் சிவமே யாதல் தெளியக்கிடத்தலால், அதுபற்றி அவரை அரனெனவே தெளிந்து வழி பட்டுத் தொழுதல் வேண்டும். ஏனைப் பாசப்பற்றுடையவரது பற்று விட்டொழி தல் வேண்டும். **பாசத்தாரதுபற்று** விட்டகலற் பொருட்டுச் **சிவநேசத்தாரைச்** சிவமெனவே தெளிந்து தொழல் வேண்டும். **நேசத்தார்த்** தொழுதிடு **நீ** பாசத்தார்விடவே என்றுதான் மூலபாடம் இருந்தது. அது சிவஞான முனிவர் உரையாலும் உறுதிப்படும். முதல் நூலிலும் 'நேசத்தார் பாசத்தார்' என்றே உளது. நேசத்தால் என்றது பிழைபட்ட பாடமாகும்.

வினா:- திருவேடம் உடைய மெய்யன்பர் சிவமே ஆதல் எப்படி?

விடை:- (1) பரம்பொருள், யாராலும் அறிவதற்கு அரிது. தன்னை உலகத்தார் அறியும்பொருட்டு, அப்பரம்பொருளே, திருநீறு, கண்டிகை முதலிய திருவேடமாகிய தனது வடிவத்தைத் தன் அன்பர்க்கு அளித்து, யாங்கணும் உயிர்க்கு உயிராயிருந்து அறிவை விளக்கித் திருவருளால் கலந்திருக்கிறது. இருக்கவே, **அத்திருவேடம் உடைய மெய்யன்பர்** சிவமே ஆவர்.

(2) **சிவோகம்பாவனையாலும்** அத்திருவேடம் சிவரூபமே ஆகும். அவர் சிவமே ஆவர்.

(3) இருதயகமலத்தில் ஒரு குறியின்கண் வைத்துச் சிவபரம்பொருளைக் **கூடும் செயலாலும்** அவர் சிவமே ஆவர்.

(4) அக்குறியும் இன்றித், தாமும் இல்லையாகுந் **தன்மையாலும்** அவர் சிவமேயாய் நின்றிடுவர்.

இத்திருவேடம் சிவனெனத் தெளியும் வண்ணமானது, தொழுவாரது கருத்துவகை பற்றியதன்று. தொழப்படுஞ் சிவநேசரது கருத்துவகை பற்றியதாய், மாலறநேயமலிந்தவர் வேடத்தை அரனெனத் தொழுமாறு உணர்த்தியது.

வினா:- சரியையாளர் முதலிய நால்வரும் திருக்கோயில் வழிபாடு செய்யும் பாவனை என்ன?

விடை:- (1) சரியையாளர் சிவலிங்கம் முதலிய திருமேனிகளையே (உருவப்பொருள்களையே) சிவமெனக்கண்டு வழிபடுவர். அவர்க்குப் பகுத்துணர்தல் இல்லாமையே அவ்வாறு வழிபடுதற்குக் காரணமாயிற்று.

(2) கிரியையாளர், அருவப்பொருளாகிய சிவன் ஈசாநாதி மந்திரங்களால் சிவலிங்கம் முதலிய திருவுருவைத் தோற்றிக் கொண்டான் என்று எண்ணி மந்திர நியாசத்தால் வழிபடுவர்.

(3) யோகிகள் எங்கும் உள்ள பரம்பொருள் இங்கும் இருக்கின்றது என்று கருதி, தமது உள்ளத்தில் வழிபடப்பெறும் சிவனை இச்சிவலிங்கத் திருமேனிகளிலும் கண்டு வழிபடுவர். இவர்கள் சாத்திய மந்திரங்களைக் கொண்டவர்கள். கிரியையாளர்க்கு விறகு கடைந்த வழித்தோன்றும் தீப்போலவும், யோகியர்க்குப் பசுக்கறந்த வழித்தோன்றும் பால்போலவும் அவ்வம் மந்திரங்களால் அவரவர் விரும்பிய வடிவாய் அத்திருமேனிகளில் அப்போதப்போது தோன்றியிருந்து சிவபிரான் அருள்செய்வான்.

(4) ஞானிகள், அன்பு மாத்திரமாய் அத்திருமேனிகளில் வழிபடுவர். ஏகதேசமாய்க் குறித்தல் இலர். அங்கு அப்பரம்பொருள் கன்றை நினைந்த புனிற்றாவின் முலைப்பால்போல, கருணை மிகுதியால் அவர் அன்பே தானாகி எப்போதும் வெளிப்பட்டு நின்று அருள்செய்யும். யோகிகளுக்கு, கறக்க ஒழுகும் பால் ஒப்பு. ஞானிகளுக்கு நினைக்க விம்மும் பால் ஒப்பு. பால் உடம்பெங்கும் நிறைந்திருப்பினும் அதன் உருவத்தைக் காணமுடியாது. முலைக்காம்பினிடத்தில் தான் காணக்கூடும். அதுபோல, பரம்பொருள் எங்கும் நிறைந்திருப்பினும் சிவலிங்கம் முதலிய திருமேனிகளிலே காணப்படும். ஆதலின் அவ்வுண்மை அறிந்து ஆலயங்களை வழிபடுக.

வினா:- மேற்கூறிய நால்வகைக் கருத்தும் சரியையாளர் முதலிய நால்வர்க்கும் தனித்தனி உரியதாய் இருக்க, ஞானிகள் சரியையாளர்போல் வழிபடுதல் ஏன்?

விடை:- சரியை முதலிய நான்கு பாதங்களிலும் கிரியைகள் எல்லாம், கர்த்தாவாகிய பரம்பொருளது பணியாதலால், நால்வகைத் தொழிலும் ஞானிகள் செய்யக் கடவர். அகத்தொழில் செய்வார் புறத்தொழில் செய்வதற்கும் உரியர். ஏனையோர் தம் தம் தொழில் செய்வதற்கே உரியவர். புறத்தொழில் செய்வார் அகத்தொழிலுக்கு உரியராகார். நால்வகைப் பாதங்களில் நிற்கும் மாணாக்கர்க்கு ஆசிரியன்மார் உபதேசித்தற்கண் படும் உரிமையும் இவ்வாறே வைத்துணர்க. எல்லார்க்கும் உபதேசித்தற்குரிய ஞான குருவே தலையாய குரு, தாவர ஜங்கமங்களும் இக்குருவடிவின் வேறல்ல. சரியாகுரு, கிரியாகுரு, யோககுரு, ஞானகுரு என்னும் நால்வருள் ஞானகுருவே மேலானகுரு, குருவும் இவனே சிவனும் இவனே.

வினா :- ஞானகுருவே மேலான குரு என்றதன் காரணம் யாது ?

விடை :- வேதாகமம் முதலிய கலைஞானங்களையும். திரிகால ஞானங்களையும் முடிவில்லாத அணிமா முதலிய ஞானங்களையுங், மந்திரங்கள், மருந்துகள்,

யோகம், இரசகுளிகை என்பவற்றுனும், சாஸ்திரங்களில் உணர்த்திய முறைப்படி செய்தலாலும் பெறலாம். திருவடி ஞானமோ குருவருளாலன்றிக்கிட்டாது. வேறு யாதாலும் திருவடி ஞானம் எய்தாது திருவடி ஞானத்தை அருளும் குருவினுல், மற்றைய ஞானங்களையும் பெற்றுக்கொள்ளலாம். அதனுல், ஞானகுருவே மேலானவர் ஆவார். யோககுரு முதலிய மூவர்க்கும் திருவடி ஞானத்தைத்தரும் ஆற்றல் இல்லை.

ஆசான் அருளால் அடிசேர் ஞானம் வந்திடும். மற்றென்றுலும் வாராது. மற்றவையும் அவனருளால் மருவும் என்பது சிவாகம வசனம்.

வினு:- ஞானகுருவை வழிபடுமாறு யாது?

விடை:- சொரூபசிவமும், தடத்தசிவமும், பரஞானமும், பராபரனும், அவன் தரும் சீர்நிலையெல்லாமும் இந்த ஞானகுருவே என்று வழிபடல்வேண்டும்.

வினு:- அவ்வழிபாட்டின் பயன் யாது?

விடை:- ஞானகுருவை முற்கூறிய நெறியில் வழிபட்டால் வரும் பயன் ஒன்றே உயிர்க்கு ஒப்புயர்வற்றது. அது சிவமேயாதல்; பேரின்பப்பேறு.

வினு:- ஞானகுரு, உயிர்களைச் சிவமாக்குவது எவ்வாறு?

விடை:- சிவபிரான், ஞானகுருவை ஆவேசித்து (குருவின் திருமேனியில் பரம்பொருள் புகுந்து) நின்று, அக்குருவை வழிபடும் உயிரைத் தன்வண்ணமாகச் செய்தருள்வான். அருளினுலும், சிவம் வேறு ஞானகுருவேறு அல்லாத காரணத்தால், ஞானகுருவே அப்பெரும்பயனை அளிப்பவனுவான்.

வினு:- குரு செய்யும் தீக்ஷையை விளக்குக.

விடை:- (1) கோழி தன் முட்டையைத் **தீண்டித்** தன் வண்ணம் ஆக்கும்.

(2) ஆமை தன் முட்டையை **நினைந்து** தன்வண்ணம் ஆக்கும்.

(3) மீன், தன் முட்டையைப் **பார்த்துத்** தன் வண்ணம் ஆக்கும்.

அவைபோல ஞானகுருவும் தன் சீடனைத் **தீண்டியும் நினைந்தும் பார்த்தும்** தன்வண்ணமாக்குவான்.

இவ்வினுவிடை நூல். சிவஞானசித்தியார்க்கு ஆசிரியர் மாதவச் சிவஞானயோகிகள் செய்தருளிய உரையையே முற்றுந்தழுவி எழுதப்பட்டுளது. இதைக் கற்பவர் அதைத் தெள்ளிதில் உணர்வர்.

தருமையாதீனத்து 25-ஆவது குருமகாசந்நிதானம் **ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்** அவர்கள் அருளாணைப்படி, ஷை ஆதீனப் புலவர் திரு. முத்து. சு. மாணிக்கவாசக முதலியார் அவர்களால் எழுதப் பெற்ற சிவஞான சித்தியார் வினுவிடை நூல் முற்றியது.

# அத்வைதம்

வேதாந்த சிரோமணி,

**K. இராஜகோபால சாஸ்திரிகள்**

வடமொழிப் பேராசிரியர், ஆதீனப் பல்கலைக்கல்லூரி.

உலகத்திலுள்ள மக்கள் யாவரும் இன்பத்தையே விரும்புகின்றனர். துன்பத்தை அடியோடு வெறுக்கின்றனர். கிடைத்த இன்பமும் நிலைபெற்றதாய் இருத்தல்வேண்டும்; துக்கக்கலப்பு அற்றதாய் இருத்தல்வேண்டும்; சிறிதுகாலம் இருந்து அழிந்துவிடின் கொடிய துன்பமாகத் தோன்றும் என்றும் நினைக்கின்றனர். அவ்விதம் நிலையான பேரின்பம் மோக்ஷம் எனப்படும். மோக்ஷம் என்ற சொல் துன்பங்களினின்றும் விடுதலை என்னும் பொருளுடையது. மனிதரின் பெரு முயற்சியினால் துன்பங்கள் நீங்கினாலும் அத்துன்பங்களின் காரணம் இருக்கு மாயின் பின்னொரு காலத்தில் மறுபடியும் துன்ப முண்டாகும். ஆதலால் துன்பங் களையும் அவற்றிற்குக் காரணமான அவித்யை காமம் குரோதம் முதலிய வைகளையும் அறவே ஒழிக்கவேண்டியது கடமையாகும்.

தனிகன் சுகமடைகிறான் என்று கூறுங்கால் தனம் சுகமடையக் காரண மாகிறது என்பது தெரிகிறது. அதுபோல **तमेवं विद्वान् अमृत इह भवति** (அந்த பரப்பிரமத்தை அபரோக்ஷமாகக் கண்டு ஸ்வாநுபவ ஞானமுடையவன் இங்கேயே முத்தனாகிறான்) என்ற விடத்தில் ஞானம் மோக்ஷம் அடையக் காரணமாகிறது என்பது புலப்படும். மேலும் எந்தப்பொருள் உண்டுபண்ணப்படுகிறதோ அது அழிவை அடையும் என்று தார்க்கிகர் கூறுகின்றனர். ஆதலால் மோக்ஷம் என்ற பேரின்பம் ஞானத்தால் உண்டுபண்ணப்படுமாயின் அது அழிவது நிச்சயம். முத்தி என்பது எல்லா மதத்தினராலும் அழிவற்ற பேரின்பம் என்றுதான் கொள்ளப்படுகிறது. ஞானத்தால் முத்தி என்பது உபநிஷத்துக்களின் கருத்து. ஞானம் பிராந்தியினால் தோன்றிய பொருளைப் போக்க வல்லது; அல்லாமல் உண்மையான பொருளைப் போக்கத் திறமையுடையதாகாது பழுதையைக்கண்டு பாம்பென்று பயந்தவனுக்கு அது பழுதை என்பது திண்ணமாகத் தெரிந்தவுடன் அங்குத் தோன்றிய அரவமும் மறைந்துவிடுகிறது. அதுபோலவே அஞ்ஞானத் தால் தோன்றிய பிரபஞ்சம் "ஸர்வம் பிர்மம்" என்று அபரோக்ஷாநுபவம் உண்டான விடத்தில் மறைந்து விடும். ஆதலால் பிரபஞ்சம் என்பது பரிணாம மற்ற பிரமத்தின் விவர்த்தம் என்பது அத்வைதிகளின் கொள்கை.

**விவர்த்தவாதம்:-** இரண்டு பரமாணுக்கள் ஒன்று சேர்ந்து ஒரு த்வ்யணுகத்தை உண்டு பண்ணுகின்றன. மூன்று த்வ்யணுகம் ஒன்று சேர்ந்து ஒரு த்ர்யணுகத்தை உண்டாக்குகின்றன. இவ்விதம் உலகம் உண்டாயிற்று என்று ஆரம்ப வாதிகளான நையாயிகர் கூறுவர். இரண்டு பரமாணுக்கள் முழுமையும் சேருகின்றனவா? ஒருபகுதி மட்டும் சேருகின்றனவா? முழுமையும் சேர்ந்தால் பரமாணுவைவிட த்வ்யணுகம் எவ்வாறு பெரியதாக (அதிக பரிமாண முடைய தாக) ஆகமுடியும். ஒருபகுதிமட்டும் சேருகிறது எனின் பரமாணுவுக்குப் பகுதி உண்டா? உண்டாயின், அப்பகுதிக்கும் அவயவம் உண்டா? அப்படியாயின் அநவஸ்தை என்ற தோஷமுண்டாகும். பரமாணுவும் அநித்தியமாகும் என்று அம் மதத்தைக் குற்றமுடையதாக்கித் தங்கக்கட்டி தன்கட்டியான உருவத்தைவிட்டுத் தொடியாகவும் கடகமாகவும் ஆவதுபோல் பிரகிருதியின் பரிணாமம் உலகம் என்று சிலர்கூறுவர். அசேதனமாகிய பிரகிருதி பரிணாமத்தைத்தானாக அடையமுடியாது, ஆதலால் அபரிணாமியான பிர்மத்தின் விவர்த்தம் பிரபஞ்சம் என்று கூறுவர் அத்வைதிகள். அதாவது தன் ஸ்வரூபத்தை விடாமல் வேறு ரூபமாகக் காணப் படுதல். அதாவது கிளிஞ்சலின் ஸ்வரூபம் போகாமல் இருக்கும்போதே அதில் வெள்ளி தோன்றுகிறதன்றோ? அதுபோலவே பிரமம் பிரபஞ்சரூபமாகக் காணப் படுகிறது. இதையே பாமதி என்னும் உரை எழுதிய வாசஸ்பதி மிச்ரர் **प्रपञ्चोऽयं विवर्तः स्याद्ब्रह्मणोऽपरिणामिनः ।** என்றுகூறுகிறார்,

**க்யாதிகள் :-** கிளிஞ்சலில் வெள்ளி தோன்றுகிறதன்றோ? இது பிராந்தி என்று கூறுகிறோம். அங்கு உளதா? எனின் கடையிலுள்ள வெள்ளி தோன்றுகிறது. கண்ணிற்கும் கிளிஞ்சலுக்கும் தொடர்பு இருப்பதுபோல ஞான லக்ஷண பிரத்தியா ஸத்தியினால் (ஒருவகையான அலௌகிய சம்பந்தம் அது என்பர்) வெள்ளி தோன்றுகிறது. இது நையாயிகரின் கொள்கை, இது சாஸ்தி ரங்களில் அந்யதாக்யாதி எனப்படும். 'இது வெள்ளி' என்பது ஒரு ஞானமில்லை. இது என்பது கண்ணால் உண்டான பிரத்தியக்ஷஞானம். பிறகு வெள்ளி என்பது முன்னொருகாலத்தில் தான் அநுபவித்த வெள்ளியின் ஸ்மரணரூபமான ஞானம். இரண்டு ஞானங்களையும் ஒன்றெனக்கொண்டு ஜீவர்கள் மயங்குகிறார்கள், ஸ்மரணம் உண்டாக விஷயத்திற்கும் இந்திரியத்திற்கும் சம்பந்தம் வேண்டப் படுவதில்லை. இது மீமாம்ஸகரின் கொள்கை அக்யாதி எனப்படும். பஞ்சீ கரணம் என்ற ஒரு முறை வேதாந்தங்களில் கூறப்படும். அம்முறைப்படி வெள்ளியே எதிரிலுள்ள கிளிஞ்சலில் இருப்பதாகக் கொள்வர் சிலர். இது ஸத்கியாதி எனப்படும். இதில் அநிர்வசனீயமான (சத் என்றோ அசத் என்றோ கூறமுடியாத) வெள்ளி தோன்றுகிறது என்பது அத்வைதிகளின் கொள்கை. இதை அநிர்வசனீயக்யாதி என்பர், அசத் ஆயின் முயற்கோடுபோல பிரத்தியக்ஷம் ஆகமுடியாது. சத் ஆயின் அதிஷ்டானத்தின் (அதாவது கிளிஞ்சலின்) ஞானம் வந்தவுடன் பாதிக்கப்படமாட்டாது, இவ்வெள்ளியோ பிரத்தியக்ஷமாகி பாதிக்கப் படுகிறது. ஆதலால் அநிர்வசனீயம் எனக்கொள்ளப்பட்டது,

**பிரமாணம் :-** பிரத்தியக்ஷமொன்றுதான் பிரமாணமென்பர் சார்வாகர். அதோடு அனுமானத்தையும் சேர்த்து இரண்டென்பர் வைசேஷிகர். சாங்கியர் முதலியோர் சப்தத்தையும் சேர்த்து மூன்றென்பர், உபமானத்தோடு நான்கென நையாயிகரும் அர்த்தாபத்தியுடன் ஐந்தென பிரபாகரமீமாம்ஸகரும், அத்வைதிகளும் பாட்டர்களும் அனுபலப்தியுடன் சேர்த்து ஆறு பிரமாணம் என்றும் கூறுவர், **मानाधीना मेयसिद्धिः** என்ற வசனப்படி பிரமாணங்களைக் கொண்டுதான் விஷயங்கள் சித்திக்கவேண்டும். இப்பிரமாணங்களில் அனுபலப்தி என்பது அபாவ பிரத்தியக்ஷத்திற்காக ஏற்கப்பட்டது. இந்திரியங்களுக்கும் அபாவத்திற்கும் தொடர்பு இல்லை என்பது இவர்களது கொள்கை. நையாயிகர் அவ்விடத்தில் விசேஷணதா சம்பந்தம் என்று ஒன்றை ஏற்றுக்கொண்டு அனுபலப்திப் பிரா மணத்தை ஏற்றுக்கொள்ள மறுப்பர். அதேபோல வியதிரேக வியாத்தியை அங்கீகரித்து அர்த்தாபத்தியை மறுப்பர். இவ்விதம் எண்ணிக்கையில் மாறுபடுவதுபோலவே விருத்தி ஞானமுண்டாகும் முறைகளும் வேறுபடும். நான்குகரைகளால் கட்டுண்டு கிடக்கும் ஏரியிலுள்ள நீர் வாய்க்கால் வழியோடி கழனியில் பாய்ந்து கழனியின் வடிவம் பெறுவதுபோல, அந்தக்கரணத்தினுல் அவச்சின்னமான சைதன்யம் பொறிவழி யோடி புலனுருவமாகப் பரிணமிக்கிறது. இந்த இந்திரிய விருத்தியில் சைதான்யம் பிரதிபலக்கிறது. இது பிரத்யக்ஷம். என்று பலவகையால் விருத்தி ஞானமுண்டாகும் முறைகள் விவரிக்கப்படுகின்றன.

**சிருஷ்டி :-** சிருஷ்டியின் ஆரம்பகாலத்தில் பரமேச்வரன் படைக்கப் பெறும் உலகின் கர்மங்களை அனுசரித்து சொல்லொண்ணுச் சக்தி பொருந்திய மாயையைத் துணையாகக் கொண்டு பூதசூக்ஷ்மம் அல்லது தன்மாத்திரை எனப் படும் ஆகாசம் முதலிய ஐந்தையும் படைக்கிருர். சத்வகுணு திரேகத்தோடு கூடிய அவ்வைந்து பூதங்களாலும் தனித்தனியாக ஞானேந்திரியம் ஐந்தும், எல்லாம் ஒன்று சேர்ந்து மனம் சித்தம் புத்தி அகங்காரம் என்பனவும் படைக்கப் பெறுகின்றன. ரஜோ குணுதிக்யத்தோடு கூடி தனித்தனியாக ஐந்துகர்மேந்திரியங்களும் ஒன்று கூடி பிராண அபான வியான உதான சமானர்களும் உண்டாக்கப் பெறுகின்றன. தமோகுணுதிக்கியத்தோடு கூடிய தன் மாத்திரைகளால் பஞ்சீகிருதமான பஞ்சபூதங்கள் உண்டாகின்றன.

**பஞ்சீகரணம்:-** பிருதிவீபூதத்தை இரு கூறுகளாகச் செய்து ஒரு பாதியை நான்கு கூறுகளாகச் செய்து கொள்ள வேண்டும். இவ்வாறே மற்ற பூதங்களையும் செய்துகொள்ள வேண்டும். பிருதிவியின் நான்கு அரைக்கால் கூறுகளையும் பிருதிவியைத் தவிர மற்ற நான்கு பூதங்களின் அரைக்கூறுகளில் சேர்க்க வேண்டும். அவ்வாறே மற்ற பூதங்களின் அரைக்கால் கூறுகளையும், அதைத்தவிர மற்றைய பூதங்களின் அரைக்கூறுகளில் சேர்க்கவேண்டும் இவ்விதம் செய்வதால் பிருதிவி அரைக்கூறும் மற்றைய பூதங்களின் நான்கு

அரைக்கால் கூறுகளும் சேர்ந்து பிருதிவீ பூதம் எனப்படும். மற்ற பூதங்களும் இவ்வாறே கொள்ளப்படும். மிகுதிபற்றி பிருதிவி ஜலம் தேஜஸ் வாயு ஆகாசம் என்று தனித்தனியாகச் சொல்லப்படும். இவ்விதம் செய்யப்பட்டதற்கு **तासां त्रिवृतं त्रिवृतमेकैकां करवाणि** என்ற சாந்தோகிய உபநிஷத் வாக்கியம் பிரமாணக்காட்டப்படுகிறது.

பரலோகம் செல்லுதற்கும், வேறு உடலில் செல்லுவதற்கும் ஏற்றதாய் மோக்ஷமடையும் வரையில் இருப்பதுமான லிங்க சரீரம், பஞ்ச பிராணன் ஞானேந்திரிய கர்மேந்திரியங்கள் மனோபுத்தி இவைகளுடன் கூடியது. அபஞ்சீகிருத சூக்ஷ்ம பூதங்களால் உண்டானமையால் இந்த லிங்க சரீரம் பிரத்தியக்ஷமாவதில்லை. பஞ்சதன்மாத்திரை, லிங்க சரீரம், ஹிரண்ய கர்ப்பனின் ஸ்தூலதேகம் இவைகளில் ஈசன் ஸாக்ஷாத் கர்த்தாவாகிறான். மற்றவைகளில் ஹிரண்ய கர்ப்பன் மூலமாக கர்த்தா ஆகிறான்.

**பிரளயம் :-** நித்தியம், நைமித்திகம், பிராகிருதம். ஆத்யந்திகம் என் நான்குவகையில் எண்ணப்படும். தினந்தோறும் ஜீவன் சுஷுப்தி அவஸ்தையை அடைகிறான். அப்பொழுது லிங்க சரீரம் ஸம்ஸ்காரரூபமாக இருக்கிறது. மேலும் அந்தக்கரணத்திற்கு இரண்டு சக்திகள் உண்டு. சுஷுப்தி காலத்தில் ஞானசக்தியுடன் கூடிய அந்தக்கரணம் நாசமடையினும் கிரியா சக்தியுடன்கூடிய அந்தக் கரணம் இருப்பதால் சுவாஸம் முதலியன தென்படுகின்றன. இது தினந்தோறும் ஏற்படுவதனால் நித்திய பிரளயம் எனப்படும். காரிய பிரமாவின் ஒவ்வொரு நாளின் இறுதியிலும் உண்டாகும் பிரளயம் நைமித்திகம். காரியப் பிரமாவின் முடிவில் அந்த லோகத்தில் வசிக்கும் எல்லோருடனும் பூத பௌதிகங்களுடன் பிரகிருதியில் லயம் உண்டாகிறது. இது பிரகிருதியில் லயமடைவதால் பிராகிருதப் பிரளயம் எனப்படும். அஹம் பிர்மாஸ்மி என்று அபரோக்ஷஞானம் ஏற்பட்டு சகலவிதமான பந்தங்களும் நீங்கி பூதங்களும் பௌதிகங்களும் லயமடைவது ஆத்யந்திக பிரளயம் எனப்படும். இதுவே கடைசி, இதன் பிறகு ஸம்ஸாரநிலை உண்டாவதில்லை. ஆதலால் ஆத்யந்திகம் எனப்பெயர். சிருஷ்டிக் கிரமத்திற்கு மாறாக லயக்கிரமம் கொள்ளப்படும். காரணம் இல்லாமல் காரியம் இருக்காதன்றோ, ஆதலால் பௌதிகங்கள் பூதங்களிலும், பூதங்கள் தன்மாத்திரையிலும், அவை ஜீவாஹங்காரத்திலும் என்ற முறையில் ஏற்படும்.

**சாஸ்திரங்கள் :-** வியாஸரின் பிர்ம சூத்திரம், உபநிஷத்துக்கள், பகவத் கீதை இவைகளும் இவைகளுக்கு சங்கராசாரியர் எழுதிய பாஷ்யங்களும் அதிகரண பிரஸ்தானம் எனப்படும் இவற்றில் அத்வைத மதம் விரிவாகக் கூறப் பட்டிருக்கிறது. அத்வைத சித்தி, லகுசந்திரிகா (பிர்மா நந்தீயம்) முதலியவற்றில்

பிறமத கண்டனங்களும் அத்வைத மதத்தில் பிறரால் கூறப்பட்ட தோஷங்களுக்கு பரிஹாரமும் கூறப்படுவதால் வாத பிரஸ்தானம் என்றும் வழங்கப்படும். பஞ்சதசி, ஸர்வ வேதாந்த சாரசங்கிரகம், வேதாந்த பரிபாஷை முதலிய பிரகரண நூல்கள் மேற்கூறப்பட்ட இரண்டு பிரஸ்தானங்களையும் அனுசரித்து எளிய நடையில் விஷயங்களை பாகுபாடுசெய்து எழுந்துள்ளன. சங்கராசாரியரின் சூத்திர பாஷ்யத்திற்கு வாசஸ்பதி மிஸ்ரர் இயற்றிய பாமதி என்னும் உரையும், பாமதிக்கு கல்பதரு என்னும் உரையும், கல்பதருவிற்கு அப்பைய தீக்ஷிதரால் எழுதப்பட்ட பரிமளம் என்ற உரையும் உள்ளன. இவைகளுக்கு பாமதி பிரஸ்தானம் என்று பெயர். சங்கராசாரியரின் சிஷ்யர்களில் முதல்வரான பத்மபாதர் பாஷ்யத்திற்கு ஓர் உரை எழுதியுள்ளார். அது ஐந்துபாதம் வரையில்தான் இப்பொழுது இருக்கிறது. ஆதலால் அதற்கு பஞ்சபாதிகா என்றுபெயர். அதற்கு விவரணம் என்ற வியாக்யானமும் அதற்கு தத்வதீபனம் என்ற உரையும் உள்ளன. இவை விவரண பிரஸ்தானம் எனப்படும். இவ்விருபெரும் உரையாசிரியர்களின் வேறுபாட்டினால் சிற்சில கொள்கைகள் வேறுபடக் காண்கிறோம். வியாஸ சூத்திரம், ஸமன்வயம், அவிரோதம், சாதனம், பலன் என்ற பெயருடன் நான்கு அத்யாயங்களாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது. ஒவ்வொரு அத்தியாயத்திற்கும் நான்கு பாதங்கள் உண்டு.

உபநிஷத்துக்களில் வரும் வாக்கியங்களை எடுத்து அதற்கு உண்டாகும் ஐயங்களையும் பூர்வபக்ஷம் சித்தாந்தம் அவைகளுக்கு வேண்டிய யுக்தி இவைகளைக் கூறி ஒவ்வொரு அதிகரணமாக விசாரம் செய்யப்பட்டிருக்கிறது. முதற்பாதத்தில் தெளிவான பிர்மத்தைப்பற்றிய லிங்கமுடைய (அடையாள) வாக்கியங்கள் பிரமத்தினிடத்தில் பொருந்துகின்றன என்பது காட்டப்படுகிறது. இரண்டாம் பாதத்தில் உபாசனைக்குரிய தெளிவில்லாத பிர்மலிங்கமுடைய வாக்கியங்கள் பிரமத்தினிடம் பொருந்துமாறு காட்டப்படுகிறது. மூன்றும் பாதத்தில் ஞேயமான (அறியத்தக்க) பிரமலிங்கமுடைய வாக்யங்கள் விசாரிக்கப்படுகின்றன. நான்காம் பாதத்தில் ஐயப்பாடுடைய வாக்கியங்கள் பொருந்துமுறை காட்டப்படுகிறது. இவ்விதம் முதல் அத்தியாயத்தில் வாக்கியங்கள் பிரமத்தினிடம் ஸமன்வயம் அடைகின்றன (பொருந்துகின்றது) என்பது காட்டப்படுகின்றமையால் ஸமன்வய அத்தியாயம் என்று பெயர். பிறமதத்தினரால் காட்டப்படும் முரண்பாடுகளை பரிஹாரம் செய்வதால் இரண்டாம் அத்தியாயத்திற்கு அவிரோதாத்தியாயம் என்று பெயர். முதற்பாதத்தில் ஸ்மிருதிகளின் விரோத பரிஹாரம், இரண்டாம் பாதத்தில் பிறமதத்திலுள்ள தோஷங்கள், மூன்றும் பாதத்தில் பூதங்கள் ஜீவன் இவர்களின் ஸ்வரூபவிசாரம், நான்காம் பாதத்தில் லிங்க சரீரத்தைப்பற்றி விசாரம் இவைகள் நன்கு விரித்துரைக்கப்படுகின்றன. மூன்றும் அத்தியாயத்தில், ஜீவனுடைய போக்குவரவுகள், தத், துவம், என்ற பதங்களின் அர்த்த விசாரம் பல உபநிஷத்துக்களில் கூறப்பட்ட உபாசனைகளில் எந்த குணங்களை எங்கெங்கு

சேர்க்கவேண்டும், ஞானேத்பத்திக்கு அந்தரங்க சாதனங்கள், புறச்சாதனங்கள் முறையே நான்கு பாதங்களில் விரைத்துரைக்கப் படுகின்றன, பலாத்தியாயம் என்ற நான்காம் அத்தியாயத்தில், ஜீவன் முக்தி, மரணம் மரணத்தில் செல்லும் தேவயானம், பிதிருயானம் ஸகுண உபாஸகர் நிர்குண உபாசகர்களின் கதிகள், பிர்மலோக பிராப்தி. பிர்ம பிராப்தி முதலியன கூறப்படுகின்றன.

**கர்மங்கள் :-** காம்ய கர்மங்களும் நைமித்திக கர்மங்களும் அவற்றிற்குரிய பயனைக்கொடுக்கும், நித்தியகர்மங்களுக்குப் பயன் இல்லை; அல்லது பாபம் தோன்றாமையே பயன் என்பர். அவைகளுக்கும் பிர்மலோகம் பயனாகும் என்பர் சிலர். அவைகளுக்குப் பயன் இருக்குமானால் அப்பயனை விரும்பாதவர் அதனைச் செய்ய வேண்டுவதில்லை எனின் அவ்வாறன்று. நித்தியகன்மங்களால் மனம் சுத்தியடையும்; அதனால் குருவின் உபதேசம் ஏற்படுங்காலத்தில் நிர்மலமான மனதில் ஞானம் எளிதில் உண்டாம், உபாசனை முதலியவைகளுடன் பயனைக்கருதாமல் கருமங்கள் செய்யப்படுமாயின் பிரமலோகமடைவான். அங்கு அபரோக்ஷஞானம் உண்டாகி காரியபிரமாவின் முடிவில் முக்தியை அடைவன். ஆதலால் நித்திய கன்மங்கள் ஞானம் உண்டாவதற்கு புறத்தேயுள்ள அங்கங்கள் ஆகும். சமம், தமம், பொறுமை முதலியன அகத்தேயுள்ள (அந்தரங்கமான) அங்கங்கள். ஞானம் உண்டாக கன்மங்கள் விரும்பப்படுகின்றனவே யல்லாமல் ஞானத்தினின்றும் பயன்பெற அவை வேண்டப்படுவதில்லை. அதனாற்றான் **ब्राह्मणा विविदिषन्ति यज्ञेन दानेन** (பிராமணர்கள் யாகம் தானம் முதலிய வற்றால் அறிய விரும்புகின்றனர்) என்று ஞானேச்சைக்கு அவை காரணமாகக் கூறப்படுகின்றன.

பிராரப்தம் ஆகாமி, ஸஞ்சிதம் எனக் கன்மம் மூவகைப்படும். ஞானக்கினி பின்னது இரண்டையும் எரித்துவிடும். பிராரப்த கன்மமோ எய்த அம்பை ஒத்தது. எய்த அம்பு லக்ஷயத்தை அடையும்வரையில் இடையில் நிற்காது. அதுபோல பயன்கொடுக்க ஆரம்பித்த கன்மமும் கன்மம் முடியும்வரை பயனைக் கொடுத்தே தீரும். கன்மங்களுக்கு காரணமான அவித்யை நாசமடையும்போது கன்மங்களும் நாசமடையும். ஞானமடைந்தவனுக்கு நான் கர்த்தா, இதனால் இதைச் செய்கிறேன் என்ற அறிவுகள் ஒழிந்தபடியால் அவன் முந்திய வாசனையினால் எதையாவது செய்திடினும் அவை அவனிடம் அணுகா. கர்த்தா, போக்தா இது சாதனம் என்ற ஞானம் உள்ளவனுக்கு அல்லவா கன்மங்கள். ஸர்வம் பிர்ம என்ற அபரோக்ஷ ஞானமடைந்தவன் தன்னிலும் வேறாகிய ஒன்றைக் காணாமையால் கன்மங்கள் அவனைவிட்டு ஒழியும்.

**பிரமம் :-** **सत्यं ज्ञानमनन्तं ब्रह्म** என்னும் ஸ்ரூப லக்ஷணமுடையது. மூன்றுவிதமான பரிச்சேதம் அற்றது. பானை பானையாக இருக்கிறதேயல்லாது யானையாக இல்லை. ஒரு காலத்தில் ஒரு தேசத்தில்தான் உள்ளது. வேறு காலத்

திலும் வேறு தேசத்திலும் இல்லை. பிரமமோ எக்காலத்திலும் எல்லா தேசத்திலும் எல்லா வஸ்து ரூபமாகவும் இருக்கிறது. பிரபஞ்சத்தின் ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களுக்குக் காரணமாகிறது. இது பிரமத்தின் தடஸ்த லக்ஷணம். அவரவர்களின் புண்ய பாபங்களை அனுசரித்து ஸ்வர்க்க நரகாதிகளையும் தனுகரணங்களை உண்டுபண்ணுகிறது. பாரமார்த்திக ஸத்தை உடையது.

ஸத்தை பாரமார்த்திகம் வியாவஹாரிகம், பிராதி பாஸிகம் என மூவகைப்படும். எக்காலத்திலும் இருத்தல் பாரமார்த்திகஸத்தை. வியவஹாரம் உள்ளவரையில் இருந்து **तत्त्वमसि, अहं ब्रह्मास्मि ब्रह्मैवेदं सर्वम्** என்பது முதலிய மஹா வாக்கியங்களின் அபரோக்ஷ ஞானமுண்டானவுடன் பாதிக்கப்படுவது வியாவஹாரிக ஸத்தை எனப்படும், கிளிஞ்சலில் வெள்ளி தோன்றும் காலத்தில்மட்டும் இருப்பதால் பிராதிபாஸிக ஸத்தை என்று கூறப்படும். பிர்ம அபரோக்ஷ ஞானத்தால் வியாவஹாரிக ஸத்தை பாதிக்கப்பட்டபோதிலும் பிராப்த கன்மங்களின் தொடர்பால் ஜீவன் முத்தனாக இருந்து அக்கர்மங்கள் தொலைந்தபின் விதேககைவல்யமடைவன்.

**ஜீவனும் ஈசனும் :-** ஜீவன் புர்யஷ்டகத்துடன் கூடியவன், கர்மாவையனுசரித்து லிங்க சரீரத்தோடு வேறுதேகங்களுக்கும் உலகங்களுக்கும் செல்பவன். ஜீவனுடைய ஸ்வரூபத்தில் இரண்டுவிதமான அபிப்பிராயங்கள் உள்ளன. ஜீவன் ஈசன் இருவருக்கும் பொதுவான சைதன்யம் பிம்பம் எனப்படும். மாயையில் அதன் பிரதிபிம்பம் ஈசன் எனவும் அந்தக்கரணத்தில் அதன் பிரதிபிமபம் ஜீவன் எனவும் சிலர் கூறுவர். உருவற்றது பிம்பசைதன்யம், இதற்கு எவ்வாறு பிரதிபிம்பம் உண்டாகும், உருவமுடைய வஸ்துவன்றோ பிரதிபலிக்கும் எனின் அது பொருந்தாது. குணத்தில் குணம் கிடையாது ஆதலின் உருவத்திற்கு உருவமில்லை என்று நையாயிகர் சொல்லுகின்றனர். அவ்விதம் ரூபமற்ற ரூபம் பிரதிபலிக்கவில்லையா? மேலும் ஆகாயத்திற்கு உருவம் இல்லாவிடினும் பாலர்கள் நீரில் ஆகாயம் பிரதிபிம்பமடைவதாகக் கூறுகின்றார்கள் அதுபோல் பிரமமும் பிரதிபலிக்கலாம் உருமற்றது பிரதிபலிக்காது என்பது திரவியத்திற்குத்தான். பிரமம் திரவியமில்லை. ஆதலால் ரூபமற்றதாயினும் மாயையில் பிரதிபலிக்கலாம். இதற்கு **कार्योपाधिरयं जीवः करणोपाधिरीश्वरः** என்னும் வாக்கியத்தை பிரமாணமாகக் காட்டுகின்றனர். பிரதிபிம்பமடைய உபாதியாகவுள்ள அவித்யை வியாபகமாக இருத்தலின் அதில் பிரதிபலித்த சைதன்யமாகிய ஈசனும் வியாபகம். அந்தக்கரணம் பரிச்சின்னம் (அளவுக்கடங்கியது). அதில் பிரதிபலித்தசைதன்யம் ஜீவன் பரிச்சின்னமானவனே. இந்த பிரதிபிம்ப வாதத்தில் ஈசனும் பிரதிபிம்பம் ஆதலால் அவித்தையிலுள்ள தோஷம், அதில்பிரதிபலித்த ஈசனிடமும் ஏற்படும். அந்தக்கரண தோஷங்கள் ஜீவனிடத்தில் ஏற்படுகின்றன அல்லவா! அதுபோலவே ஈசனிடத்திலும் அவித்தையின் தோஷங்கள் உண்டாகும். ஆதலால் ஈசன்

ஜீவன்ஸ்வரூப விஷயத்தில் மேற்கூறிய பிரதிபிம்பவாதம் சரியில்லை எனச் சிலர் மறுப்பார். ஆதலால் பிர்பபூதமாகிய சைதன்யம் ஈசன். அந்தகரணத்தில் பிரதி பலித்த சைதன்யம் ஜீவன். ஏக ஜீவவாதத்தில் அவித்யை ஜீவனுக்கு உபாதி யாகும். அந்தக்கரணம் அநேக ஜீவவாதத்தில் உபாதியாகும் குளத்தில் சூரியன் பிரதிபலிக்கிறன், அங்கு பிம்பத்திற்கும் பிரதிபிம்பத்திற்கும், எவ்வாறு அபேதம் சொல்லப்படுகிறதோ அதுபோல இர்மதத்தில் ஜீவ பிர்ம்ம அபேதம். உபாதி நீங்கிஞல் ஒன்றேயாகிவிடும்.

அவச்சேதவாதம் என்பது மற்ருென்று. சைதன்யத்திற்கு மாயை விசேஷணமாக இருப்பின் ஈசம் எனவும், மாயை உபாதியாக இருந்தால் ஈசஸாக்ஷி எனவும், அந்தக்கரணம் விசேஷணமாயிருப்பின் ஜீவன் எனவும், அது உபாதியாக இருந்தால் ஜீவசாக்ஷி எனவும் கூறுவர். காரிய காலத்தில் இருந்து வேருென்றி னின்றும் பிரிக்கும் தன்மையுடையனவாய் காரியத்தில் கலந்து கொள்வது விசேஷணம் எனப்படும். காரியகாலத்தில் வேருென்றினின்றும் பிரிக்கும் தன்மை யுடையதாக காரியத்தில் கலந்து கொள்ளாதிருத்தல் உபாதி எனப்படும். வியாபக மான மாயையை விசேஷணமாகக்கொண்ட சைதன்யமாகிய ஈசனும் வியாபகம். மாயை ஒன்று. ஈசன் ஒருவனே, அம்மாயையில் சத்துவகுணம் மிதந்திருந்தால் ஈசன் அக்காலத்தில் விஷ்ணு நாராயணன் என்ற சப்தங்களாற் கூறப்படுவர், அப் பொழுது உள்ள தொழில் காத்தலாகும். ரஜோகுணம் மேலாக மாயையிருப்பின் படைக்கும் தொழிலினையுடைய பிரமன் எனவும், தமோகுணம் மிகுதியாக இருந் தால் ஸம்ஹாரத்தொழிலினையுடைய ருத்திரன் எனவும். கூறப்படும். விசேஷண மாகவுள்ள அந்தக்கரணம் பல. பரிச்சின்னமானவை, ஆதலால் அவனும் அங்கனம் கூறப்படுவன். உண்மையில் அவனது ஸ்வரூபம் அகண்ட ஸச்சிதானந்த ரூபமே.

ஜீவனுக்கு சாக்கிரம் ஸ்வப்பனம் சுஷுப்தி என்று மூன்று நிலைகள் உண்டு. இந்திரியங்களால் உண்டான விருத்திஞானமுடைய நிலை சாக்கிரம், மற்ற நிலைகளில் இந்திரியங்களால் விருத்தி உண்டாவதில்லை அந்தக்கரணத்தின் விருத் தியினுல் உண்டாகும் ஞானமுடைய அவஸ்தை ஸ்வப்பனம் சுழுத்தியிலோ அந்தக்கரணத்தில் கிரியாசத்தி மட்டுமே இருப்பதால் விருத்தி ஞானம் உண்டா வதில்லை. ஸாக்ஷிஞானமே இருக்கிறது. காலையில் எழுந்த புருஷன் ஒன்றும் அறியாமல் நன்ருகத் தூங்கினேன் என்று தனது அநுபவத்தை நினைக்கிருன். அப்பொழுது ஸாக்ஷி ரூபமாக இருந்து அநுபவித்த ஜீவன் இப்பொழுது ஸ்மரிக் கிருன்.

**மாயா:-** அவித்யா, மாயா இரண்டும் ஒன்றே. ஆயினும் சிலர் மாயை தன்னுடைய ஆச்ரயத்திற்கு மயக்கமுண்டு பண்ணுமல் காத்தாவின் விருப்பத்தை அநுசரித்தது அவ்வித்யையோ அவ்விதமில்லையென வேறுபாடு காட்டுகின்றனர்.

எனினும் அநிர்வசனீயமாக இருந்து உண்மையை யுணரத் தடங்கலாயிருத்தல் இரண்டிலும் உள்ளதே. உண்மைக்கு மாறுபாடாகக் கொள்ளும் படி இரண்டும் செய்கின்றன ஆசிரியர்கள் ஆங்காங்கு ஒன்றெனவும் இரண்டெனவும் இரண்டு விதமாகவும் கூறுகின்றனர் மாயை ஒன்றேயாயினும் அதன் சக்திகள் பல. **इन्द्रो मायाभिः** என்னுமிடத்தில் பன்மையில் உபயோகிக்கப் பட்டிருப்பது மாயையின் சத்தியை நோக்கியே ஆகும் அவித்யை இம்மதத்தினரால் அத்யாஸம் எனப்படும் **अतस्मिन् तद्बुद्धिरध्यासः** (அதல்லாததில் அதுவென்ற புத்தி) என்றும் கூறுவர்.

**அத்வைதிகளின் சில கொள்கைகள்:-** அஞ்ஞானம் என்பது பாவ ரூபமான பொருளேயல்லாது நையாயிகரைப் போல ஞானமின்மை என்று அபாவ ரூபமில்லை. ஞான்ம் ஸ்வத: பிராமணம் அதாவது ஞானம் உண்டாவதற்கு எந்தக் காரணங்கள் வேண்டப்படுகின்றனவோ அவைகளைக் காட்டிலும் வேறு காரணங்கள் பிராமண்யமுண்டாக வேண்டப்படுவதில்லை நையாயிகர் பரத: பிராமாண்யம் என்பர். ஜீவனுக்கும் பிரமத்திற்கும் அபேதத்தைப் போதிக்கும் வாக்கியங்கள் மஹாவாக்கியம் எனப்படும். மகாவாக்கியங்கள் அகண்டார்த்த போதகம் என்பர் அதாவது **सोऽयं देवदत्तः** [அங்கு பார்த்த, இங்கே எதிரிலுள்ள தேவதத்தன்என்ற விடத்தில் முரண்பாடாகவுள்ள இருவிசேஷணபாகங்களையும் விட்டு தேவதத்தஸ்வரூபம் போதமாகிறது. அதுபோல் **तत्त्वमसि** இங்கு சிற்றறி வுள்ள கட்டுண்டு கிடக்கிற நீ ஸர்வவியாபகமான எல்லாமுணர்ந்த ஈசன் ஆகிறாய் என்ற விடத்தில் முரண்பாடுள்ள விசேஷமாகவுள்ள பாகங்களை ஒழித்து ஜீவ சைதன்யமும் பிர்ம்மசைதன்யமும் ஒன்றே என்ற சைதன்ய ஸ்வரூபத்தை உணர்த்துகிறது. காமம், குரோதம், லோபம், லஜ்ஜை முதலியன அந்த கரணத்தில் விருத்தி யாகும். குடம், குடை, என இப்பொழுது ஞானமும் அந்தக்கரண விருத்தியே. ஆதலால் விருத்தி ஞானம் என்று விவஹாரம் செய்யப் படுகிறது. ஸத்தை மூன்று விதமாகக் கூறப்படும்.

உபநிஷத்து வாக்யங்களில் கூறப்பட்ட விஷயங்களுக்கு வேறுபட உணர்த்தும் அனுமானங்களும் பிரத்யக்ஷமும் பாதிக்கப்படும். அலௌகிகமான பிர்மஸ்வரூப விஷயத்தில் பிரத்யக்ஷமும், புத்தியின் திறமைக்கேற்றவாறு பற்பல விதமாகக்கொள்ளக்கூடிய அனுமானமும் முடிவான பிரமாணமாகாது. வேத அவிரோதமான தர்க்கங்களை வரவேற்றுப் போற்றுவர். விவஹாரகாலத்தில் பெரும்பாலும் பாட்டர்களின் (மீமாம்ஸகரில் ஒருவகையினர்) வழியைப் பின் பற்றுவர். எல்லாமதங்களையும் அவரரவர்களுடைய நிலைக்கேற்ப பிரமாணம் என்றே கூறுவர். நிர்குணம் நிஷ்கிரியம் பிர்ம்ம. ஆதலால் இது பிரமம் என்று சுட்டிக்காட்ட முடியாது. இது இல்லை. அது இல்லை என்று மற்றவைகளின்

வியாவிருத்தியினாலேயே (அன்மையை போதிப்பதனாலேயே) உணர்த்தப் படுகிறது. காரணத்தில் சூக்ஷ்ம ரூபமாகக் காரியம் உற்பத்தி முன் உள்ளது என்று ஸத்காரியவாதம் கூறுவர்.

**ஞானமும் அதன்சாதனமும்:** இம்மை மறுமை போகங்களில் வைராக்யம் ஏற்படவேண்டும். இது போகங்களின் தன்மையையும் அது உண்டாகும் விதத்தையும் அழியும் தன்மையையும் நன்கு ஆராய்ந்தால் ஏற்படக் கூடியது. ஆராய்ந்து அறிந்தவர்களும் விரும்புகின்றனர், அதற்கு அவர்களது கர்மபந்தமே காரணம். இது இஹாமுத்திர போகவிராகம் எனப்படும். இரண்டாவதாகச் சில நித்யமாக உள்ளன. சில அநித்யம். சில உண்மையாகவுள்ளன. சில அசத்யமானவை, உண்மையான நித்யமான வஸ்துவை அடையவேண்டும் என்று எண்ணமுண்டாவது நித்யாநித்யவஸ்து விவேகம் எனப்படும் வெளியி லுள்ள இந்திரியங்களின் அடக்கம் 1. சமம் என்றும் உள்ளேயுள்ள பொறிகளின் அடக்கம். 2. தமம் என்னும் கூறப்படும். சீதோஷ்ணம் முதலியவற்றைப் பொறுக்கும் தன்மை. 3. திதிக்ஷை எனப்படும். மனம் ஒருமுனைப்படுதல் 4. சமாதானம். கலக்கமின்றியிருத்தல். 5. உபரதி, வேதவேதாந்த குருவாக்யங்களில் நம்பிக்கை. 6. சிரத்தை இவ்வாறும் (சமம்முதலிய சாதனசம்பத்) சாதனங்களில் மூன்றுவதாகக் கூறுவர். உபரதி என்றால் ஸன்யாசம் என்று சிலர். இல்வாழ்க்கையில் உள்ளவனுக்கும் கலக்கமின்மை உண்டாகலாம் ஆதலின் இல்வாழ்கையில் உள்ளோரும் வேதாந்த சிரவணதிகளில் ஈடுபடலாம். ஜனகர் முதலியோர் இல்வாழ்க்கையில் இருந்தே வேதாந்த சிரவணம் செய்ததாகக் காணப் படுகிறது. என்பது வாசஸ்பதி மிச்ரரின் கொள்கை. மோக்ஷத்தை அடைய வேண்டும் என்ற விருப்பம் நான்காவது சாதனம் இந்த நான்கு சாதனங்களையு மடைந்தோர் வேதாந்த சிரவணம் செய்யத்தகுந்தவர் ஆவர்.

பயனை விரும்பாமல் செய்த கர்மங்களின் பயனாக மனத்தில் சுத்தி உண்டாகி குருவின் உபதேசம் ஏற்பட்ட காலத்தில் உபநிஷத்தின் பொருள் தெளிவாக உணரப்படுகிறது, குருவினிடம் வேதாந்தம் கேட்டல் சிரவணம் எனப்படும். கேட்டபொருளில் ஏற்படும் ஐயங்களை ஒத்த யுத்திகளைக்கொண்டு நீக்கி நன்கு தீர்மானித்தல் மனனம் எனப்படும். சலனமின்றி ஆத்மவிஷயத்தில் ஐயமறத் தெரிந்த பொருளைச் (அஃதாவது சர்வம் பிர்ம அஹம் பிர்மாஸ்மி) சிந்தித்தல் நிதித்யாஸனம் எனப்படும். இதில் அபரோக்ஷபிர்மாநுபவத்திற்கு நிதித்யாஸனம் நேர்காரணம் மனனம் நிதித்யாஸனத்திற்கும் மனனத்திற்கு சிரவணமும் காரணம் என்பர், இது வாசஸ்பதி மிச்ரரின் கொள்கை. விவரணாசாரியர் சிரவணமே பிரதான காரணம். சிரவணவத்திற்குப் பிறகு உண்டான போதிலும் மனனமும் நிதித்யாஸனமும் சிரவணத்திற்கு அங்கம் என்பர்.

**மோக்ஷம்:-** நித்யமாய் ஆனந்தரூபமாய் உள்ளது. நித்தியமாயின் இப்பொழுது கூட இருக்கிறதே நாம் ஏன் துன்பமடைகிறோம் எனில் கூறுவோம்- கழுத்தில் சங்கிலியை போட்டுக் கொண்டு இருக்கிறோம். சிறிது நேரம் வேறு வேலைகளில் ஈடுபட்டிருந்த நாம் அதை மறந்து அது எங்கே என்று சிலசமயம் தேடுகிறோம். நண்பன் "உன் கழுத்திலிருக்கிறது அது" என்று கூறவும் அதை யறிந்த நாம் மட்டற்ற மகிழ்ச்சியடைகிறோம். இப்பொழுது புதிதாக ஒன்றையும் நாம் பெற்றோமில்லை. அதுபோலவே பாசபந்தங்களால் நித்திய ஆனந்தத்தை உணராமல் இருக்கிறோம். ஞானத்தினால் அஞ்ஞானம் நீங்கவே, அஞ்ஞானத்தால் தோன்றியிருந்த பந்தங்கள் நீங்கும். ஆனந்தம் விளங்கும். ஆயின் இப்பொழுது பலர் வேதாந்த சிரவணம் செய்து "ஸர்வம் பிர்ம" என்று அறிந்திருப்பினும் ஏன் அவர்கள் துன்பப் படுகின்றனர் எனின், அவர்களுக்கு ஸ்வாநுபம் உண்டாகவில்லை. ஒருவனுக்கு பித்ததோஷம் உண்டாயிருக்கிறது. அவனுக்கு சர்க்கரை இனிக்கும் என்பது தெரியும். ஆயினும் அவன் சர்க்கரையை வாயில் போட்டுக் கொண்டு கசப்பதாகச் சொல்லித் துப்புகிறான். அவனுக்கு கேட்ட அல்லது முன்னறிந்த ஞானம் இருப்பினும் ஸ்வாநுபவமில்லை. இது போலவே ஈண்டும் கொள்க. ஒருவனுக்கு திசைகளை பற்றிய பிராந்தி உண்டாகிறது. அவனிடம் இது கிழக்கு என்று கூறினாலும் அவன் எங்கள் ஊரில் இதுவன்றே கிழக்கு என்று வேறு ஒரு திசையைக் காண்பிக்கிறான். அவனுக்கும் ஸ்வாநுபவம் இல்லை. ஆதலால் சிரவணமனன நிதித்யாஸனங்களால் அபரோக்ஷ அநுபவம் அடைந்தவர் தான் நித்யானந்தப் பேற்றை அடைவர்.

---

# வைணவம்

வைஷ்ணவம் தமிழ்நாட்டின் பழைய நெறி. தமிழ்நாட்டில் பழைய மக்கள் வைஷ்ணவத்தையும் சைவத்தையுமே இருபெருஞ்சமயங்களாக மேற் கொண்டிருந்தனர்.

'மாயோன்மேய காடுறை உலகம்' என்று வைணவத்தைப்பற்றித் தொல்காப்பியர் குறிக்கின்றார்.

'மல்லரை மறம்சாய்த்த மால்போல்' என்று விஷ்ணுவின்பெருமையைக் கலித்தொகை காட்டுகிறது.

'தாம்வீழ்வார் மென்தோள் துயிலின் இனிதுகொல்
தாமரைக்கண்ணான் உலகு'

என்று ஸ்ரீ வைஷ்ணவர்கள் அடையும்மோட்ச உலகத்தைத் திருக்குறள் சொல்கின்றது.

'மாநிலம் சேவடியாகத் தூநீர்' என்று தொடங்கும் நற்றிணைக் கடவுள் வாழ்த்து ஸ்ரீ விஷ்ணுவின் திருக்கோலத்தைக் கூறுகின்றது.

திருமாலிருஞ்சோலை அழகர் மலைச்சிறப்பைக் கடலுள்மாய்ந்த இளம் பெருவழுதி பரிபாடலில் பாடலில் பாங்குபெறப் பாடுகின்றார்.

பெருந்தேவனார் என்ற ஒரு புலவர் விஷ்ணு சம்பந்தமுடைய இதிகாசத் தைக் காவியமாகப் பாடிப் பாரதம்பாடிய பெருந்தேவனார் என்று அடையாளம் வழங்கப்பெற்றார்

இவற்றையெல்லாம் ஒருசேர நோக்குங்கால், வைணவம் ஒரு தொல்பெருஞ் சமயமென்பதும், அது தமிழ்மக்களால் பெரிதும் போற்றி மேற்கொள்ளப் பட்டதென்பதும், அப்பெருஞ் சமயம் விஷ்ணுவைத் தலைவராகக் கொண்டதென்பதும் இனிது பெறப்படும்.

பிறப்பில் உயர்வு தாழ்வு கற்பியாமல் பண்டைக்காலம் சிறப்பில் உயர்வு தாழ்வு கண்டது. இதுவே வைஷ்ணவ சமயத்தின் அடிப்படை எனலாம்.

இறை வழிபாட்டிற்குப் புறம்பானது சாதி என்பதனைப் பிற்காலத்து அவதரித்த ஆழ்வாரான பெரியாழ்வார்,

"வாழாள்பட்டு நின்றீர் உள்ளீரேல்வந்து
மண்ணும் மணமும் கொண்மின்"

"தொண்டக் குலத்திலுள்ளீர் வந்தடிதொழுது
ஆயிரம் நாமம் சொல்லிப்

"பண்டைக் குலத்தைத் தவிர்ந்து பல்லாண்டு
பல்லாயிரத் தாண்டென்மினே"

என்று விளக்கியுள்ளார்.

உள்ளத்தில் அன்பு நிலவும்போது ஒருமையுணர்வு அற்றுப் பன்மை யுணர்வு வற்றிவிடும் என்பது இச்சமயத்தின் உட்கிடை.

"பிறவியின் உயர்வு தாழ்வுகளைப்பற்றி நான் கவனிப்பதில்லை. எவன் என்னைத் தியானிக்கின்றானோ அவன் விஷயத்தில் என்னைக்காட்டிலும் உயர்ந்தவனிடத்தில்போல இருப்பேன்" என்பது திருமால் திருமொழி.

பண்டு, ஜீவனுக்கும் தெய்வத்துக்குமுள்ள சம்பந்தத்தை அத்வைதம், துவைதம், விசிஷ்டாத்வைதம் என்று மூவகையாகப் பிரித்து உணர்த்தினர். இவற்றுள் விசிஷ்டாத்வைதம், சைவவிசிஷ்டாத்வைதம், வைணவ விசிஷ்டாத்வைதம் என்று இருவகைப்படும்.

**சைவவிசிஷ்டாத்வைதம்:-** கி. பி. 9 ஆம் நூற்றாண்டில் இருந்த ஸ்ரீகண்டசிவாசாரியார் இதனை மக்களிடத்தில் பரப்பினர். மக்கள் இப்பெருமகனார் வழியைப் பின்பற்றி யாண்டும் சைவத் தத்துவங்களை உணர்ந்து ஒழுகலாயினர்.

**வைணவ விசிஷ்டாத்வைதம்:-** கி. பி. 11 or 12 ஆம் நூற்றாண்டுகளில் இருந்த ஸ்ரீ இராமானுஜரால் இது மக்களிடத்தில் பரவியது.

**வேற்றுமை :-** முன்னது சிவனே கடவுளென மொழியும் பின்னையது திருமாலே பெருமான் எனப் பேசும்.

வடநாட்டில் வைணவம் சம்பிரதாயம் என்று வழங்கப்படும்; இதனை மேற்கொண்டொழுகும் மக்கள் சம்பிரதாயர் என்று வழங்கப்படுவர்.

**வைணவத்தின் வகைகள்:-** வடகலை, தென்கலை என்பன வைணவத்தின் இரண்டுவகைகள். வடமொழியிலிருக்கும் வேதசாஸ்திரங்களுக்கு ஏற்றங் கொடுப்பவர் வடகலையார். தென்மொழியிலுள்ள ஆழ்வாராதிகளுக்கு ஏற்றங் கொடுப்பவர் தென்கலையார்.

**வைணவரது ஐந்து குறிகள்:-** தாபம், புண்ட்ரம், நாமம், மந்தரம், அர்ச்சனம் என்ற ஐந்தும் சேர்ந்தவை பஞ்ச சமஸ்காரம் என்ற பரிபாஷைச் சொல்லாற் பெறப்படும்.

**இறைவன்:-** இறைவன் ஆத்மாவாகவும், நாம் அவனுக்கு சரீரமாகவும் இருக்கின்றோம். இதுவே ஆழ்வாராதிகள் கருத்துமாகும்.

"அடியேமோடும் நின்னோடும் பிரிவின்றி
ஆயிரம் பல்லாண்டு"

என்று ஆழ்வார் கூறியருளுவது இதனை வலியுறுத்தும். "நான் பிர்மம்" என்பது வைணவத்துள் சிறந்தொடர். "ஜீவனாகிய எனக்குள் அந்தரியாமியாக இருக்கும் இறைவன்" என்பது இதன் பொருள்.

**சொரூபஞானம் :-** ஜீவனுடைய இலக்கணம் சொரூபஞானம் என்று சொல்லப்படும். "நான் எனக்கல்ல; உனக்காக நான்" என்று கூறுவது இப்பொருளை உடையதேயாகும். இந்த உணர்ச்சி வந்தவர்களே தொண்டர்கள் எனப்படுவர்.

"தொண்டக்குலம் என்று தனியே ஒரு சந்தானம் போலே காணும்" என்று பெரியவாச்சான்பிள்ளை பேசுவதுபோல தொண்டனென்ற உணர்ச்சி ஒருவனுக்குச் சொரூபஞானத்தாலேயே உண்டாகும்.

**அர்த்தபஞ்சகம்:-** வைஷ்ணவத்தில் இறைவனை அடிமைவேலை செய்து அடைய விரும்பும் ஆன்மாவுக்கு ஐந்து பொருள்கள் உள. அவை:- அடைபவன் – ஜீவன்; அடையப்படுவது – ஸ்ரீ விஷ்ணு; பயன் – முடிவிலா இன்பம்; உபாயம் – பக்தி; இடையூறு – சாஸ்திர விரோதமான செயல். இதனை ஸ்வஸ்வரூபம், பரஸ்வரூபம், புருஷார்த்தஸ்வரூபம், உபாயஸ்வரூபம், விரோதிஸ்வரூபம் என்பர் வடநூலார்,

**முப்பொருள்:-** சைவத்திற்போல வைணவத்தில் மூன்றுபொருள்கள் உண்டு. இதனைத் தத்வத்ரயம் என்பார்கள் அவை ஈஸ்வரன், சித், அசித் என்ற மூன்றாகும்.

**உயிர்நிலை:-** உயிரின் நிலையை வைணவம் நான்கு விதமாக உரைக்கிறது:- அணு, ஞானம், ஆனந்தம் அமலம் என்பன ஆகும் அவை. இந்த இலக்கணங்களோடு கூடிய ஜீவர்கள் பத்தர், முத்தர், நித்யர், என மூவகைப் படுவர். சைவத்திலும் இதுபோன்று சகலர், விஞ்ஞானகலர், பிரளயாகலர் என்று பிரிப்பதுண்டு.

**கடவுள்:-** வைணவம் கடவுளை விகாரமற்றவராகவும் ஞான வடிவினராகவும், அளவிலாதவராகவும், மகிழ்ச்சி வடிவினராகவும், மலங்களுக்கு அப்பாற்பட்டவராகவும், காட்டுகிறது. கடவுள் அவரவர்களுக்கேற்றவாறு உருவத்துடன் வெளிப்படுகிறுன்.

பிரணவத்தின் பிறப்பிடமாகும் அகாரத்தில் ஐக்கியப்பட்டு, அனைத்துலகையும் ஆக்கி, நிலைபெறுவித்து, அழிக்கும் ஒப்பிலாத்தன்மை கடவுளுக்கே உண்டு.

**மந்திரங்கள்:-** அஷ்டாக்ஷரியாகிய நாராயண மந்திரம், சடாக்ஷரியாகிய விஷ்ணு மந்திரம், த்வாதசாக்ஷரியாகிய வாசுதேவ மந்திரமும், எனுமிவை ஸர்வ வியாபகத்தைக் காட்டுவனவாகும்.

**வைணவத்தின் அடிப்படை:-** வைணவத்துக்கு அடிப்படை சதாசாரம். இதனைத் திருக்கோட்டியூர் நம்பிகள்கூட, "இராகத்வேஷாதிகள் ஒழிந்தால் ஒழிய வைணவத்துவம் கைகூடாது". என்று கூறியருளியுள்ளார்.

வராகபுராணத்தில் சந்நிதிகளில் செய்யப்படாத குற்றங்கள் முப்பத்திரண்டு வகையாகச் சொல்லப்படுகின்றன.

**மோட்சம்:** நான்கு வகையாக வைணவத்தில் மொழியப்பட்டுள்ளது. சாலோக்கியம், சாமீப்பியம், சாரூப்பியம், சாயுஜ்யம் என்பன அவை. இவற்றைப் பற்றிய விளக்கங்களை ஆழ்வாராதிகள் திருவாக்குகளிலும் வேதோபநிஷதங்களிலும் காணலாம்.

---

# துவைத ஸித்தாந்தம்

வேதாந்த வித்துவான்,
**மத்வஸ்ரீ M. ராமராவ் B. A., L. T.,**
*உதவித்தலைவர், ஸெகண்டரிகிரேட் ஆசிரியர்கள் பயிற்சிப்பள்ளி, கும்பகோணம்.*

பரமாத்மாவும் ஜீவாத்மாவும் எந்நிலையிலும் எக்காலத்திலும் வேறானவைகள் என்ற கொள்கையையுடையது துவைத ஸித்தாந்தம். (துவைதம் - இரண்டாகவிருக்கும் தன்மை) இதன் மறு பெயர்களாவன - மத்வஸித்தாந்தம், பூர்ணப்ரக்ஞதர்சனம், தத்வவாதம், பேதவாதம், ஸத்வைணவ மதம் முதலியன. ஸ்ரீமத்வர் இதை ஜீர்ணோத்தாரணம் செய்ததால் மத்வமதம் அல்லது பூர்ணப்ரக்ஞ தரிசனம் எனப்படும். உலகம் ஓர் தோற்றமல்ல, உண்மையானதே என்று வற்புறுத்துவதால் தத்வ வாதம் (அதாவது மாயாவாதமல்ல) எனப்படும். ஜீவேசுவரர்கள் வேறானவர்கள் என்பதால் பேதவாதம் எனப்படும். ஸ்ரீமத் ராமானுஜரின் வைணவத்தைக்காட்டிலும் வேறானதால் ஸத்வைணவ மதம் எனப்படும். ஸித்தாந்தம் என்ற பதத்திற்குக் கடைசியில் ஏற்பட்டது என்று பொருளாகும். சரித்திர பூர்வமாயும் அவதாரகால பூர்வமாயும் ஸ்ரீமத்வரே கடைசியான பாஷ்யகாரரானதால் ஸித்தாந்தம் என்ற சொல்லின் பொருள் அங்கு உண்மையாயுள்ளது.

எல்லா மதங்களுமே அனாதியானவை. ஆயினும் அவைகளுக்கு அவ்வப்போது வாட்டம் ஏற்படும் அப்போது பகவானே நேரில் அவதரித்து அந்த மதத்திற்குப் புத்துயிர் அளிப்பார். இக்கலியில் பகவானுக்கு அவதாரமில்லையாதலால் அவர் தன் காரியதரிசிகளில் ஒருவரை அனுப்பி மதத்தொண்டு புரியும்படி செய்கிறார். அம்முறையில் துவைதஸித்தாந்தம் பகவானின் அந்தரங்க காரிய தரிசியான ஸ்ரீவாயுபகவானால் இக்கலியில் சீர்திருத்தி யமைக்கப்பட்டது. இம் மதம் பகவானுடையது. அவர் பிரம்மதேவருக்கு உபதேசித்தார். அவர் நாரதருக்கு உபதேசித்தார். நாரதர் பிரஹ்லாதனுக்கு உபதேசித்தார். பிரஹ்லாதன் முதலியோர் இம்மதத்தைக் கிருதயுகத்தில் பிரசாரம் செய்து வந்தனர். துவைத ஸித்தாந்தத்தின் அடிப்படைக் கொள்கைகள் ஸ்ரீ விஷ்ணுதான் உயர்ந்த தெய்வம்; அவனை அடைவதற்கு பக்தியே சிறந்த ஸாதனம்; அந்த பக்தி ஒன்பது விதமானது என்பவையாம். இந்தக் கொள்கைகளே தாம் பிரஹலாதனால் பின்பற்றப்பட்டு பிரசாரம் செய்யப்பட்டு வந்தன என்று ஸ்ரீமத் பாகவதம் 7-வது ஸ்கந்தத்தில்,

**ஹரிம் ஆச்ரயேத. பக்திஸ் சேந் நவலக்ஷணா.** முதலிய வாக்யங்களினால் விளங்கும்.

த்ரேதாயுகத்தில் ஸ்ரீவாயுபகவானின் முதல் அவதாரமான ஹநுமார் முதலியோர் இம்மதத்தைப் பரவசச்செய்தனர். மத்வ மதத்தின் கொள்கைகளில் முக்கியமான **தாஸோஹம்** - நான் பகவானின் தாஸன் - என்பதையேதான் ஹநுமார் பறைசாற்றினர். துவைதத்தில் **ஐக்யம்** என்றால் ஜீவனும் பகவானும் இரண்டறக் கலத்தல் என்றல்ல. கர்மவசத்தினால் ஸம்ஸாரத்தில் உழன்றுவரும் ஜீவனும் பகவானும் வைகுண்டம் என்ற ஓர் இடத்தில் என்றும் கூடுவது தான் ஐக்கியம் (ஸ்தானைக்யம்) அல்லது ஜீவனும் பகவானும் ஓரே அபிப்ராய முடையவர்கள் (மத்யைக்யம்) என்றும்தான் அர்த்தம். ஓர் பாத்திரத்தி லுள்ள பாலில் ஜலத்தை ஊற்றினால் பாலும் ஜலமும் இரண்டறக் கலந்ததாகச் சொல்லப்படுவது சரியல்ல ஏனெனில் அளவில் வேற்றுமை ஏற்படுகிறதல்லவா? மேலும் அன்னப்பறவை அவற்றை வேறுபடுத்த முடிகின்றமையால் இரண் டறக் கலக்கவில்லை என்பதே தெளிவுபடுகிறது. ஆகவே பாலும் ஜலமும் ஓரே பாத்திரத்தில் ஒன்றுசேர்ந்தன என்ற அர்த்தத்தை நாம் கொள்ளவேண்டும். இதுபோலவே ஜீவேசுவர ஐக்யம் என்பதாகும் இந்த சூக்ஷ்மத்தையே ஹநுமார் சீதாதேவியிடம் சுந்தரகாண்டத்தில் 35ஆவது சர்க்கம் 32ஆவது சுலோகத்தில் விளக்கியிருக்கிறார். சீதை, 'வானரங்களுக்கும், மனிதர்களுக்கும் எப்படி **சேர்க்கை** ஏற்பட்டது? என்று ஹநுமானை வினவினாள். அதற்கு ஹநுமான் ராமர், சுக்ரீவன் இருவர்களுக்கும் இவ்வாறு **ஐக்யம்** ஏற்பட்டது என்று பதில் தந்தான். அதன் கருத்து ராமரும் சுக்ரீவனும் இரண்டறக் கலந்தனர் என்றல்ல. அயோத்தியிலிருந்த ராமரும் கிஷ்கிந்தையிலிருந்த சுக்ரீவனும் ரிசியமூகம் என்ற ஓர் இடத்தில் ஒன்றுசேர்ந்தனர். (ஸ்தானைக்யம்) வாலியைக்கொல்வதில் இரு வரும் ஓரே அபிப்பிராயமுடையவர்கள் (மத்யைக்யம்) என்பதல்லவா இவ்வாறு துவைத சித்தாந்தத்தில் ஐக்யத்தின் தன்மையை திரேதாயுகத்தில் ஹநுமார் விளக்கியுள்ளார்.

துவாபரயுகத்தில் கௌதமரிஷியின் சாபத்தால் இந்த மதத்தின் உண்மையான அறிவு நசிக்கவே பிரம்மாதி தேவர்கள் ஸ்ரீமன் நாராயணனிடம் முறையிட்டனர். ஸ்ரீமன் நாராயணன் வேதவியாசராக அவதரித்து பிரம்ம சூத்திரம் முதலியன இயற்றி மீண்டும் துவைதத்தை உபதேசித்து உதவினார். அதை ஸ்ரீ வாயுபகவானின் இரண்டாவது அவதாரமான பீமசேனன் பரப்பி வந்தார். ஸ்ரீ கிருஷ்ணபகவானும் இந்த துவைதத்தையே அர்ஜுனனுக்கு பகவத் கீதையாக உபதேசித்து அருளினார். பகவத்கீதை முழுவதும் துவைத சித்தாந் தத்தின் கொள்கைகளையே உள்ளங்கை நெல்லிக்கனிபோல் விளக்குவது விளங்கும்.

கலியுகத்தில் ஸ்ரீ வேதவியாசரின் பிர்ம்ம சூத்திரத்திற்குப் பல பாஷ்யங்கள்தோன்றி துவைதத்தின் உண்மைகள் மங்கினபோது பகவான்

ஸ்ரீ வாயுபகவானை துவைதத்தை ஸ்தாபிக்கும்படி ஆக்ஞாபித்தார். அதன்படி அவர் ஸ்ரீமத்வராக (1238—1318) அவதரித்து மத்வமதத்தை இக்கலியில் பிரசாரம் செய்தார்.

இவ்வாறு துவைத சித்தாந்தத்தின் விதை வேதம் என்ற பூமியில் ஸ்ரீ வேதவியாசரால் விதைக்கப்பட்டது. ஸ்ரீமத்வரால் முளைகிளம்பிற்று. அவரது சாக்ஷாத் சீடர்களான பத்மநாப தீர்த்தர், நரஹரி தீர்த்தர், மாதவ தீர்த்தர், அக்ஷோப்ய தீர்த்தர் என்ற நால்வரால் இரண்டு இலைகள்விட்டது. ஸ்ரீ ஜயதீர்த்தர் என்ற மகானால் கிளைகள் எங்கும்பரவின. ஸ்ரீ வியாசவராஜ ஸ்வாமிகளால் தளிர்விட்டது. ஸ்ரீ விஜயீந்திர ஸ்வாமிகளால் புஷ்பித்தது. ஸ்ரீ ராகவேந்திரர் முதலியோர்களால் பழுத்து எல்லோராலும் இன்று ருசிக்கப்பட்டு வருகிறது.

இம்மதத்தின் கொள்கைகளில் நவரத்னம்போன்ற ஒன்பதை ஒரு சிறு சுலோகத்தில் ஸ்ரீ வியாசராஜர் அடக்கியுள்ளார்.

ஸ்ரீமன் மத்வமதே ஹரி: பரதா: சத்யம் ஜகத்தத்வதோ
பேத: ஜீவகணா: ஹரே: அனுசரா: நீசோச்சபாவம் கதா:
முக்திர் நைஜஸுகாநுபூதி: அமலா பக்திஸ்ச தத்சாதனம்
ஹ்யக்ஷாதி த்ரிதயம் பிரமாண மகிலாம் நாயைக வேத்யோ ஹரி: ||

1. ஸ்ரீ விஷ்ணு தான் உயர்ந்த தெய்வம். அவரது மனைவியான லக்ஷ்மி அவரைக்காட்டிலும் குணங்களில் அநேக மடங்கு தாழ்ந்தவள். இருவரும் இணைபிரியாத தம்பதிகள். மற்றெல்லா ஜீவகோடிகட்கும் தாய்தந்தையர்கள். பிர்மாமுதலிய தேவர்கள் ஜீவர்களே. அவர்களுக்கு ஸ்தூலதேகம் பிறப்பு இறப்பு முதலியன உண்டு. பிறகு மோக்ஷமுண்டு, நாம் எல்லா பெரியோர்களையும் தக்கவாறு பூஜிக்கவேண்டும்.

2. இந்த உலகமும் மற்ற உலகங்களும் உண்மையானவையே, கிளிஞ்சலில் தோன்றும் வெள்ளிபோன்றதல்ல. ஏனெனில் பகவானால் படைக்கப்படுகிறது. பரிபாலிக்கப்படுகிறது அழிக்கப்படுகிறது கிளிஞ்சல் வெள்ளியை படைக்கவோ அழிக்கவோ முடியாது அல்லவா! மேலும் கிளிஞ்சல் வெள்ளி பொருள்கள்செய்ய உதவாது. ஆனால் இவ்வுலகிலுள்ள பொருள்கள்யாவும் பல பொருள்களாகப் பயன்படுகின்றன. உலகம் மாயை என்றால் பகவானின் அசிந்திய அற்புத சக்தியால் அமைந்தது என்று அர்த்தம். மாயை என்பதற்குப் பலபொருள்கள் உண்டு. உலகம் அழிவுடையது அநித்யமானது என்ற பொருளையும் குறிக்கும் ஸத்யம் வேறு அநித்யம் வேறு இரண்டும் ஒன்றல்ல, ஆகவே அநித்யமான ஜகத்து ஸத்யமாகவிருக்கலாம் ஏதோ ஒரு காலத்தில் ஏதோ ஒரு தேசத்தில் ஒரு வஸ்து இருந்தால் போதும். அது சத்தியமானதே ஆனால் இப்போது அழிந்துவிட்டது.

3. ஈசுவரன் ஜீவன் ஜடம் என்று மூன்றுபொருள்கள்தாம் இவ்வுலகத்திலுள்ளன. ஜீவர்களில் ஸாத்வீகர்கள் ராஜஸர்கள். தாமஸர்கள் என்று மூவகையினர். ஸாத்விகர்கள்களில் தேவர்கள், ரிஷிகள், பிதுருக்கள், சக்கரவர்த்திகள், மனித உத்தமர்கள் என்ற ஐந்து வகை உண்டு. ராஜஸர்கள் மத்திம மனிதர்கள் தாமஸர்களில் மனிதஅதமர்கள் தைத்தியர்கள், ராக்ஷதர்கள், பிசாசங்கள் என்ற வகைகள் உண்டு, ஜடப்பொருள்களில் பிரகிருதி, காலம், வேதம், இடம், (Space) (அவ்யாகிருத ஆகாரம்) முதலியன உண்டு. இவைகளிடையே (i) ஈசுவரனுக்கும் ஜீவர்களுக்கும் பேதம் உண்டு, (ii) ஈசுவரனுக்கும் ஜடத்துக்கும் பேதம் உண்டு. (iii) ஜீவர்களிடையே பரஸ்பரம் பேதம் உண்டு. (iv) ஜடங்களிடையே பரஸ்பரம் பேதம் உண்டு, (v) ஜீவர்களுக்கும் ஜடங்களுக்கும் பேதம் இப மாதிரி ஐந்து பேதங்கள் ஸம்ஸாரத்திலும் முக்தியிலும் கட்டாயம் உண்டு. இந்தப்பேதங்கள் உண்மையானவையே.

4. ஜீவகோடிகள் விஷ்ணுவின் தாஸர்கள்.

5. ஜீவர்களிடையே ஏற்றத்தாழ்வுகள் உண்டு, பிர்ம்மதேவர் எல்லா ஜீவர்களைக்காட்டிலும் மேலானவர். அவர் ஆயுளும் மற்றவர்களைக்காட்டிலும் மிக அதிகம். அந்தப்பதவிக்குத் தகுந்த ஜீவர்களின் கூட்டம் தனித்து உள்ளது. இம்மாதிரியே ஒவ்வொரு தேவபதவிக்கும் வரத்தகுந்த ஜீவ கூட்டங்கள் உண்டு. மோக்ஷத்திலும் இந்த ஏற்ற தாழ்வு உண்டு.

6. மோக்ஷம் என்பது ஸ்தூலதேகம், லிங்கதேகம் இரண்டிலிருந்து விடுபட்டு இயற்கை ஸ்வரூபமாயுள்ள ஆனந்தத்தையோ, ஆனந்தம் கலந்த துக்கத்தையோ, துக்கத்தை மாத்திரமோ அநுபவிப்பதாகும். ஆகவே மோக்ஷம் மூன்றுவிதமானது. ஸாத்விகர்களின் மோக்ஷம் அவர்களின் இயற்கையான ஆனந்தத்தை மோக்ஷத்தில் ஸ்ரீவிஷ்ணுவின் ஸாரூப்யம், ஸாமீப்யம், ஸாலோக்யம், ஸாயுஜ்யம் என்பவற்றை தத்தம் ஸ்வரூபயோக்யதைக்குத் தக்கப்படி அநுபவிப்பதாகும். ராஜஸர்களின் மோக்ஷம் துக்கம் கலந்த சுகத்தை ஏககாலத்தில் அநுபவித்துக்கொண்டு பிறப்பு இறப்புக்கு ஆளாகாமல் பூமி, ஸ்வர்க்கம், நரகம் மூன்று இடங்களில் சஞ்சரித்துக்கொண்டிருப்பதாகும். தாமஸர்களின் மோக்ஷம், தாமிஸ்ரம், அந்ததாமிஸ்ரம் என்ற இரண்டு நித்யநரகங்களில் ஸ்திரமாயிருந்து கொண்டு இயற்கையாக அமைந்துள்ள துக்கத்தை அநுபவித்துக் கொண்டிருப்பதேயாகும்.

7. ஸாத்விகர்களின் மோக்ஷத்திற்கு நிர்மலமான பக்திதான் ஸாதனமாகும். வேறுவழி கிடையாது. அதாவது பகவானின் மகிமைகளை யறிந்து அவரிடம், என்றும் அறுததும் தன்னிடமும் தன்னைச்சார்ந்த பொருள்களிடமும் வைத்துள்ளதுமான சினேகத்தைக் காட்டிலும் பன்மடங்கு அதிகமான சினேகத்தைச் செய்வதேயாகும்.

8. பிரத்யக்ஷம், அனுமானம், ஆகமம் என்ற மூன்று பிரமாணங்கள் தாம்.

9. பகவானை முதல் இரண்டு பிரமாணங்களினால் அறியமுடியாது. ஆகமத்தால்தான் அறியமுடியும்.

**விசேஷக் குறிப்புகள்:-** ஜீவர்களின் ஸ்வரூபத்திலேயே ஸ்திரீகள் புருஷர்கள் என்ற யோனிகள் உண்டு. லக்ஷ்மி – விஷ்ணு; ஸரஸ்வதி – பிரம்மா; பார்வதி - பரமசிவன். இவர்கள் ஸம்ஸாரத்தில் உழன்றுவருகையில் ஸ்தூலதேகத் தின்கண் யோனிகள் மாறும். அதாவது புருஷர்கள் ஸ்திரீகளாகப் பிறக்கலாம். மீண்டும் புருஷர்களாகப் பிறக்கலாம. ஆனால் இயற்கையான ஸ்திரீ ஜீவர்கள் மாத்திரம் எப்போதும் ஸ்திரீகளாகவே இருப்பார்கள்! அவர்களுக்குப் புருஷ யோனியில் பிறப்பே கிடையாது பாகவதம் 9ஆம் கந்தத்தில் ஸுத்யும்னன் என்பவன் சரிதையும் மகாபாரதத்தில் சிகண்டிஎன்பவன் சரிதையும் இதை அறிவுறுத்துகின்றன. ஆகவே இப்போது புருஷர்களாக இருப்பவர்களின் ஜீவஸ்வரும் புருஷன்தான். ஆனால் இப்போது ஸ்திரீகளாக இருப்பவர்களின் ஜீவஸ்வரூபம் புருஷனாகவோ அல்லது ஸ்த்ரீயாகவோ இருக்கலாம் என்பதைக் கவனிக்கவேண்டும். இதற்கு அனுகுணமாக ஆங்கிலச்சொற்களும் அமைந் திருக்கும் விந்தையைப் பாருங்கள். She-ல் He-உண்டு Woman-ல் Man- உண்டு Female-ல் Male - உண்டு Lady-ல் Lad உண்டு. தினசரி பத்திரிகைகளிலும் பெண் ஆணாக மாறுவதையும் ஆண் பெண்ணாக மாறுவதையும் பற்றிப் படிக்கிறோம். இந்த மாறுதல் மேலே கூறப்பட்டபடி இயற்கையான புருஷஜீவர்களுக்குத்தான் என்பதை அறியவேண்டும். மேலும் தற்காலத்தில் ஸ்திரீகள் பலர் ஆண்களைப் போல் முன்னேறி வருவதும் சில ஸ்திரீகள் பெண்களாகவே இருக்கப் பிரியப் படுவதும் இந்த சித்தாந்தத்திற்கு ஆதரவு அளிக்கிறது.

(2) ஜீவர்களின் ஸ்வரூபம் ஒரு தேங்காய்போல் உள்ளது என்று கூறலாம். மேல்மட்டை ஸ்தூலதேகமாகும். உள்ளிருக்கும் ஓடு சூக்ஷ்மதேக மாகும். அதனுள்ளிருக்கும் தேங்காய் ஸ்வரூப தேகமாகும். மட்டையை உரித் தாலும் தேங்காயும் ஓடும் ஒன்றுக்கொன்று பற்றிக்கொண்டுள்ளன. அதுபோல் இறந்தவுடன் ஸ்தூலதேகம் போனாலும் ஜீவன் ஸ்வரூபமும் சூக்ஷ்மதேகம் பற்றி யிருக்கும். அந்த சூக்ஷமதேகத்தையும் நீக்குவதே மோக்ஷத்திற்கு சாதனமாகும். அதற்காக நாம் கர்மாநுஷ்டானம் செய்து ஞானத்தைப் பெற்று பக்திசெய்து வந்தால் கொப்பரையில் எவ்வாறு ஓடும் தேங்காயும் தாமாகவே பிரிந்துவிடுகின் றனவோ அவ்வாறு இந்த ஸம்ஸாரத்திலும் ஜீவன் முத்தி நிலையை அடைகிறான். அந்நிலையில் இரண்டு வெளி தேகங்களோடிருப்பினும் உலகபந்தம் அவனைப் பாதிக்காது. இன்னும் பல தத்துவங்கள் உள. விரிக்கின் பெருகும்.

# கிறிஸ்தவம்

*மத நூலாராய்ச்சி வல்லார்,*
**திரு. M. இராமகிருஷ்ணன்,**
*தருமையாதீனப் பல்கலைக் கல்லூரி மாணக்கர் (III U. C.)*

"கடவுளிடத்திலிருந்து பிரிந்து வந்த உயிர்கள் அவரைக் கூடுமாறு கூறுவதே சமயம்" என்று ரஷ்ய பேரறிஞனுகிய டால்ஸ்டாய் சமயம் என்பதற்கு விளக்கம் கூறுகிருர். அமெரிக்காவில் தோன்றிய அறிவுக்களஞ்சியமான ஞானி எமர்ஸன் "ஒழுக்கங்களின் அமைப்பே சமயம்" என்று கூறியுள்ளார். திசுடிடீஸ் (Theecydides) என்ற கிரேக்க சரித்திர ஆசிரியர் "மதம் என்பது துன்பந்தரும் உழைப்பிலிருந்து ஓய்வே" என்று அறிவிக்கிருர். "தெய்வத்தின் மீது நம்பிக்கையின்மை அல்லது நிரீச்சுவரவாதம் புத்திக் கோளாருல் ஏற்படுகிறது." என்று அறிவிக்கிருர் புளூட்டார்க் (Plutarck) என்ற கிரேக்க சரித்திரப் பேராசிரியர். இவைகளால் ஒருவாறு சமயம் என்ருல் என்ன என்பதைப்பற்றி அறியலாஞேம்.

கிறிஸ்தவ மதமானது அன்பின் தந்தையான இயேசுகிறிஸ்துவால் யூதமதத்திலிருந்து சீர்திருத்தப்பட்டு அமைக்கப்பட்ட மதமாதலின் கிறிஸ்தவ மதம் என்னும் பெயர்த்தாயிற்று. இன்றுள்ள இணையற்ற மதங்களான இந்து மதம் (Hinduism), முகம்மதியமதம் (Islam), புத்தமதம் (Buddhism), கன்பியூஸியானிஸம் (Confucianism), தாவு மார்க்கம் (Taoism), சமணமதம் (Jainism), யூதமதம் (Jewish Religion), பார்ஸிமதம் (Parseeism), கிரேக்க மதம் (Greek Religion), செல்டிக் மதம் (Celtic Religion) ஆகிய மதங்களைவிட மிக அதிகமான மக்களால் பின்பற்றப்பட்டு வரும் மதம், கிறிஸ்தவ மதம் ஒன்றுதான். உலகில் இன்று சுமார் 68 கோடி மக்கள் கிறிஸ்தவ மதத்தையே சார்ந்துள்ளார்கள்.

இந்து மதமானது எவ்வாறு சைவம், வைணவம், சாத்தேயம், காணுபத்தியம், கௌமாரம் என்று பலவகையாகப் பிரிந்துள்ளதோ, அதுபோன்று கிறிஸ்தவ மதமானது ரோமன் கத்தோலிக் (Roman Catholic), புராட்டெஸ்டென்ட் (Protestent), ஆர்தொடக்ஸ் கத்தோலிக் (Orthodox Catholic), காப்டிக் கிறிஸ்தவம் (Coptic Christianity) எனப் பலவாகப் பிரிந்துள்ளது.

கிறிஸ்தவ மதத்தின் வேதமாக விளங்குவது பைபில் (Bible) தான். நல்லொழுக்கங்களைக் கூறும் இந்த உயரிய நூலானது இன்று 1075 மொழிகளில்

எபிரேய மொழியிலிருந்து மொழிபெயர்க்கப்பட்டுள்ளது. எபிரேய மொழியில் வேதாகமத்திற்கு வழங்கும் 'பைபிள்' என்னும் பெயருக்கு 'புத்தகம்' என்பதே பொருளாகும். இயேசுநாதர் தோன்றுவதற்கு முன்னரே இந்நூலின் பெரும் பகுதி எழுதப்பட்டுவிட்டது. இந்த வேதாகமத்தை இயேசுநாதர் பிறப்பதற்கு 1500 ஆண்டுகளுக்கு முன்னரேயிருந்து அவருக்குப்பின் நூறு ஆண்டுகள் வரைக்கும் மோசே (Moses) முதல் பரியோவான் வரையிலுள்ள நாற்பது எழுத்தாளர்கள் எழுதியுள்ளனர். கிறிஸ்தவ வேதத்தின் பழைய ஏற்பாடு (Old Testament) கி. மு. 289—150 ஆண்டுகளுக்கிடையில் எபிரேய மொழியிலிருந்து கிரேக்க மொழியில் பெயர்க்கப்பட்டது. புதிய ஏற்பாடு (New Testament) கிறிஸ்துவிற்கு 150 ஆண்டுகளுக்குப் பின்னுல் இப்பொழுதுள்ளபடி வெளிவந்தது.

தேவனுனவர் தனது மோசே என்ற பக்தனுக்குச் சன்மார்க்க விதி கிரியாவிதி, நீதிவிதி என்ற மூன்று விதிகளை உபதேசித்தார். அவற்றுள் சன்மார்க்க விதியாவது:-

1. "என்னையன்றி உனக்கு வேறே தேவர்கள் உண்டாயிருக்க வேண்டாம்" யாத்திராகமம். 20:3

2. மேலே வானத்திலும், கீழே பூமியிலும், பூமியின்கீழ் தண்ணீரிலும் தோன்றியவைகளுக்கு ஒப்பான ஒரு உருவத்தையாகிலும், யாதொரு விக்கிரகத்தையாகிலும் நீ உனக்கு உண்டாக்க வேண்டாம். நீ அவைகளை வணங்கவும் சேவிக்கவும் வேண்டாம்......யாத். 20:4,5,6.

3. உன் தேவனுகிய கர்த்தருடைய நாமத்தை வீணிலே வழங்காதிருப்பாயாக, கர்த்தர் தம்முடைய நாமத்தை வீணிலே வழங்குகிறவர்களைத் தண்டியாமல் விடார்" யாத். 20: 7.

4. ஓய்வுநாளைப் பரிசுத்தமாகக் கழிப்பாயாக..." 20: 3,"

5. உன் தேவனுகிய கர்த்தர் உனக்குக் கொடுக்கிற தேசத்திலே உன் நாட்கள் நீடித்திருப்பதற்கு உன்தகப்பனையும், தாயையும் அன்பாய் ஆதரிப்பாயாக" யாத். 20: 12,

6. "கொலை செய்யாதிருப்பாயாக" யாத். 20: 13.

7. "வியபிசாரம் செய்யாதிருப்பாயாக" யாத். 20: 14.

8. "களவு செய்யாதிருப்பாயாக" யாத். 20: 15,

9. பிறருக்கு விரோதமாய்ப் பொய்ச்சாட்சி சொல்லாதிருப்பாயாக" யாத். 20: 16.

10. பிறருடைய வீட்டை இச்சியாதிருப்பாயாக. பிறருடைய மனைவியையும், அவனுடைய வேலைக்காரனையும், அவனுடைய வேலைக்காரியையும், அவனுடைய எருதையும், அவனுடைய கழுதையையும், பின்னும் பிறருக்குள்ள யாதொன்றையும் இச்சியாதிருப்பாயாக" யாத். 20: 17.

மேற்கண்ட பத்துவிதமான நியம புண்ணியங்களை விதிக்கின்ற பத்து கற்பனைகளே சன்மார்க்க விதியாகும்.

சரீரசுத்தி, திரவியசுத்தி, ஆசௌசம், உபவாசம், புண்ணியத்தலம், புண்ணியகாலம், புண்ணியத்திரவியம், குருத்துவம், ஆலயசேவை, பூசை, பலி முதலிய நியம புண்ணியங்களை உணர்த்துவதே கிரியா விதியாகும்.

யுத்தம், சமாதானம், கணவன், மனைவி, பெற்றோர், பிள்ளைகள், உடையவன், அடியவன், அன்னம், வஸ்திரம், வீடு, நிலம், தானியம், வேளாண்மை, பணம், ஆடு, மாடு, பட்சி, மிருகம், தலையீற்று, மனிதசரீரம் உயிர் என்பவைகளைக் குறித்து ஒழுக்க வழக்கங்களையும் அவைகளின் தண்டத்தையும் உணர்த்துவதே நீதிவிதியாகும்.

பாசங்கள் நீங்கப்பெற்று, பரிசுத்த நிலையினை அடைவதுதான் முத்திச் சாதனமாகும். பாவநீக்கத்திற்கு அனுகூலமான பரிகாரமாவது பலிதானமாகும். பலியானது பாவநீக்கத்தின் பொருட்டுக் கொடுக்கப்படும் உபகாரப் பொருள், காணிக்கை, தானம் இடுதலாகும்.

மக்கள், இறைவன் அருளைப்பெற இரண்டுவித நியமங்களான ஞானஸ்நானம், நற்கருணை ஆகியவைகளை அடைதல் வேண்டும். இவற்றுள் ஞானஸ்நானமாவது:- மனம் திரும்புவதற்காகவும், பாவசுத்தி ஏற்படுவதற்காகவும், கிறிஸ்துவின் அருளுக்கு ஞானக்குறியாகிய பிதா, புத்திரன், பவித்ராத்துமா என்னும் முத்தேவர் பெயரினால் அளிக்கப்படும் நீரிலே குளித்தலாகும்.

நற்கருணையாவது, மக்களின் பாவத்திற்காக, பலியாகிய கிறிஸ்துவின் மாமிசத்திற்கும், இரத்தத்திற்கும் ஞாபகக்குறியாக உட்கொள்ளப்படுகின்ற அப்பமும், திராட்சை ரசமுமேயாகும்.

வேதாகமமானது ஆதியில் பூமியும், வானமும், உயிர்வர்க்கங்களும், மனிதனும் எவ்வாறு தோன்றினான் என்பதை அறிவிக்கிறது.

1. "ஆதியிலே தேவன் வானத்தையும், பூமியையும் சிருஷ்டித்தார்" ஆதி. 1 : 1

2. "வானங்களைச் சிருஷ்டித்து, பூமியையும் வெறுமையாயிருக்க அதைக் குடியிருப்புக்காகச் செய்து, படைத்து, அதை உருவேற்படுத்தின தேவனாகிய கர்த்தர்......" ஏசாயா 45 : 18.

3. "பின்பு தேவன் நமது சாயலாகவும், நமது உருவத்தின் படியேயும், மனிதனை உண்டாக்குவோமாக என்றார்." ஆதி 1 : 26.

4. "தேவனாகியகர்த்தர் மனிதனைப் பூமியின் மண்ணிலே உருவாக்கி, ஜீவசுவாசத்தை அவன் நாசியிலே ஊதினார், மனிதன் ஜீவாத்துமாவானான்" ஆதி. 2 : 7.

5. தேவன் தம்முடைய சாயலாக மனிதனைச் சிருஷ்டித்தார், அவனைத் தேவசாயலாகவே சிருஷ்டித்தார். ஆணும் பெண்ணுமாக அவர்களைச் சிருஷ்டித்தார். பின்பு தேவன் அவர்களைநோக்கி: நீங்கள் பெருகிப் பூமியை நிரப்பி, அதைக் கீழ்ப்படுத்திச் சமுத்திரத்தின் மச்சங்களையும், ஆகாயத்துப் பறவைகளையும் பூமியின்மேல் நடமாடுகிற சகல உயிர் வர்க்கங்களையும் ஆண்டு கொள்ளுங்கள் என்று சொல்லித் தேவன் அவர்களை ஆசீர்வதித்தார்." ஆதியாகமம் 1: 27, 28.

இவ்வண்ணம் கிறிஸ்தவ வேதமானது நீதிகளை மாத்திரம் கூறாது பூமி, வானம், உயிர்வர்க்கங்கள், மனிதன் ஆகியவை எவ்லாறு தோன்றின என்பதையும் கூறுகிறது.

கிறிஸ்தவ மதத்தை அன்பின் மதமென்றே கூறலாம். கிறிஸ்தவவேதம் அன்பின் தகைமைகளைப் பலவாறு புகழ்ந்து, அதனை மக்கள் கடைப்பிடித்து ஒழுகவேண்டுமெனப் பல இடங்களில் வற்புறுத்திக் கூறுகின்றது. ஆண்டவன் அன்பாகவே இருக்கிறான் என்று எல்லாமதங்களும் கூறுவதுபோல கிருஸ்தவ வேதமும் "அன்பில்லாதவன் தேவனை அறியான், தேவன் அன்பாகவே இருக்கிறான்" (1 யொவான் 4 : 8) என்று கூறுகிறது, அன்பின் தன்மையினை நமது சைவமும் ஈசனுக்கன்பிலார் அடியவர்க்கன்பிலார் எவ்வுயிர்க்கும் அன்பிலார் (They love not god, who love not His divotees, they love not others) என்று கூறுகின்றது,

அன்புதான் பிரபஞ்சத்தின் சக்கரத்தைச் சுற்றுகிறது. தேவலோகத்திற்குச் செல்ல ஏணியாக உதவுவதும் அன்புதான். உலக பந்தங்களிலிருந்து விடுதலை அடைவதற்கு அடிப்படையாக யிருப்பதும் அன்புதான்,

ஆயிரம் ஆண்டுகளாகச் சாத்தானானவன், மனிதன் வேறோர் மனிதனோடு அன்பாக இருக்கவொட்டாமல் தடுத்தும், உயர்ந்த மனிதன் அன்பாகவே இருக்க முயலுகிறான். எந்த வீட்டில் அன்பு தவழ்கிறதோ அந்த வீட்டில் விவாகரத்து நுழையமுடியாது. எந்த உள்ளத்தில் அன்பானது நிலவுகின்றதோ, அந்த உள்ளத்தில் சினம், செருக்கு ஆகிய தீயகுணங்கள் ஒளியினைக்கண்ட இருள்போல் மறைந்து விடுகின்றன. அன்புதான் மக்களுடைய உள்ளங்களைத் திறக்கும் பொன்னான திறவுகோல். சொல்வன்மையிலே சிறந்து, தேவதூதனைப் போல சிறந்த சொற்பெருக்காற்றும் வல்லவனானாலும், அவனிடத்தில் அன்பு இல்லையெனில் அவனது திறமையாவும் விழலுக்கிறைத்த நீரேயாம். அன்பு தான் ஆண்டவனையும், நம்மையும் இணைக்கின்றது. அன்பு எப்பொழுதும் குற்றமான செயலைச் செய்யத் தூண்டுவதில்லை. அன்புதான் மனிதனைத் தன்னைத் தான் முட்டாளாக்கிக் கொள்ளாமல் காக்கின்றது. மறுமலர்ச்சிக்கும் அன்பே வித்திடுகின்றது. குற்றங்களும் குறைகளும் நிறைந்துள்ள இடத்திலேயும் அன்பு என்றும் பொய்ப்பதில்லை. உண்மையினையே அடித்தளமாகக் கொண்டு, மத நம்பிக்கை என்னும் சுவர்களால் கட்டப்பட்ட நற்குணங்களாகிய அரண்மனையில் ஆட்சிபுரியும் அரசனே அன்பாகும்''. இவ்வாறாக கிறித்தவ வேதம் போற்றும் அன்பைக் குறித்து திரு லிராய் இ. ப்ரூம் (Leroy E. Froom) என்ற பேரறிஞர் தமது நூலில் எழுதியுள்ளார்.

''நான் உனக்குப் போதித்து நீ நடக்கவேண்டிய வழியைக்காட்டுவேன். உன்மேல் என்கண்ணை வைத்து உனக்கு ஆலோசனை சொல்வேன்.'' சங்கீதம் 32 : 8

உன் வழிகளிலெல்லாம் அவனை நினைத்துக்கொள். அப்பொழுது அவர் உன்பாதைகளைச் செவ்வைப்படுத்துவார்.'' நீதிமொழிகள் 3 : 6.

''இதோ உலகத்தின் முடிவு பரியந்தம் சகல நாட்களிலும் நான் உங்களுடனே கூட இருக்கிறேன். நான் உன்னை விட்டு விலகுவதுமில்லை உன்னைக் கைவிடுவதுமில்லை.'' மத்தேயு 20 : 20. எபிரேயர் 13 : 5.

''கர்த்தர்மேல் உன்பாரத்தை வைத்துவிடு, அவர் உன்னை ஆதரிப்பார், நீதிமானை ஒருபோதும் தள்ளாடவொட்டார்'' சங்கீதம் 55:22.

''நீ பயப்படாதே, நான் உன்னுடனே இருக்கிறேன். திகையாதே. நான் உன் தேவன். நான் உன்னைப் பலப்படுத்திச் சகாயம் பண்ணுவேன். எனது நீதியின் வலது கரத்தால் உன்னைத் தாங்குவேன்''— ஏசாயா 41:10.

இவ்வண்ணமாக இறைவன் கிறிஸ்தவ வேதத்தின் மூலமாக உலக மக்களுக்கு ஊக்கமும், தைரியமும் ஊட்டி அவர்களை நல்வழிப்படுத்துகின்றார்.

"நீயோ தர்மம் செய்யும்போது, உனது தர்மம் அந்தரங்கமாயிருப்ப தற்கு உன் வலதுகை செய்கிறதை உனது இடதுகை அறியாதிருக்கக் கடவது. அப்பொழுது அந்தரங்கத்தில் பார்க்கிற உன் பிதா உனக்கு வெளியரங்கமாய் வந்து பலனளிப்பார் - மத். 6:3:4

'நீ விருந்து செய்யும்போழ்து ஏழைகளையும், ஊனர்களையும், சப்பாணி களையும், குருடர்களையும் அழைப்பாயாக, அப்பொழுது நீ பாக்கியவனுக இருப்பாய்" - லூக். 14:13,14

"ஒருவன் உன்னை வலது கன்னத்தில் அறைந்தால் அவனுக்கு மறு கன்னத்தையும் திருப்பிக்கொடு. உன்னோடு வழக்காடி உன் வஸ்திரத்தை எடுத்துக்கொள்ள வேண்டுமென்றிருக்கிறவனுக்கு உன் அங்கியையும் விட்டுவிடு. உன்னை ஒருவன் ஒருமைல் தூரம் வரப்பலவந்தம் பண்ணினுல் அவனோடு இரண்டு மைல் தூரம் போ" மத்தே. 5;39,40,41.

இவை போன்றனவற்ருல் கிறிஸ்துவ மதமானது மக்களை உயரிய வழியில் நடத்தி, உயர்ந்த பண்பையும், சிறந்த ஒழுக்கத்தையும் ஊட்டும் மாண் புடைய மதமென்று அறிகின்ருேம். இது போன்று உலகிலுள்ள ஒவ்வொரு மதமும் மிக உயர்ந்த நீதிகளைக் கூறுவதால் மதச்சண்டைகள் தோன்றுவதற்கு காரணமேயில்லே. எல்லா மதங்களும் அன்பாகிய ஆலயத்திற்கு அழைத்துச் சென்று "தாயும் தந்தையும் நம்மீது அன்புடையவர்கள் தாம், ஆனுல் எங்குமுள்ள இறைவனே நம்மீது அளவற்ற அன்புடையவன்" என்ற டேனிஷ் பழமொழியின் கருத்தை அடிக்கடி அறிவுறுத்திக்கொண்டே இருக்கின்றன.

---

# முகம்மதியம்

திரு. M. இராமகிருஷ்ணன்,

மூன்றாவது வகுப்பு கல்லூரி மாணவன், தருமபுர ஆதீனப் பல்கலைக்கல்லூரி,

"சர்வ வல்லமையுடன் வாழுகின்ற கடவுள் ஒருவரேயன்றி அங்கே வேறு கடவுள் கிடையாது" (There is no God but God the living, the Subsisting" - Al. Quran iii 2) என்று முகம்மதிய வேதமான குர்ஆன் கூறுவதையே "கடவுள் ஒருவர்தான் இரண்டாமவர் கிடையாது". (One only, without a second" - chhavadogya - Upanishat vi. ii. 1) என்று இந்துமத நூலான உபநிடதமும், இவ்வாறே கூறுகிறது சொராஷ்டிர மதநூலான யாஸ்னுவும் (The Zoroastriam, 2. Yasna, 18, 1>), பிரபுவாகிய நமது கடவுள் ஒருவர்தான் ("Hear, O Israel, the Lord our God is one Lord") - Deuteronomy, VI 4) என்று ஹீப்ரு மதநூலும் "கடவுள் ஒருவரைத்தவிர மற்றக் கடவுள் கிடையாது" (There is none other God but one" - 1 Corinthians, viii 4) என்று கிறித்தவவேதமும் கூறுகின்றன.

இவ்வண்ணம் எல்லா மதங்களும் 'ஒருவனே தேவன்' என்று ஒப்பக் கூறும் உயர்ந்த கொள்கையினை உடைய இந்த முகம்மதிய மதம் அல்லது இஸ்லாமிய மதம் அரேபியாவிலுள்ள மெக்கா என்னும் நகரில்தோன்றிய நபிகள் நாயகம் அவர்களால் தோற்றுவிக்கப்பட்டது. 'இம்மதம் கிறித்தவ மதத்திலிருந்து பிறந்து வளர்ந்த மதந்தான்' என்று மௌலிமுகம்மது அலி M. A. LL. B. அவர்கள் தமது நூலில் (Islam the Religion of Humanity P. 1) கூறியுள்ளார். இஸ்லாம் மதத்திற்கு அமைதியான மதம் (The Religion of Peace) என்றே பொருளாம். இம்மதமானது இன்று சுமார் 30 கோடி மக்களால் உலகில் பின்பற்றப்பட்டு, வருகின்றது. இந்தியா, பாகிஸ்தான், பெர்ஸியா மற்றும் பல நாட்டில் இவர்கள் அதிகமாக வாழ்கின்றனர்.

ஐரோப்பாவில் மாத்திரம் 50 லட்சம் மக்களால் இம்மதமானது பின்பற்றப்பட்டு வருகின்றது. புதிய துருக்கியை நிர்மாணித்தவரும், கிரேக்கர்களைத் துருக்கியைவிட்டு 1922-ம் வருஷம் விரட்டிய வீரரும், 1923-ம் ஆண்டிலிருந்து 1938-ம் ஆண்டுவரை துருக்கிக் குடியரசின் தலைவராக ஆட்சி செய்தவருமான கெமால் அத்தாதுர்க் (Kemal Ataturk, 1881 - 1938) என்பவரால் இம்மதத்தின் காரணமாகக் கைகொள்ளப்பட்ட மூடப்பழக்க வழக்கங்கள் யாவும் நீக்கப்பட்டன.

இம்மதத்தின் வேதமாக விளங்குவது 'குர் ஆன்' என்ற சிறந்த நூலாகும். இந்நூலிலுள்ள வசனங்கள்யாவும் ஆண்டவனால் கூறப்பட்டு அதை நபிகள் நாயகம் எழுதியதாகக் கூறுவர். கடவுள் ஒருவரே (The Unity of God) ஆத்மா அழியாதது (The Immortality of Soul) மனிதன் இறந்த பின்னர் அவனுக்குக் கடைசி விசாரணை உண்டு (The last judgement), என்னும் சிறந்த உண்மைகளை குர்ஆன் நமக்குத் தெரிவிக்கின்றது. இந்த சிறந்த நூலான குர்ஆனில் மொத்தம் 1666 வசனங்கள் உள்ளன. அரபிகள் என்றால் பேசக் கூடியவர் என்றும் அஜமி என்றால் ஊமைகள் எனவும் பொருள்படும்.

இந்த குர்ஆன், நபிகள் நாயகம் வாழ்ந்த காலத்திலே, தற்காலத்தில் உள்ளதுபோல் பூர்த்தி செய்யப்படவில்லை. அவர்கள் இறந்து இருபது ஆண்டு களுக்குப் பின்னர்தான் இந்நூல் இக்காலத்தில் உள்ளவண்ணம் பூர்த்தியாகி வெளிவந்தது. நபிகள் காலத்தில் அவரது சீடர்கள் பனை ஓலைகளிலும் தோல் களிலும் படியெடுத்து வைத்தனர். வேறுசிலர் அதன் பெரும்பகுதியினை மனப் பாடம் செய்து பிறருக்குப் போதனை செய்தனர். நபிகள் நாயகம் இறந்தபிறகு குர்ஆனைப்பற்றித் தெரிந்திருந்த ஒருசிலரும் அதுபோழ்து நிகழ்ந்த சண்டையில் இறந்து விட்டனர். ஓமர் (Omar) என்பவர் அபுபெகர் (Abu Bekr) என்பவரின் மூலமாக ஸ்சீட் (Zeid) என்பவனைக் கொண்டு குர்ஆனுக்கு, நல்லதோர் படிவத்தை எடுப்பித்தார். அது முகம்மதுவின் விதவைகளில் காப்ஷா (Haphsa) என்பவளுக்குச்சென்றது. பின்னர் குர்ஆனுக்கு மிகச் சிறந்த நான்கு படிவங்கள் (Copys) எடுக்கப்பட்டன, அவைகளில் ஒன்று மதீனாவிலும், மற்றவை முஸ்லீம்களின் முக்கிய நகரங்களான டமாஸ்கஸ் (Damascus); பஸ்ரா (Basra), குபா (Cufa) ஆகிய நகரங்களிலும் உள்ளன.

இந்த முகம்மதிய வேதத்திலுள்ள 114 அத்தியாயங்களும் நபி பெரு மான் அவர்களுக்கு ஒரே காலத்தில் அருளப் பெற்றவைகளல்ல. அவை யாவும் 23 வருடங்களில் அருளப் பெற்றவைகளாகும் இந்த 23 வருடங்களில் நபிகள் நாயகம் மக்காவில் 13 வருடங்களும், மதீனாவில் 10 வருடங்களும் வசித்திருக் கிறார்கள். அவர்கள் மக்காவில் வசித்திருந்த 13 வருடகாலத்தில் மக்காவிலும், அவர்கள் சென்றிருந்த மற்றைய விடங்களிலும் அருளப்பெற்ற அத்தியாயங் களுக்கு மக்கீ என்றும், மதினாவில் அவர்கள் வசித்திருந்த 10 வருடகாலத்தில் மதீனாவிலும், அவர்கள் சென்றிருந்த மற்றைய விடங்களிலும் அருளப்பெற்ற அத்தியாயங்களுக்கு மதனீ என்றும் பெயர் கூறப்பெறுகின்றன,

ஒரு பாத்திரமானது, அதைச் செய்தவனொருவன் உண்டென்பதைச் சந்தேகமற அறிவிப்பதைப்போல காற்றால் அசையும் மரஞ்செடிகள் தங்கள் அசைவைக்கொண்டு, தங்களை அவ்வாறு அசைத்தகாற்று ஒன்றுள்ளது என்பதை

அறிவிப்பதுபோல, இவ்வுலகில் நிகழக்கூடிய அத்தனை நிகழ்ச்சிகளிலும், இவை களை இவ்வண்ணம் நிகழ்த்துபவனொருவன் உண்டென்றறிவிக்கின்றன. உலகத்தி லுள்ள யாவையும் தோற்றுவித்தவனே, அங்கு நிகழும் நிகழ்ச்சிகளையும் நிகழ்த்து கின்றான்.

உலகிலுள்ள உயிர்களுக்கு உணவளித்து வருகின்றான் என்பதற்காக (றழ்ழாக்) உணவளிப்போன் என்றும், அவைகளை ஆதரித்துப் பரிபக்குவப்படுத்து கிறான் என்பதற்காக (றப்பு) ஆதரித்துப் பரிபக்குவப் படுத்துவன் என்றும் இறை வோனுக்குக் காரணப்பெயர்கள் உண்டு. அவன் தோற்றுவித்தவை இவ்வளவு தான்அவன் செய்யும் தொழில்கள் இவ்வளவுதான் என்று அறிந்துகொள்ள முடியாமலிருப்பதைப்போல இறைவனுடைய காரணப்பெயர்களையும் இவ்வளவு தான் என்று நம்மால் அறிந்துகொள்ள முடியாது.

அளவில்லா அறிவும், ஆற்றலும், மேலான பரிசுத்தத் தன்மையும், உயர்ந்த தூய்மையும் எவரிடத்து பரிபூரணமாகவுளதோ அவனே அல்லாஹ் என்று அழைக்கப்படுபவன். இறைவனைத் தவிர வேறு ஒருவருமில்லையாதலால் அவனுக்கு (வாஹிது) 'ஒருவன்' என்றும், (அஹது) 'தனித்தவன்' என்றும் பெயர்கள் வழங்கப்படுகின்றன. அல்லாஹ் என்று சொல்லும்பொழுதே அவன் ஒருவன் என்றும், அவன் தனித்தவன் என்றும் அறிவிக்கின்றன. அல்லாஹ் என்னும் பதத்திற்கு ஆண்பாலோ, பெண்பாலோ, பலர்பாலோ கிடையாது. அல்லாஹ் என்ற ஏக இறைவனுக்கு 99 காரணப்பெயர்கள் உள்ளன. இருப் பினும் அவைகளில் மிக முக்கியமானது றஹ்மான், றஹீம் என்ற இரண்டு பெயர்களேயாகும். அன்பையும், அருளையும் வெளியிடும் உயர்ந்த தன்மைக்கு 'றஹ்மத்' என்று பெயர். 'றஹ்மத்' என்னும் இத்தாதுவிலிருந்தே றஹ்மான், றஹீம் என்ற இரண்டு காரணப்பெயர்களும் பிறந்தன. யாருடைய நடத்தை யையும் கவனியாது, யாவருக்கும் சமமாக அருள் வழங்குவோனை 'றஹ்மான்' என்றும், ஒருவனின் உயர்ந்த நடத்தையினைக்கண்டு மகிழ்ந்து, அவன்மீது அன்பு கூர்ந்து அவனுக்குச் சன்மானமாக அளிப்போனுக்கு 'றஹீம்' எனவும் முகம்மதிய வேதம் அழைக்கின்றது. இறைவனுனவன் மிகச் சிறிய உயிர்களான எறும்பு போன்ற பிராணிகளை சூரியன் உஷ்ணம் வருத்தாவண்ணம், ஆனால் மக்களுக்கு வேண்டிய உஷ்ணத்தை அளிக்கும்வண்ணம் சூரியனைப் பல லட்ச மைல்களுக் கப்பால் வைத்துள்ளதே இறைவனின் பெருங்கருணையினை நினைப்பூட்டப் போதுமானது.

முகம்மதிய வேதம் இறைவனை அறக்கருணையாளராகவும், மறக்கருணை யாளராகவும் இருக்கிறார் என்று கூறுகின்றன. குற்றவாளிகளைத் தண்டிப்பது அன்பிற்கு முரணாகாதென்று அவ்வேதமே முழங்குகிறது. றழ்ழாக் (ஆகார மளிப்போன்) றஹீம் என்று மனிதர்களையும் பெயரிட்டு அழைக்கலாம். அதனால்

இறைவனைக் குறிப்பிடும்போது அல்றஹ்மான், அல்றஹீம், அல்றழ்ழாக் என்று 'அல்' என்ற அடைமொழி சேர்த்தே அழைக்கவேண்டும்.

குர்ஆனின் முதல் மூன்று வசனங்களும் இறைவனின் புகழாகவே இருக்கின்றன. பின்னர் கூறப்பட்டுள்ள நான்கு வசனங்களும் மனிதன் இறைவனிடம் செய்யவேண்டிய பிரார்த்தனைகளாக இருக்கின்றன.

முதல் மூன்று வசனங்களாவன:-

1. எல்லாப்புகழும் அல்லாஹ்வுக்கே (அவன்) படைப்புகள் எல்லாவற்றையும் (படைத்து) ஆதரித்துப் பரிபக்குவப் படுத்துவோன்.

2. அளவற்ற அருளாளன் நிகரற்ற அன்புடையோன்.

3. தீர்ப்புநாளின் அதிபதி.

பின்னர் கூறப்பட்டுள்ள நான்கு வசனங்கள்:-

1. நாங்கள் உன்னையே வணங்குகிறோம், மேலும் உன்னிடமே உதவி தேடுகிறோம்.

2. நேரானவழியை எங்களுக்கு அறிவித்து அவ்வழியில் எங்களை நீ நடத்துவாயாக.

3. (அவ்வழி) எவர்களுக்கு நீ அருள் புரிந்தாயோ அவர்கள் சென்ற வழி (அதாவது-உன்னுடைய அருளை அடையக்கூடிய வழி)

4, உன்னுடைய கோபத்திற்குள்ளானவர்களோ, வழி தப்பியவர்களோ சென்ற வழியல்ல. (அதாவது:- உன்னுடைய கோபத்திற்குள்ளாகக்கூடிய தப்பான வழியல்ல).

இவ்விதமாக குர்ஆன் முதல்முதலாக மக்கள் செய்யவேண்டிய கடமையினைக் கூறுகின்றது. உள்ளமும் உடலும் ஒன்றி, இருகரங்களையும் கூப்பி, மிக்க மரியாதையோடும் (கியாம்) நின்று, (கிராஅத்து) இப்பிராத்தனையைக்கூறிக் (ருகூட), குனிந்து, (ஸுஜுது) தலை பணிந்து இறைவனை வணங்கவேண்டும். இவ்வாறு வணங்குதற்கே 'தொழுகை' என்று பெயர். இறைவன் அருளை அடைய விரும்பும் ஒவ்வொருவனும் தினந்தோறும் குறைந்தது ஐந்து முறையாவது இறைவனைத் தொழுது இவ்வத்தியாயத்தை ஓதும்படி குர்ஆன் கட்டளையிட்டிருக்கிறது.

நபிநாயகம் காலத்திற்கு முன்பே அனேக நபிகள் இருந்திருக்கிறார்கள். அவர்களில் பலருக்கு வேதங்கள் அருளப் பெற்றுள்ளன. இவ்வாறு அருளப் பெற்றவர்களில் இப்றாஹீம், இஸ்மாஈல், இஸ்ஹாக், யஃகூப் முதலிய நபிமார்களுக்கு அருளப்பெற்ற வேதங்கள் தவறிப்போய் தற்காலத்தில் எவரிடமும் அவையில்லை. அவைகளின் பெயர்களும் தெரியவில்லை. ஆயினும் மூஸாநபிக்கு 'தவ்றாத்' என்னும் வேதமும், தாவுதுநபிக்கு "ஜபூர்" என்னும் வேதமும், ஈஸா நபிக்கு 'இஞ்ஜீல்' என்னும் வேதமும் அருள் புரிந்திருந்ததாக இறைவனே இவ்வேதத்தின் மூலம் நமக்கு அறிவித்திருக்கின்றனர்.

"இறைவன் தூணிலும் உளான், துரும்பிலும் உளான்" என்கின்றது இந்துமதம். ஆனால் "மேற்கு திசையும், கிழக்கு திசையும் அல்லாவிற்கே உரியன. ஆகையால் நீ அவனை வணங்குவதற்காக எங்கு நோக்குகின்றாயோ அங்கே ஆண்டவனின் முகம் இருக்கிறது. கடவுள் எங்கும் நிறைந்தவர், சர்வ ஞானியுமானவர். ["To God belongeth the East and the West, therefore wherever thou turnest thyself to pray, there is the Face of God, for God is Omnipresent and Omniscient" - Al. Quran ii : 115] என்று குர்ஆன் இறைவன் உலகமெங்கும் பரந்துள்ள நிலைமையினை அறிவிக்கின்றது. நீ செய்கின்ற செயல்களை இறைவன் பார்த்துக்கொண்டேயிருக்கிறான்." (God seeth that which you do) (Ibid *1* vii *: 4*) என்றும், "அவருடைய ஆட்சி மேலே தேவலோகத்திலும் கீழே பூமியிலும் நடக்கிறது" (Ibid : ii. 255:) "எல்லாம் கடவுளிடத்திருந்தே தோன்றின. (Ibid iv : 77.) எனவும், "எவன் என்மீது நம்பிக்கை வைத்து என்னை நினைக்கின்றானோ அப்பொழுது நான் அவனிடமிருக்கிறேன், அவன் அருகிலேயே இருக்கிறேன்" (The sayings of Mohammad P. 114) எனவும், யார் என்னைத் தேடி ஒன்பது அங்குலம் நெருங்கி வருகின்றார்களோ, நான் அவர்களை நோக்கித் தேடிக்கொண்டு ஒரு முழம் நெருங்கிச் செல்வேன், யார் என்னை நோக்கித் தேடிக்கொண்டு ஒருமுழம் நெருங்கி வருகிறார்களோ, நான் அவர்களை நோக்கித் தேடிக்கொண்டு 12 அடி தூரம் நெருங்கிச் செல்வேன், யார் என்னை நோக்கி நடக்கிறார்களோ, நான் அவர்களை நோக்கி ஓடுவேன்" God Saith........who seeketh to approach Me one span, I seek to approach one cubit, and whoso seeketh to approach Me one cubit, I seek to approach him two fathoms; and whoso walketh towards Me, I run towards him - Ibid P. 114 ) எனவும், முகம்மதிய மதநூல்கள் இறைவனின் உயர்ந்த தன்மைகளை நமக்கு எடுத்துக் கூறுகின்றன. இஸ்லாம் கண்ட இறைவனின் இணையற்ற சிறப்பினை ஒருவாறு உணரலானோம்.

"ஒன்றுமில்லாத இடத்திலுங்கூட ஆண்டவனிருக்கிறான். அவர் மனிதனது வாழ்விற்கு முன்பும் பின்பும் நிகழக்கூடிய அத்தனை செயல்களையும்

அறிவார். அவர் இருளில்லாத ஒளி, அவர் அழிவில்லாத வாழ்க்கையினை யுடையவர். அவர் அறியாமையில்லாத அறிவு அவர் எல்லாவற்றையும் பார்க்கிற வராகவும், பார்க்கும் கண்களாகவும், பார்க்கப்படும் பொருள்களாகவுமிருக்கிறார்" (Gulshan-i-Raj) என்றும் இறைவனுக்கு இஸ்லாம் விளக்கம் கூறுகின்றது.

"அவர்தான் சிருஷ்டிக்கும், காப்பிற்கும், அழிவிற்கும் காரணமாக இருக்கிறார் "(He is the cause of creation, preservation and destruction" vishnu purana i. ii. 62.) என்று விஷ்ணு புராணம் கூறுவதை முகம்மதிய மத நூல் "யார் உயிர்களின் சிருஷ்டியையும் அவைகளின் அழிவையும் கொடுக்கின்றாரோ அவரே எனது பிதாவான கடவுள்" (Ibid ii. 258) என்று கூறுகின்றது.

"கடவுள் எல்லா பொருள்களையும் ஆளுகின்ற கர்த்தாவாக இருக்கிறார்" (Ibid xi. 7) "கடவுள் மிக்க கருணையுள்ளவராகவும், அறிவாளியாகவும் இருக்கிறார்' (Ibid xxii. 64) என கடவுளின் கருணைமிக்க செயல்களையும் முகம்மதிய மதநூல் கூறுகின்றன.

"உண்மையாகவே கடவுளானவர் அவரால் சிருஷ்டிக்கப்பட்ட உயிர்களின்மீது, ஒரு தாயானவள் தனது குழந்தையிடம் காட்டும் அன்பைவிடவும் அதிகமாக அன்புடையவராக இருக்கிறார்" (Lord Muhammad said: "Verily, god is Compassionate on his creatures than this woman on her own child.") என்று நபிநாயகம் அவர்களே இறைவன்தான் உயிர்களுக்கெல்லாம் உண்மையான தாய் என்று கூறியிருக்கிறார்.

இதனால் இஸ்லாம் மதமானது மிக உன்னதமான - மிக உயரிய நல்ல கொள்கைகள் பல உடைய - மாண்புமிக்க மதமாக விளங்குகின்றது என்பதை மேற்கண்டனவற்றால் அறியலாமேனும், இதுபோன்றே உலகிலுள்ள ஒவ்வொரு மதமும் சிறந்த கொள்கைகள் பல தன்னகத்தேயுடையன. அதனால் மக்களிடத்து சமயப்பொறையானது சுடர்விட்டு, ஒளிரவேண்டும். மதங்களிடத்தே காணப் படும் சிறுசிறு மாசுகளைக்காணாது, அதன்கண் ஒளிரும் உயர்ந்த உண்மைகளைக் கண்டு அதன்படி ஒழுகுதலே, உயர்ந்தோர் தாம் இன்னும் உயர்வதற்காக செய்ய வேண்டிய பணியாகும்,

மாண்புடைய மதங்கள் மாநிலத்தில் மதிப்புற்றோங்குக!

---

# பதினெண் புராணச் சுருக்கம்.

**ஸ்ரீ வத்ஸ. வெ. ஸோமதேவசர்மா.**

*(வைதிக தர்மவர்த்தினீ ஆசிரியர்.)*

***புராணமென்றால் என்ன?*** *பழமையானது. அண்டியவரை முன்னுக்குக் கொண்டுவருவது. பழயதாயினும் புதிதாகத் தோன்றுவது என்ற சொல் உலகசிருஷ்டி, உலகம் இறைவனிடம் ஒடுங்குதல், சந்திரர் சூரியர்களது வம்சம், பதிநான்கு மன்வந்தரம், பெருமைவாய்ந்த மன்னர்களது சரிதம் ஆகிய இவைகளையே குறியாகக் கொண்டவை புராணங்கள். அதே புராணலக்ஷண மாகும்.*

***புராணம் எப்படி உண்டானது?*** *வேதம் இதிஹாஸம் புராணம் உபநிஷத்து கல்பம் முதலியவைகள் கடவுளிடமிருந்து மூச்சுக்காற்றுப்போல் உண்டாயின. புராணம் நூறுகோடி சுலோகங்கள் கொண்ட ஒரே நூலாக இருந்தது கற்பத்தின் ஆரம்பத்தில் இருந்தவர் அதைக்கொண்டு பயன்பெற்றனர். காலம் வளர வளர ஜனங்களின் சித்தி பலவிஷயங்களில் சென்று ஒருமைப் படாமல் குன்றிப் போயிற்று. இதை அறிந்த இறைவன் ஒவ்வொரு சதுர் யுகத்திலும் ஒவ்வொருவரை அனுப்பி வேதத்தை நான்காகப் பிரித்ததுபோல் புராணத்தையும் பதினெட்டாகப் பிரிக்கும்படி உத்திரவிட்டார். நான்குலக்ஷம் சுலோகம் உள்ள பதினெட்டு புராணங்கள் துவாபர யுகத்தின் முடிவிலே வகுக்கப் பட்டது.*

***புராணகர்த்தா யார்?*** *கற்பம் தோன்றியபின் இருபத்து ஏழு சதுர் யுகங்கள் தோன்றி மறைந்தன. இதுவரை இருபத்துஏழு வியாசர்கள் தோன்றி இறைவன் கட்டளையை நிறைவேற்றியதுபோல் சென்ற துவாபர யுகத்தின் முடிவில் விஷ்ணு வேதவியாஸராகத் தோன்றிப் புராண பாகுபாடு செய்தார் ஆதலின், வியாஸாய விஷ்ணுரூபாய வியாஸரூபாய விஷ்ணுவே என்பர். சிவம் நாராயணன், பிரும்மா, வஸிஷ்டர், சக்தி பராசரர் வியாஸர் என்பது குரு பரம்பரையாகும். பராசரமுனிவர் செம்படவனால் வளர்க்கப்பட்ட ஸத்யவதீ என்பவளை மணந்தார். அவள் ஒரு மன்னனது மகள். சாபத்தினால் மீனாக அப்ஸரஸினிடம் உண்டானவள். முனிவரை ஓடத்திலேற்றி யமுனையைத்*

தாண்டி வைக்கும்பொழுது பராசரர் தன் தவவலிமையால் மத்ஸ்ய கந்தியை யோஜனகந்தியாகச் செய்தார். ஸப்தரிஷிகளை அழைத்து விதிப்படி மணந்தார். பனியினால் ஒரு தீவுபோல்செய்து அங்கு ஒரு புத்திரனைப்பெற்றார். த்வீபத்தில் உண்டானதால் துவைபாயனர் என்றும் கருநிறத்துடனிருந்ததால் க்ருஷ்ணன் என்றும் பெயர் உண்டானது. பிறகு வேதத்தை நான்காக வகுத்து வேதவியாஸர் என்ற காரணப்பெயரைப் பெற்றார். அவரே காசிமாநகரத்திலிருந்து பதினெண் புராணங்களை இயற்றியவர். மஹாபாரதமெனும் இதிஹாஸத்தையும் பிர்ம்ம சூத்திரமெனும் வேதாந்த சூத்திரங்களையும் இயற்றியவர் இவர்.

**புராணத்தின் பெருமை :** மிகப்பழமையான பதினான்கு வித்தை களில் ஒன்று புராணம். அது வேதத்தின் அங்கமாகும். வேதம் இருக்கு யஜுஸ் ஸாமம் அதர்வணம் என்ற நான்காம். சிக்ஷை, வியாகரணம், சந்தஸ், நிருக்தம், ஜ்யோதிஷம், கல்பம், என்பன ஆறு அங்கங்கள் புராணம் நியாயம் மீமாம்ஸா தருமசாஸ்திரம் என்பன நான்கு உப அங்கங்களாம். வேதபுருஷனுக்குப் புராணம் ஆத்மா எனப்படும். பாரதநாட்டுப் பதினான்கு வித்யைகளில் அறுபத் துநான்கு கலைகளும் அமைந்திருக்கின்றன. மற்ற அங்கம் ஒவ்வொரு விஷயத் தையே கூறும். புராணமோ வேதத்தினுள்ளே காணப்படும் ஸகல விஷயங் களையும் எளிய நடையில் எல்லோரும் அறியும்படி விளக்குகிறது. ஆதலால் நித்திய கருமம்போல் அன்றன்றும்புராணம் கேட்கவேண்டும் எனவிதிக்கப் பட்டுளது. அன்றன்று செய்யும் பிரும்மயக்ஞம் என்ற நித்தியகருமத்தில் நான்கு வேதங்களுக்கும் இதிஹாஸ புராணங்களுக்கும் ஜலதர்ப்பணம் செய் யும்படி தர்மநூல் ஆணை இருக்கிறது. பாஷ்யம் இயற்றிய ஸகல ஆசாரியர் களும் புராண சுலோகங்களையே மேற்கோளாகக் காட்டுகின்றனர். ஆதலின் புராணம் ஒரு தெய்வீக நூலாகும்.

**புராணப்பயன் :** மறையின் பொருள் மறைந்திருக்கின்றது. அது மிக ஸூக்ஷ்மமானது. அதைக் கதையின் மூலமாக பூதக்கண்ணாடிபோல் விளக்கிப் பெரியதாகக் காட்டுகிறது புராணம், வேதம் மாத்திரம் கற்றால் கல்வி பூர்ணமாகாது. பூரணமாக அங்கங்களையும் கற்காதவனைக் கண்டு வேதம் "உள்ள பொருளைக்கூறாமல் நம்மை இவன் கொல்லுவானோ என அஞ்சுகிறதாம். ஆதலால் இதிஹாஸ புராணங்களால் வேதத்தின் பொருள்களை விரிவுபடுத்த வேண்டும். வேதமொழி அரசன் ஆணை. தர்மநூல் நண்பன்மொழி. புராணச் சொற்களோ கல்மனத்தையும் கரைக்கும் காதலியின் மொழிபோன்றதாம், "தர்மம்செய்" என்பது வேதத்தின் ஆணை. ஏன் செய்யவேண்டும்? அதனால் வரும் பயன்யாது? என்ற கேள்விக்கு இடமில்லை. நாம் தேடியபொருள் இல்லத் திலே நிற்கும். உறவினர் சுடுகாட்டுடன் திரும்புவர். தர்மமே உற்ற துணைவனாக

உன்னை விட்டுப் பிரியாமல் வரும் என்று; நண்பன் மொழியான என்ற தர்ம சாஸ்திரம் கூறும். காதலிமொழியான புராணமோ ஒருகதைகூறி மாந்தர் மனத்திலே பசுமரத்தாணிபோல் அதைப் பதிப்பிக்கின்றது.

மன்னன் ஒருவன் மநுநீதிவழுவாமல் மாநிலத்தை ஆண்டு வந்தான். மாறுவேடம் பூண்டு மறைந்திருந்து மக்கள் துன்பத்தை விளக்குவான். கறிகாய் விற்று வயிறுவளர்க்கும் ஒரு ஏழை தன் பொருள் விற்பனையாகாமல் மனம் நொந்து மாலையிலே மனைக்குச் செல்வதைக்கண்டான் மன்னன். அரசன் ஆணை விடுத்தான். விற்காத பொருளை விலைக்குவாங்கி வேந்தன் வீட்டிலே சேர்த்தான் பணியாளன். அதர்மத்திற்குக்கண் உறுத்திற்று. சீறினான் அவன். அரசனை ஒருகை பார்ப்போம் என எண்ணினான். மிக ஆபாஸமான பயங்கரமான மூதேவி யின் உருவம் ஒன்றை அனுப்பினான் கடைவீதிக்கு. அதைக்கண்டவர் கண்களை மூடிக்கொண்டு வெகுதூரஞ் சென்றனர். பொழுது சாய்ந்தது. எல்லாப்பொருள் களும் விற்றுமுதலாயின. அனைவரும் வீடுசென்றனர். மூதேவி உருவக்காரர் அவ்வுருபோலவே நின்றார். ராஜகிங்கரன் அரசனாணையின்படி, கேட்டபொருளை அளித்து அந்த மூர்த்தியை அரண்மனையில் கொண்டு அமர்த்தினான்.

அரசன் அன்றைய கடமைகளைச்செய்து படுக்கை அறைக்குச்சென்றான். திவ்ய உருவம்வாய்ந்த தேவி ஒருவள் தன் உடலிலிருந்து கிளம்பிச் செல்வதைக் கண்டான். திடுக்கிட்டு எழுந்து விழுந்து பணிந்து, கேட்கிறான் .''தாயே நீ யார்?'' ''நான் ராஜலக்ஷ்மி'' ''எங்கே கிளம்புகிறீர்'' ''வேறு வேந்தனிடம் செல்கிறேன்'' ''நான்செய்த குற்றமென்ன?'' ஸ்ரீதேவியை மதியாது மூதேவியை விலைக்கு வாங்கி வைத்திருக்கிறாய்.

''அச்சிலையை அப்புறப்படுத்துகிறேன்''

''அது போதாது. சொந்தக்காரனிடம் அளித்த பொருளைத் திரும்பப் பெறவேண்டும்''.

''ஏழை உணவில்லாமல் தவிப்பனே''

சரி போகிறேன் நான் என்று ராஜ்யலக்ஷ்மி கிளம்பிவிட்டாள். மன்னன் மதிகலங்கி சிந்தைநொந்து தவித்தான். மற்றொரு தேவியுங் கிளம்பக்கண்டு நீ யார் என்றான். நான் தனலக்ஷ்மி எனக் கூறிக்கொண்டே அவளும் சென்றாள்.

இங்ஙனம் தான்யலக்ஷ்மி, கஜலக்ஷ்மி, வீரலக்ஷ்மி முதலிய அஷ்ட லக்ஷ்மிகளும் சென்றனர்.

அரசன் என்ன செய்வதென்று தெரியாமல் அயர்ந்து நின்றான். சகல சாமுத்ரிகா லக்ஷணங்களும் பொருந்திய திவ்விய புருஷன் ஒருவன் தோன்றி அவர்களைப் பின்பற்றினான்.

மன்னன் ஐயா தாங்கள் யார்?

"நான் தர்மதேவதை"

வணக்கம். ஏன் சொல்கிறீர்? எங்குச்செல்கிறீர்?

எனது சகோதரிகள் சென்றவிடம் போகிறேன்,

உம்மை விடமாட்டேன் எனக் கத்தியைக் கரத்தில் எடுத்தான். தர்ம புருஷன் மன்னன் உடலிலே மறைந்தான். சென்ற லக்ஷ்மிகள் திரும்பினர். ஒருவர் பின் ஒருவராக உள்ளே சென்றனர். மன்னன் மனம் மகிழ்ச்சி அடைந்தது.

"தர்மம்சர" என்ற ராஜ ஆக்ஞையைச் சுவையான கதையால் விளக்குகிறது புராணம். ஒரு கதையின் மூலமாக எவ்வளவு தர்மங்கள் வெளியாகின்றன. தர்மம் செய்பவருக்குப் பலகஷ்டம் உண்டாகலாம். உயிரையும் மதியாமல் தர்மம்செய்-முடிவில் வெற்றிநிச்சயம்.

கற்றோரும் மற்றோரும் பரிவுடன் கேட்கவும், படிக்கவும், ருசியானது புராணம். பற்பல நீதிகளைப் புகட்டுகிறது. நல்வாழ்வுக்கு நற்றுணையாகின்றது. பாபங்களைப் போக்குகிறது மனத்தின் மலத்தை மாய்க்கிறது. புண்ணியத்தைத் தருகிறது. உண்மை இன்பத்தை ஊட்டுகிறது புராணம்.

**புராணம் எத்தனை? எவை?** பிராமம், பாத்மம் வைஷ்ணவம், சைவம், (வாயவீயம்) பாகவதம், பாவிஷ்யம் நாரதீயம், மார்க்கண்டேயம், ஆக்நேயம், பிரும்மவைவர்த்தம், லிங்கம், வாராஹம், வாமநம், கூர்மம். மாத்ஸ்யம், காருடம், ஸ்காந்தம். பிரும்மாண்டம் என்ற பதினெட்டும் மஹாபுராணங்கள். இவைகளை இயற்றியவர் வியாஸர் ஒருவரே ஆவர். பதினெட்டு உபபுராணங்கள் இருக்கின்றன. அவற்றை இயற்றியவர் வெவ்வேறு ரிஷிகள், ஸநத்குமாரம், நாரஸிம்ஹம், ஸ்காந்தம், சிவதர்மம், நந்தி, தூர்வாஸம், நாரதம், காபிலம், மாநவம், ஔசநஸம், பிரும்மாண்டர், வாருணம், காளி, மாஹேச்வரம், ஸாம்பம், ஸௌரம், பாராசர்யம், மாரீசம் இவை பதினெட்டும் உபபுராணங்களாம். உபபுராணம் என்ற பெயரால், பாகவதம், வஸிஷ்டம், கௌர்மம், பார்க்கவம், முத்கலம், மஹாபாகவதம், காலிகா முதலியவைகளும் அழைக்கப்படுகின்றன.

மஹா புராணத்திலும், உபபுராணத்திலும், பாகவதம் ஸ்காந்தம் நாரதம், பிரும்மாண்டம் என்பவை காணப்படுகின்றன. ஆனால் தேவீ பாகவதம், விஷ்ணுபாகவதம்பற்றியும் ஸ்காந்தம்பற்றியுமே பெரிய வாதம் இருக்கிறது. உபபுராணங்களில் பல ஓலைச்சுவடிகள்கூட அகப்படுவதில்லை. மஹா புராணங்கள் பதினெட்டும் பாம்பேயில் நாகர அக்ஷரத்தில் கோபால நாராயண என்ற கம்பெனியார் அச்சிட்டுத் தருவது மகிழ்ச்சிக்குரியது.

**புராணத்திலும் கலப்பா?** வியாஸர் எல்லாமறிந்தவர். வருங் காலத்தை நன்கு அறிவார். வருங்காலமக்களின் மனப்பான்மையையும் உணர்ந் தார். "தனது கொள்கையை வேதம்போல் அமைத்து வேதத்தில் புகவிடுவர் சிலர்" என எண்ணினார். அங்ஙனம் நடவாதபடி இது இவ்வளவுதான் என வேதத்தைக் கணக்கிட்டு வைத்தார். அங்ஙனமே கவிசக்திவாய்ந்த சிலர் புராணங் களில் சிலவற்றைச் சேர்க்கக்கூடும். தனிப்புராணமே இயற்றக்கூடும் என அஞ்சி மஹாபுராணம் பதினெட்டே உபபுராணமும் பதினெட்டே எனவகுத்தார். பதினெட்டு என்ற எண் ஜயமளிக்கவல்லது, அதை மனதிற்கொண்டு பலவற்றைப் பதினெட்டாக அமைத்தனர் முன்னோர். 18 கிராமங்கள். 18 ஜாதி. 18 பாஷைகள் 18 வாத்தியங்கள். உடுத்தும் வஸ்திரம் 18 முழம். பாரதம் 18 பர்வா. பாரதப் போர் 18 நாள். ஆங்கு அழிந்தஸேனை 18 அக்ஷௌஹிணி. கீதை 18 அத்யாயம். வேள்வியில் 18 பேர் ஈடுபடுவர். ஸூக்ஷ்ம உடல் 18 பொருள்களால் அமைந்தது. 18 தர்மநூல்கள். 18 வேதவித்தைகள். 18 ஆகமங்கள். சபரிமலை ஐயப்பன் படி 18 ஆதலால் 18 புராணங்களை இயற்றி ஒவ்வொன்றிலும் இத்துணைசுலோகம் எனக் கணக்கிட்டார். இவ்வளவு ஏற்பாடு செய்தும் புராணங்களில் முற்கூறிய குறைபாடுகள் இல்லாமல் இல்லை. சில புராணங்களில் குறிப்பிட்ட கணக்குக் குறைகிறது. சிலவற்றில் அதிகமிருக்கின்றது.

முன்னவர் லீலாவதி போன்ற கணக்கு நூற்களில் இலக்கங்களுக்குப் பதில் எழுத்துக்களை உபயோகித்து சுலோகவடிவமாக இயற்றினர். அதற்குக் "கடபயாதி" என வடிவமாக இயற்றினர். க முதல் 10, ட முதல் 10 ப முதல் 5, ய முதல் 10 எழுத்துக்கள் என ஒரு கட்டுப்பாட்டைச் செய்து, எந்த எழுத்தைக் கூறுகிறார்களோ அதை எண்ணி இலக்கமாகக் கருதவேண்டும் ஜ எனில் க வினில் எட்டு. ய எனில் ஒன்று. இந்த கணக்கில் முன்கூறுவதைக் கடைசியில் வைக்கவேண்டும். அதனால் ஜய எனில் 18 என்று பொருள் 18 புராணங்களுக்கும் ஜய என்று பெயர் வைத்திருக்கிறார் வியாஸர். ஆதலால் மஹா புராணங்களும் உபபுராணங்களும் பதினெட்டுதான் என்பது நிச்சயம்.

**புராணத்தில் உள்ளதென்ன?** புராணத்தில் இல்லாததென்ன என்பதே இதற்கேற்றபதில். மறைகளிலுள்ள வேள்விகள், பிர்ம்மா முதல் கொசு வரையிலுள்ள பிராணிகளின் படைப்பு, பிருமாண்டத்தின் அமைப்பு,

தேவஜாதிகளின் பிரிவு, நவக்ரஹ மண்டலம். அவைகளின் சலனம், அதனு லுண்டாகும் நன்மை தீமைகள், சிருங்காரம் முதல் பிரும்ம வித்தை வரை உள்ள சாஸ்திரங்கள் நக்ஷத்திரமண்டலம், ஸுவர்க்க நரகம், பதிநான்கு உலகங்கள். அங்கே வாழ்பவர்களின் சரிதம், ஆலய அமைப்பு, தேவதைகளை பிரதிஷ்டை செய்தல், தேவர்களை ஆராதித்தல், விருதங்கள், நோன்பு, தேவதா மந்திரங்கள், துதிகள், ஸஹஸ்ரநாமங்கள், அஷ்டோத்திரங்கள், சிற்பம் கோபுரம் பிராணிகளின் உடலமைப்பு, நாடிகள் எத்தினை? எத்தனை மூச்சு விடுகிறோம்? எத்தினை எலும்புகள் உடலில் இருக்கின்றன? எத்தனை உரோமம் உள? எப்படி ஜீவன் உடல் எடுக்கிறது? எப்படி இறக்கிறது? எங்கே செல்கிறது? மழை மேகம், சூரியகிரணம் கால அளவு ஸங்கீதம் நடனம், காவிய நாடக அமைப்புக் கீதைகள், நற்சகுனம், தீயசகுனம், நற்கனவு, தீயகனவு, கனவை அகற்ற வழி; எப்பொழுது இறப்போம் என கண்டறிய வழி, நோய் உண்டாகும் வழி, அதை அகற்றும் வழி, யானை குதிரை பசு முதலியவைகளுக்குச் சிகித்சை, செடிகொடிகளுக்கு வைத்தியம் பாம்பு எப்போது கருதரிக்கும்? எத்தனை முட்டையிடும்? கூடுவிட்டு கூடுபாயும் வகை, பாஷைகள், அவை உண்டானவகை, நீதி, ராஜநீதி, அரசியல் ஆயுதம், விமானம், ரதம், மகுடந்தரிக்கும் வகை, தர்மயுத்தம், ஜயம்பெறவழி, அதர்ம யுத்தம், மந்திரத்தால் பகைவனை அழிப்பது, சூன்யம் வைப்பது, எடுப்பது, ஆகாயத்தில் பறந்து செல்வது, பசிஇல்லாமலிருக்க ஒஷதி, நதி, மலை, விலை பொருள், எங்கு வசிக்கவேண்டும், யாருடன் கூடவேண்டும், அன்றன்றுநமக்காக என்னசெய்யவேண்டும், பிறர்க்காக என்னசெய்யவேண்டும். குருபரம்பரை, மந்திரதீக்ஷை குருலக்ஷணம், சீடன் கடமை, பெண்கள் லக்ஷணம், கடமை, ஆச்சர்யமானகதை நிதிகள், நிதிகளைக்காணும்வழி, பொன்செய்யும்வழி, பக்தி, கருமம், ஞானம், யோகம், வேதாந்தம், ராமாயண பாரதங்களில் உள்ள கதை களை நன்குவிளக்கும் உபகதைகள், நகைச்சுவை ததும்பும் நீதிக்கதைகள் கீதைகள் இதுபோன்ற மற்றும் பல எண்ணிறந்த விஷயங்கள் புராணங்களில் காணப் படுகின்றன.

**புராணச் சிறப்பு**: சிவபுராணம் 10. விஷ்ணுபுராணம் 4. பிரும்ம 2. அக்நி 1. ஸூர்யபுராணம் 1. சில தனிப்பட்ட விஷயங்களை ஒருபுராணம் விரி வாகக் கூறினாலும் மற்றவிஷயங்களை மறப்பதில்லை. ஹரியும் ஹரனும் ஒன்றே என்ற சமரசத்தை வற்புறுத்தாத புராணமே இல்லை. குறுகிய மனப்பான்மையை அகற்றி விசாலமான புத்தியைத்தருகிறது புராணம். இராமாயணம்போல் ஒருவர் சரிதத்தை மாத்திரம் கூறாது. பக்தர்கள் கேட்கும் சகலசமரசங்களையுங் கூறும். ஆதலால் சிலர் இதில் கதைத்தொடர்பில்லையே என்பர். நடந்த கதைகளையும் சரித்திரம்போல் சிலவிடத்தில் கூறும் கற்பனைக்கதைகளைக்கூறி நீதியும் புகட்டும். வெவ்வேறுவகையாக ஒரே கதையை வர்ணிக்கும்; ஆதலால் ஒன்றுக்கொன்று முரண்படுவதுபோல் தோன்றும் ஆனால் அது ஒரு கல்பத்தில் நடந்தது. இது ஒரு

கல்பத்தில் நடந்தது. ஆதலால் வேற்றுமையுடன் ஒற்றுமையையும் காணலாம். சில புராணப்பெயர் ஒன்ருக இருக்கும். மார்க்கண்டேயபுராணத்தில் அவர் சரிதம் கிடையாது. அவர் கூறியதால் அவர் பெயரால் அழைக்கப்படும் சிலவிடத்தில் கேட்டவர் பெயரே புராணப்பெயராக இருக்கும். கருடன்கேட்டதால் காருடம் என்று பெயர்.

ஜெர்மனி அமெரிக்கா போன்றநாடுகள் இந்தியச் செல்வமான புராணங் களைவிலைக்கு வாங்கிச்சென்று பற்பல இயந்திரங்களையும் மருந்துகளையும் செய்தன. சிலமேதாவிகள் தன் பாஷையில் எழுதி புராணங்களைப் போற்றினர். சுருங்கச் சொல்லின் புராணம் ஒரு கடல். புராணம் ஒரு நிதி. ஸாமர்த்தியமும் அதிர்ஷ்டமும் உள்ளவர் தனக்கு வேண்டியதைப் பெறலாம்.

நம் தவப்பயனுக ஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கள் செய்துவரும் சமயோ சிதமான தர்மபிரசாரத்தில் புராணவிஷயமும் இடம்பெற்றது மிக மிகக் கொண்டாடத்தக்கதாகும்.

**1. பிர்ம்ம புராணம்:** பிர்ம்மாவினுல் கூறப்பட்டதாலும் அவர் பெருமையை வர்ணிப்பதாலும் பிராம்மம் என பெயர்பெற்றது 13 ஆயிரம் சுலோகமும் 243 அத்தியாயமும் கொண்டது. கோத்திரங்களுக்கும் ப்ரவரங் களுக்கும் முதற்காரணமான ஏழு முனிவர் 8 வஸு 11 உருத்திரர்கள் 12 ஆதித்தியர்கள் பிறப்பு பெயர் 14 மன்வந்தரம். மார்த்தாண்டன் என்ற ஸூரிய னின்கதை, தன்வந்தரி அவதாரம், ஆயுர்வேதம், ஆயுர்வேதம். 12. ஸூர்யபூஜை சிவஸஹஸ்ரநாமம் ஸூர்ய அஷ்டோத்தரம் முருகன் பரஸ்திரீகளிடம் பார்வதி யைப் பார்த்தது, அஹல்யைப்பற்றி இந்திர கௌதமர்போட்டி. ஏன் கருடா சுகமா? என்பதற்குக் காரணமான கருடமணிநாத கதை, கங்கையின் பற்பல கட்டங்கள். கிருஷ்ணசரிதம் சுபத்ரையின் முற்பிறவி, கோணுதித்திய க்ஷேத்திரம் தீர்த்தயாத்திரை, உமாவி வாணவி சேஷம் கைல பாபங்களையும் அகற்றவல்ல பாரம்பர ஸ்தோத்திரம் கௌசிகன் பூர்வஜன்ம முதலியவைகள் இங்குக் காணப் படும் விசேஷங்களாம்.

**2: பாத்மம்:** பத்ம வடிவான உலக விஷயம் கூறப்படுவதால் பாத்மம் எனப்படும். ஆதி சிருஷ்டி பூமி பாதாள, புஷ்கர, உத்தர என்ற கண்டங்களும் 628 அத்தியாயங்களும் 55000 சுலோகமும் உள்ள இதுவும் பிரும்மபுராண மென்ருலும் எல்லா விஷயங்களும் நிறைந்த சிறந்த புராணம். வாலி, ஸுக்ரீவர், பிரஹ்லாதர் இவர்களது முற்பிறவி விஷ்ணுவின் 1008 நாமம். கிருஷ்ணனது 108 நாமம் 108 நாமம். அரசு, துளஸி, மஹிமை, 25 ஏகாதசிகளின் பெயர், பெருமை, கதைகளுடன், பகவத்கீதை 18 அத்யாயங்களுக்கும் தனித்தனி கதை

பாகவதமஹிமை வைசாக மாஹாத்மியம் ராமாச்வமேத விரிவு, க்ஷேத்திரங்கள் தீர்த்தங்கள் விருதங்கள் பெண்கடமை. தூர்வாஸ சாபத்தால் தர்மம் 3 பிறவி எடுத்தல், மோதகம் உண்டானவகை கோவிருதம், பாகவத ஸப்தாஹம், ஸந்ததி உண்டாகாதபாபம், ஸதாசாரம், சிவகீதா, ராமகீதா, பிரதக்ஷிண தத்துவம், கற்பூர தத்துவம் ஆஞ்ஜநேயரது சிவபக்தி, வேதாந்தக்கதை முதலியவைகளைக் காண லாம். காளிதாஸன் பவபூதி கிருஷ்ணமிசரர் தேசிகன் முதலிய கவிகள் இப் புராணத்திலிருந்து தங்கள் நூல்களுக்கு ஆதாரம் கருத்து சில பதங்கள் சில பாதங்கள் ஆகியவைகளைக் கைக்கொண்டனர்.

**3. விஷ்ணு புராணம்.** இது பூர்வம் உத்திரம்' என இரு பிரிவுகள் உள்ளது. விஷ்ணுவைப்பற்றியது. 23 ஆயிரம் சுலோகம் உளது. பூர்வபாகம் 36 அம்சமுள்ளது. இதற்கு 7 வ்யாக்யாநங்கள் இருக்கின்றன. பராபரமுனிவர் இதை மைத்ரேயருக்குக் கூறினர். வேதாந்தம் வைராக்யம் நிறைந்தது. ஸ்ரீசங்கர பகவத்பாதர் தனது பாஷ்யத்திய் இந்த புராண சுலோகங்களையே அதிகமாக எடுத்துக் காட்டுகிறுர். துருவன் பிரஹ்லாதன் யாக்ஞயவல்க்யர் கங்கை ஜடபாதர் நிதாகர், வியாஸாவதாரம் வேதம் வகுத்தல், தன்வந்தரி, வரப்போகும் மன்னர் ராமகிருஷ்ண சரிதம், கவியின் தன்மை முதலியன பூர்வபாகத்திலும், கர்பவிபாகம் கீதம் நாட்யம் காவ்யம் நாடகம் அர்த்தசாஸ்திரம் பிராகிருதபாஷை முதலியனவும் ஹம்ஸகீதையும் உத்தரபாகத்திலும் இருக்கின்றன. வில்ஸனது ஆங்கில மொழி பெயர்ப்பு முண்டு இதற்கு.

**4. சைவம்** சிவபுராணமிது இதையே வாயுபுராணம் என்பர், வாயு கூறியதால் அப்பெயர் உண்டானது. சிவபுராணத்தில் சில மாறுதல்களுடன் வாயுபுராணம் என்ற பெயரால் அச்சிட்ட தனிநூலும் இருக்கிறது. 24 ஆயிரம் சுலோகம் 457 அத்யாயங்கொண்டது. வித்யேச்வர, ருத்ர, சதருத்ர, கோடிருத்ர, உமா கைலாஸ, வாயவீய, என 7ஸம்ஹிதை வடிவமாகவும் இருகண்டங்களாகவும் அமைந்துளது. லிங்கமும் சரீரமும் அமைந்தவர் சிவனே. திருபுரனை ஜயிக்க விஷ்ணுஜிநனாக வந்தது. விபூதி ருத்ராக்ஷ பஞ்சாக்ஷரீ சிவராத்ரீ சிவநாம, காசி, 5 முகம், சிவனது 1008 நாம, கணேசன் ஸ்கந்தன் வீரபத்ரன், பரகாய ப்ரவேச மந்திரம், சிவனே சிறந்தவர், பிரதோஷம் பிரும்மனுக்கு வேள்வியில்தான் பூஜை, நாரதமோக்ஷம், சிவன் ஸதிக்கு விஷ்ணு ஸஹஸ்ரநாமமும், அதற்கு பிரதிநிதியாக ராமமந்திரமும் கூறல். தாக்ஷாயணீ ராமனைப் பரீக்ஷித்துத் தன் உடலைவிட்டுப் பார்வதியானது, சரப அவதாரம், உபமன்யு, கிருஷ்ணன் சிவபஞ்சாக்ஷரியால் ஸாம்பனைப்பெற்றது. 12 ஜோதிர்லிங்கம் முதலியவைகள் இதில் விவரிக்கப் படுகின்றன,

குமாரஸம்பவம் என்ற காளிதாஸனது நூலில் இதிலுள்ள வர்ணனை களும் பதங்களும் பாதங்களும் காணப்படுகின்றன.

**5. பாகவதம்.** விஷ்ணுபுராணமிது 12 ஸ்கந்தம், 335 அத்யாயம், 18 ஆயிரம் சுலோகமுள்ளது. பகவானது விராட ரூப உபாஸனை 23 அவதாரங்கள் த்ருவ ப்ரஹலாத ஜடபரத அஜாமிள கஜேந்தர, விரிவான கிருஷ்ணலீலை உத்தவர் அக்ரூரர் மைத்ரேயர் மூலமாக வேதாந்தம் கோபிகாகீதம் ப்ரமரகீதம், கிருஷ்ணன் பாகவதத்தில் புகுந்து பூத உடலை விடுதல் முதலியன பாகவத விசேஷங்கள். இதன் சுலோகங்கள் கடினமாக இருப்பதால் இது வியாசர் எழுதிய மஹாபுராணம் இல்லை என்று வாதம் இடுவார் சிலர். வேதம் வகுத்து வேதாந்த ஸூத்திரம் இயற்றியவுடன் கூறியதால் வேதம்போல் கடினமானது இது என்று பதில் கூறுவர். இந்தியர் இருவர் இதை ஆங்கிலப்படுத்தினர்.

**அ. தேவி பாகவதம்:** விஷ்ணு பாகவதம் போல் 12 ஸ்கந்தமும் 318 அத்யாயமும் 18 ஆயிரம் சுலோகமும் உள்ளது இது. முற்றிலும் தேவியின் பெருமையையே வர்ணிக்கிறது. கதைகளும் மந்திரங்களும் தேவியின் அவதாரங்களும் பற்பல அசுரவதங்களும் கரும அநுஷ்டானங்களும் ஆசாரமும் காயத்திரியும் காயத்ரீயின் 1008 நாமாக்களும் தேவீ வஸிக்கும்படியான மணித்வீபமும் இதில் வர்ணிக்கப்படுகின்றன. சாக்தமதத்திற்கு உயிர்நாடிபோன்றது இது. இதைப் பலர் தமிழ்ப்படுத்தி இருக்கின்றனர். விக்ஞான ஆனந்தர் இதை ஆங்கிலப் படுத்தியிருக்கிறார்.

**6. பாவிஷ்யம் அல்லது பவிஷ்யோத்தரம்:** வரப்போகும் விஷயத்தைக் கூறுவதால் இப்பெயர் உண்டானது. 585 அத்யாயங்களும் 14500 சுலோகமும் பிராம்ம மத்தியம, பிரதிஸர்க்க, உத்தர என்ற 4 பர்வாக்களும் உள்ளன. இந்தப் புராணம் இரண்டு இடங்களில் அச்சிடப்பட்டது. சில விஷயங்கள் ஒன்றுக்கொன்று மாறுபட்டிருக்கின்றன. மற்ற புராணங்களைப்போல் அரிய பற்பல விஷயங்கள் இருப்பதுடன் நமது காலத்தில் நாம் கேட்டதை முன் கூட்டியே கூறி இருக்கின்றது. ஜைன, மஹம்மதிய, கிருஸ்தவ மதம் பற்றியும் ஆங்கிலேயர் நம் நாட்டை ஆள்வது நாமதேவர் கபீர் சங்கரர் மத்வர் ராமாநுஜர் வராஹமிஹிரர் உதய ஸிம்ஹ ஜயசந்த்ரன் முதலியவர்களைப்பற்றி இது கூறுகிறது மதாபிமானமும் நம்பிக்கையுமுள்ளோர் வியாஸர் அறிவைப் போற்றுவர். தற்காலத்தவரில் சிலர் யாரோ எழுதியவர் பெயரால் வெளியிட்டனர் என்பர். இதில் விரதங்கள் அதிகம், பாஷைபற்றி ஹிந்தி ஆங்கிலச் சொற்கள் உதாரணமாகக் கூறப்பட்டது அழகானது. பாஈயம் பாணி ஷஷ்டி ஸிக்ஸ்டீ என்பது போன்ற பலவற்றைக் காணலாம்.

**7. நாரதீயம்:** நாரதர் ஸநகாதிகளுக்குரைத்தார் 207 அத்யாயமும் 25 ஆயிரம் சுலோகமும் உள்ளது. 2 அர்த்தங்களாக அமைந்தது விக்ஞானாநந்தர் என்பவர் இதை ஆங்கிலப்படுத்தியுள்ளார். க்ஷேத்திரம் விருதம் சிரார்த்தம்

தேவதைகளின் மந்திரம் 18 புராணச்சுருக்கம் குருமஹிமை ருக்மாங்கதன்சரிதம் நாரதர் கோட்டானிடம் ஸங்கீதம் பயின்றது. வேதபாதஸ்தவம் பலநீதிகள் கரும அநுஷ்டானத்திற்கும் சிராத்தத்திற்கும் உரிய பல சுலோகங்கள் ஆகியவை இதில் இருக்கின்றன. பிருஹந்நாரதீயம் என்று ஒரு உபபுராணம் உண்டு.

8 **மார்க்கண்டேயம்:** மார்க்கண்டேயரால் நான்கு முனி குமாரர்களுக்குக் கூறப்பட்டது. 134 அத்தியாயமும் 9000 சுலோகமும் உள்ளது. ஆங்கிலேயர் ஒருவர் இதை ஆங்கிலப்படுத்தி இருக்கிறார். தேவீ மஹாத்மியம் அல்லது தேவீ ஸப்தசதீ என்ற சண்டீஹோமத்திற்குரிய மந்திரம் இதிலிருக்கிறது. நவரஸம் ததும்பும் மதாலஸா சரிதமும் மதாலசை கூறும் உபதேசமொழிகளும் மிக ஆச்சரியமானவை. இந்த நிமிஷம் முதல் பத்தாண்டுக்குள் எப்போது மரணம் உண்டாகும் எனக் கண்டறிய வழிகள் கூறப்பட்டிருக்கின்றன. யோகமும் ஒழுக்கமும் இதில் அதிக இடம் பெற்றன.

9 **ஆக்கிநேயம்:** அக்நி வஸிஷ்டருக்குக் கூறினார். 383 அத்தியாயமும் 15 ஆயிரம் சுலோகமுமுள்ளது. இது ஒரு அருமையான புராணம். ஸகல விஷயங்களையும் இதில் காணலாம். ராமனைப்பற்றிய மிக அபூர்வ விஷயங்கள், ஆலயம் அமைத்தல், தேவதா விக்ரஹ ப்ரதிஷ்டை மந்திரம் மோஹந மந்திரம், மோஹந ஒஷதி, எல்லா நோயையும் அகற்றும் அபாமார்ஜந ஸ்துதி ஒஷதி, இறந்தவரை எழுப்பும் மந்திரம், மருந்து தநுர்வேதம் ரத்நபரீக்ஷார தேகப்பயிற்சி நாடகம், நடனம், கானம், யமகீதாதீக்ஷை, ஓமகுண்டவிதி, ரணவைத்தியம், சில்பம். ஸ்தபதிகளுக்கு வேண்டிய ப்ரமாணம், பாலாரிஷ்டசாந்தி நாடீத்துவம் முதலிய அருமையான விஷயங்களை இதில் காணலாம், காவேரி புராணம் இதிலிருப்பதாகத் தனியே தென்னாட்டில் அச்சிடப்பட்டு வழங்குகிறது. ஆனால் மூல நூலில் அது காணப்படவில்லை.

10 **பிரும்மவைவர்தம்:** இது சூரியபுராணம். பிரும்ம, பிரகிருதி கணேச, கிருஷ்ண ஜன்ம. என்ற 4 காண்டங்களும் 275 அத்யாயமும் 18 ஆயிரம் சுலோகமும் கொண்டது. ஸாவர்ணிமநு நாரதருக்குரைத்தார். பிரும்மம் உலகாக மாறியதால் பிரும்மவைவர்த்தம் என்ற காரணப்பெயர் பெற்றது. பிரும்மநைர்த்தமென கூறுவது தவறு. கிருஷ்ணன் கணேசனானது, ஏகாநம்சா என்ற கிருஷ்ணன் ஸோதரியை துர்வாஸர் மணந்தது, லக்ஷ்மி விரும்பாத இடம் க்ஷேத்ர மான்மியம், துஸ்வப்னம் அதன் பரிஹாரம் இவைகளுடன், ராதையின் சரிதம் விஸ்தாரமாகக் கூறப்படுகிறது. ஜயதேவர் எழுதிய அஷ்டபதி அல்லது கீதகோவிந்தத்திற்கு இதே மூலநூல் ஸேன் என்பவர் இதை ஆங்கிலப்படுத்தியுள்ளார்.

**11. லிங்கம் :** இதன் பெயரே விஷயத்தை விளக்குகிறது. கணேசர் என்றவரால் சிவதோஷிணி என்ற விரிவுரை இதற்கு இயற்றப்பட்டுளது. இரண்டு பாகமும் 163 அத்யாயமும் 11 ஆயிரம் சுலோகமும் உளது சிவயோகம், சிவதீக்ஷை, சிவவிருதம், பஞ்சாக்ஷரி, சுவேதர் ததீசி, நந்தி, உபமன்யு, முதலிய சிவபக்தர் சரிதம் விஷ்ணு கூறிய சிவஸஹஸ்ரநாம விரிவான திரிபுரவதகதை பசுபதிபாசம் ருத்ராக்ஷவகை லக்ஷணம், குருசிஷ்ய லக்ஷணம் 18 புராண விளக்கம், பவர் முதலிய 8 சிவமூர்த்திகள் அவர்களது பத்தினி சிவபூஜை முறை நந்தி மணம் முதலிய அரிய விஷயங்கள் உள.

**12. வராஹம் :** வராஹமூர்த்தி பூதேவிக்கு உரைத்தது. 218 அத்தியாயமும் 24 ஆயிரம் சுலோகமும் உள்ளது. தசாவதாரம், அகஸ்திய கீதை, பித்ருகீதை, ருத்ரகீதை, நந்தி சரிதம், தீர்த்த மஹிமை, 32 தேவ அபசாரங்கள் ஹரிஹர அபேதம், மாயா, மரம் வைக்கவேண்டிய அவசியம் சிரார்த்தம், கீதா மஹாத்மியம், திருபுரனை வஞ்சிக்க நாஸ்திக மதம் கூறியது முதலிய விஷயங்களை விரிவாக விளக்குகிறது இது.

**13. ஸ்காந்தம்,** ஸநத்குமார. ஸூத, சாங்கரீ, வைஷ்ணவீ, ப்ராஹ்மீ ஸௌரீ என 6 ஸம்ஹிதா, 50 கண்டம் 81 ஆயிரம் சுலோகங்கொண்டது இது. ஸூத ஸம்ஹிதையும் சாங்கரீ ஸம்ஹிதையும் தவிர 4 அச்சேறவில்லை. ஓலைச் சுவடியும் பூர்ணமாகக் கிடைக்கவில்லை. ஸூத ஸம்ஹிதை சிவசத்தி பூஜை, முக்தி, பஞ்சாக்ஷரீ. பிர்ம்மகீதை, ஸூதகீதை முதலியவைகளை விளக்குகிறது. இதை 18 முறை படித்து ஸ்ரீ சங்கரர் வேதாந்த பாஷியம் இயற்றினர். சங்கர ஸம்ஹிதை யில் தக்ஷயக்ஞம், அசுரயுத்தம், ஸ்கந்தாவதாரம், லீலை முதலியன காணப்படு கின்றன. கச்சியப்ப சிவாச்சாரியார் இதைமாத்திரம் தமிழில் செய்யுளாக இயற் றினர். திருப்பனந்தாள் மடம் அதை அச்சிட்டதைக் காணலாம்.

**அ. ஸ்காந்தம்:** மாஹேஸ்வர, வைஷ்ணவ, பிராம்ம, காசி, நாகர, ப்ரபாஸ என்ற ஏழு கண்டங்களும் 1694 அத்தியாயங்களும் 1¼ லக்ஷம் சுலோகமுள்ள மஹா ஸ்காந்தம் எனப்படுகிறது. இது 18 புராணங்களில் இதே மிக மிகப் பெரியது. இதுதான் மஹாபுராணத்தைச் சார்ந்ததென்று இதன் முக உரையில் பிரசுரதாரர் வாதாடுகிருர். இதில் எண்ணிறந்த அபூர்வ கதைகளும் தர்மங்களும் உள. இதிலுள்ள 100 அத்தியாயங்கொண்ட காசிகாண்டம் தமிழில் செய்யுள் வடிவமாக இருக்கிறது. பிர்ம்ம கண்டத்திலுள்ள பிர்ம்மோத்தர கண்டத்தையும் தமிழில் காணலாம். ராமாயண பாரதங்களில் காணுத நுட்பமான கதைகளிதனில் இருக்கின்றன. இது ஒன்றைப் படித்தால் எல்லாம் படித்தது போலாகும். கடோத்கசனுக்கு கிருஷ்ணன் காமகடங்கடையை மணம் செய்விப் பதும், அவர்கள் புத்ரனை இராவணன் பீமனைக் கொல்வதும் மிக ரசமானகதை.

**14. வாமநம்:** 95 அத்யாயமும், 2400 சுலோகமுமே இதில் இருக்கின்றன. புலஸ்த்யர் நாரதருக்கு வாமநாவதாரத்துடன் கூறுகிறார். உருவில் சிறியதாயினும் விஷயம் நிறைந்தது. திட்டில் ரதி காமனுடன் சேர்ந்ததால் பதியை இழந்தாள். பகவான் எந்த எந்த இடங்களில் எங்கெந்த பெயருடன் இருக்கிறார், முராஸுர, துந்து முதலிய அஸுரவதம் ராசி சகரம், ஆருத்ரா நக்ஷத்ரத்திற்கும் சிவனுக்குமுள்ள ஸம்பந்தம் முதலியன வர்ணிக்கப்படுகின்றன. வாமநனாக இருந்து 3 அடி மண் கேட்டு திரிவிக்ரமனாகத் தோன்றி அளந்ததால் கள்ளனை நம்பினாலும் குள்ளனை நம்பாதே எனப் பழமொழி தோன்றிற்று.

**15. கூர்மபுராணம்:** கூர்மரூபியான பகவான் இந்திர த்யும்நன் முதலியவர்க்குக் கூறியதால் இப்பெயர் பெற்றது. இது பூர்ணமாக இல்லை 99 அத்யாயமும் 5246 சுலோகமுமே இருக்கின்றது. ஸதி, பார்வதி, கலியில் சிவனே ஆராதிக்கத்தக்கவன், 28 வியாஸர், ஈச்வரகீதை, வியாஸகீதை லிங்க உற்பத்தி மாயாஸீதையை ராவணன் கொண்டுபோனது, அந்தகாஸுரவதம், வேதப்பிரிவு எந்த தேவதை எந்தபலனைத் தருவார் 18 புராணவரலாறு விதவையாகாமலிருக்கும் வழி முதலிய விஷயங்களை இங்குக்காணலாம். சைவ வைணவ வாதத்தில் விஷ்ணு சிறந்தவர் எனக்காட்ட கூர்மபுராணத்தை பிரமாணமாகக் கூறினார் ஒருவர் உள்ளே பார்த்தால் முழுச்சைவமது. கூர்மத்தை நம்பிக் குடிகெட்டுப்போனேன் என்றாரவர். ஒருசமயம் 18 புராணங்களும் பிரசாரத்திலிருந்தன என்பதற்கு ஸாக்ஷி இது.

**16. மாத்ஸ்யம்:** மத்ஸ்யமூர்த்தி மநுவிற்குக் கூறினார். 292 அத்யாயமும் 1400 சுலோகமும் உள்ளது. கௌரியின் 108 நாமம், கோத்திரம், பிரவரம், பித்ருக்களின் பிரிவு, ராஜநீதி, விஷப்பரீக்ஷை, தானம், சிராத்தம், அதற்குரிய மந்திரங்கள், பிருஹஸ்பதி அரக்கரை ஏமாற்ற நாஸ்திகம்கூறல், இருப்பவன் உண்டால் இறந்தவனிடம் சேருவதெப்படி ? தர்ம என்ற சொல்லிற்கு என்ன பொருள், அமாவாஸ்யை ஏன் பித்ருக்களுக்கு ஏற்றநாள். தாரகன், குழந்தை தோன்றிய ஏழாவதுநாள் தன்னைக் கொல்லலாமென வரங்கேட்டது, தானம் வாங்குபவர் எப்படி அந்த பாபத்தை அகற்றுவது, துலாபுருஷதானம், முதலியவைகள் வர்ணிக்கப்படுகின்றன. இதிலுள்ள சுலோகங்களே சிரார்த்தத்தில் கூறப்படுகின்றன. இப்புராணத்திற்கு ஆங்கிலமொழிபெயர்ப்புகள் உள.

**17. காருடம்:** பகவான் கருடனுக்குக் கூறினார்.

ஆசார பிரேத பிர்ம்ம என்ற 3 காண்டம் 318 அத்தியாயம் 19 ஆயிரம் சுலோகம். இடையிலுள்ள பிரேதகாண்டத்தை இறந்த வீட்டில் படிப்பார்கள். அதில் ஜீவன் பூத உடலைவிட்டு 800 யோசனை தூரத்திலுள்ள ஸம்யமிநீ என்ற யமலோகம் செல்வது, இடையே 16 இடங்களில் தங்குவது, அங்கு நடக்கும்

விசாரணை, சிக்ஷை, பலவகை நரகங்கள், புத்ரர் கருமம் கூறப்படுகின்றன. மற்ற காண்டங்களில் விஷத்தின் தன்மை அதை அகற்ற மந்திரம், ஔஷதி, விஷ்ணு 1008 நாமம் சுதர்சந மந்திரம், 8 அத்தியாயம் நீதிசாஸ்திரம், 58 அத்தியாயம் வைத்தியம் நாடி பரீக்ஷை, வழுக்கத்தலையில் 7 நாளில் ரோமம் உண்டாகும்வகை பிராம்மீ தைலம், 9 ரத்நம், கிதோசாரம் முதலியவைகளை இதில் காணலாம். படிக்கத் தெவிட்டாத புராணமிது. இதற்கு ஆங்கில மொழி பெயர்ப்புண்டு.

**18. பிரும்மாண்டம்:** பிரக்ரியா, அநுஷங்க, உபோத்காத, உபசம்ஹார, என்ற 4 பாதம் 146 அத்தியாயம் 12 ஆயிரம் சுலோகம் உள்ளது. பிர்ம்மா பிர்ம்மாண்டத்தைப்பற்றி கூறினார். சிவன் வேட உருவுடன் ராமனோடு போர்செய்து சந்தோஷமடைந்து ராவணஜயவரம் தந்தது, 40 அத்தியாயம் பரசுராம சரிதம், 34 அத்தியாயம் யாக்ஞவல்க்ய சரிதம், கிருஷ்ண 108 நாமம் 88 ஆயிரம் முனிவர் தக்ஷிண மார்க்கத்திலும், 80 ஆயிரம் ஞானிகள் உத்தரமார்க்கத்திலுமிருந்து பூமியைக்காத்தல், க்ஷேத்திரமஹிமை, 32 அத்தியாயம் ஸ்ரீ லலிதா தேவி பண்டாசுரனைக் கொன்று உலகைக்காப்பது போன்ற விசேஷங்களை இதில் காணலாம். இதில் 4 பாதமும் 4 வேதசமமாகும்.

அறம்வாழி, புராணம்வாழி, அறம் வளர்ப்போர் வாழி.

---

# கிறிஸ்துவம்

**Dr. M. ஆரோக்கியசாமி M. A. Ph. D. அவர்கள்**

*(சென்னை, சர்வகலாசாலை.)*

நம் நாட்டில் எம்மதமும் ஒன்றுபோல் கடவுளை வழிபட உதவுவனவே என்ற பரந்த நோக்கம் பல காலமாக குடிகொண்டுள்ளது. பரந்த நோக்கம் நன்மை பயக்குமென்று ஆனாலும், அதைச் சகலத்திலும் சந்தர்ப்ப பேதமின்றி புகுத்துவது புத்திக்கு ஒவ்வாததாகும். ஒவ்வொரு மதத்திற்குமிடையே ஊடாடி வரும் பொதுக்கொள்கைகள் ஒன்றுபோல் இருக்கலாம்; ஆயினும் அவற்றின் சிறப்புக் கொள்கைகள் அத்தகைமைத்தல்ல. இதுபற்றியே பல மதக்கொள்கைகளையும் அலசிப்பார்ப்பது நன்மை பயக்குமென்பதில் ஐயப்பாடில்லை. இவண் கிருஸ்துவத்தின் சிறப்புக்கொள்கைகள் பற்றிப் பேசுவேன்.

முதலாவது கடவுளைப் பற்றிய கொள்கையையே எடுத்துக்கொள்வோம். கடவுள் சகலத்திற்கும் முதலும் ஆதியும் ஆனவர். அவரே சகலத்திற்கும் பிதா; அவரே சகலத்திற்கும் ஏற்ற முடிவு என்பது சகல மதங்களுக்கும் முடிவான கொள்கையே, ஆயினும் இதுவே ஒவ்வொரு மதத்திற்கும் சிறப்பிலே வேறுபட்டு நிற்கின்றது. உதாரணமாக, கடவுள் நம் பிதா, நம் தந்தை என்ற கொள்கை கிறிஸ்துவம்போல் பிறமதங்கள் எதுவும் எடுத்துக் கூறுவதில்லை. அம்மை நீ அப்பன்நீ அன்புள்ள மாமனும் மாமியும் நீ என்றெல்லாம் சிவனடியார் கூறினது உண்மையே. ஆயினும் அது பக்தி பரவசத்திலே எழுந்த ஒருவர் கூற்றாகவே கொள்ளவேண்டும். பக்தி வெள்ளம் ஒருவர் உள்ளத்தில் இப்படித் தோன்ற மற்றொருவர் உள்ளத்தில் தான் காதலித்த காதலனாக கடவுள் காட்சியளிக்கின்றார். "நாரணன் நமர் கைப்பிடிக்கக் கனாக்கண்டேன் தோழி நான்" என்பது இக் கருத்தையே காட்டி நிற்கின்றது. கிறிஸ்துமதம் ஒன்றிலேதான் கடவுள் நம் தகப்பன் என்பது அம்மதம் தோன்றின நாள்கொண்டு இந்நாள்வரை யாவர் மத்தியிலும் தவறாமல் போதிக்கப்பட்டு வருகிறது. இதற்கு என்றும் அழியாச் சான்று இயேசு கிறிஸ்து தாமே தம் சீடர்களுக்கு சொல்லிக்கொடுத்த ஜெபமே யாகும். நீங்கள் ஜெபம் செய்யும்போது பரமண்டலங்களிலே இருக்கிற எங்கள் பிதாவே என்று அழையுங்கள்" என்றார். இந்த ஜெபம் அவர் சொன்ன வார்த்தைகளைக்கொண்டே இன்றும் அன்றாடம் ஜெபிக்கப்பட்டு வருவதை கிறிஸ்துவக் கோயில்களிலே நாம் காணலாம்.

கடவுள் ஒருவர் ஆனால் ஆள்வகையிலே மூவர் என்ற கருத்து ஹிந்து மதக்கொள்கை. இதையே கிறிஸ்துவர்கள் தங்கள் மதத்திலே திரியேகதேவன்

என்று குறிக்கின்றுர்கள் என்று பலர் எண்ணுகிருர்கள். இவை இரண்டு கொள்கைகளுக்கும் இடையே இருப்பது உருவ ஒற்றுமையே யன்றி பிறிதல்ல. ஹிந்துமதத்திலே தேவ ஆட்கள் மூவருக்கும் படைத்தல், காத்தல், அழித்தல் என்ற மூவ்வேலை கற்பிக்கப்படுகிறது. கிறிஸ்துவத்தில் கடவுளுக்கு அழிக்கும் வேலையே கிடையாது. வேதாகமத்தில் கிறிஸ்துபெருமான் சொல்லுவதுபோல் "நான் அழிக்கவல்ல; (நீங்கள் இதுவரை போஷிக்கப்பட்டு வந்ததை) முடித்துக் காட்டவே வந்தேன்,

இதினின்று எழுவது கிறிஸ்துவத்தின் தலையாய கருத்து, கொள்கை எல்லாம். அதைத்தான் கிறிஸ்துவர்கள் மனித இரக்ஷணியம் என்கிருர்கள். (Redemption). இது வேறெந்த மதத்திற்குமில்லா கிறிஸ்துவத்தின் மிகச் சிறந்த கொள்கையாம். பாவத்தால் கெட்டழிந்த மனிதனை மீட்க தெய்வபலி அவசியமாயிற்று. அதற்காக மூன்று ஆட்களாய் மிளிரும் தெய்வீகத்தின் இரண்டாம் ஆளாகிய கிறிஸ்துவ பெருமான் மனித ரூபமாய் இவ்வுலகத்தில் உதித்து நம் பாவத்திற்காக தம் உயிரைத் தந்தார் என்பது கிறிஸ்துவம். கிறிஸ்துவப்போதனையை தந்தது கடவுள்தாமே. அவரும் அதை நம்மைப்போல் உருவெடுத்து தம் போதனையாலும் சாதனையாலும் காட்டினுர்· அவருடைய வாழ்க்கையில் சந்தேகத்திற்கோ மற்றெவ்விதமான குற்றத்திற்கோ இடமில்லை· உலகத்திலேயே அதிகமாக படிக்கப்படும் நூல் விவிலியம் (Bible) இன்னும் அதைபடித்த எவனும் கிறிஸ்துவில் குற்றம் கண்டுபிடித்ததில்லை.

விவிலியம் ஒரு தெய்வீக நூல் என்பதுமட்டுமல்ல; அதில் குற்றமுள்ளது எதுவும் இல்லை என்பது கிறிஸ்துவத்தின் மாருத கொள்கைகளில் ஒன்று. இதை எழுதியவர்கள் நால்வர்; மத்தேயு, மாற்கு, அருளப்பர் எனப்படும் ஜான், லூக்காஸ் என்ற இவர்கள் கிறிஸ்துவோடு ஜீவித்து தாங்கள் கண்டதையும் கேட்டதையும் எழுதிவைத்தார்கள்; நால்வரும் இதை வெவ்வேறு இடங்களில் இருந்துகொண்டு எழுதினுர்கள். ஆயினும் இவர்கள் எழுதிய நான்கு புஸ்தகங் களிலும் அதிசயமான ஒற்றுமையைக் காண்கிறேம். இதைத்தான் ஆங்கிலத்தில் Concordance என்கிறேம். இத்தகைய முறையில் எந்த நூலின் உண்மையும் இதுவரை காண்பிக்கப்படவில்லை. இந்த உண்மை நூலில் கிறிஸ்துவின் போதனை உண்மையானது என்பதைக் காண்பிக்க கிறிஸ்துவின் புதுமைகள் பல கூறப்படு கின்றன. "இவனே நம் குமாரன் இவர் வார்த்தைக்கு செவிகொடுங்கள்" என்ற ஆகாயத்தில் நின்று எழுந்த குரலொலி; தேவதூதர்களின் தரிசனம், அவர்தம் இன்னிசை; சூரியன் மங்குவது, மரித்தவர்கள் உயிர்ப்பது என்ற இன்ன பிறவும் இந்நூலின் வாயிலாய் நாம் அறிகின்றேம்.

கிறிஸ்து பெருமான் அன்று சிலுவையில் தந்தபலியே இன்றும் தினந் தோறும் குருக்கள் மூலமாக கிறிஸ்துவக் கோயில்களில் நடைபெறுகின்றது

என்பது கிறிஸ்துவத்தின் (கத்தோலிக்சபையின்) உறுதியான கொள்கை. அப்பத்தின் மூலமாகவும் திராக்ஷைப்பழ இரசத்தின் மூலமாகவும் கிறிஸ்துவின் திருச்சரீரமும் திரு இரத்தமும் தேவனுக்கு மனித பாவங்களுக்குப் பரிகாரமாக தினந்தினமும் உலகம் முழுதும் பல லக்ஷக்கணக்கான கோவில்களில் ஒப்புக் கொடுக்கப்படுகிறது. அந்த திவ்விய அப்பத்தையே திவ்விய நற்கருணை (Euchaust) என்று கிறிஸ்துவர்கள் விசுவசிக்கிறார்கள். ஏனென்றால் இதில் கிறிஸ்து பெருமான் தாமே வீற்றிருக்கின்றார் என்பது அவர்களுடைய தளராத விசுவாசம். கிருஸ்துவ பலிபீடங்களிலுள்ள பெட்டியில் அவர் என்றும் நம் குறைகளை நிவர்த்திக்கக் காத்துக்கொண்டிருக்கிறார் என்பது கிருஸ்துவ நம்பிக்கை ஆகையால்தான் கிறிஸ்துவக் கோயில்கள் உண்மையாகவே ராசாதிராசனுன தேவனின் இல்லிடமாகத் திகழ்கின்றன.

கிறிஸ்துபெருமான்மனிதவுருவம் எடுக்க ஏதுவாயிருந்தவள் மரியம்மாள். கிறிஸ்துவம் அந்த அம்மையை தெய்வத்திற்கு அடுத்தபடியாகக் கொள்கின்றது. மற்ற மதங்களில் பெண் தெய்வங்கள் 'சக்தி'யாக அமைவதைப்போல் அல்லாமல் வெறும் மனுஷியாகவே மரியம்மாள் கிறிஸ்துவத்தில் கருதப்பட்டபோதிலும் மகா சக்திவாய்ந்தவளாகவும், மகா பரிசுத்தம் உள்ளவளாகவும், தேவனின் தாயாகவும் கருதப்படுகிறாள். இக்காரணம்பற்றியே அவள் இறந்தபின் அவள் சரீரம் மற்ற சரீரங்களைப்போல் மண்ணோடு மண்ணாய்ப்போகாமல் இப்போது ஆத்தும சரீரத்தோடே பரலோகத்தில் முடிவில்லா பாக்கியம் அனுபவிக்கிறாள் என்பதை கிறிஸ்துவர்கள் (கத்தோலிக்கர்) விசுவாச சத்தியமாகக் கொள்கிறார்கள்.

மறுலோக விஷயமாய் மற்ற மதங்களுக்கும், கிறிஸ்துவத்திற்கும் பார தூர வித்தியாசம் உண்டு. கருமம், அதைப் பின்பற்றிவரும் பிறவிப்பயன் என்ற இந்தக் கருத்துக்களெல்லாம் கிறிஸ்துவத்திற்கு முற்றிலும் புறம்பானவை. விவிலியம் கூறுவதுபோல், மனிதன் ஒருதடவைதான் இறக்கமுடியும். இறந்தபின் அவன் நித்திய வாழ்விற்கோ, நித்திய சாவிற்கோ ஆளாகிறான். இது அவனது இவ்வுலக வாழ்வைப் பொருத்தது. நித்திய வாழ்வென்றது கடவுள் சந்நிதியில் சகல சந்தோஷத்தையும் அனுபவிப்பது; நித்திய சாவென்றது முடியாத நரக வேதனை. இவ்விரண்டிற்குமிடையே உத்தரிக்கும் ஸ்தலம் (Purgatory) என்று ஒன்று கூறப்படுகிறது. தங்கள் பாவங்களுக்குப் பூரணமான பரிகாரம் செய்யாதவர்கள் சாவிற்குப் பிறகு இங்குச் செல்கிறார்கள் என்பது கிறிஸ்துவத்தின் கொள்கை.

**கிறிஸ்துவம், பழக்கங்கள், அனுஷ்டானங்கள்:** கிறிஸ்துவத்தின் பழக்க வழக்கங்கள் பெரும்பாலும் மற்ற மதங்களோடு இயலாமல்

சிறப்பு அனுஷ்டானங்களாகவே இருக்கின்றன. ஜெபம் தபம் என்ற இவற்றில் மட்டும் ஒரு சில ஒற்றுமைகள் இருக்கின்றன

முதலாவது நல்ல கிறிஸ்துவன் தினந்தோறும் கோவிலுக்குப் போக வேண்டும்; எத்திறத்தானுயினும் ஞாயிற்றுக்கிழமைகளில் கண்டிப்பாகப் போகின்ருன். அங்கே அவன் செய்வது வெறும் ஜபம் மட்டுமல்ல. நான் முன்னே குறித்ததுபோல் கடவுளையே கடவுளுக்கு தன் பாவங்களுக்குப் பரிகாரமாக ஒப்புக்கொடுக்கின்ருன். திவ்விய நற்கருணை உட்கொள்ளும்போது கடவுளையே உட்கொள்ளுகின்ருன். தேவனை உட்கொள்வதற்குப் பரிசுத்தம் அவசியம். இது வெறும் ஜபத்தால் வருவதல்ல; தன் பாவங்களை குருவிடம் சொல்லி உண்மையான மனஸ்தாபத்தோடு மன்னிப்புக் கேட்பதால் வருவது. இதைத்தான் ஆங்கிலத்தில் Auricular Confessicn என்கிருர்கள்.

இதுகாறும் சொல்லியவற்றைக்கொண்டு கிறிஸ்துவப் பழக்கங்கள் மிகச் சிறப்பியல்புகள் கொண்டவை என்பது புலப்படும். பொதுவாகக் கூறுமிடத்து கிறிஸ்துபெருமான் மக்களின் அன்ருட வாழ்க்கைக்கு உதவியாக ஏழு வழிகளை (இங்கு இவற்றை ஏழு பெரும் அனுஷ்டானங்கள் என்று குறிப்பிடலாம்) நியமித்தார். இவற்றையே நாம் Sacraments என்று ஆங்கிலத்தில் கூறுகிருேம். இவற்றில் முதலாவது ஞானஸ்நானம். இதன் வழியேதான் ஒருவன் கிறிஸ்துவன் ஆகவேண்டும். இரண்டாவது 'உறுதிபூசுதல்' என்பது. இதன்மூலம் கிறிஸ்துவன் தன் மதத்தில் உறுதிப்படுத்தப்படுகிருன். இதை ஆங்கிலத்தில் Sacrament of boufrination என்றே குறிக்கின்ருர்கள். மூன்ருவதும் நான்காவதும் ஆயவை நான் முன்குறித்த திவ்விய நற்கருணையும், பாவ சங்கீர்த்தனமும். 'குருத்துவமும்' 'மெய் விவாகம் என்ற இவையும் இந்த ஏழு அனுஷ்டானங்களில் சேர்ந்தவையே. உண்மைக் கிறிஸ்துவன் மெய்யான விவாகம் கோவிலில் குருவின் முன்னிலையில் தான் முடிக்கவேண்டும். கடைசியாக மனிதன் இவ்வுலகைவிட்டுப் பிரியும் தறுவாயில் பரிசுத்த எண்ணெய் மூலமாகத் தன் பாவங்களுக்குப் பரிகாரம் தேடிக் கொள்கிருன். இதற்கு 'அவஸ்தை பூசுதல்' (Extremunction) என்று பெயர்.

இனி கிறிஸ்துவ ஜெபங்களில் முக்கியமானது நான் முன்குறித்த "Our Father" (எங்கள் பிதாவே) என்ற ஜபம். வேதத்தின் முக்கிய சத்தியங் களைக்கொண்ட ஜபம். "விசுவாச மந்திரம்" என்ற பெயர்கொண்டது. இதற்கு ஆங்கிலத்தில் Creed என்று பெயர். இதோடு சேர்ந்தது கடவுளாலேயே தரப் பட்ட "பத்துக் கற்பனைகள்" (Ten Corumandiments) இவையன்றியே பாவங் களுக்கு மனஸ்தாபப்படும் முயற்சியாக "உத்தம மனஸ்தாப மந்திரம்" என்ற ஒரு ஜபமும் உண்டு. கடைசியில் மரியம்மாளின் புகழைச்சொல்லும் "அருள் நிறைந்த மரியாயே" என்ற ஒரு ஜபமும் இருக்கிறது. இந்த ஜபங்களைக் கிறிஸ் துவப் பிள்ளைகள் 6 வயதிற்குள்ளாகவே நன்கு படித்துக் கொள்கிருர்கள்.

கிறிஸ்துக் கோவில்களில் படங்களையும் சுரூபங்களையும் காண்கின்றோம். கிறிஸ்துவத்தின் ஆதியிலிருந்தே கடவுளின் உருவத்தையும், மரியம்மாள் முதலிய பரிசுத்தவான்களின் உருவங்களையும் எழுதுவதும் செய்வதும் பெரிதும் போற்றப் பட்டு வந்தது என்பதில் ஐயப்பாடில்லை. கி. பி. பதினாறும் நூற்றாண்டிற்குப் பிறகுதான் இவ்வுருவங்களும் படங்களும் அவசரமானவையல்ல என்று புரோடஸ் டண்டார் கூறினார்கள். ஆனால் கத்தோலிக்கர் இன்றும் இவற்றை தங்கள் கோவில்களிலும் இல்லங்களிலும் வைக்கிறார்கள்; கடவுளையும், பரிசுத்தவான் களையும் நம்மனத்தில் இருத்த நல்வழி இதுவே என்று அவர்கள் எண்ணுவது இயற்கைக்கும் சாலப் பொருத்தமானதாகவே இருக்கிறது. ஆயினும் எந்தக் கிறிஸ்துவனும் படங்களையும், உருவங்களையும் பூஜிப்பதில்லை. அவைகள் யார் ஞாபகமாகச் செய்யப்பட்டனவோ, எழுதப்பட்டனவோ அவர்களையே இவைகள் மூலம் பூஜிக்கிறான்.

இந்தச் சிற்றுரைகள் இரண்டிலும் நான் கிறிஸ்துவம் என்ற தலைப்பில், கிறிஸ்துவைப் பின்பற்றி அப்பெருமான் காலந்தொட்டு இற்றைவரை அவர் போதித்த முறைப்படி அவரை வழிபடும் கிறிஸ்துவத்தைப்பற்றியே பேசினேன். கி. பி. பதினாறும் நூற்றாண்டில் தோன்றிய பதிதர் எனப்படும் புரோட்டடஸ் டண்டார் இங்குக் குறித்த கொள்கைகள், அனுஷ்டானங்கள் இவற்றில் சிலவற்றையே மேற்கொள்கிறார்கள். முக்கியமாய் கிறிஸ்துவத்திற்கு 1600 வருஷ காலம் தலையாய் ரோமில் விளங்கிய போப் எனப்படும் பாப்புவை இவர்கள் தலையாய் ஒத்துக்கொள்வதில்லை; விவிலியத்தின் விளக்கத்தையும் 1600 வருஷத் திற்குப் பிறகு இவர்கள் எதிர்க்கிறார்கள். 'திவ்விய நற்கருணை' 'திவ்விய பரிபூசை' 'பாவ சங்கீர்த்தனம்' என்ற இவற்றில் எல்லாம் அவர்களுக்கு நம்பிக்கையில்லை, திவ்விய மரியம்மாள் இவர்களுக்கு சாதாரண மனுஷியே; அவளுக்கு உரிய வணக்கத்தையும் செலுத்துவதில்லை. இவர்கள் பின்பற்றுவது கிறிஸ்துவத்தின் ஒரு பகுதியேயன்றி பூரண கிறிஸ்துவம் ஆகாது.

---

# இஸ்லாம்

**ஸ்ரீ A. N. பரசுராமய்யர் அவர்கள் M.A.,**

*(தலைவர், மினர்வா கல்லூரி, சென்னை.)*

உலகமே ஓர் ஆராய்ச்சி நிலையமாகும். மக்கள் வாழ்வே தாம் பறி கொடுத்த பொருளைக் கண்டெடுப்பதற்காகவே. இந்த ஆராய்ச்சியில் இதுவரையில் ஒருவரும் தம் குறிக்கோளை அடையவில்லை என்று கூறுவதற்கில்லை. பலர் இதில் முடிவைக்கண்டு தாம் கண்டதைப் சிலருக்கு உபதேசித்து அதற்குத்தக்க முறையையும் காண்பித்திருக்கின்றனர். இவ்வாறு லக்ஷியத்தை அடைந்த சித்தர்களுக்குக் கோடிக்கணக்கில் சீடர்கள் ஏற்படுவதில் ஆச்சரியமில்லை. அவர் உபதேசங்களைத் தவறாமல் கடைப்பிடித்து ஒழுகும் சீடர்களில் சிலரும் அம்முறை யிலேயே சித்தியடைந்து தம் குருக்களின் உபதேசத்தின் கருத்தை விளக்கியிருக் கிறார்கள். அதனால் ஒருசித்தன் உபதேசித்தமுறை சித்தர்களான பல சீடர்களால் பலவழியில் வியாக்யானம் செய்யப்பட்டுக் கொப்பும் கிளையுமாக வளர்ந்த பெரும் மரம்போல் உலகத்தில் ஒரு பகுதியைக் கவர்ந்து நிற்கும். இவ்விதம் வளர்ச்சி யடைதலும் சித்தி அடைவிக்கக் கூடியதுமான உபதேசங்கள் ஆயிரக்கணக்கில் உலகில் இருக்கின்றன.

எல்லாச் சித்தர்களின் உபதேசங்களும் ஒரே நோக்கத்துடன் தோன்றிய போதிலும், அந்தந்தச் சித்தர்களின் மனோநிலை, ஸமஸ்காரம், காலதேசங்கள் இவைகளுக்கு ஏற்றவாறும் அவர்களுடைய சீடர்களின் தன்மைக்கு ஏற்றவாறு அவை அமைந்திருக்கின்றன. ஆகவே ஒருவருடைய உபதேசங்களை வேறு சூழ் நிலையிலிருந்து பார்க்கும்பொழுது தவறுதல் இருப்பதாகத்தோன்றும். ஆனால் அவ் வுபதேசங்கள் உருவான சூழ்நிலைக்கு ஏற்றவாறு நம்மை மாற்றிக்கொண்டால் அவைகளின் பெருமையைக் காணலாம். அல்லது நாம் வாழும் சூழ்நிலைக்குத் தக்கவாறு உபதேசத்தின் அடிப்படையான கொள்கை மாறாவண்ணம் சிறிது மாற்றிக்கொள்ளலாம். மக்களின் ஸமஸ்காரங்களுள் பலவிதமாக இருப்பதால் பல்லாயிரம் உபதேசங்களும் பயன்படுகின்றன.

இத்தகைய உபதேசங்களில் ஒன்றுக்கொன்று ஒற்றுமையும், முரண் பாடும் இருப்பது இயற்கை. ஆயினும், இவை யாவும் ஒரு தத்துவத்தை மட்டும் குறியாக வைத்து வந்திருப்பதால் ஒற்றுமைக்குத்தான் அதிகம் இடமுண்டு. ஆனால் ஒரு மதத்திலிருந்து மற்றொரு மதம் கடன் வாங்கியதாகக் கூறக்கூடாது.

---

* தருமபுரத்தில் கோடைகாலத்தில் சமயபோதவகுப்பில் மேமீ 17உ ஆற்றிய சொற்பொழிவின் சாரம்.

இஸ்லாம் மதமும் வெகுகாலமாய் வழங்கிவரும் பல மதங்களில் ஒன்றாகும். சுமார் பதின்மூன்று நூற்றாண்டுகளாக இம்மதம் உருப்பெற்று உலகில் தலைசிறந்து விளங்கி வந்தபோதிலும், அதற்கு முன்னும் சிதறிய உருவத்துடன் இம்மதக் கொள்கைகள் இருந்துதான் வந்தன. கி. பி. 7-வது நூற்றாண்டில் முகமதுநபி அல்லாவின் அனுக்ரகம் பெற்று இம்மதத்தை உலகில் நிலைநாட்டினார்.

செழிப்பான வளர்ச்சியால் இம்மதம் தான் பிறந்த அரபிதேசத்துடன் நிற்காமல் உலகில் பல பாகங்களிலும் பரவியிருக்கிறது. நமது இந்தியாவிலும் மற்ற மதங்களைப்போல் ஓரிடம் பெற்றிருக்கிறது. இது அம்மதத்தின் சிறப்பைக் காட்டுவதுடன், இந்தியாவின் தாராள மனப்பான்மையையும் விளக்குகிறது. இந்தியாவின் மதம் எனக் கருதப்படும் அத்வைதத்தின் நோக்கு மற்றெல்லா மதங்களோடும் சகோதரத்தன்மையை வளர்ப்பதே.

மற்ற மதங்களோடு இஸ்லாமை ஒப்பிட்டுப் பார்த்தால், அது சற்றும் குறைந்ததல்ல என்பது புலப்படும். மக்களின் பிறப்பின் லக்ஷியமாகிய மோக்ஷத்தையும் அதற்கு வேண்டிய அனுஷ்டானங்களையும் விளக்க இம்மதம் சற்றும் பின்வாங்கவில்லை. கடவுள், அவருடைய செயல், உலகம், ஜீவன், பந்தத்தின் ஸ்வரூபம், அதை அகற்றும் முறை யாவற்றையும் இஸ்லாம் விரிவாகக் கூறியுள்ளது. ஆனால் முகம்மது நபிக்குப் பிறகு தோன்றிய பல பெரியார்கள் இம்மதத்திற்கும் புத்துணர்ச்சி அளித்திருப்பதோடு, தமக்குள்ளேயே சில வேற்றுமைகளையும் உருவாக்கிக் கொண்டிருக்கிறார்கள். இவ்வேற்றுமைகள் வெவ்வேறு மனோநிலையுடைய மக்களை இஸ்லாம் மதத்தை ஏற்கச்செய்து அதற்கு வளர்ச்சி கொடுப்பதற்கே உதவின. இஸ்லாமிய மதத்தின் எப்பிரிவைச் சார்ந்தவரும் அம்மதத்தின் லக்ஷியத்தை அடையலாம்.

முதலில் இஸ்லாம் என்ற பெயர்மட்டுமே மனதைக் கவரக்கூடியதாக இருக்கிறது. இஸ்லாம் என்பதற்குச் 'சாந்தி' எனப்பொருள். சாந்தநிலை அம்மதத்தின் லக்ஷியம். அத்வைதிகள் முறையிடும் " शान्तं शिवं अद्वैतं चतुर्थं मन्यन्ते " (சாந்தம், சிவம், அத்வைதம், சதுர்தம் மன்யந்தே) என்ற உபநிடதக் கருத்தைத்தான் இஸ்லாம் என்ற சொல் விளக்குகிறதோ என்று தோன்றும். அலைமோதும் மனோவிருத்திகளில் சிக்குண்டு தத்தளிக்கும் மாந்தர்களுக்குச் சாந்த நிலையாகும் மோக்ஷத்தைக் கொடுக்க இம்மதம் ஏற்பட்டதென்று இதன் பெயரிலிருந்து வெளியாகிறது. மேலும் மோக்ஷம் சாந்த நிலையாதலால், பந்தம் அசாந்தநிலை என்றும் ஏற்படுகிறது. உலக விவகாரத்தில்கூட, சாந்தி நன்மை பயப்பதை நாம் அறிவோம். ஆதலால், சாந்தி பூர்ணமாக நிலைத்த மோக்ஷம், நமக்கு நிச்சயமாக விரும்பத்தக்கதாகவே இருக்கும் என்பதும் ஏற்படுகிறது. ஆகவே

மோக்ஷத்தில் நமக்கு விசேஷப் பற்றுதல் ஏற்பட வழிகாட்டுகிறது இஸ்லாம் என்ற சொல். இவ்விதம், மதப்பெயர் மட்டுமே பல தத்துவங்களை விளக்குவதாக இருப்பதாலேயே இம்மதம் பலர் மனத்தைக் கவருகிறது என்பதில் வியப்பில்லை. இப்பெயருக்கு, இது கடவுள் வெளிப்படுத்தும் மதம் என்றும், இம்மதத்தைக் கடைப் பிடித்தவனுக்குக் கடவுள் தென்படுகிறார் என்றும்கூட இஸ்லாம் மதத்தைச் சார்ந்தவர் வியாக்கியானம் செய்வதுண்டு.

இம்மதத்தின் மூலப்பிரமாண நூல் 'குர்ஆன்' ஆகும். இஸ்லாமியரின் வேதமாகிய இந்தக் 'குர்ஆனை' கேப்ரியல் என்ற தேவதை முகமதுநபி மூலமாய் வெளியிட்டதென்பர். ஆயின் அது உலகம் தோன்றுவதற்கு முன்னிலிருந்தே இருப்பதாயும் ஆதி அந்தம் இரண்டும் அற்றது என்றும் இம்மதத்தார் நம்பு கின்றனர். இந்துக்கள் வேதத்திற்குக் கூறும் 'அபௌருஷேயத்தன்மை', (ஒருவ ராலும் இயற்றப்படாத தன்மை) அழியாமை இரண்டும், குர்ஆனைப்பற்றிய இந்த வாதத்தில் காணப்படுகின்றன.

'க்வாதிரீயம்' என்ற இஸ்லாமியப் பிரிவில் குர்ஆனை முன்கூறியவாறு ஏற்பதில்லை. 'காலதேசங்களுக்கு ஏற்றவாறு குர்ஆன் பிரமாணமாகவும் அப் பிரமாணமாகவும் ஆகலாம்' என்பது அவர்கள் கருத்து.

இஸ்லாம் மதத்தில் அல்லா ஒருவரே கடவுள். அவரே ஜீவன்களுக்கு மோக்ஷத்தை அளிப்பவர். அம்மோக்ஷத்தைக் கொடுப்பதற்காகவே உலகைப் படைத்துக் காத்து அழிக்கிறார். அவருடைய ஆட்சிக்கு எதிர் ஆட்சி கிடையாது. அவர் சர்வ வல்லமை படைத்தவர். அவர் எல்லையற்ற கருணைக்கடல் என்று கூறப்படுகிறது. உலகம் பகவானுடைய லீலை என்பதை இம்மதம் ஏற்கவில்லை.

க்வாதிரீய மதம் இஸ்லாமில் எவ்வளவோ புது விஷயங்களைத் தோற்ற வைத்திருக்கிறது. அதில் முக்கியமானது ஈசுவர தத்துவம். கடவுள் குற்ற மற்றவராயும் நிராலம்பராயும் (ஆச்சர்ய மற்றவராயும்) அனைத்திற்கும் காரண மாயும் இருக்கிறார் என்று இம்மதம் கூறுகிறது. இங்கு அத்வைத மதத்தின் சாயை சிறிது தோன்றுகிறது. ஆனால் இக்கருத்திற்குக் குர்ஆனில் அவ்வளவாக இடமில்லை என்றே கூறவேண்டும். அதற்காகக் க்வாதிரீயர் தமது வியாக்யானத் திறமைகொண்டு குர்ஆனைத் தமக்குச் சாதகமாக்கிக் கொள்ளுகின்றனர். அப் பொழுது, மீமாம்சகர் வாக்கியக் கருத்தை நிர்ணயம்செய்யக் காட்டிய முறைகளை அதாவது வாக்யாநிலய நியாயங்களைச் சிறிதுதூரம் கைப்பற்றியிருப்பதையும் காணலாம்.

க்வாதிரீய மதத்தில் கடவுள் உலகிற்கு உபாதான காரணமல்ல. அதாவது கடவுளே உலகமாகப் பரிணாமத்தை அடைந்திருப்பதாகக் கூறுவதில்லை.

கடவுள் உலகிற்கு நியமித்த காரணம், குயவன் குடத்தைச் செய்வதுபோல் உலகைக் கடவுள் படைக்கிருர் என்று இம்மதம் கூறுகிறது. தர்க்க சாத்திரத்தின் கருத்தும் இம்முறையில்போவதை நாம் கண்கூடாகக் காணலாம்.

நிர்க்குணமான கடவுளிலிருந்து முதல் சிருஷ்டியாக ஒரு ஜீவன் தோன்று கிருன். இவர்தான் உலகமனைத்தையும் நடத்துபவர். இவ்விதம் க்வாதிரீயர் கூறுவது. ப்ருஹதாரண்யக உபநிஷதத்தில் கூறும் ஹிரண்யகர்ப்பன் முதல் பிறந்தார். அவரால் படைக்கப்பட்டது உலகம் என்ற வரலாற்ருேடு நெருங்கிய தொடர்புகொண்டதாக இருக்கிறது.

கடவுளின் சொல் குர்ஆன் என்று இம்மதத்தினர் கூறுவது. 'வேதம் பகவானின் மூச்சுக்காற்று' என்று கூறும் உபநிஷதத்தின் கூற்றை நமக்கு நினைவு ஊட்டுகிறது. கடவுள்தான் மாயையைப் படைத்து அழிக்கிருர் என்ற சித்தாந்தம் கீதை உணர்த்திய 'மாயை என்சக்தி, என்னையே தஞ்சம் என்று அடைந்தவர் மாயைக் கடப்பர்' என்ற கருத்துடன் ஒத்திருப்பதை மறைப்பதற்கில்லை.

'ஆலகசாலி' என்ற முகம்மதிய மதக்கிளையைப் பின்பற்றியவர் கடவுள் நிர்க்குணன் எனக் கூறுகின்றனர். ஆகவே உலகம் பிரகிருதியால் ஆக்கப்பட்டது என்று அவர் ஒப்புக்கொண்டிருக்கின்றனர். பரிணமம், பரிணமிக்கச் செய்தல், அசைவற்றிருந்து பரிணம சக்தியைத் தன்னில் அடக்கி உலகத்தை மறையச் செய்தல் மூன்றும் ப்ரகிருதியினுடையது ஆகவே சத்வம் ரஜஸ் தமஸ் மூன்றின் சேர்க்கையான ப்ரகிருதி, உலகமாகப் பரிணமித்து நிலைபெற்று அழிந்துவிடுகிறது, காரணநிலையை அடைகிறது என்று கூறும் சாங்கியமதக் கருத்தோடு முன்கூறிய கருத்து ஒத்திருப்பதை மறைப்பதற்கில்லை.

ஜீவன் ஈசனின் அம்சம் என்பது முஸ்லீம்களில் சிலர் கூறுகிருர். இது விசிஷ்டாத்வைதத்தை உணர்ந்தவர் புதிது எனக்கருதமாட்டார். ஜீவர்களுக்காகத் தேவதூதன் அல்லது குருபகவானைப் பிரார்த்தித்து மோட்சத்தை வாங்கிக் கொடுக்கிருன் என்பது சிலர் கருத்து. குரு இல்லாமலேயே ஜீவன் நேராக மோட்சமடையலாம் என்பதை வேறுசிலர் கூறுகின்றனர். இக்கருத்துக்களையும் நம்மிடையே நிலவும் பல மதங்களில் காண்பது அரிதன்று.

புண்ணியம் பகவானிடம் சேர்க்கும். பாபம் விலக்கும். ஆகவே புண்ணியம்தான் மோட்சத்திற்குக் காரணம் என்பது இஸ்லாமியக்கொள்கை. கர்மாவினுல் மோட்சமடைவது முடியாதகாரியம். ஞானத்தால் மட்டும்தான் மோட்சம் கிட்டும் என்று கூறும் இந்தியமதத்தினர் இதை பக்திக்கு ஒவ்வாதது என்று முற்றிலும் மறுத்துவிடுவர். ஷீயர்கள் என்பவர் இம்மதத்தில் ஒரு பிரிவை ஏற்படுத்தியவர். அவர் இம்மதத்தில் வரைகடந்து பேசுபவர் என்று பெயர் பெற்றவர். 'மனிதன் நற்குணங்களின் மேலீட்டால் கடவுள் ஆகலாம்.

கடவுளின் அவதாரமாகலாம். கடவுளும் மனிதனுகலாம். ஸமஸ்காரங்களால் தூய்மையும் அதில்லாததால் மாசும் ஏற்படுவதில்லை என்பதை இவர் ஏற்கவில்லை. பல மனைவிகளை மணப்பதையும் விவாகரத்தையும் இவர் நம்பவில்லை. பலர் சேர்ந்து உண்பதை இவர் மறுக்கின்ருர். குர்ஆனுக்கு மேல் எழுந்தவாறு தோன்றும் கருத்தை விலக்கி ரகஸ்யார்த்தம்தான் உண்டு என்று இவர் ஸ்தாபிக்கின்ருர்.

குரு இம்மதத்தினருக்குப் ப்ரத்யட்ச தெய்வம். முகமது நபியிடம் கடவுளின் ஜோதியிருந்தது. அது அவர் மகள், மருமகன், அவர் மக்களிடம் என்றமுறையில் பிரமமாக உலகில் பரவிவருகிறது. அம்முறையில் குருவினிடமும் அந்த ஜோதி வருவதால் குரு தெய்வவரம் பெற்றவராகிருர்.

முத்த சலேட்ஸ் என்பவர் இம்மதத்தில் மற்ருெருசாரார். இவர்கள் இஸ்லாம் மதத்தில் ஞானமார்க்கத்தைப் புகச்செய்தவர். புத்திமான்களுக்கு இம்மதம் விசேஷப் பிரியத்தை உண்டாக்கும் முறையில் அமைந்திருக்கிறது.

இவ்விதமே, ஷீயர், ஆல், சூபீ முதலிய பல பிரிவுகள் இஸ்லாம் மதத்தில் தோன்றியிருக்கின்றன. ஒவ்வொன்றுக்கும் தத்துவத்தில் என்றும் சேரமுடியாத விதத்தில் உள்ள வேற்றுமைகளும் உண்டு. சிலசமயம் இவற்றைப் பார்க்கும் பொழுது இத்தகைய வேறுபட்ட கருத்துக்களை எவ்விதம் இஸ்லாம் மதம் என்ற தலைப்பின்கீழ்ச் சேர்ப்பது என்ற சந்தேகம்கூட நமக்கு உண்டாகிவிடும். ஆகிலும் முகம்மது நபியின் உபதேசத்தை ஒட்டியும் குர்ஆனை ஓரளவு தழுவியும் அவரவர் தம்மதத்தை ஸ்தாபித்திருப்பதால் எல்லா மதத்தையும் இஸ்லாம் மதமாகக் கூறுவதிலும் தவறில்லை. ஆகிலும் ஒன்றுக்கொன்று முரணுன தத்துவத்தைப் போதிக்கும் பல கிளைகள் ஒரேமதத்தில் அமைந்திருப்பது சற்று வியப்பையே தரக்கூடியதாக இருக்கிறது. ஆகிலும் மரத்தின் எந்தக்கிளையைப் பிடித்துக் கொண்டு கடைசிவரையில் போனுலும் வேரில் சேரலாம் என்பதை நாம் மறப்பதற்கில்லை.

இவ்விதம் பல மேதாவிகளும் ஞானிகளும் உருவாக்கிய எண்ணிறந்த கிளைகளோடு கூடியது இஸ்லாம் மதம் என்ற சிறந்த மதம். தமது மேதையின் உதவியைக்கொண்டு முன்னோர் கூற்றைப் பின்பற்றி ஆராய்ந்து தத்துவங்களை உபதேசித்து இருக்கின்றனர். இந்த ஆராய்ச்சியில் 'பெரியோர் புத்தி ஒரேவிதமாய் யோசிக்கும் இயல்பு உடையது' என்று ஆனந்த வர்த்தனுசாரியார் கூறியபடி ஒற்றுமையான கருத்துக்கள் பல தோன்ற இடமுண்டு. ஆனுல் அவரவர் சுயமாகவே இதை யோசித்திருக்கின்ருர் என்பதை வெளியிடக்கூடிய அம்சங்களும் அவற்றில் இல்லாமல் இல்லை. ஆகவே ஒருவர் மற்ருெவரைப் பார்த்து எழுதிவிட்டார் என்ருே தம்மதத்தைப் பிறர் மதத்தின்பேரில் கட்டிவிட்டார் என்ருே குறைகூறுவது அறிவாளிகளுக்கு ஏற்றமுறையல்ல என்பதை நாம்

மறுப்பதற்கில்லை. இஸ்லாம் மதத்தின் கிளைகளை ஏற்படுத்தியவர் அனைவரும் சம்சார துக்கத்தை அகற்றி மோட்சமடையும் முறையை ஆராய்ச்சிசெய்து உலகத்திற்குக் கூறியவர் தாம் என்பதை இஸ்லாமியரே மறுக்க முன்வரார். அவ்விதமிருக்கும்பொழுது இந்திய மதங்களில் சில இஸ்லாமிய மதத்திலிருந்து உருவானவை என்று கூறுவதில் இருக்கும் பொருத்தமின்மையை யார்தான் மறுக்க முடியும்? ஒவ்வொரு மதத்தையும் ஊடுருவிக் கடைசிவரையில் பார்த்தால் இரு மதமும் ஒன்றின்மேல் ஒன்று கட்டப்பட்டதல்ல என்பது தெள்ளத்தெளிய விளங்கும். சமீபகாலத்தில் ஒரு சிறந்த மேதாவி இஸ்லாமிய மதத்தில் கடவுளின் அத்வைதத்தைக் கூறியிருப்பதைக்கண்டு அத்வைதமெனப்படும் இந்திய மதங்களில் ஒன்றை இஸ்லாம் மதத்திலிருந்து உருவானதாகக் கூறிவிட்டார். 'ஜீவனும் கடவுளும் ஒன்று; உலகில் கடவுளைத்தவிர மற்றொன்றும் இல்லை' என்று கூறும் அத்வைதமதம் எங்கே? 'கடவுள் ஒருவர்; ஜீவன்கள் எண்ணிறந்தவர் கணக்கற்ற உலகப் பொருள்களும் வேற்றுமையுடன் உண்மையாக இருக்கின்றன' என்று கூறும் இஸ்லாமிய மதம் எங்கே? இதைச் சற்று நிதானித்திருந்தால் அத்தகைய மேதாவிக்கு உண்மை புலப்படாமல் இருக்காது. ஆகவே எந்த மதங்களிலும் மற்றொரு மதத்தின் கொள்கையை எடுத்துக்கொண்டிருக்கிறார்கள் என்று ஸ்தாபிக்க முற்படுவது ஆழ்ந்துபார்க்கும் இயல்புடையவருக்கு ஏற்கத்தக்கதாய் இராது. ஒரே மதத்தில் ஏற்பட்ட கிளைகளில் ஒன்று மற்றொன்றைத் தழுவியோ மேல்படியாகவோ இருப்பது குறைகூறுவதற்கு இடமாகாது. சரித்திர ஆராய்ச்சியை ஆதாரமாகக்கொண்டு சிலர் இந்திய மதக்கருத்துக்கள் இஸ்லாமிய மதத்தில் புகுந்திருப்பதாகவும் கூறுகின்றனர். இதற்கவர் கூறும் காரணம் புத்த சன்யாசிகளிடமிருந்து இஸ்லாமியர் சில தத்துவங்களை உணர்ந்திருக்கின்றனர். பல இந்திய நூல்களை மொழிபெயர்த்திருக்கின்றனர். இந்தியர்களின் ஒழுக்கத்தைக் கண்டு வியந்து அவர்களை வேலைக்கு அமர்த்திக்கொண்டு அவரோடு தொடர்புகொண்டனர். பல இந்துக்களைத் தம்மதத்தில் சேர்த்துக்கொண்டு அவர்மூலமாகத் தம் மதப் பிரசாரம் செய்தனர் என்பனவாகும். இக்காரணங்களால் இந்தியரின் மதக்கருத்துக்கள் இஸ்லாம் மதத்தில் புகுந்துகொண்டன என்று அவர்கள் கூறுகிறார்கள். இதைச் சரித்திர ஆராய்ச்சியாளர் கூறுவதால் அந்த ஆராய்ச்சியின் நம்பத்தகுந்த தன்மையைப் பொறுத்தது நாம் இதை ஏற்பது.

எப்படியாகிலும் உலகமாகும் ஆராய்ச்சிமந்திரத்தில் பல பெரிய ஆராய்ச்சியாளரும் தோன்றி இருக்கின்றனர். கோடிக்கணக்கான ஆராய்ச்சியாளர்களின் தீர்மானத்தில் ஒற்றுமை ஏற்படுவதும் இயல்புதான். ஆனால் அதில் ஒருவர் மற்றொருவரைத் தழுவியதாகத் தீர்மானிப்பது சிறந்தமுறை அன்று என்பதைமட்டும் தான் நாம் கூறலாம். இம்முறையில் இஸ்லாம் மார்க்கத்திற்கும் மற்ற மதங்களுக்கும் சமமானநிலை இவ்வுலகில் உண்டு என்பதை ஒருவரும் மறுக்கமுடியாது.

---

# கல்வெட்டுக்கள்

திரு. P. R. ஸ்ரீநிவாசன் அவர்கள்.

பாரதநாடு தொன்றுதொட்டுப் பண்புமிக்க நாடாக இருந்துவந்திருக்கிறது. உலகத்தில் ஏனைய சிலநாடுகளும் ஒருகாலத்தில் பண்புமிக்கனவாய் இருந்து பிறகு அவற்றில் நாகரிகம் அற்றுப்போயிற்று. இதற்குச் சான்ருக கிரேக்க, எகிப்திய, மெசபொடேமிய நாடுகளைக் கூறலாம். நம்நாட்டில் பழமையான நாகரிகம் இன்று வரை தொடர்ந்து இருந்துவருவதற்குப் பல காரணங்கள் உண்டு. ஆனால் இவற்றில் மிக முக்கியமானவை இரண்டு எனலாம். ஒன்று தெய்வ பக்தி. இரண்டாவது செல்வத்தில் வெறுப்பு அல்லது துறவறத்தின் உயர்ச்சி. தெய்வபக்தியை அடிப் படையாகக்கொண்ட நாகரிகத்தைப் பின்பற்றும் இந்தியர்கள் எதிரிகளையும் வசப் படுத்திக்கொண்டு தங்கள் நாகரிகத்தைக் காப்பாற்றமுடிந்தது. செல்வத்தையே மனிதனின் உயர்வுக்கு முதல் காரணம் என்று நினையாது அதன்பேரில் பற்றை விட்டு ஆத்மீக சக்தியை வளர்ப்பதையும் அவ்விதம் வளர்ப்பவர்களான துறவிகளை மட்டுமே உயர்ந்தவர்களெனக் கருதும் அம்சத்தையும் மூலாதாரமாகக் கொண்ட நாகரிகத்தைத் தழுவியதால் நம் முன்னோர்களும் தமது அரிய பண்பை அழியாமல் பாதுகாக்கமுடிந்தது. மேலும், இக்குணங்கள் நிரம்பியிருந்ததின் காரணமாக நமது பண்பைப் பிற தேசத்தினர் ஏற்றுக்கொள்ளவும் முடிந்தது.

இவ்விதம் சிறப்புவாய்ந்த நமது நாட்டின் வரலாறுகள் ஏனைய நாட்டில் போன்று, தொடர்ச்சியாக எழுதிவைக்கப்பட்டிருக்கவில்லை. கல்ஹணக்கவியின் ராஜதரங்கிணி, பில்ஹணனின் விக்ரமாங்க தேவி சரிதம்; ஒட்டக்கூத்தனின் கலிங்கத்துப்பரணி போன்ற ஓரிரண்டு நூல்களே ஒருவகைப்பட்ட சரித்திர வர லாறுகளைத் தெரிவிக்கின்றன. இவ்வாறு சரித்திர வரலாறுகள் தெரியாமல் இருக்கும்போது சமீப காலத்தில் இவைகளைத் தெரிவிக்கும் சாதனங்கள் கிடைக்க லாயின. இவைகள் தாம் பண்டைப்பொருளாகும். இவற்றில் பண்டைக் கட்டிடங்கள், சிற்பங்கள் ஓவியங்கள் நாணயங்கள் முக்கியமானவை. இவற்றை எல்லாம்விடத் தலைசிறந்த சாதனமாக விளங்குவன கல்வெட்டுக்களாகும். இது வரை நம்நாட்டில் கண்டுபிடித்திருக்கும் கல்வெட்டுக்கள் எண்ணற்றவையாகும். இவற்றிலிருந்து தெரிந்துகொள்ளக்கூடிய சரித்திர சமய சமூக அரசியல் பொரு ளாதார விஷயங்களின் நுணுக்கங்களைப் பல பெரிய சரித்திர நூல்களின் வாயி லாகக்கூடத் தெரிந்துகொள்ளமுடியாது எனலாம். இக்கல்வெட்டுக்களில் பெரும் பான்மையானவை நமது நாட்டில் பிரசித்திபெற்ற சமயங்களைச்சார்ந்த கட்டிடங் களின் பேரில் பொறிக்கப்பட்டிருப்பதிலிருந்து நமது நாகரிகத்தின் முக்கிய அம்ச மான தெய்வ பக்தி தெளிவாகிறது. கல்வெட்டுகளில் ஒரு பகுதி துறவிகள் தங்குமிடங்கள் செய்யப்பட்டதையும், வேத சாஸ்திரத்துறையில் ஈடு பட்டவர்

களுக்கு மான்யங்கள் விடப்பட்டதையும் பற்றிச் சொல்வதிலிருந்து. நமது நாகரிகத்தின் மற்றொரு முக்கிய அம்சமான செல்வத்தைப் பொருட்படுத்தாமல் அதைப் பிறர் நலனுக்கு உபயோகப்படுத்தும் குணமும் நன்கு தெரியவரும்.

**கல்வெட்டுக்கள் எழுதும் பொருள்கள்:** கல்வெட்டுக்கள் என்ற சொகளில் பொறிக்கப்பட்டுள்ள எழுத்துக்கள் மட்டுமே குறிப்பதல்ல. செப்பேடுகள், தங்கச் சாமான்கள், ஸ்படிக சாமான்கள், நாணயங்கள் முதலியவற்றில் பொறிக்கப்பட்டுள்ள எழுத்துக்களும் கல்வெட்டுக்கள் என்றே பெரிதும் வழங்கப்படுகின்றன, இவ்விதமான கல்வெட்டுக்கள் நமது நாட்டில் பல இடங்களிலிருந்து ஏராளமாகக் கிடைத்திருக்கின்றன. இவைகள் பலகாலத்தில் பல அரசர்கள் ஆட்சி செய்யும்பொழுது ஏற்பட்டவை. இவற்றைப் படித்தால் நம் கலாசாரத்தின் மொத்த வளர்ச்சியை நன்கு அறிய முடியும். கல்வெட்டுக்களை ஆராயும்பொழுது முதன்முதலாகத் தெரியவருவது, நமது நாட்டில் வழக்கிலிருக்கும் பல லிபிகளின் வளர்ச்சியும் கல்வெட்டில் உபயோகித்துள்ள மொழியின் வளர்ச்சியுமாகும்.

**எழுத்துக்கள் அல்லது லிபிகள் வளர்ச்சி:** உலகத்திலுள்ள தற்கால லிபிகள் எல்லாம் இதற்கு முன்பாகப் பலவித வடிவங்களையும் பெற்றிருந்தன என்பதற்கு ஆதாரங்கள் இருக்கின்றன. மிகப் பழைமையான காலத்தில் மனிதர்கள் தாம் பிறரிடம் சொல்லவேண்டியவற்றைச் சித்திர ரூபமாக எழுதிக்காண்பித்துக் கொண்டிருந்தார்கள். இவ்வித நிலையில் அந்த எழுத்துக்களை உரு நிலையில் உள்ளவை என்கிறார்கள். பிறகு ஒரு எண்ணத்தைக் குறிக்க ஒரு சித்திரத்தை உபயோகித்தார்கள். இந்த நிலை உணர்வு நிலை எனப்படும். பிற்பாடு ஒரு வார்த்தையின் ஒலியைக் குறிக்க ஒரு வடிவை எழுதிவந்தார்கள். இந்த நிலைக்கு ஒலி நிலை எனப்பெயர். கடைசியில் மனிதர்கள் தாங்கள் பேசும் மொழியிலுள்ள ஒலிகளை ஒரு முறைப்படுத்தி ஒவ்வொரு ஒலியையும் ஒரு குறியால் காட்டலானார்கள். இந்த நிலை தான் தமிழில் நெடுங்கணக்கு நிலை எனப்படும். இதை ஆங்கிலத்தில் ஆல்பபெட் (Alphabet) என்பார்கள். நம் நாட்டிலும் இவ்விதமாக எழுத்துக்கள் வளர்ச்சி அடைந்துள்ளதாக ஆராய்ச்சியாளர்கள் கருதுகிறார்கள். ஆனால் உரு நிலையில் உள்ள எழுத்துகளுக்குச் சான்று இங்கே கண்டுபிடிக்கப்படவில்லை. உணர்வு ஒலி நிலைகள் ஒருமாதிரி கலந்திருந்த லிபி கி. மு. சுமார் 2500 வருஷங்களுக்கு முன் சிந்து நதிக்கரையில் சிறந்திருந்த நாகரிகத்தின் அம்சமாக இருந்தது. இந்த முறையில் பொறிக்கப்பட்ட எழுத்துக்கள் உள்ள பல முத்திரைகள் மோஹஞ்சோதாரோ, ஹரப்பா என்ற இடங்களில் தோண்டி எடுக்கப்பட்டுள்ளன இந்த லிபியோவெனில் இன்றைக்கும் ஒருவராலும் சரிவரப் புரிந்துகொள்ள முடியாததாக இருக்கிறது. சிந்து நதிக்கரை நாகரிகத்திற்குப் பிற்பட்ட காலத்தைச் சேர்ந்த கல்வெட்டுக்கள் கி. மு. மூன்றாவது நூற்றாண்டிலிருந்தே கிடைக்கின்றன. இக்கல்வெட்டுக்களில் பெரும்பான்மை அசோகச் சக்கரவர்த்தியின் காலத்தைச்

சேர்ந்தவை. இவை பொறிக்கப்பட்டுள்ள லிபிகள் நெடுங்கணக்கு நிலையை அடைந்துள்ளன. இதிலிருந்து சிந்து நதிக்கரை நாகரீகத்துக்கும் கி. மு. மூன்ருவது நூற்ருண்டுக்கும் இடையிலும் எழுத்துக்கலை கையாளப்பட்டுவந்து காலக்கிரமத்தில் நெடுங்கணக்கு நிலையை அடைந்திருக்கவேண்டும் என்று தெரிகிறது.

**காரோஷ்டி, பிராமிலிபிகள் :** இந்தியாவில் கண்டு பிடிக்கப்பட்டு இருக்கும் கல்வெட்டுக்களில் மிகப் பழைமையானவை இரண்டுவகை லிபிகளில் பொறிக்கப்பட்டிருக்கின்றன. இந்தியாவின் வடமேற்கு எல்லைப்புற மாகாணத்தில் அகப்பட்ட கல்வெட்டுக்களும் அசோகர் காலத்தைச் சேர்ந்தவைகளே. இவைகள் காரோஷ்ட்டி என்ற ஒருவகை லிபியில் பொறிக்கப்பட்டுள்ளன. இந்த லிபி வலதுபுறமிருந்து இடதுபுறமாக எழுதப்பட்டு வந்தது. இந்த லிபியானது இந்தப் பிரதேசத்தில் மட்டும் சுமார் கி பி. 5 ஆவது நூற்ருண்டுவரை வழக்கிலிருந்து பிறகு மறைந்தது. இதிலிருந்து வேருெரு லிபியும் வளர்ந்ததாகத் தெரியவில்லை.

இந்தியாவின் ஏனைய பாகங்களிலிருந்து கிடைக்கும் கல்வெட்டுக்களில் பல கி. மு. மூன்ருவது நூற்ருண்டைச் சேர்ந்தவை. அசோகரால் பொறிக்கப்பட்டவை. ஆனுல் தமிழ்நாட்டிலும் ஈழத்திலும்கூட இக்காலத்தைச் சேர்ந்ததாகக் கூறப்படும் பல கல்வெட்டுக்கள் கிடைத்திருக்கின்றன. இவை எல்லாம் பிராமி என்ற லிபியில் பொறிக்கப்பட்டுள்ளன. இந்த லிபி தமிழ்நாட்டில் ஏற்கெனவே இருந்த ஒரு லிபிக்குப் பதிலாக ஏற்றுக் கொள்ளப்பட்டதாகச் சில ஆராய்ச்சியாளர்கள் கூறுவர். இந்தப் பழைய லிபியே வட்டெழுத்தெனவும் கொள்ளுவர்.

இவ்விதம் வடமேற்கே தவிர இந்தியா முழுவதிலும் இலங்கைத் தீவிலும் கூட கி. மு மூன்ருவது நூற்ருண்டில் வழக்கிலிருந்த லிபி பிராமி லிபியாகும். வட இந்தியாவில் இந்த லிபியானது கி. பி. சுமார் ஐந்தாவது நூற்ருண்டுவரை அநேகமாகப் பழைய உருவத்திலிருந்து வந்தது. பிறகு ஒவ்வொரு எழுத்தும் சிறிது மாறுதலடைந்து நாகரி என்ற பெயருடன் குப்த ராஜ்யத்தில் வழக்கிலிருந்து வந்தது. குப்தர்கள் காலத்தைச் சேர்ந்த கல்வெட்டுக்கள் இந்த நாகரி லிபியிலேயே பொறிக்கப்பட்டுள்ளன. இந்த லிபியும் வடஇந்தியாவின் பல பாகங்களிலும் பலவிதமாகக் கையாளப்பட்டு ஒவ்வொரு பாகத்திலும் ஒவ்வொரு உருவுடன் திகழ ஆரம்பித்தன. கி. பி. 10, 11வது நூற்ருண்டில் வங்காளத்தில் குடிலாக்ஷரம் என்ற பெயருடன் வழங்கியது. பிறகு இதுவே தற்கால வங்காள லிபிக்கு மூலமாக ஆயிற்று. ஆனுல் பழைய குடிலாக்ஷரம் இன்னும் திபெத்து போன்ற இடங்களில் வழக்கில் இருந்துவருகிறது. இது போலவே குப்தகால நாகரி கொஞ்சம் கொஞ்சமாக மாறி இக்காலத்திய குஜராத்தி சாரதா முதலிய லிபிகளுக்கு மூலமாயிற்று.

ஆனுல் தமிழ் நாட்டின் வடபகுதியில் கி. பி. 2வது 3வது நூற்ருண்டில் பிராமியிலிருந்து சிறிது மாறுதலடைந்த லிபி ஒன்று வழக்கில் இருந்தது. இரண்டு

மூன்று நூற்றூண்டுகள் கழித்து இந்த பிராமி லிபியினின்றும் கிரந்தம், நாகரி என்ற லிபிகள் தோன்றின. இவற்றில் பொறிக்கப்பட்ட கல்வெட்டுக்கள் கி. பி. 7-ம் நூற்றூண்டிலிருந்து கிடைக்கின்றன. பெரும்பாலும் பல்லவர்கள் காலத்தில் இவ்விரண்டு லிபிகளும் கல்வெட்டுக்கள் பொறிக்கப்படலாயின. இவர்கள் காலத்தில் உபயோகிக்கப்பட்ட கிரந்த லிபியை பல்லவ கிரந்தம் என்பர். இந்தக்கிரந்த லிபியை ஒட்டியே இவர்கள் காலத்தில் தமிழ் லிபி ஒன்றும், வழக்கிலிருந்துவந்தது. இவர்கள் காலத்தில் நாகரி, கிரந்தம் என்ற லிபிகள் இரண்டும் சாதாரண வடிவம் சித்திரிக்கப்பட்ட வடிவம் என்ற இருவகை வடிவுகளில் எழுதப்பட்டுவந்தன. ஆனுல் சித்திரிக்கப்பட்ட வடிவுகள் அதிக நாட்கள் வழக்கில் இல்லை.

பல்லவ அரசர்கள் கி. பி. 600 முதல் 850 வரை ஆட்சிபுரிந்தபொழுது இவர்கள் ஆதிக்கம் பெற்ற இடங்களில் எல்லாம் மேற்கூறிய லிபிகளே வழக்கில் இருந்தன. இவர்கள் ஆதிக்கம் பெருத பாண்டி மண்டலம், மலைநாடு. கொங்கு நாட்டின் ஒரு பகுதி. இவ்விடங்களில் எல்லாம் வட்டெழுத்து என்ற லிபி வழக்கில் இருந்தது. கி. பி, சுமார் 8-வது நூற்றூண்டிலிருந்து சுமார் 16-வது நூற்றூண்டுவரை வட்டெழுத்து வழக்கிலிருந்து பிறகு இது கிரந்த லிபியால் ஒதுக்கப்பட்டுவிட்டது. மலையாளத்தில் தற்சமயம் வழக்கிலிருந்து வரும் லிபி கிரந்த லிபியின் ஒரு மாறுதலான வடிவமேயாகும். இதை ஆர்ய லிபி எனச் சொல்லுவார்கள் பல்லவ நாட்டுக்கும் இடையிலிருந்த பிரதேசங்களில் வட்டெழுத்து பல்லவ கிரந்தம் இவ்விரண்டும் கலந்த லிபியில் கல்வெட்டுக்கள் பொறிக்கப்பட்டன. இவ்வகைக் கல்வெட்டுக்களில் மிகப் பழைமையெனப்படுவது கி, பி. 4-ம் அல்லது 5ம் நூற்றூண்டைச் சேர்ந்த திருநாதர்குன்று என்ற இடத்தில் பொறிக்கப்பட்ட கல்வெட்டாகும்.

விஜயநகர அரசர்கள் காலத்தில் கன்னடம் தெலுங்கு தமிழ் லிபிகளும், மேலும் நாகரி லிபியின் மாற்றமான நந்திநாகரி என்ற லிபியும் சாசனங்கள் பொறிக்கக் கையாளப்பட்டுவந்தன. நந்தி நாகரி மேலும் வளர்ச்சியடைந்து தஞ்சாவூரில் மகாராஷ்டிர அரசர்கள் காலத்தில் கல்வெட்டுகள் பொறிக்க உபயோகிக்கப்பட்டது. நாகரி லிபி அதிகமாக வழக்கில் வரவரப் பழைய கிரந்தலிபி கொஞ்சம் கொஞ்சமாக மறைந்துபோகலாயிற்று. இப்பொழுது நாகரி லிபியே அதிகமாகத் தமிழ்நாட்டில் தமிழுக்கு அடுத்தபடியாக வழக்கில் இருந்துவருகிறது.

மேற்கு இந்தியாவிலும், தெக்கணத்திலும் பிராமி லிபி கி. பி. சுமார் 5-வது நூற்றூண்டு வரை வழக்கிலிருந்து பிறகுதான் கொஞ்சம் கொஞ்சமாக உருவம் மாறி அந்தப் பிரதேசத்தில் மட்டும் வழங்கும் கன்னடம் என்ற லிபியின் பழைய உருவைப் பெற்றது. இந்த பழம் கன்னட லிபியை மேலைச் சாளுக்கிய வம்சத்தினனுன குப்ஜ விஷ்ணுவர்த்தனன் தெலுங்குநாட்டுக்குத் தன்னுடன் கொண்டுபோனுன். இங்கு இது சில மாறுதல்கள் அடைந்து பிற்காலத்தில்

தெலுங்கு நாட்டில் மட்டும் வழங்கலான தெலுங்கு லிபியின் பழைய உருவமாகியது. இதே போலவே கலிங்க தேசத்திலும் கி. பி 5-ம் நூற்றாண்டுவரை பழைய பிராமி லிபியிலேயே கல்வெட்டுக்கள் பொறிக்கப்பட்டுவந்தன. பின்பு அங்கே ஆண்ட கங்கவம்சத்தவர்கள் காலத்தில் இது கொஞ்சம் கொஞ்சமாக மாறிக் கலிங்க தேசத்தில் மட்டும் அதிகமாக வழங்கிய ஒரு வித நாகரி லிபியாகியது. இந்த லிபி கி. பி. 12, 13வது நூற்றாண்டு வரை அதிகமாக வழக்கிலிருந்துவந்தது. பிற்பாடு சிறிது சிறிதாக ஓரியா லிபி வளர்ச்சியடைந்து வழக்கில் வர ஆரம்பித்தது. இவ்விதமாக நம்நாட்டில் ஆரம்பத்தில் பிராமி லிபியானது கி. மு. மூன்றுவது நூற்றாண்டு முதல் கி. பி. 5-வது நூற்றாண்டுவரை வழக்கிலிருந்தது. இந்த லிபியே இது வழக்கிலிருந்த 500, 600 வருஷங்களில் சில மாறுதல்கள் அடைந்தது. இதிலிருந்தே பிற்காலத்தில் வழங்கலான பல லிபிகள் வளர்ச்சி அடைந்தன. தற்காலத்தில் தென்னிந்தியாவில் வழக்கிலிருந்துவரும் லிபிகளும் பிராமியிலிருந்தே வளர்ச்சியடைந்தன. இவற்றைத் தெள்ளெனக்காட்ட இத்துடன் காட்டப்பட்டிருக்கும் படங்களைக் கவனிக்கவும்.

**மொழி:** லிபிகள் எவ்விதம் காலக்கிரமத்தில் வளர்ச்சியடைந்தனவோ இதுபோலவே கல்வெட்டுக்களிலிருந்து என்ன என்ன மொழிகள் எவ்வெக்காலங்களில் கல்வெட்டுக்களில் காணப்படுகின்றன என்பதையும் அறியமுடிகிறது. சரித்திர முற்காலத்தைச் சேர்ந்த சிந்து நதிக்கரை நாகரீகத்தில் என்ன மொழி வழக்கிலிருந்தது என்பதைச் சரிவரத் தெரிந்துகொள்ள முடியவில்லை இதற்குக் காரணம் இதைச்சேர்ந்த எழுத்துக்களை இன்னும் ஒருவராலும் வாசித்தறிய முடியாததுதான். ஆனால் சரித்திர ஆராய்ச்சியாளர்களில் சிலர் முக்கியமாக பம்பாய் சர்வகலாசாலையைச்சேர்ந்த சரித்திரப் பேராசிரியர் பாதர் ஹீராஸ் என்பவர் சிந்து நதி நாகரீகத்தில் தமிழ் மொழியே வழங்கி வந்ததென்றும், இந்த மொழியையே மேற்சொன்ன எழுத்துக்களில் பொறித்திருக்கிறார்கள் என்பர். தற்காலத்துத் தமிழ் நாகரீகத்தின் பல அம்சங்களுடைய சின்னங்களைச் சிந்துநதிக்கரை நாகரீகத்தைச் சேர்ந்த பல சின்னங்கள் பிரதி பலிப்பதால் தமிழ் மொழியும் அங்கே வழக்கிலிருந்திருக்கலாம் என ஊகிக்க இடமுண்டு.

பிற்காலத்தில் கி மு. மூன்றுவது நூற்றாண்டைச் சேர்ந்த கல்வெட்டுக்களில் பெரும்பான்மையானவை மௌரிய வம்சத்தைச் சேர்ந்த அசோக அரசனால் பொறிக்கப்பட்டவை. இக்காலத்திலிருந்து கி. பி. சுமார் 400வது ஆண்டுவரை இந்தியாவிலும், இலங்கையிலும் காணப்படும் பழைய கல்வெட்டுகள் எல்லாம் பிராகிருத மொழியில் இருக்கின்றன. ஆனால் இடையிடையே வடமொழியில் பொறிக்கப்பட்ட சில கல்வெட்டுக்களும் காணப்படுகின்றன. உதாரணமாகக் கி. மு. 2-ம் நூற்றாண்டைச்சார்ந்த கோஹண்டி என்ற இடத்தில் அகப்பட்ட கல்வெட்டையும், கி. பி. 2-ம் நூற்றாண்டைச் சார்ந்த கிரனார் என்ற இடத்தில் அகப்பட்ட ருத்திரதாமன் என்ற க்ஷத்திரிய அரசனுடைய கல்வெட்டையும்

சொல்லலாம். ஆனால் இந்தியாவின் தென்கோடியில் தமிழ் தொன்றுதொட்டு வழங்கிவந்திருப்பதற்கு இலக்காக மதுரைத் திருநெல்வேலி ஜில்லாவிலுள்ள குன்று களிலுள்ள குகைகளில் பிராமி லிபியில் பொறிக்கப்பட்டிருக்கும் கி. மு. மூன்றும் நூற்றாண்டைச் சார்ந்த கல்வெட்டுக்கள் தமிழும் பிராகிருதமும் கலந்த மொழியில் இருக்கின்றன. சமீப காலத்தில் பாண்டிச்சேரிக்கருகாமையிலுள்ள அரிக்க மேடு என்ற ஊரில் தோண்டிப் பார்த்தார்கள். அங்கே கி பி. சுமார் 30 முதல் 50 வரை ரோம் நகர வாசிகள் வசித்த இடம் கண்டுபிடிக்கப்பட்டது. இங்கே அகப்பட்ட பொருள்களில் பிராமி லிபியால் எழுதப்பட்ட வாக்கியங்களுடைய ஓட்டுச்சில்களும் சிலவாகும். இந்த எழுத்துக்களை வாசித்தவர்கள் இவை தமிழ் மொழியில் இருக்கின்றன என்கிறார்கள். இதிலிருந்து தமிழ்மொழி தமிழ் நாட்டில் தொன்றுதொட்டு வழக்கில் இருந்து வந்திருக்கிறது என்பது நன்கு விளங்கும் கி. பி. முதல் நூற்றாண்டு முதல் கி. பி. சுமார் 7-வது நூற்றாண்டுவரை தமிழ் நாட்டின் நாகரீகத்தைப்பற்றித் தெரிந்துகொள்ள உதவியாக புகழ்பெற்ற சங்க நூல்கள் இருக்கின்றனவே தவிர கல்வெட்டுக்கள் முதலிய ஏனைய புதைப் பொருள்கள் இல்லை. கி. பி. 7-ம் நூற்றாண்டுமுதல் சிலகாலம் வரை கல்வெட்டுக் களில் வடமொழி சிறப்பாக வழங்கப்பட்டது. பிறகு வடமொழி முற்பகுதியும் பிற்பகுதி தமிழ் முதலிய பிராந்திய மொழிகளிலும் உள்ள கல்வெட்டுக்கள் காணப் படுகின்றன. கி. பி. 10வது நூற்றாண்டிலிருந்து தமிழ் கன்னடம் முதலிய மொழி களில் மட்டும் பொறிக்கப்பட்ட கல்வெட்டுக்களே பெரும்பான்மையாக இருக் கின்றன. வட இந்தியாவிலும் இதேபோன்று குப்த அரசர்கள் காலமுதல் சுமார் கி. பி. 12, 13வது நூற்றாண்டுகள் வரை வடமொழியே கல்வெட்டுக்களில் பிர தானமாக உபயோகிக்கப்பட்டுவந்தது. பிறகு சிறிது சிறிதாக ஏனைய மொழிகளும் உபயோகிக்கப்படலாயின. ஆனால் தென்னிந்தியாவில் விஜயநகர ராஜ்யம் இருந்த பொழுது வடமொழி கொஞ்சம் அதிகமாக வழக்கிலிருந்ததற்குச் சான்றாகப் பல கல்வெட்டுக்கள் இம்மொழியில் உள. ஆனால் ஏனைய பிராந்திய மொழிகளான தமிழ் கன்னடம் தெலுங்கு முதலியவற்றிலும் பொறிக்கப்பட்ட கல்வெட்டுக்களும் அனேகம் உண்டு.

**கல்வெட்டுக்களின் உள்ளடக்கம்:** மெய்க்கீர்த்திகள்: நமது நாட்டிலுள்ள கல்வெட்டுக்களில் பெரும்பகுதி மத சம்பந்தப்பட்டவை. இவை கோவில்கள், ஸ்தூபங்கள், மடங்கள், மசூதிகள் போன்ற கட்டிடங்களில் பொறிக் கப்பட்டுள்ளன. இன்னுமொரு பகுதி செப்பேடுகளில் பொறிக்கப்பட்டுள்ளன. ஏனைய பொருள்களில் பொறிக்கப்பட்டுள்ள கல்வெட்டுக்கள் குறைச்சலான எண்ணிக்கையில் காணப்படுகின்றன. வெட்டுக்களில் உள்ளடங்கிய விஷயங்கள் பலவகைப்படும். இவற்றில் பல கல்வெட்டுக்கள் மெய்க்கீர்த்திகள் அல்லது பிர சஸ்திகள் அடங்கியவை. அதாவது இவற்றில் ஒரு அரசனுடையவோ அல்லது தளகர்த்தனுடையவோ வீரச்செயல்களைப்பற்றி விரிவாகச் சொல்லப்பட்டிருக்கும்

இதற்குச் சான்றுக முதலாவது இராஜேந்திர சோழனின் (11ம் நூற்றுண்டு) திருவாலங்காடு செப்பேட்டு எழுத்துக்களும், சமுத்திரகுப்தனுடைய (4ம் நூற்றுண்டு) அலஹாபாத்திலுள்ள தூணில் பொறிக்கப்பட்ட கல்வெட்டும், நாஸிக் என்ற ஊரிலுள்ள புத்த குகை கோயிலில் கௌதமபுத்திரசாதகர்ணியை (2ம் நூற்றுண்டு) பற்றிய கல்வெட்டுமாகும். வேறு சில கல்வெட்டுக்கள் தானம் செய்வதைப்பற்றி சொல்லும். மற்றும்சில கோயில்கள் கட்டுவதுபோன்ற விஷயங்களைச்சொல்லும்

**கல்வெட்டுக்களின் அமைப்பு:** ஒருகாரியத்தை ஆரம்பிக்கும்போது மங்கள வசனம் சொல்லி ஆரம்பிப்பது என்பது நம் நாட்டு வழக்கம். கல்வெட்டுக்களிலும் இவ்வழக்கத்தைக் காண்கிறோம். அனேகமாக எல்லாக் கல்வெட்டுக்களும் ஸ்வஸ்திஸ்ரீ என்று ஆரம்பிக்கின்றன. பௌத்த மதத்தைச் சார்ந்த அசோகரின் கல்வெட்டுக்கள் மட்டும் தேவனும்பிரிய என்று ஆரம்பமாகின்றன. இதிலும் தேவ என்ற வார்த்தை மங்களத்தை சுட்டிக் காண்பிக்கிறதாகும். சில கல்வெட்டுக்களில் ஸ்வஸ்தி ஸ்ரீ என்ற வார்த்தைகளுக்குப் பதிலாக அவற்றின் சின்னங்கள் செதுக்கப்பட்டு இருக்கின்றன. இதற்கு உதாரணமாகக் கலிங்க தேசத்தை கி. மு. 2ம் நூற்றுண்டில் ஆண்ட காரவேலனுடைய கல்வெட்டு ஆகும். சிலசமயங்களில் மங்கள வார்த்தைகளுடன் மங்களச் சின்னங்களான, திரிசூலம், போதி மரம், மத்தளம் முதலியவையும் செதுக்கப்பட்டுள்ளன. இதன் பிறகு ஓம் நமோ பகவதே; ஓம் நமஸ்ஸிவாய; ஓம் நமோ புத்தாய என்று எழுதப்பட்டிருக்கும். ஓம் என்பதற்குப் பதிலாக அதன் சின்னமான ஒரு சுருளை மட்டும் போடுவதும் வழக்கம். விஜய நகர அரசர்கள் காலத்தைச் சேர்ந்த கல்வெட்டுக்களின் ஆரம்பத்தில் ஸ்ரீ கணேஶாய நமஹ எனக் காணப்படுகிறது. இதற்குப் பிறகு கல்வெட்டை பொறிக்க ஏற்பாடு செய்யும் அரசன் முதலியவரின் இஷ்ட தேவதைகளின் பிரார்த்தனைச் செய்யுள்கள் காணப்படுகின்றன. இதன் பிறகுதான் மெய்க்கீர்த்திகள் விவரிக்கப்பட்டிருக்கின்றன. ஒவ்வொரு அரச வம்சத்தினருடையவும் கல்வெட்டுக்களின் ஆரம்பத்திலுள்ள அடைமொழிகள் அவர்களுக்கே உரித்தாக இருக்கும். சில சமயங்களில் இவ்வம்சங்களின் தனிப்பட்ட அரசர்களின் கல்வெட்டுக்களின் ஆரம்பத்தில் அவனுக்கே உரித்தான அடைமொழிகள் விவரிக்கப்படும். இதிலிருந்து ஆரம்பத்திலேயே அந்த கல்வெட்டுக்கள் எந்த அரசனுடையவை என்பது தெரியும். இந்தப் பழக்கம் இராஜ இராஜ சோழன் காலத்திலிருந்து சோழர்கள் கல்வெட்டுக்களில் சிறப்பாகக் கையாளப்பட்டுவந்தது தெரிகிறது. தான சாஸனங்களிலோ இஷ்ட தேவதா பிரார்த்தனைக்குப் பிறகு தானம் வாங்குபவரின் குலம் கோத்திரம் அவருடைய புலமை முதலியவை சொல்லப்படும். பிறகு தானமாகக் கொடுக்கப்பட்ட பொருள்கள் என்ன என்பது விரிவாகச் சொல்லப்படும். நிலம் கிராமம் தானம் செய்யப்பட்டால் இவற்றின் நான்கெல்லைகள் விவரமாகச் சொல்லப்படுகின்றன. பின்பு தானம் விடப்பட்ட சொத்துக்களை பிற்காலத்தில் ஒருவரும் அபகரிக்கக் கூடாதென்றும், அபகரித்தால் ஏற்படும் துன்

பங்கள் என்ன என்றும் கூறும். சில ஸ்லோகங்கள் பொறிக்கப்பட்டிருக்கும். இதற்கும் கடைசியில் சில சாஸனங்களில் எந்த அரசனால் தானம் கொடுக்கப் பட்டதோ அவனுடைய கையொப்பம் பொறிக்கப்பட்டிருக்கும். இதற்கு உதா ரணமாக ஸ்ரீ ஹர்ஷனின் (7வது நூற்றாண்டு) கல்வெட்டு ஒன்றையும் விஜயநகர ராஜ்ய அரசர்களில் சிலருடைய சாஸனங்களையும் கூறலாம்.

**முத்திரை:** இவ்விதக் கல்வெட்டுக்கள் எல்லாம் அரசனுடைய உத்திரவுப்படி செதுக்கப்பட்டவை என்பதற்கு அவ்வரசனின் முத்திரையும் அனேகமாக கல்வெட்டுக்களில் பொறிக்கப்படுவதுண்டு. முத்திரை பெரும் பாலும் செப்பேடு சாஸனங்களிலேயே காணப்படுகிறது. செப்பேடுகள் ஒன்றுக்கு மேற்படும்போது ஒரு வளையத்தில் கோர்க்கப்பட்டு அந்த வளையத்தைச்சேர்த்து முத்திரையையும் வைப்பது வழக்கம். ஒவ்வொரு அரசவம்சத்திற்கும் ஒவ்வொரு முத்திரை இருந்தது என்பதை அந்த அந்த அரசன் காலத்தில் பொறிக்கப்பட்ட செப்பேடுச் சாஸனங்களில் காணலாம். உதாரணமாக சேரர்களுக்கு வில்லும் சோழர்களுக்குப் புலியும், பாண்டியர்களுக்கு மீனும், சாளுக்கியர்களுக்குப் பன்றி அங்குசங்களும், பல்லவர்களுக்கு நந்தியும், குப்தர்களுக்குக் கருடனும் முத்திரைச் சித்திரமாக இருந்தன. செப்பேட்டுச் சாஸனங்களில் எல்லாம் மிகவும் அரியது முதலாவது இராஜேந்திர சோழனுடைய திருவாலங்காட்டு சாஸனமாகும். இதில் 31 கனமான ஏடுகள் உண்டு. இவை ஒரு பெரிய வளையத்தில் தொங்கவிட பட்டிருக்கின்றன. வளையத்தில் ஒரு பெரிய சோழவம்ச முத்திரை நேர்த்தியாகக் காணப்படுகிறது. இதனுள்ளடங்கிய பொருளும் சோழ வம்சத்தைப் பற்றிய பல அரிய விஷயங்களைக் கூறுவதால் இச் செப்பேடுகள் மிகவும் பிரசித்தி யெற்றவை. இந்தச் செப்பேடுகள் இன்னும் சில அரசவம்சத்தின் முத்திரைகள் இவைகளை இத்துடன் காண்பிக்கப்பட்டிருக்கும் படங்களில் காணலாம்.

**உள்ளடக்கம்: உயர்ந்த காப்பியங்கள்;** கல்வெட்டுக்களிலிருந்து அறியும் விஷயங்கள் பல. இவற்றில் முக்கியமான சிலவற்றை இங்கே குறிப்போம் வடமொழி தமிழ் முதலிய மொழிகளில் பொறிக்கப்பட்ட பல மெய்க்கீர்த்திகள் உயர்ந்த காப்பியங்களாக இருக்கின்றன. தவிர இவற்றை இயற்றிய புலவர்களைப் பற்றி வேறு ஒரு தகவலும் தெரியவில்லை. இதற்கு உதாரணமாக ஹரிஷேணன் ரவிகீர்த்தி என்ற வடமொழிப் புலவர்களைச் சொல்லலாம். சமுத்திரகுப்தன் (4ம் நூற்றாண்டு) காலத்தைச் சேர்ந்த ஹரிஷேணன்தான் அந்த அரசனுடைய வீரச்செயல்களை அற்புதமாக எடுத்துரைக்கும். அலஹாபாத் என்ற இடத்தி லுள்ள கல்வெட்டைச் செய்வித்தான், இதேபோல் மேலைச் சாளுக்கிய வம்சத்தை சேர்ந்த இரண்டாம் புலிகேசன் (7ம் நூற்றாண்டு) காலத்தில் வசித்த ரவிகீர்த்தி என்ற ஜைன மதப்புலவர் ஐஹோளே என்ற இடத்தில் உள்ள ஒரு ஜைனக் கோயிலில் பொறிக்கப்பட்டுள்ள அரிய கல்வெட்டைச் செய்தார். இதேபோல் தமிழ் நாட்டிலும் பல அரிய மெய்க்கீர்த்திகள் செய்த புலவர்களைப் பற்றி வேறே

ஓரிடத்திலும் குறிப்பகப்படவில்லை. கல்வெட்டுக்களில் பல, காப்பிய இலக்கணங்கள் நிரம்பியும் காணப்படுகின்றன. சப்தாலங்காரம், அர்த்தாலங்காரம் போன்ற சுவைகள் நிறைந்தும் பல கல்வெட்டுக்கள் காணப்படுகின்றன. தவிர பல கல்வெட்டுக்களில், அவைகள் எழுதப்பட்ட காலத்திற்கு முன்பிருந்தே புகழ் பெற்று வந்த பெரிய காப்பியங்களிலிருந்து பல வாக்கியங்களை அப்படியே எடுத்துக் கையாளப்பட்டிருக்கின்றன. ராமாயணம், காளிதாசனின் காவ்யங்கள்போன்றவற்றிலிருந்தும், தேவாரம், திவ்யப்பிரபந்தம் முதலியவற்றிலிருந்தும் பல செய்யுட்கள் வாக்கியங்கள் இவ்விதம் எடுத்துக் கையாளப்பட்டுள்ளன. உதாரணமாக குலசேகர ஆழ்வார்செய்த முகுந்தமாலை என்றநூலின் ஒரு செய்யுளை பர்மாவிலுள்ள பாகன் என்ற ஊரிலிருக்கும் விஷ்ணு கோயிலில் பொறிக்கப்பட்டிருக்கும் 13-ம் நூற்றாண்டைச் சேர்ந்த கல்வெட்டு ஒன்றில் காணலாம்.

**கல்வெட்டுக்களில் மட்டுமே காணப்படும் சில அரிய நூல்கள்:** சில கல்வெட்டுக்களிலிருந்து இந்த அபூர்வ விஷயம் தெரியவருகிறது. அதாவது இந்தக் கல்வெட்டுக்கள் கண்டு பிடிக்கப்படுவதற்கு முன்புவரை வழக்கிலிராமலிருந்த சில அரிய நூல்கள் இவற்றிலிருந்து தெரியவருகின்றன. உதாரணமாக சீகாழிக்கு அருமையில் உள்ள திருவிடைவாயில் என்ற ஊரில் அகப்பட்ட கல்வெட்டு ஒன்றில் சோழர் காலத்திய தமிழ் எழுத்தில் திருஞானசம்பந்த சுவாமிகளின் பதிகம் ஒன்று பொறிக்கப்பட்டு இருக்கிறது. இதற்கு முன்வரை இப்பதிகம் இருப்பது அநேகமாக ஒருவருக்கும் தெரிந்ததாகத் தெரியவில்லை. இதேபோல் வடஇந்தியாவில் தாரா என்ற ஊரிலுள்ள ஒரு மடத்தில் 12 ஆம் நூற்றாண்டு லிபியில் பொறிக்கப்பட்டுள்ள கல்வெட்டுக்களிலிருந்து இதுவரை தெரியாத மதனன் என்ற புலவரால் செய்யப்பட்ட பாரிஜாத மஞ்சரீ என்ற நாடிகையைப்பற்றி அறியமுடிகிறது. இதே இடத்திலுள்ள வேறுசில கல்வெட்டுக்களிலிருந்து மஹாராஜா போஜரால் செய்யப்பட்ட ஆனால் வேறு இடத்தில் குறிக்கப்படாத இரண்டு பிராகிருத மொழியில் செய்யப்பட்ட நூல்களைப்பற்றியும் அறிகிறோம். தமிழ் நாட்டிற்கு முக்கியமாகத் தெரியவேண்டிய விஷயமான தமிழின் பழைமையைப்பற்றியும் கல்வெட்டுக்களிலிருந்தே தெரிய முடிகிறது. அதாவது கி. மு. மூன்றாவது நூற்றாண்டு அல்லது அதற்கு முன்பிருந்தே தமிழ் மொழியானது வளர்ச்சியடைந்த மொழியாக இருந்தது என்பதுடன் கல்வெட்டுக்கள் பொறிக்கவும் கையாளப்பட்டது என்ற விபரம் பாண்டிய மண்டலத்தில் உள்ள புராதன பிராமி லிபியில் உள்ள கல்வெட்டுக்களிலிருந்தே தெரியவருகிறது.

**சகாப்தங்கள்** கல்வெட்டுக்களிலிருந்து நம் நாட்டில் வழங்கிவந்த பல சகாப்தங்களைப்பற்றித் தெரிய முடிகிறது. சாதவாஹன அல்லது சாலிவாஹன சகாப்தம், விக்கிரம சகாப்தம், கலியுகாப்தம், குப்தர்கள், கங்கர்கள் கலசூரிகள் இவர்களது அப்தங்கள் எல்லாம் கல்வெட்டுக்களிலிருந்து தெரியவருகின்றன. இவ்வித அப்தங்கள் யாரால் எப்பொழுது ஆரம்பிக்கப்பட்டன என்பதை

ஆராயும்போது அக்கல்வெட்டுக் காலநிலையை துல்லியமாக நிர்ணயிக்கவும் அதே காலத்தைச்சார்ந்த ஏனைய சில விஷயங்களைப்பற்றியும் அறியமுடிகிறது. இதற்கு உதவியாக இக்கல்வெட்டுக்களில் காணப்படும் வானசாஸ்திர சம்பந்தப்பட்ட குறிப்புகளாகும் கல்வெட்டுக்களில் ஒரு பகுதியான தான சம்பந்தப்பட்டவை எந்தமாதத்தில் எந்தபக்ஷத்தில் எந்தத்திதியில் எந்தநக்ஷத்திரத்தில் என்ன காலத்தில் தானம் செய்யப்பட்டது என்பதைச் சொல்லுவதிலிருந்து அவற்றின் காலத்தை நிர்ணயம்பண்ண முடிகிறது.

**புதிய அரசவம்சங்கள், இடங்கள், விஷயங்கள்:** இதுவரை புராணங்களில்மட்டும் குறிக்கப்பட்டுள்ள மஹர்கள், நளர்கள், சூரவம்சத்தவர்கள் போன்றஅரச வம்சத்தினரைச்சேர்ந்த கல்வெட்டுக்கள் சமீபகாலத்தில் அகப்பட்டிருக்கின்றன. இதிலிருந்து இந்த அரச வம்சத்தினர்களும் நமது நாட்டின் சில பகுதிகளில் சிறு இராஜ்ஜியங்களை ஆண்டிருந்தார்கள் என்பதும் புராணத்தில் இவர்களைப்பற்றிச் சொல்லியிருப்பதும் உண்மை என்பது நிச்சயமாகிறது.

அசோகச் சக்கிரவர்த்தியின் கல்வெட்டுக்களில் எல்லாம் அவருடைய பெயரைச் சொல்லாமல் அடைமொழியான தேவானும்பிய என்றே சொல்லியிருப்பதால் அக்கல்வெட்டுக்கள் அசோகரால் பொறிக்கப்படவில்லை என்ற சந்தேகத்தை ஹைதராபாத் இராஜ்ஜியத்திலுள்ள மாஸ்கி என்ற இடத்தில் கண்டுபிடித்த அசோகரின் கல்வெட்டில் அசோகர் என்ற அவருடைய பெயர் தீர்த்தது. இன்னுமொரு அசோகக் கல்வெட்டு நேபால் தேசத்துக்கருகாமையில் உள்ள ரூம்மிந்தை என்ற கிராமத்தில் காணப்படுகிறது. இந்தக் கிராமம்தான் முன்காலத்திய லும்பினி தோட்டம் என்றும் இங்கேதான் புத்தர் பிறந்தார் என்பதும் இந்தக் கல்வெட்டிலிருந்து ஊகிக்கப்படுகிறது.

பல்லவவம்ச முதலாவது நரசிம்மவர்மன் தனது சத்துருவான சாளுக்கிய இரண்டாவது புலிகேசியை அவனுடைய தலைநகரான வாதாபியிலேயே தோல்வியடையச் செய்ததற்குச் சான்றாக வாதாபியில் நரசிம்மவர்மனால் பல்லவ கிரந்தத்தில் பொறிக்கப்பட்டுள்ள கல்வெட்டிலிருந்து தெரியவருகிறது. இதேபோல் ராஜேந்திரசோழன் மலாயா முதலிய கீழைநாடுகளை வென்றதற்குச் சான்றாக அங்கே சோழர் காலத்திய லிபியில் பொறிக்கப்பட்ட கல்வெட்டுக்கள் இருக்கின்றன.

மஹாபலிபுரம் என்று தற்காலம் வழங்கும் பெயர் மாமல்லபுரம் என்பதின் மருவிய சொல் என்பதையும், தெலுங்குநாட்டில் உள்ள கண்டசாலா என்ற ஊரின் முன்காலத்திய பெயர் கண்டகோசலா என்பதும் கல்வெட்டிலிருந்தே தெரியவருகின்றது.

**அரசியல் விஷயங்கள்:** வட இந்தியாவில் இராஜ்ஜியங்கள் தேசம், புக்தி, விஷயம், கிராமம் என்றும், தென்னிந்தியாவில் மண்டலம், வளநாடு, நாடு, கோட்டம், ஊர் என்றும் பிரித்து ஆளப்பட்டுவந்தன. தமிழ்நாட்டில் இவைகளை அரசர்களின் பிருதுப்பெயரால் சொல்லுவதும் வழக்கம். உதாரணம்: ஜெயங்கொண்ட சோழமண்டலம், நித்தவிநோத வளநாடு, அருள்மொழி வளநாடு.

முடியரசு இருந்தபொழுதே குடியரசுகளும் இருந்தன என்பதை பௌதேயர்கள், அர்ஜுனயனர்கள் என்ற கண அரசர்களின் நாணயங்களிலிருந்து தெரிகிறோம். தமிழ்நாட்டில் தொன்றுதொட்டு பஞ்சாயத்துமுறையில் அரசியல் நடந்ததை, சோழர் காலத்தைச்சேர்ந்த உத்திரமேரூர் கல்வெட்டிலிருந்து அறிகிறோம். இக்கல்வெட்டிலிருந்து அவ்வூரானது பல வாரியங்களால் பரிபாலிக்கப்பட்டது என்றும்; அவ்வாரியங்கள் எவ்விதம் அமைக்கப்பட்டன என்பதும் தெரியவருகிறது.

தண்டனைகள், சண்டைகளைத் தீர்த்தல்; பக்ஷபாதமின்றி நியாயம் வழங்குதல், வரிவசூல் செய்தல், நிலங்களை அளந்து கணக்கெடுத்தல்போன்ற பல விஷயங்களையும் கல்வெட்டுக்களிலிருந்து தெரிந்துகொள்ளுகிறோம்.

பிரஜைகளுக்கு வேண்டிய சௌகரியங்களில் முக்கியமானதாக ஏரி, குளம், கிணறு வெட்டுவது கருதப்பட்டுவந்தது. ஏரி வெட்டியதற்கு உதாரணமாக அசோகரால் வெட்டப்பட்டு, க்ஷத்ரபருத்ரதாமன் (2-ம் நூற்றாண்டு) குப்த ஸ்கந்தகுப்தன் (5-ம் நூற்றாண்டு) என்பவர்கள் காலத்தில் மராமத்து செய்யப்பட்டு குஜராத்தில் உள்ள சுதர்சனம் என்ற ஏரியையும், போஜமகாராஜாவால் (பதினோராவது நூற்றாண்டு) ஆக்கப்பட்ட போஜசாகரம் என்ற ஏரியையும், இன்னும் மகேந்திர தடாகம், வயிரமேக தடாகம் என்ற பல்லவர்கால தடாகங்களையும், உய்யக்கொண்டான் ஏரி, முடிகொண்டான் ஏரி போன்ற சோழர் காலத்தைச்சேர்ந்த ஏரிகளையும் சொல்லலாம்.

**சமய சம்பந்தப்பட்ட விஷயங்கள்:** ஏற்கெனவே சொல்லியபடி நம் நாட்டில் அகப்பட்டிருக்கும் கல்வெட்டுக்களில் பெரும்பான்மை சமய சம்பந்தப்பட்டவை. தானத்தையோ, மராமத்து செய்ததையோ, புதிய பாகங்கள் நிறுவியதையோ பற்றிச் சொல்லும் கல்வெட்டுக்கள் இல்லாத மத சம்பந்தப்பட்டக் கட்டங்களைக் காணுவது அரிது. இக்கல்வெட்டுக்களில் மிகப் பழைமையான காலத்திலிருந்து கி. பி. 500 ஆவது ஆண்டுவரை உள்ள காலத்தைச் சேர்ந்தவைகள் பெரும்பாலும் புத்தமதத்தைச் சேர்ந்தவை. புத்தமத ஸ்தூபங்கள், விஹாரங்கள், சைத்யங்கள், விக்கிரஹங்கள் முதலியவற்றை நிறுவியதுபோன்ற விஷயங்களைப்பற்றி இவைகள் சொல்லுகின்றன.

ஆனால் இக்காலத்திலும் சைவ வைணவ ஜைனக் கோயில்களும் இருந்தன என்பதைச் சொல்லும் கல்வெட்டுக்களும் உள. வட இந்தியாவில் உள்ள நகரி, கோஹுண்டி என்ற இடங்களில் உள்ள கல்வெட்டுக்களிலிருந்து (இரண்டாம் நூற்றாண்டு கி. மு.) அங்கே வைஷ்ணவக் கோயில்கள் இருந்தன என்பதும், மதுரைக்கருகிலுள்ள மோரா என்ற இடத்திலுள்ள கி. மு. முதல் நூற்றாண்டைச்சேர்ந்த கல்வெட்டிலிருந்து அங்கே விருஷ்ணி வம்சத்தைச்சேர்ந்த சங்கர்ஷண, வாசுதேவ, அநிருத்தன் முதலிய ஐந்து வீரர்களுக்கென கோயில் இருந்ததையும், மதுரைக்கருகில் உள்ள கங்காளிதிலா என்ற இடத்தில் ஜைன மதஸ்தாபனம் இருந்ததைப்பற்றி அங்கிருந்து அகப்பட்ட கி. பி. முதல் நூற்றாண்டைச்சேர்ந்த கல்வெட்டிலிருந்தும் தெரியவருகின்றன.

கி. பி. ஆறாவது நூற்றாண்டிலிருந்து ஜைன, ஹிந்து மதக் கோயில்கள் முதலியவற்றைப்பற்றிச் சொல்லும் கல்வெட்டுக்கள் அதிகமான எண்ணிக்கையில் இருக்கின்றன.

**பிறநாட்டார் இந்தியதேச மதங்களைத் தழுவுதல்:** கிரேக்கதூதரான ஹிலியோடோரஸ் (கி. மு. 2-ம் நூற்றாண்டு) என்பவர் வட இந்தியாவில் குபிலியரில் உள்ள விதிசா என்ற ஊரிலிருந்தபொழுது அங்கே உள்ள விஷ்ணு கோயிலுக்கு முன்பு ஒரு துவஜஸ்தம்பத்தை நாட்டியதையும், தான் பாகவதரானதையும், அந்தத் துவஜஸ்தம்பத்தில் அவரால் பொறிக்கப்பட்டிருக்கும் கல்வெட்டிலிருந்து தெரிகிறது. இன்னுமொரு மிருன்டர் என்ற கிரேக்க அரசர் புத்த மதத்தைத் தழுவியதை அவர் காலத்திய (கி. மு. சுமார் 100 B. C.) கல்வெட்டு ஒன்று சொல்லுகிறது. சக அரசர்களில் பலர் சைவப்பற்று உள்ளவர்களாக இருந்ததை அவர்கள் காலத்தைச்சேர்ந்த நாணயங்களில் உள்ள சிவபெருமான் உருவங்களிலிருந்து தெரிகிறது குஹாணவம்சத்தில் பிரசித்திபெற்ற கனிஷ்கர் சிறந்த பௌத்தராகவும் அவருக்குப்பின் ஆண்ட ஹுவிஷ்கர் வாசுதேவர் என்பவர்கள் சைவ வைஷ்ணவப் பற்றுடையவர்கள் என்பதையும் அவர்கள் காலத்துக் கல்வெட்டுக்கள் தெரிவிக்கின்றன.

**பிற மதத்தினருக்கு வேண்டியதைச் செய்தல்:** அசோகரின் கல்வெட்டுக்களில் முக்கியமான பாகம் பிற மதத்தினரை ரக்ஷித்தல், பெரியோர்களைப் பூஜித்தல் போன்றதைச் சொல்லுவதாகும். இதற்குப் பிற்காலத்திலும் வெவ்வேறு சமயத்தினரையும் அந்தந்தக்காலத்தில் ஆண்ட அரசவம்சத்தினர்கள் பராமரிப்பது வழக்கில் இருந்துவந்ததைக் கல்வெட்டுக்கள் சொல்லுகின்றன, உதாரணமாக சாதவாஹன அரசர்கள் ஹிந்து மதத்தில் பற்றுள்ளவர்களாயினும் பௌத்த மதத்தினருக்கு ஏராளமான சலுகைகள் கொடுத்ததை குண்டூருக்கருகே உள்ள அமராவதி என்ற ஊரில் அகப்பட்ட கி பி. முதல் இரண்டாம் நூற்றாண்டைச் சேர்ந்த கல்வெட்டுக்கள் தெரிவிக்கின்றன. இதேபோல் நாகர்ஜுன கொண்டா

என்ற ஊரிலிருந்து கிடைத்திருக்கும் கி பி. மூன்றும் நூற்றுண்டுக் கல்வெட்டுக் களிலிருந்து இக்ஷுவாகு அரசர்கள் ஹிந்து மதப்பற்று உள்ளவர்களாயினும் அவர்களின் மனைவிமக்கள் புத்தமதத்தைத்தழுவி அதற்குவேண்டிய மான்யங்கள் விட்டதைச் சொல்லுகின்றன.

புத்த பிக்ஷுக்களின் சௌகரியத்துக்காக சுவர்ணத்தீவு அரசன் ஒருவனின் வேண்டுகோளுக்கிணங்கி வங்காளத்தை ஆண்ட தேவபாலன் (9-ஆம் நூற்றுண்டு) என்ற அரசன் நாளந்தா என்ற ஊரில் ஒரு விஹாரத்தைக் கட்டுவித்தான். ஸ்ரீவிஜயம் என்ற சுமத்திரா, ஜாவா என்ற தீவுகளை ஆண்ட மாரவிஜயோத்துங்க வர்மன் என்ற பௌத்த அரசனின் வேண்டுகோளுக் கிணங்கி முதலாவது இராஜராஜ சோழன் நாகப்பட்டினத்தில் ஒரு பௌத்த விஹாரத்தைக் கட்டுவித்து அதற்கு வேண்டிய மான்யங்கள் விட்டான். இந்த விஹாரம் மாரவிஜயோத்துங்க வர்மனின் தகப்பனின் பெயரால் சூளாமணி விஹாரம் என்ற பெயர்பெற்றது. இலங்கையிலிருந்து வரும் பௌத்த பிக்ஷுக் களின் வசதிக்காக நாகர்ஜுன கொண்டாவில் ஒரு விஹாரம் கி. பி. இரண்டாம் மூன்றும் நூற்றுண்டில் கட்டப்பட்டது. இவ்விதமே பிற்காலத்தில் மதசம்பந்த மாக யாத்திரை செய்பவர்களுடைய வசதிக்காக பல சத்திரங்களும் மடங்களும் கட்டப்பட்டதும் கல்வெட்டுக்களிலிருந்து தெரியவருகிறது

**கோயில் மடங்கள் கட்டுவது:** இந்துமதம், பௌத்தமதம், சமண மதம் முதலியவற்றைச் சேர்ந்த பலவகைக் கட்டிடங்களும் யாரால் எவ்வெப் பொழுது நிறுவப்பட்டன என்பதும் அவற்றை பராமரிக்கச்செய்த ஏற்பாடுகள் யாவை என்பவைபோன்ற பல விஷயங்கள் கல்வெட்டுக்களில் பொறிக்கப்பட் டிருக்கின்றன. காஞ்சியிலுள்ள பெரிய ஸ்தூபத்தினுள் உள்ள சிறிய ஸ்தூபம் அசோகர் காலத்தைச் சேர்ந்தது. பிற்பாடு கி. மு. முதல் நூற்றுண்டில் சாதவாஹனர் காலத்தில் இந்த ஸ்தூபத்தினுடைய அழகிய வாயில்கள் கட்டப் பட்டன. இதன் ஒரு வாயிலிலுள்ள சிற்பங்கள் காஞ்சிக்கு அருகே உள்ள விதிசை என்ற ஊரிலிருந்த தந்த வேலைக்காரர்களால் செய்யப்பட்டவை என்பதை இதிலுள்ள கல்வெட்டுக்களிலிருந்து தெரிய முடிகிறது. மேலும் பீஹாரிலுள்ள பராபிர் மலையில் அசோகர் காலத்தில் ஆஜிவிகர்கள் என்ற துறவிகளுக்கெனக் குகைகள் குடைவிக்கப்பட்டன என்பதையும் இங்குள்ள கல்வெட்டுக்களிலிருந்து அறிகிறோம். கலிங்கத்தில் உதயகிரி மலையில் பல குகைகள் ஜைன மதத்தின ருக்காக ஜைன அரசன் காரவேலன் என்பவரால் கி. மு. 2-ம் நூற்றுண்டில் குடைவிக்கப்பட்டது என்ற விஷயம் இங்கேயுள்ள ஹாதிகும்பா குகையிலுள்ள ஒரு கல்வெட்டிலிருந்து தெரிகிறது. குவாலியர் ராஜ்ஜியத்திலுள்ள உதயகிரி என்ற மலையிலுள்ள ஹிந்து மதக் குகைகள் கி. பி. ஐந்தாம் நூற்றுண்டில் சந்திர குப்த விக்ரமாதித்யன் காலத்தில் குடைவிக்கப்பட்ட மேலைச்சாளுக்கிய அரசர் களால் பாதாமி ஐஹொளே, பட்டக்கல் என்ற இடங்களிலுள்ள பல குகைகள்,

கோயில்கள் கி. பி. 6, 7, 8 ஆவது நூற்றுண்டில் நிறுவப்பட்டன. ராஷ்டிரகூட அரசன் ஒருவனுல் கி. பி. எட்டாவது நூற்றுண்டில் எல்லோரா என்ற இடத்தில் மலையையே குடைந்து உலகம் புகழும் கைலாசநாதர் கோயில் செய்விக்கப் பட்டது.

தமிழ்கத்தில் தொன்றுதொட்டுக் கோயில்கள் நிறுவும் வழக்கம் இருந்து வந்தது. ஆனுல் கி. பி 7-ம் நூற்றுண்டிலிருந்துதான் கற்றளிகள் அதிக மாகக் கட்டப்பட்டன. இது விஷயத்தைத் தெளிவாகச் சொல்லும் பல்லவ அரசன் முதலாவது மகேந்திரவர்மன் (கி. பி, 7-ம் நூற்றுண்டு) காலத்தைச் சேர்ந்த கல்வெட்டு ஒன்று மண்டகப்பட்டு என்ற ஊரிலுள்ள குகைக்கோவிலில் பொறிக்கப்பட்டிருக்கிறது. இக் கல்வெட்டு சொல்லுவது, இந்தக் குகையைக் கல்லில் பிரம்ம, விஷ்ணு, சிவனுக்காக மரம், செங்கல் சுண்ணும்பு உலோகமின்றி அமைக்கிறேன் என்பது. மகேந்திரவர்மனின் மகன் நரசிம்மவர்மன் மஹாபலி புரத்தில் மலையைச் செதுக்கி அழகிய சிறு கோவில்களைச் செய்வித்தான். கி. பி. 700-வது ஆண்டில் பல்லவ அரசஞன ராஜசிம்மன் காஞ்சியில் புகழ்பெற்று விளங்கும் கைலாசநாதர்கோயிலைக் கட்டுவித்தான். இவனுக்குப் பிறகு பட்டம் தரித்த நந்திவர்மனுல் காஞ்சியில் வைகுண்டப்பெருமாள்கோயில் நிறுவப்பட்டது. முதலாம் இராஜ இராஜ சோழன் தஞ்சையில் பெரிய கோயில் கட்டுவித்தான். மேலும் இதற்கு வேண்டிய விக்ரஹங்கள், அணிகள் முதலியவற்றையும் செய் வித்தான். இதன் பிறகு பாண்டிய விஜயநகர அரசர்கள் காலத்திலும் நாயக்கர் காலத்திலும், மதுரை, ஸ்ரீரங்கம் திருவண்ணுமலை, சிதம்பரம், இராமேஸ்வரம் போன்ற இடங்களிலுள்ள கோபுரங்கள் மண்டபங்கள் பிரகாரங்கள், மூடிய பிரகாரங்கள் முதலியவை கட்டப்பட்டதைப் பற்றியும் கல்வெட்டுக்களிலிருந்து அறிகிறோம். மேலும் பெரிய மகான்கள், அரசர்கள் சமாதியான இடங்களில் மேல் கோயில் கட்டுவதும், கல்வெட்டுக்களிலிருந்து தெரியவருகிறது. இக்கோயில் களுக்குப் பள்ளிப்படை எனப் பெயர்.

**வேதம், புராணம், நாட்டியம்;** கோயில்களில் பலசந்திகளும், உத்சவங்களும், தேவாரம், திருவாய்மொழி, வேதபாராயணம், ராமாயணம் பாரதம் போன்றவைகளின் உபன்யாசம் முதலியவற்றிற்கு வேண்டிய மான்யங் கள் கொடுத்ததைப்பற்றிச் சொல்லும் கல்வெட்டுக்கள் அனேகம் உண்டு. எண்ணுயிரம் என்ற ஊரிலகப்பட்ட ஒரு கல்வெட்டிலிருந்து சாஸ்திரங்கள் சொல்லிக்கொடுக்க ஏற்படுத்திய பாடசாலைகளைப்பற்றிய பல நுண்ணிய விஷயங் கள் தெரியவருகின்றன. நாட்டியம் ஆட நாட்டிய மண்டபமும், நடனமாட அரங்க மண்டபமும், கோயில்களில் நிறுவப்பட்டதெனக் கல்வெட்டுக்கள் கூறு கின்றன. இதிலிருந்து இக்கலைகள் எவ்விதம் சமயத்தை வளர்ப்பதற்கு உபயோகப் படுத்தப்பட்டதென்றும், மேலும் இக்கலையின் வளர்ச்சிக்கு வேண்டிய பராமரிப்பு கொடுத்ததும் தெரியவருகிறது.

**நம் கலாசாரம் பிறநாட்டில் பரவுதல்:** பௌத்த மதச் சம்பந்தப் பட்ட ஆசாரம், கலைகள் முதலியவை மத்திய ஆசியா, திபெத்து முதலிய இடங்களுக்கும் அவற்றின் மூலம் சைனு, கொரியா, ஜப்பான் முதலிய தேசங்களுக்கும் பரவின என்பதை அத் தேசங்களில் நம் நாட்டெழுத்தைப் போன்ற எழுத்தில் பொறிக்கப்பட்டுள்ள கல்வெட்டுக்களிலிருந்து அறியமுடிகிறது. பர்மாவில் சில இடங்களில் அகப்படும் பழைய கல்வெட்டுக்கள் தென்னிந்தியாவில் கி. பி. 5-ம் நூற்றுண்டில் வழங்கிவந்த லிபியிலிருக்கின்றன இதிலிருந்து நம் கலாசாரம் பர்மாவுக்கு அவ்வளவு முன் காலத்திலேயே பரவி இருந்ததெனத் தெரிகிறது. அசோகர் காலத்தில் புத்த மதம் இலங்கைக்குக் கொண்டுபோகப்பட்டது. அத்துடன் நம் கலாசாரமும் சென்றது. இதற்குச் சான்று, கி. மு. மூன்றும் நூற்றுண்டு முதல் கி. பி. 2-ம் நூற்றுண்டுவரையிலுள்ள காலத்தைச் சேர்ந்த கல்வெட்டுக்கள் எல்லாம் பிராமி லிபியிலிருக்கின்றன.

தற்காலத்திய இந்தோசைனுவில் கி. பி. 2, 3வது நூற்றுண்டிலேயே இந்தியர்கள் குடியேறி அங்கே ஹிந்து மதத்தைப் பரப்பினர் என்பதற்குச் சான்றுக அங்கே அகப்படும் அக்காலத்தைச் சேர்ந்த தென்னிந்திய லிபியிலுள்ள கல்வெட்டுக்கள் இருக்கின்றன. அப்பொழுது அத்தேசம் காமபோஜம் என வழங்கியது. இதுபோலவே மலேயா, போர்னியோ, ஜாவா முதலிய இடங்களிலும் கி. பி. 6, 7ம் நூற்றுண்டைச் சேர்ந்த கல்வெட்டுக்கள் கிடைத்திருக்கின்றன. இவைகள் எல்லாம் அந்த அந்தக் காலத்தில் தென்னிந்தியாவில் வழங்கிவந்த லிபிகளில் பொறிக்கப்பட்டுள்ளன. இவைகளில் பெரும்பான்மையானவை ஹிந்து மதத்தைச் சேர்ந்தவை.

இந்த விஷயத்துக்கு உதவியாக இருக்கும் புத்தகங்கள்:—


Indian Paleography by Birhler
Do in Hindi by Ohja
South Indian Paleography by A. C. Burnell
Pandai Tamil Ezhuthukkal by T. N. Subramanian
Indian Epigraphy and South Indian Scripts by L. Sivaramamurthy
Corpus Indian Inscriptanum, Vol. I. by E. Hultz.
Corpus Indian Inscriptanum Vol. III.
Gupta Inscriptions by J. F. Fleet
Epigraphia Indica Vols.
Epigraphia Ceylamica
South Indian Inscriptions Vols. I to XIV
Archaeology in India

